THE MAN IN THE BROWN SUIT

# அகதா கிறிஸ்டி

Agatha Christie

# கில்மார்டன் மாளிகையின் மர்மங்கள்



# கில்மார்டன் மாளிகையின் மர்மங்கள்

அகதா கிறிஸ்டி

தமிழில்:

## கொரட்டூர் ஸ்ரீனிவாஸ்

## மின்னூலாக்கம் : செல்லா

கண்ணதாசன் பதிப்பகம்

23, கண்ணதாசன் சாலை,
தியாகராய நகர், சென்னை - 600 017.
போன் : 2433 2682

*கிளைகள்:* மதுரை பாண்டி கோவை வேலூர்

கண்ணதாசன் பதிப்பக வெளியீடு எண்: 581
முதற் பதிப்பு டிசம்பர், 2008



E-mail: kannadhasanpathippagam@gmail.com
Our website : www.kannadhasanpathippagam.com

பதிப்பாசிரியர் - **காந்தி கண்ணதாசன்**



*Published in arrangement with*
**Agatha Christie Ltd, a Chorion Company, United Kingdom**

**விலை : 110/-**

**KILMARTON MAALIGAIYIN MARMANGAL** - Tamil

Translated from the English Original **'The man in the Brown suit'**

- Written by **Agatha Christie**
- Translated by **Dr. Korattur K.N. Srinivas**
- First Edition November, 2008
- Publishing Editor **GANDHI KANNADHASANpp**
- Published by **KANNADHASAN PATHIPPAGAM**
23, Kannadhasan Salai, T. Nagar, Chennai - 17.
Ph: 2433 2682, 2433 8712

ISBN : 978-81-8402-525-5

- Our Branches
  - No. 1212, Range Gowder Street, Coimbatore - 641 001. Ph: 0422-2479774
  - No.1, Annai Complex, III Street, Vasantha Nagar, Madurai - 625 003. Ph. 0452 - 2373793, 2373180
  - No. 37, Bharathy Street, Puducherry - 605 001. Ph: 0413-4200143
  - Old # 43, New # 117, Chunnambukara Street, Vellore - 632 004. Ph: 0416 - 2223312
- Our Bankers : State Bank of India, T. Nagar, Chennai-17.

- Laser : **Sivaa Graphics**, Chennai-94. Ph: 9884712091
- Printed by : **Sai Bonds Graphics**, Chennai - 95. Ph.:32931368

## மொழிபெயர்ப்பாசிரியரின் உரை

க்ரைம் மற்றும் டிடெக்டிவ் கதைகள் என்றால், பெருவாரியாய், கொலை என்று ஒன்று இடம் பெறும்; அதைச் சார்ந்த சில பேர் மீது சந்தேகம் குவியும்; அது வலிமையான கதை மூலம் செவ்வனே நகர்த்தப்பட்டு இறுதியில் சாதுர்யமான ஒரு C.I.D ஆல் நிவர்த்தி செய்யப்பட்டு, கதையும் சமமாகும்.

எல்லா கதைகளுமே இதே ரீதியில் இருக்க வேண்டிய 'துப்பறியும் இலக்கணம்' இருந்த போதிலும், ஒரே நேர்க்கோடாய் இதை மட்டுமே கடைப்பிடித்து எழுதினால், எடுபடாது.

இந்த நாடித் துடிப்பை அறிந்துள்ள அகதா கிறிஸ்டி, ஒவ்வொரு நாவலிலும் இதே இலக்கணத்தை *வித்தியாசமாய்* கடைபிடித்ததால் தான் நீண்ட நெடு வெற்றி கண்டுள்ளார்.

கில்மார்டன் மாளிகையின் மர்மங்களும் அப்படித்தான்.

தந்தையை இழந்து விட்ட இளவயதுப் பெண்ணுக்கு வேறு திக்கில்லை; வேலையில்லை.

கண்முன்னே நடந்தேறும் ஒரு விபத்தில் புதைந்துள்ள 'கொலையை' மோப்பம் பிடித்து, அதற்கு காரணமான கொலை காரனைத் தேடி கோதாவில் இறங்குகிறாள்.

இதில் காதலையும் இணைத்து, த்ரில்லர் திருப்பங்கள் மட்டுமல்லாது, காதல் திருப்பங்களையும் பிசகாது கதை முழுவதும் கொண்டு செலுத்தியிருப்பது, மீண்டுமொரு முறை, நாவல் அமைப்பதில் அகதாவுக்குள்ள மேலாண்மையைக் காட்டுகின்றது.

அலைபாயுதே படம் போல, நிகழ்கால கதையிடையே டைரி குறிப்புகளை நகைச்சுவை ததும்ப தந்திருப்பது, புது உத்தி. அதில் சிறப்பான வெற்றி பெற்றிருப்பது கூடுதல் + பாயிண்ட்.

வாருங்கள், கில்மார்டன் மாளிகைக்கு.



அன்பன்,

**முனைவர். கொரட்டூர் கே.என்.ஸ்ரீனிவாஸ்,**

மனை எண் 252, இரண்டாவது தெரு,
கொரட்டூர், சென்னை - 80.
போன்: 044-2635 8948
மின்னஞ்சல்: srinivaskns@yahoo.co.in

## கதாபாத்திரங்கள்

| | |
|---|---|
| பெட்டிங்ஃபெல்ட் | அகழ்வாராய்ச்சியாளர் |
| பெட்டிங் ஃபெல்ட் ஆனே | மகள் |
| சர் ஆஸ்டஸ் பெட்லர் | எம்.பி., |
| பகெட் | பெட்லரின் செகரட்டரி |
| லூகாஸ் மற்றும் எட்ஸ்லே | இளைய நண்பர்கள் |
| கலோனல் ரேஸ் | பட்டாளத்து வீரர் |
| மிஸஸ் ப்ளேர் (ஸூஸேனி) | ஆனேவின் தோழி |
| நதீனா | நடனத் தாரகை |
| கார்ட்டன் | நதீனாவின் கணவன் |

மற்றும் பலர்

# கதை இடம்பெறும் களம்



# முன்னுரை

பாரீஸ் நாட்டையே சூறாவளிக் காற்றாய் வந்துத் தாக்கியுள்ள நாட்டியத் தாரகை நதீனா ஓயாது நீண்டுக் கொண்டேயிருந்த கரவொலிக்குக் குனிந்துக் குனிந்து நன்றி தெரிவித்தபடி, ரசிக வெள்ளத்தை நோக்கிக் கையைத் தூக்கிக் காற்றில் அசைத்த வண்ணமிருந்தாள். நீளமாய் மெலிந்துச் சென்ற ஒரு ரத்தச் சிவப்புக் கோடாய் அமைந்திருந்த அவளது உதடுகள், சற்றே மேல் நோக்கி நீண்டு புன்னகைத்துக் கொண்டேயிருக்க இந்த மகிழ்ச்சியின் திளைப்பால் வழக்கமாய் குறுகியே இருக்கும் அவளுடைய சின்னக் கரிய யானைக் கண்கள், இப்போது மேலும் குறுகி குதூகலித்துத் தெரிந்தன. சிகப்பிலும் நீலத்திலும் மெஜந்தா நிறத்திலும் பண்ணப்பட்டிருந்த அழகான ஆடையலங்காரத்தில் மேடை மீது மிளிர்ந்துக் கொண்டிருந்த நாட்டிய தேவதையை, மேலிருந்து மெதுவாய் கீழிறங்கிய திரைச் சீலை மெல்ல மூடி மறைக்கத் துவங்கியதைக் கண்ட சில ஃபிரெஞ்சு அபிமானிகள், தங்களது இறுதிப் பாராட்டினை, வேகவேகமாய்த் தரையை எத்தியும் மேஜையைத் தட்டி ஓசையெழுப்பியும் தெரிவித்தனர். சித்திரம் மற்றும் மணிகள் நிறைந்த வேலைப்பாடினாலான சேலை சுழல கழன்றாடியபடி, நடன மங்கை மேடையிலிருந்து இறுதியாய் விடை பெற்றாள். தாடி வைத்திருந்த ஒரு ஜென்டில்மேன் அவளை அப்படியே உற்சாகமாய்த் தனது கரங்களில் வாங்கிக் கொண்டான். அவன், நதீனாவுடைய மானேஜர்.

''அற்புத அலங்காரம் நதீனா... அற்புதம், அற்புதம்'' என மகிழ்ச்சியாய்க் கூவினான் அவன். ''இந்த ராத்திரி... நீ உன்னையே ஜெயிச்சுட்டே.'' பின்பு, தான் செய்ய வேண்டியவற்றில் இதுவும் ஒன்று என்ற ரீதியில், அவளுடைய இரு கன்னங்களிலும் நாகரீகமாய் முத்தங்கள் பதித்தான் அவன்.

எப்போதும் வழக்கமாய் நடப்பது தானே இது என்ற தொனியில் இப்பாராட்டினைக் கையாண்ட நதீனா, அவளுடைய ஒப்பனை அறைக்கு நகர்ந்தாள். ரசிகர்களின் பூங்கொத்துக்கள் எங்கெங்கிலும் நிறைந்திருந்தன. பல அணிகல அலங்காரங்களால் பிரம்மாண்டமாய்

தயாரிக்கப்பட்டிருந்த விதவிதமான ஆடைகள், ஆணிகளில் தொங்கிக் கொண்டிருந்தன. குவிந்திருந்த பல மலர்களின் கலவையான நறுமணத்தாலும், வந்து போனவர்களின் உயர்ரக வாசனைத் திரவியங்களாலும் அறையின் காற்று இனிமையாய் நிரப்பப் பட்டிருந்தது. நாட்டியத் தாரகையுடைய ஒப்பனைப் பெண்ணான ஜானே, ஓயாது பேசிக் கொண்டே வாய் கொள்ளாது பாராட்டுதல் களைப் பொழிந்துக் கொண்டிருந்தாள்.

அப்போது கதவில் கேட்ட ஒரு தட்டு, இப்பாராட்டு ஊற்றின் வேகத்தைத் தடை செய்தது. யாரென்று பார்க்கப் போன ஜானே, ஒரு பார்வையாளர் அட்டையைச் சுமந்தபடி திரும்பினாள்.

''மேடம், இவரை அனுமதிக்கப் போறீங்களா?''

''பார்ப்போம்'' - நடன மங்கை மிகக் களைத்துப் போயிருந்த தனது கைகளைத் தளர்வாய் நீட்டினாலும், அந்த அட்டையிலிருந்த 'கவுண்ட் ஜெர்ஸியஸ் போலோவிட்ச்' எனும் ரஷ்யப் பெயரைப் பார்த்த மாத்திரத்தில், அவளுடைய கண்களில் சட்டென்று ஓர் ஈடுபாட்டு மினுமினுப்பு விளைந்தது.

''நான் அவரைப் பார்க்கறேன். நைட்டி, ஜானே; உடனே. அப்புறம்... கவுண்ட் உள்ளே நுழைஞ்சதும் நீ கிளம்பிடணும்''.

''சரி, மேடம்''

சோள நிறத்தினாலான ஒரு சிஃபான் சில்க் நைட்டியைக் கொண்டு வந்தாள் ஒப்பனைக்காரப் பெண். அம்சமாய் அதற்குள் நழுவிக் கொண்ட நதீனா, தனக்குத் தானே மெலிசாய் புன்னகைத்துக் கொண்டு உட்கார்ந்துக் கொள்ள, முன்னாலிருந்த மேஜையின் கண்ணாடியில் 'கும்... கும்...' என்று நிதானமாய் தாளமிட்டன அவளது தந்தநிற விரல்கள்.

கவுண்ட்! நடுத்தர உயரம் - ரொம்ப ஒல்லி - ஆனாலும் எடுப்பான அதீத அழகு  பிரகாசம் குன்றி அதிகமாய் வெளிறிய முகம்  களைப்பூட்டும் அசாதாரண ஆயாசம்  இப்படியெல்லாம் ஆக்கப் பட்டிருந்த, கவுண்ட்! முக்கியத்துவம் தந்து கவனத்தில் வைத்துக் கொள்ள கவுண்ட்டிடம் எதும் கிடையாது. ஆகையால், இவனுக்கே உரித்தான விசேஷமான நடவடிக்கைகள் எதையாவது ஒருத்தர் கவனத்தில் கொள்ளத் தவறி விட்டால், பிறகு இவனை மறுபடியும் அடையாளம் கண்டு கொள்வது அத்தனை சிரமமான காரியமாகி விடும்! இவனுக்குத் தரப்பட்டிருந்த கவுரவத்தைச் சிறந்தபடி

தக்கவைத்துக் கொள்ள இப்போது கவுண்ட் தவறவில்லை. மிகைப்படுத்தப்பட்ட கனிவு காட்டி நாட்டிய மங்கையின் கைகளைக் குலுக்கினான்.

''மேடம்... இது எனக்கு ஓர் இனிய கவுரவம்... ஆமாம்!''

வெளியேறிய தனக்குப் பின்னால் கதவினை மூடும் போது ஜானே கேட்டவை இவ்வளவு தான். பார்வையாளரோடு தனியாய் விடப்பட்ட வுடனேயே நதீனாவின் சிரிப்பில் நுணுக்கமான ஒரு தந்திரப் போர்வை படர்ந்து நின்றது.

''நாம ரெண்டு பேருமே ரஷ்யர்கள்தான். ஆனாலும், நாம ரஷ்ய மொழியில பேசப் போவதில்லை... சரியா?'' கவனமாய்ச் சொன்னாள் நதீனா.

''அதுல ஓர் அட்சரம் நம்ம ரெண்டு பேருக்கும் தெரியாத போது... வேற வழி?'' - வந்துள்ள விருந்தினன் ஏற்றுக் கொண்டான்.

பொதுவான ஒற்றுமை விளைந்ததால் இருவரும் ஆங்கில மொழிக்குள் புகுந்துக் கொள்ள... யாராவது புதிதாய் இப்போது இவனைப் பார்க்க நேரிட்டால், ஆங்கிலம் தான் இவனுடைய சொந்த மொழி என்றே நம்பி விடுமளவுக்கு மாறிப் போயிருந்தான். ஓஹ்... இருக்காதா பின்னே! ஆங்கிலேய லண்டனில் இசை நிகழ்ச்சிகள் நிரம்பிய சபாக்களில் பங்கு கொள்ளும் கலைஞனாக அல்லவா இவன் வாழ்க்கையைத் துவங்கினான்!

''இன்றைய இரவு நிகழ்ச்சி, கலைப்பயணத்துல உனக்குக் கிடைத்துள்ள ஒரு மாபெரும் வெற்றி'' என்று குறிப்பிட்டான். ''என் வாழ்த்துக்கள்.''

''இருக்கலாம். இருந்தாலும்...'' என்றவள், ''நான் கொஞ்சம் கலவரமாயிருக்கேன்'' என்றாள். ''முன்னாடி இருந்த பழைய நிலைமையில்லே, இப்ப என் நிலைமை. போரை ஒட்டி எழுந்த சந்தேகங்கள் துளியும் இன்னும் அடங்கலே. நான் தொடர்ச்சியா கண்காணிக்கப்படறேன்... பின்தொடரப்படறேன்.''

''அப்படி யாரும் உன்னைத் தொடர்வதா எந்தவிதமான குற்றச்சாட்டும் வந்ததேயில்லையே?''

''அப்படி வராமலிருக்கும்படி மிக ஜாக்கிரதையா திட்டங்களைத் தீட்டுவார் - *நம் தலைவர்.*''

''நீடூழி வாழ்க, 'கலோனல்''' என்று புன்னகைத்தபடி சொன்னான் கவுண்ட். ''ஓய்வெடுக்க விரும்புவதா அவர் அறிவிச்சிருப்பது ஒரு

*செமத்தியான ஆச்சரிய செய்தி, இல்லே? ஓய்வு! ஒரு டாக்டரைப் போல... ஒரு டீச்சரைப் போல...''*

*''ம்ம்... ஒரு பிஸினஸ் ஆளைப் போல!''* என்று அழகாய் முடித்துக் கொடுத்தாள் நதீனா. *''இது நம்மை ஆச்சரியப்படுத்தவே கூடாது. இது தான் கலோனல் அற்புதமான ஒரு பிஸினஸ் மேன்! நம்மள்ல ஒரு மனுஷன் மளிகைக்கடை ஆரம்பிச்சு நிர்வகிக்கிற மாதிரி அவர் நிர்வகிச்சார் - கொலையை! குற்றங்களை! கொலைக் குற்றங்களை! அவரைக் கொஞ்சமும் உள்ளே திணிச்சுக்காம, மாபெரும் பிரமாண்ட கோஷங்களையும் ஊர்வலங்களையும் அவர் தொடர்ச்சியா திட்டமிட்டு நடத்திக் காட்டியிருக்கார். 'தன் தொழில்' என்று அவர் சுட்டிக்காட்டும் தொழிலின் எந்தவொரு பகுதியையும் அவர் தவற விட்டதேயில்லே. நகைக் கொள்ளை, ஆள் மாறாட்டம், பொய்க் கையெழுத்து மோசடி, பின்தொடர்தல், விவேகமாய் செய்யப்பட்ட அரசியல் தலைவர்களின் கொலை, சாட்சிகளை அழித்தல்... எதைத்தான் தொடாம விட்டாரு? இந்த புத்திசாலிதனங்களையெல்லாம் விட அவர் கிட்டேயிருக்கும் மிகச்சிறந்த சாதுர்யம் எப்போ எதை நிறுத்திடனும்னு அவருக்குத் தெரியும்! செய்யும் ஆடுபுலி ஆட்டம் அபாயத்தை நெருங்குதா - அவர் பெருந்தன்மையா ஓய்வெடுக்க விலகுவார் - கையில அளவிட முடியாத செல்வங்களோட!''*

அனைத்தையும் கேட்ட கவுண்ட், ''ஓஹோ!'' என்றான் சற்று சந்தேகமாய். பிறகு, ''ஆனாலும்...'' என்று சிந்தனையாய்க் குறிப் பிட்டவன், ''இது நம் எல்லோருக்குமே சங்கடத்தை உண்டுபண்ணும் ஓர் அறிவிப்புதான்'' என்றான். ''யெஸ்... இன்னிக்குத் தேதியில நாம பாதுகாப்பற்று அந்தரத்துல தொங்கறோம் - இல்லையா?''

*''ஆனா நமக்கும் கை கொள்ளாத அளவு பணம் தரப்படுது இல்லே...! அதுவும் மூட்டை மூட்டையா, கொள்ளை கொள்ளையா...! ஆஹ்...!''*

நதீனா சொன்ன தொனியில் மின்சார வீச்சாய் புதைந்திருந்த பரிகாச ஏளனமும் இகழ்ச்சியும், இவனை நிமிர்ந்து பேசியவளைக் கூர்மையாய் பார்க்கச் செய்தன. அவளுக்குள்ளேயே அவள் கமுக்கமாய் சிரித்துக் கொண்டிருக்க அதன் தன்மை இவனுக்குள் ஆர்வத்தைக் கிண்டியது. இருந்தாலும் ''அதுவும் சரிதான்...'' என்று, ஒரு சிறந்த வியாபாரியாய் எதையும் வெளிகாட்டிக் கொள்ளாமல் தொடர்ந்த வண்ணமிருந்தான்: ''கலோனல், `என்னிக்குமே கை நிறைய அள்ளித் தரும் ஒரு

தர்மவானாகத் தான் இருந்திருக்கிறார். அவருடைய அனைத்து வெற்றிகளுமே இதனால் தான்'னு நான் அடித்து சொல்வேன் - ஆங்... கூடவே ஒரு பலிகடாவையும் தயார் செய்யும் அவரோட ஒப்புயர்வற்ற திட்டமிடலையும் குறிப்பிடாம இருக்க முடியாது. அற்புத மூளை... அப்பப்பா... சந்தேகத்துக்கிடமற்ற ஓர் அதியற்புத மூளை! அந்த மூளையின் உச்சபட்ச போதனை: 'ஒரு விஷயத்தை நீ பாதுகாப்பா நடத்தணும்னா, அதை நீயே உன் கைப்பட பண்ணாதே. பலிகடா மூலமா பண்ணு!' விளைவு: இங்கே, நாம ஒவ்வொருவரும், நடைபெற்றக் குற்றங்களுக்கான காரணகர்த்தாக்களாக சட்டத்தின் கைப்பிடிக்குள் அகப்பட்டும், கலோனுடைய கண்ணசைவிலிருந்து தப்ப முடியாமலும் கிடக்கிறோம். நம்மில் ஒருத்தராலும் அவரைச் சுட்டிக்காட்ட முடியாத அவல நிலைமை தான் மிச்சம்.''

அவள், இவனுடைய வார்த்தைகளை முழுமையாய் அங்கீகரிக்க மாட்டாள் என்று எதிர்பார்த்தவனைப் போல இவன் கொஞ்சமாய் நிறுத்தினான். ஆனால் அவள் அமைதியாகவே இருந்துவிட்டாள் - பழையபடி தனக்குள் தானே சிரித்துக் கொண்டபடி.

''நம்மில் ஒருத்தரால கூட அவரை நோக்கி சுட்டுவிரல் நீட்ட முடியாத துர்கதி'' - அதையே முணுமுணுத்துக் கொண்டிருந்தான். ''இத்தனையிருந்தும், உனக்கு விஷயம் தெரியுமா...?! கிழவன் ஒரு பத்தாம்பசலி! ஆங்...! நிறைய மூடநம்பிக்கைகள்! சில வருஷங் களுக்கு முன்னாடினு ஞாபகம்... எதிர்காலத்தைக் கணிச்சு சொல்லும் ஆளுங்க இருக்கானுங்க இல்லே, அப்படிப்பட்ட ஒருத்தியைத் தேடி இவர் போயிருக்கார். அவளும் இந்தாளு வாழ்க்கையே, ஒரு வெற்றிப் பயணம்தான்னு ஆரூடம் கணிச்சிருக்கு. ஆனா, இவனுடைய சீரழிவு, நிச்சயமா ஒரு பொண்ணால தான்னும் அறிவிச்சிருக்கு.''

இதனால் அவளுடைய கவனத்தை ஈர்த்து விட்டிருந்தான் கவுண்ட். அவள் பரவசமாய் நிமிர்ந்து பார்த்தாள். ''இது எதிர்பாராதது! ரொம்ப ரொம்ப அதிசயிக்கத்தக்க வகையில ஒத்துப்போவது! ஆஹ்... ஒரு பெண்ணால, ஆங்...?!''

இவன் சிரித்தபடி தோள்களைக் குலுக்கிக் கொண்டான். ''இப்ப ஓய்வு பெறப் போறார், இல்லியா... உடனடியா சந்தேகமில்லாம நிச்சயமா ஒரு பொண்ணைக் கலியாணம் பண்ணிக்கத் தான் போறார். உயர்தட்டு வட்டத்திலிருந்து பொறுக்கி எடுக்கப்படும் ஓர் இளைய அழகினு வெச்சுக்கோயேன். மில்லியன் மில்லியனா இவர் சேர்க்க

*எடுத்துக்கிட்ட நேரத்தை விட குறைச்சலான அவகாசத்துல அவ அத்தனையையும் கரைப்பா!''*

*நதீனா மறுத்துத் தலையசைத்தாள். ''ம்ம். இல்லையில்லை. அந்த வழியில கிடையாது அவருக்கு அழிவு. ஏய், கவனி... நான் நாளைக்கு லண்டன் போறேன்.''*

*''ஆனா உன்னுடைய இந்த கான்ட்ராக்ட்? ஒப்பந்தத்துல கையெழுத்துப் போட்டிருக்கே.''*

*''ஓர் இரவு மட்டும் தான்யா நான் வெளியேறியிருப்பேன். மாறுவேஷத்துல, வேறொரு பெயருல! ஃபிரான்ஸை விட்டுட்டு நான் கிளம்பியிருக்கேன் என்பதே ஒரு நாய்க்கும் தெரியாது. சொல்லு... இப்போ ஏன் நான் கிளம்பறேன்னு நீ நினைக்கிறே?''*

*''ஜனவரி... உயிர்க் குடிக்கும் பனிக்காலம்! அதனால வெறும் கொண்டாட்டத்துக்காக இருக்க முடியாது. ஏதாவது லாபகரமான ரகசிய ஒப்பந்தம், ஆங்?''*

*உடனே விசுக்கென்று இவனுக்கு முன்னால் எழுந்து நின்று கொண்ட அவள், அகந்தையும் இறுமாப்பும் பொங்கி வழிய ''ரொம்பச் சரியா சொல்லிட்டே'' என்றாள், பெருமையாய். ''நம்ம பாஸை நம் ஒருத்தராலும் சுட்டிக் காட்ட முடியாத நிலைமை இருக்குனு இப்பத்தான் நீ சொன்னே. ஹா...நீ தப்பு. எனக்கு இருக்கு. என்னால... ஒரு பெண், என்னால... அது முடியும். அதற்கான சாதுர்யமும், தைரியமும்... ஆமாம், அவரை எந்த இடுக்கு வழியாகவும் தப்பிக்க முடியாம மடக்கிப் பிடிக்க தைரியம் ரொம்ப அவசியம்... அப்படிப்பட்ட மனோதைரியமும், எனக்கிருக்கு. டீ-பீர் வைரங்கள் பற்றி உனக்கு நினைவிருக்கா?''*

*''ம். நல்லா. கிம்பர்லி-ல அரங்கேறிய சமாச்சாரம் தானே? அதுக்கும் எனக்கும் எந்தவிதமான சம்பந்தமும் இருக்கலே... அதுல என்ன நடந்தது என்பதும் என் காதுகளுக்குக் கொண்டு வரப்படலே... ஏதோ காரணங்களுக்காக அந்த சமாச்சாரம் காதும் காதும் வெச்சா மாதிரி மூடி முடிக்கப்பட்டது. எல்லாம் சரிதானே? ரொம்ப இழுத்தடிச்ச விஷயம் வேற!''*

*''பத்து லட்சம் பவுண்டுகள் பெறுமான கற்கள்! நாம ரெண்டு பேரும் அதுக்கான திட்டங்களை வடிவமைச்சோம் கலோனலின் கட்டளையின் பேரில் தான்! அப்போ தான் நான் அதுல எனக்குள்ள சாதகங்களைப் பார்த்தேன். போட்டிருந்த திட்டம் இது தான். அந்தச்*

சமயத்துல, கிம்பர்லி பகுதிக்கு, தென் அமெரிக்காவிலிருந்து ரெண்டு இளம் வைர வியாபாரிங்க வந்திருக்காங்க. அவங்ககிட்டேயிருந்த சில கற்களை எடுத்துக்கிட்டுப் போய், உண்மையான டீ-பீர் வைரங்கள் சிலவற்றுக்கு பதிலா மாற்றி வைச்சுடணும். அப்புறம், சந்தேகம், வாட்டமா அவங்க மேலே விழும் என்பது நிச்சயம்.''

''மகா புத்திசாலித்தனம்'' என ஒப்புதலாய்க் கணக்கிட்டான் கவுண்ட்.

''கலோனல் எப்போதுமே மகாபுத்திசாலித் தானே! நல்லது. இதுல எனக்குத் தரப்பட்ட ப்ளானிங் பாத்திரத்தை நான் வெகு அழகா செஞ்சு முடிச்சேன். ஆனா, கூடவே கலோனல் கணக்கிட்டிராத இன்னுமொரு வேலையையும் செஞ்சேன். ஓரிரு தென் அமெரிக்கக் கற்களை, நான் என் வசமாக்கினேன். ஒன்றிரண்டு தனித்துவம் மிக்க கற்கள் அவை...! தனித்துவம் மிக்கவை... அவை வெறும் கற்களா, டீ-பீர் வைரங்களா என பிரித்தறிய முடியாத அளவுக்கு...! என் கைகளில் இக்கற்கள் இருப்பதால், நம் மதிப்பிற்குரிய பாஸுக்கு முன்னாடி கையில் சாட்டையோடு நிற்கும் தலைவி - *நான்!* ஒருவேளை... விலைமதிப் பற்ற டீ-பீர் வைரங்கள் களவாடப்பட்டிருப்பது தெரிய வருதுனு வெச்சுப்போம்; அப்போ, அதற்கு பதிலாய் வைக்கப்பட்டிருக்கும் வைரங்கள் கிம்பர்லி வைரங்கள் என்பது உடனே புலனாகிவிடும். இதனால் அதாவது இக்கற்களில் ஒருசில நம்மிடமே தங்கிவிடுவதால், அந்த ரெண்டு இளம் வியாபாரிங்களும் இந்த விஷயத்திலிருந்து விடுபட்டாலும் கூட... (அல்லது தண்டனையே கிடைச்சுட்டாலும் கூட...!) 'கலோனல்' மேல சந்தேகம் விழுவது நிச்சயமாகுது, இல்லையா!

''இன்றுவரைக்கும் நான் மூச்சு காட்டலே... இந்த ஆயுதத்தை உபயோகப்படுத்த நேரம் தோதா வரலே என்பதை நான் அறிந்திருந் தேன். ஆனா, இப்போ நிலைமையே வேறு. எனக்கு என்னோட கூலி வேணும்... அது, ரொம்பப் பெரிசா இருக்கும். அவரை உலுக்கிக் கீழே தள்ளும் விலையைக் கூட நான் கேட்கலாம்!''

''அசாதாரணம்'' என்றான் கவுண்ட். ''அந்த வைரங்களை நீ போகுமிடமெல்லாம் கூடவே தூக்கிக்கிட்டா அலையறே?' - கேட்ட இவனுடைய கண்கள் கலைந்த நிலையிலிருந்த அறை முழுவதையும் ஒரு சிறு வட்டமிட்டன.

நதீனா மெலிதாய் சிரித்து விட்டாள். ''அப்படி எதையும் நீ ஊகிக்க வேண்டாம். நான் முட்டாள் கிடையாது. யாரும் கனவில் கூட

நினைச்சுப் பார்க்க முடியாத ஓரிடத்தில், அந்த வைரங்கள் சர்வ பாதுகாப்பா இருக்கு.''

''உன்னை நான் என்னிக்குமே ஒரு முட்டாளா கருதியது கிடையாது, மை லேடி. ஆனா... நீ இப்போ இந்த விஷயத்துல பைத்தியக் காரத்தனமா நடந்துக்கிட்டிருக்கேனு சொன்னா... வருத்தப்படாதே! தான் ப்ளாக் மெயில் பண்ணப்படுவதை ரொம்ப கருணையோடு பார்க்கும் ஒரு மனிதன் கிடையாது நம்ம 'கலோனல்' என்பது உன் நினைவிலிருக்கட்டும்.''

''அவருக்கு நான் பயப்படலே'' இப்போது சற்று உரக்கவே சிரித்தாள். ''நான் பயப்பட்டது ஒரே ஓர் ஆளுக்காகத் தான் - அவன் - இறந்துட்டான்.''

சிறு ஆர்வம் பொதித்து அவளைப் பார்த்தான் இவன். ''அவனுக்குத் திரும்பி உயிர் வந்துடாம இருக்கட்டும்'' என்று கிண்டலாய் குறிப்பிட்டான்.

''என்ன சொல்றே நீ?'' என்று கதறியே விட்டாள் நடனத் தாரகை.

இதற்கு கவுண்ட் சற்று ஆச்சரியத்துப் போனான். ''ஏய், ஏய்... அவன் மறுபடியும் உயிர்த்தெழுந்து வந்தா உன் நிலைமை என்ன ஆகும்னு சும்மா கேட்டேன்'' என விளக்கினான். ''ஒரு முட்டாள்தனமான ஜோக்னு வெச்சுக்கோயேன்.''

''ஓ, நோ'' என ஒரு நிம்மதிப் பெருமூச்சினை வெளியிட்டாள் அவள். ''அவன் செத்தாச்சுப்பா. போர்ல கொல்லப்பட்டுட்டான். ஒரு காலத்துல - என்னைக் காதலிச்சவன் அவன்.''

''தென் ஆப்பிரிக்காவிலேயா?'' - ஒதுக்கும் தொனியில் கேட்டான் இவன்.

''ஆமாம். நீ கேட்கறதனால சொல்றேன் யெஸ்... தென் ஆப்பிரிக்காவில தான்.''

''அதுதானே உன்னோட பிறந்த நாடு... ஆங்?''

அவள் ஒப்புதலாய் தலையசைத்தாள். அவளைப் பார்க்க வந்திருந்த இவன் எழுந்து தன்னுடைய தொப்பியை எடுக்கப் போனான். அப்போது ''கவனி'' என்று குறிப்புத் தந்தான்: ''நீ என்ன பண்ணணும் என்பது உனக்கு நிச்சயமா நல்லாவே தெரிஞ்சிருக்கும் தான். இருந்தாலும் சொல்றேன்... நான் மட்டும் உன் இடத்துல இருந் தேன்னா, 'கலோனலுக்காக' அத்தனை பயப்படுவேன். அவரோட சக்திகளைப் பற்றி ஒருத்தர் வெகு சுலபமா குறைத்து மதிப்பிடலாம். ஆனா, நிஜம் அப்படி கிடையாது.''

கடுப்பேற்றும் வகையில் சிரித்தாள் அவள். ''எனக்கென்னவோ இத்தனை வருஷமா அவரைப் பற்றி எதுவுமே தெரியாது என்பது போல இருக்கு - நீ பேசறது!''

''உனக்கு அப்படி ஏதும் தெரியுமானே எனக்கு சந்தேகமா இருக்கு!'' என்றான் இவன், மிருதுவாய். ''ஆமாம்... உனக்கு அப்படி ஏதும் தெரியுமானு எனக்கு அவ்ளோ சந்தேகமா இருக்கு.''

''ஓ, கவனி. நான் முட்டாள் இல்லே! மேலும் இந்த சமாச்சாரத்துல நான் தனியொரு ஆளா இயங்கலே... ஓகே? தென் ஆப்பிரிக்காவின் பயணியர் படகு நாளைக்கு கடற்கரையில வந்து தங்கப் போகுது. நான் கொடுத்த சில கட்டளைகளைச் செயல்படுத்திட்டு அங்கிருந்து என் அழைப்பின் பேரில் இன்னொருத்தரும் அந்தப் படகுல வந்திருப்பார். ஆக, 'கலோனல்' எதிர்கொள்ள வேண்டிய ஆள், ஒருத்தர் மட்டும் கிடையாது - ரெண்டு.''

''இது புத்திசாலித்தனம் தானா?''

''இது அத்தியாவசியமா இருக்கு.''

''அந்த ஆள் மேலே நீ நம்பிக்கையா தான் இருக்கியா?''

ஒருவகையான விந்தையான சிரிப்பு நடனக்காரியின் முகத்தில் படர்ந்தது. ''எனக்கு அவர் மேல பரிபூரண நம்பிக்கையிருக்கு. அவர் சூட்டிகைக் குறைஞ்சவர் தான் - ஆனா நம்பலாம்.'' நிறுத்தினாள். பிறகு உதாசீனமான குரலில் சொன்னாள்: ''சொல்லப் போனா, அவர் என் புருஷனும் கூட.''

# அத்தியாயம் - 1

இடம், வலம், மேல், கீழ் என எல்லாப் புறங்களிலும் என்னைப் பிடுங்கி எடுத்தார்கள். பெரும்புள்ளியிலிருந்து (யுனைடெட் கிங்டமின் முக்கியப் புள்ளியான திருமிகு நாஸ்பி), கடைக்குட்டி வரை (எல்லா வேலைகளுக்காகவும் வீட்டிலிருந்து வந்த வேலைக்காரி காலஞ்சென்ற எமிலி. 'கடவுளே! யம்மோவ்... யம்மோவ்..! இந்த எல்லா சமாச்சாரங்களையும் வெச்சுக்கிட்டு நீ எம்மாம் பெரிய பயங்கரமான பண்ணலாம் - யப்பாடி! யம்மோவ். அது சும்மா பயாஸ்கோப்புக்கு படம் போலல்லே வரும்) நச்சரித்தார்கள்.

இந்த வேண்டுகோள்களை ஏற்றுக் கொள்ள எனக்கு சில தகுதிகள் இருக்கின்றன என்பதை நான் ஒப்புக் கொண்டாக வேண்டும். ஆரம்பம் முதலே இந்த சமாச்சாரத்தில் நான் இரண்டறக் கலந்திருந்தேன். இதன் ஒவ்வோர் அங்குலத்திலும் நானிருந்தேன் என்பதை விட, 'அந்த மரணம்' நிகழ்ந்த ஸ்தலத்திலேயே நான் முக்கிய பங்காற்றியிருக்கிறேன் என்று சொல்வது தான், ஒரு முழக்கமான முத்தாய்ப்பாய் அமையும்! இதில், அதிர்ஷ்டவசமாக, என்னால் இட்டு நிரப்ப முடியாத சிறு சிறு இடைவெளிகளை, சர் ஆஸ்டஸ் பெட்லரின் கையேடு, வெகு எதேஷ்டமாக அள்ளித் தந்தது. அதை உபயோகப்படுத்தினால் தான் ஆயிற்று என்று கெஞ்சாத குறையாக உதவினார் சர் ஆஸ்டஸ் பெட்லர் - பாராளுமன்ற அங்கத்தினர், எம்.பி.

ஆகவே - இதோ சமர்ப்பிக்கிறேன்.

ஆனே பெட்டிங்ஃபெல்ட், தன்னுடைய வீரதீர சாகச வெற்றிகளைச் சொல்லத் துவங்குகிறாள்.

நான் சாகசங்களை எதிர்பார்த்து ஏங்கிக் காத்துக் கிடந்திருக்கிறேன்! எதற்காக? என் வாழ்க்கை அந்த அளவுக்கு எவ்வித மாறுபாடுமற்று வெறும் தட்டையாக போய்க் கொண்டிருந்ததால்! என் தந்தையார், பேரா. பெட்டிங்ஃபெல்ட், உலகின் ஆரம்பக்கால ஆதி மனிதன் பற்றிய படிப்பில், இங்கிலாந்தில் வாழ்ந்துக் கொண்டிருந்த வல்லுநர்களிலேயே

முதன்மையானவராகத் திகழ்ந்தார். இதில் ஒப்புயர்வற்ற நிஜ நிபுணர் அவர் அனைவரும் ஏற்றுக் கொண்டனர். பழங்கல்வெட்டுக்கள் ஓலைகள் போன்றவை விவரித்துக் கூறும் ஆதி மனிதக் காலத்திலேயே வசித்து வந்தார் அப்பா. இதனால் நாகரீக வாழ்க்கை முறையோடு அவர் ஒத்துப் போக வேண்டியிருந்த தேவை ஒன்றுதான், அவருக்கிருந்த பெரும் அசௌகரியமாக இருந்தது! நாகரீக மனிதனை அப்பா ஒரு பொருட்டாகவே கொள்ளவில்லை சொல்லப் போனால், கற்கள் கொண்டு நெருப்பு உருவாக்கி மர ஆடை தரித்து என - மனிதன் சற்று நாகரீகமாய் விழித்தெழுந்த காலகட்டத்தையே கூட, வெறும் மாட்டு மந்தை என்று இகழ்ந்து வெறுத்தே வந்தார், அப்பா. குகைக்குள் அடைந்துக் கிடந்த மனிதர்கள் தான் 'மனிதர்கள்' என்று உற்சாகமானார்!

துரதிர்ஷ்டவசமாக, நாகரீக மனித சங்காத்தமே வேண்டாம் என்று ஒதுங்கி ஒருவரால் வாழ்ந்து விடயியலாதே. பால்காரன், தயிர்க்காரன், மளிகைக்காரன், வேலைக்காரன்! யாரையென்று விலக்குவது? பல கோடி ஆண்டுகளுக்கு முன்பான காலகட்டத்தில் வாழ்ந்துக் கொண்டிருந்த அப்பாவாலும், நான் கைக்குழந்தையாய் இருந்த போதே அம்மா இறந்து விட்ட காரணத்தாலும், தினசரி வாழ்க்கையின் அத்தனையும் என் தலையில் விடிந்தன. அப்பா எழுதிய 'இரண்டு கோடி வருடங்களுக்கு முன்னால் வாழ்ந்த மனிதனும் அவனுடைய பரம்பரையும்' என்ற தலைப்பிலான புத்தகத்தைத் தட்டச்சு செய்து, சரிபார்த்து, திருத்தி இறுதியாக்க நான் ஒத்துழைத்திருந்தாலும், 'இந்த மனுஷங்கள் எல்லாம் ஒரு நாள் காணாமலே போய் ஒழிந்தார்களே. அது எத்தனை அதிர்ஷ்டமான ஒரு பொன்னான நேரம்..' என நான் பல தடவை எண்ணியிருக்கிறேன். எனக்கென்னவோ, ம்ம்... இந்த ஆராய்ச்சியிலெல்லாம் ஈடுபாடே இருந்ததில்லை.

இந்த ஆய்வுகளின் மீது இப்படி ஒரு வெறுப்புணர்வு எனக்குள்ளிருப்பதை அப்பா படித்திருப்பாரா என்று தெரியவில்லை. மாட்டார் என்று தான் நினைக்கிறேன். அப்படியே கவனித்திருந்தாலும் என் உணர்வுக்குப் பெருசாய் ஈடுபாடு காட்டியிருக்க மாட்டார். என்றுமே, மற்றவர்கள் சொல்லும் கருத்தும் ஆலோசனைகளும் அவரைக் கிஞ்சித்தும் ஈர்த்தவை கிடையாது. மேதாவித்தனத்தின் தவிர்க்க முடியாத தகுதி இது என்பது என் கணிப்பு. அப்படிப்பட்ட ஒரு மேதாவியைப் போலவே, தினசரி வாழ்க்கையின் அனைத்துத்

தேவைகளிலிருந்தும் தன்னை விடுவித்துக் கொண்டேதான் அப்பாவும் வாழ்ந்தார். உயர்வான வகையைச் சேர்ந்த உணவினையே சாப்பிட்டு வந்த அவர், அவற்றுக்குண்டான பணத்தைத் தர வேண்டிய நிலை வந்தபோது மட்டும் சிறு வலி கொண்டார். வாழத் தேவையான பணம் எங்களுக்கு சொற்பமாகவாவது இருந்ததாய், என்றுமே எனக்கு நினைவிருந்ததில்லை. நல்ல பணத்தை சன்மானமாகக் கொண்டு வரத்தக்க புகழல்ல. அப்பாவினுடையது. சமூகத்தில் நிலவிய ஒவ்வொரு முக்கியமான சங்கத்திலும் அங்கத்தினராக இருந்தார். அவர் பெயர் தாங்கி அத்தனை கடிதங்கள் ஒரு நாளைக்கு வரும். இத்துணையிருந்தும் இப்படி ஒரு மேதாவி வாழ்ந்துக் கொண்டிருப்பதைப் பொது ஜனம் அறியாமலே இருந்தது. இதனால், பல்லாண்டுகள் போற்றிப் பாதுகாத்துப் படித்தறிய வேண்டிய புத்தகங்களை, ஒரு தனி மனித சாதனையாக அப்பா தந்திருந்தாலும் அவை பொது ஜன ஈர்ப்பைக் காணவில்லை. ஒரே ஒரு சந்தர்ப்பத்தில் மட்டும் தான் அப்பா பரவலாக அறியப்பட நேர்ந்தது. சிம்பான்ஸீ எனப்படும் மனிதக் குரங்கின் குட்டி பற்றிய ஒரு கட்டுரையை ஏதோவொரு அறிவியல்/ மருத்துவக் கூட்டத்தில் அவர் படிக்கும் வாய்ப்பு வந்தது. வளர்ந்து முதிர்ச்சியுற்ற சிம்பான்ஸீகளை விட இளைய சிம்பான்ஸீகள் தான், மனித அமைப்புக்கு மிக நெருக்கமாக ஒத்து வருகின்றன என்றார். இதன் சாறாக, ஆரம்பக்கால மனித வர்க்கம் (இப்போதிருக்கும் நம்மை விட) சிம்பான்ஸீகளை அதிகம் ஒத்திருந்தாலும், இப்போதிருக்கும் சிம்பான்ஸீகளை விட அப்போதையவை, தனது நிஜமிழக்காது நன்கு மேம்படுத்தப் பட்டிருந்தன என்று ஆனது. அதாவது ஆதி காலம் முதல் இப்போது வரை சிம்பான்ஸீகள், அவற்றின் அமைப்பில் மெருகு குறைந்து சீரழிந்து வருகின்றன என்பது அர்த்தமாகின்றது. இக்கருத்து சுடச் சுட இருப்பதாக கணித்த த டெய்லி பட்ஜெட் செய்தித்தாள், உடனடியாக தலைப்புச் செய்திகளை அடித்தது. 'நாம் குரங்கிலிருந்து வரவில்லை... ஆனால் குரங்குகள் நம்மிலிருந்து வந்தனவா? இத்துறையின் பிதாமகர் பேராசிரியர் இப்படிச் சொல்கிறார்' என தோரணங் கட்டியது. உடனடியாக அப்பாவைச் சந்தித்த அதன் நிருபர், அது குறித்து ஒரு தொடர் கட்டுரையைத் தொடங்க வேண்டும் என்று கேட்டுக் கொண்டார். அந்த அளவுக்குக் கோபங்கொண்டு அப்பாவை நான் பார்த்ததே கிடையாது. வந்தவரைத் துளியும் எதிர் கொள்ளாது, நிருபரை வீட்டை விட்டே துரத்தினார்

அப்பா. இதற்காக மனசுக்குள் நான் மிக ரகசியமாக துக்கப்பட்டேன். அந்நேரத்தில் ஒரு தம்புடிக்கு தாளமிட்டுக் கொண்டிருந்தோம் நாங்கள். குடுகுடுவென்று அந்த நிருபரின் பின்னாலேயே நான் ஓடிப் போய் 'அப்பா இப்போது மனசை மாற்றிக் கொண்டு விட்டார். நீங்கள் கேட்டவற்றைத் தங்கு தடையின்றி தருவார்' என்று சொல்லி விடுவது போலக் கூட கற்பனை பண்ணிக் கொண்டேன்! அப்பா எழுத வேண்டியதையெல்லாம் நானே கூட எழுதியிருக்க முடியும்... அந்த டெய்லி பட்ஜெட்டெல்லாம் அப்பா படிக்கவல்ல பத்திரிகையே கிடையாது. ஆகையால் அவருக்கும் தெரிந்திருக்கப் போவதில்லை. இருந்தாலும் அந்த ஆபத்தினைக் கையிலெடுத்துக் கொள்ளத் துணியாத நான், எனக்கு மிகப் பிடித்தமான தொப்பி ஒன்றைக் கூந்தலுக்குப் பாதுகாப்பாய்த் தலையில் மாட்டிக் கொண்டு தன்னந்தனியாய் கிராமத்தில் இறங்கி நடக்க ஆரம்பித்தேன்.

த டெய்லி பட்ஜெட்'டிலிருந்து வந்தானே, ஒரு நிருபன்... அவன் ஒருத்தன் தான் எங்களது வீட்டுக்கு வந்து போன ஒரே ஓர் இளைஞன்! வேலைக்காரி எமிலியைப் பார்த்து நான் பொறாமைத் தீயாய் மூச்சுவிட்ட காலமொன்று உண்டு... அவளோடு திருமணம் நிச்சயிக்கப்பட்டிருந்த ஒரு வாட்டசாட்டமான மீனவனோடு சந்தர்ப்பம் வாய்க்கும்போதெல்லாம் அவள் கிளம்பி விடுவாள். 'கையில் காசு கொஞ்சம் தங்க...' (இப்படித்தான் அவள் சொல்வாள்!), அவ்வப்போது வயக்காட்டு வாலிபனோடும் மருந்துக்கடைக்காரப் பையனோடும் ஊர் சுற்றி வருவாளாம். 'என் கையிலும் கொஞ்சம் காசு தங்க... ஒருத்தன் அகப்பட மாட்டான் என்கிறானே...' என நான் வருத்தப்பட்டுக் கொண்டு நிற்பேன். அப்பாவின் அனைத்துத் தோழர்களும் வயதான பேராசிரியர்கள். நீளநீளமான தாடிகளோடு. ஒருமுறை பேராசிரியர் பீட்டர்ஸன் என்னை அன்போடு இறுக்கிப்பிடித்து, 'உன் இடுப்பு ஆஹ்... ஒரு தனியழகு' என்று சொல்லி விட்டு என்னை முத்தமிட முயற்சித்ததென்னவோ உண்மைதான். இதிலும் மேற்கொண்டு எதுவுமில்லை!

இப்படியே வறட்சியாய் ஒரே மாதிரி போனது வாழ்க்கை. சாகசங்களுக்காக நான் ஏங்கினேன்... காதலுக்காக நான் தவித்தேன்... காதல் விளையாட்டுகளுக்காக நான் பரிதவித்தேன்... இவையில்லாமல் நான் மெல்லப் பிரயோஜனமற்றுப் போய்க் கொண்டிருப்பதாய் உணர்ந்தேன். கிராமத்தில் ஒரு வாடகை நூலகம் இருந்தது. கந்தலும்

*கிழிசலுமாய் பல கற்பனை க்ரைம் கதைகள் அங்கு கிடைத்தன. அவற்றில், அந்நியமாய், பேராபத்துக்களையும் காதல் கிளுகிளுப்புக் களையும் ஒருசேர பயின்ற நான், ஒரேயடியில் எதிராளியைத் தலைக்குப்புற ஆக்கும் கதாநாயகர்களோடு கனவுகளில் கை கோர்த்துக் கொண்டேன். இப்படிப்பட்ட சூராதி சூரர்களோடு கற்பனையில் வாழ்ந்த எனக்கு, ஒரே அடியில் வேண்டாம்... பல அடிகளில் எதிராளியை வீழ்த்துமளவுக்காவது சாமர்த்தியம் கொண்ட ஒருத்தன் கூட அமையவில்லை!*

*பமீலாவின் சாகசங்கள் என்ற தலைப்பில் ஒரு தொடர் சினிமா கூட உண்டு. வாரம் ஒரு பாகம் வரும். பமீலா ஒரு மகத்துவம் வாய்ந்த பெண். எதாலும் அவளைக் கலங்கடிக்க முடியாது. அவள் ஏரோப்ளேனிலிருந்து குதிப்பாள், நீர்மூழ்கிகளுக்குள் வீரசாகசங்கள் செய்வாள், மிக உயரக் கட்டிடங்களை லாகவமாகத் தாண்டிப் பார்ப்பாள், மறைந்து வாழும் தாதாக்களைக் கூந்தலின் ஒரு மயிரிழைக் கலையாது கவிழ்ப்பாள். உண்மையில் அவள் அப்படியொன்றும் புத்திசாலியெல்லாம் கிடையாது. ஒவ்வொரு முறை அந்த 'பாஸ்' அவளைக் கையகப் படுத்தி, விஷவாயு பாயும் காஸினைத் திறந்து விட்டோ அல்லது இதுபோன்ற ஏதோ ஒரு விசித்திரமான ஒன்றினைச் செய்தோ அவளைக் கொல்லத் துணியும் போது 'தொடரும்' வரும். பிறகு அடுத்த பாகம் அடுத்த வாரம் ஆரம்பமாகும் போது, ஹீரோ, எப்படியாவது அவளைக் காப்பாற்றி வெளிக் கொண்டு வந்து விடுவான். ஆஹ்... என்ன ஒரு சாகசம் என்று தலை கிறுகிறுக்க குதித்தபடி நான் வெளியே வருவேன்*

*மீதமிருக்கும் காஸ் தொகையைக் கட்டாவிட்டால் அதன் இணைப்புத் துண்டிக்கப்படும் என்ற நோட்டீஸை வீட்டில் பார்க்க! என் காஸ் அனுபவம் இப்படி!*

*இப்படியிருந்தாலும், ஏதாவது ஒருவகையில், ஒவ்வொரு கணமும், ஒருவகை சாகசம் என்னருகில் வந்து விட்டுத் தான் போகின்றது என்பதில் எனக்கு சந்தேகம் இருப்பதில்லை.*

*ஒரு விசித்திரமான மண்டை ஓட்டினை தென்ருடேஸியா பகுதியில் உள்ள குன்றுச் சுரங்கத்துக்குள்ளிருந்து கண்டெடுக்கப்பட்டுள்ளது என்பது போன்ற செய்தியினை, காலையில் கண்விழிக்கும் போதே கேள்விப்படுவோர் உலகில் வெகுசிலரே இருக்க முடியும். அந்தச் சிலரில் நான் முதன்மையானவள்! இது எனக்கு ஒரு காலையில்*

நிகழ்ந்தது. அன்று, அப்பாவை, ஏதோ ஜன்னி கண்டு நடுங்கிக் கொண்டிருக்கும் ஒருவனைப் போல நான் பார்த்தேன். குதித்துக் கொண்டிருந்தார். என் தலை கண்டதும் முழு கதையையும் கொட்டினார். ''உனக்குப் புரியுதா, ஆனே? சந்தேகத்துக்கு அப்பாற்பட்டு, இதுல, ஜாவா மண்டையோட்டோடு மிக நெருக்கமான ஒற்றுமைகள் தென்படுது... ஆனா, அவை மிகவும் மேலெழுந்த வாரியா தானிருக்கு. ஆமாம்... ரொம்ப! இங்கே, ரெண்டு லட்சம் வருஷங்களுக்கு முன்னாடி ஐரோப்பா, தென் ஆப்பிரிக்கா போன்ற நாடுகளில் வாழ்ந்த ஆதிகால மனிதர்களின் மிச்சங்கள் இருக்கு; இதுல உடைக்கவே முடியாத மண்டையோடுகள் வகை தான், உள்ளதுலேயே மிகப் பழமையான மண்டையோடுகள்னு நீ ஒத்துக்கறே, இல்லையா? இந்தத் தேடலின் ஆணிவேர் ஆப்பிரிக்காவ தொடங்குது. அங்கிருந்து ஐரோப்பா நகந்தாங்க---''

''வறுத்து சூப் செய்யப்பட்டுள்ள எலும்பை முதல்ல சாப்பிடுங் கப்பா...'' என்றேன் நான் அவசரமாக, அப்பாவின் கவனத்தைத் திசை திருப்பும் வகையில்.

அவர், விடவில்லை. ''ஐரோப்பா நகர்ந்ததும்....''

இந்த இடத்தில், பேச்சுவாக்கில் சூப்பிலிருந்த மாமிச எலும்பினை அதிகமாக வாயில் போட்டுக் கொண்டதன் விளைவாக மிக மோசமாக இருமினார் அவர்.

ஆயினும், ''எப்படியாவது உடனடியாக நாம வேலைகளைத் துவங்கி முடுக்கி விடணும்...'' என்று அறிவித்தபடி, சாப்பாடு முடிந்த கையோடு தயாரானார். ''பொன்னான காலத்தை நழுவவிட அவகாசம் கிடையாது. ஸ்தலத்தில் உடனடியாக இருந்தாக வேண்டும். இதற்கு பக்கத்திலும் சுற்றுவட்டாரத்திலும் எண்ணற்ற கண்டுபிடிப்புகள் அகப்படலாம். நிச்சயமா! கிடைப்பவையெல்லாம் ஆதிகால மனிதன் மெல்ல நாகரீக மாற்றம் கொண்டபோது வாழ்ந்தவர்களுடைய எலும்புகளா இருக்கணும். ஆஹ்... அவை அந்தக் காலத்தைச் சேர்ந்தவை தானா என்பதைத் தெரிந்துக் கொள்வதில் நான் ரொம்பவும் ஆர்வமா இருக்கேன். ஆதிகாலத்து நரிகளின் மிச்சங்கள் இருக்கும். அதே காலத்து காண்டாமிருகங்களை மிச்சங்கள் கிடைக்குமா...? சந்தேகம் தான்! இந்த சேதி கிடைச்சதுமே அரசாங்கத் தரப்பு கிளம்பிடும். நோ, நோ. அதுக்கு வழி விடாம அவனுங்களுக்கு

முன்னாடி நாம போயாகணும். குக்'குக்கு இன்னிக்கு எழுதுடிறியா, ஆனே?''

சற்று லஜ்ஜையாய், ''காசுக்கு என்ன பண்றதுப்பா?'' என்றேன்.

திரும்பி என்னைக் கேவலமாய்ப் பார்த்தார். ''உன் பார்வை என்னை எப்போதும் கவலைக்குள்ளாக்குது, குழந்தே! நாம எப்பவுமே பணப்பைத்தியமா அலையக் கூடாதும்மா. கூடாது கூடாது. அதிலும் அறிவியல் சம்பந்தமா வாழ்க்கையை அர்ப்பணிச்சவங்களுக்கு பணத்தாசைக் கூடவே கூடாது.''

''ஆனா, குக், பணத்தாசை பிடிச்சவனா இருப்பான்னு எனக்குப்படுத்துப்பா.''

அப்பா, வலி கொண்டார். ''டியர் ஆனே. நீ அவனுக்கு உடனடியா கையோட பணத்தைக் கொடுத்துடு.''

''என்கிட்டே 'கையோட பணம்' கிடையாது.''

அப்பா, முழுக்கவும் எரிச்சலாகிக் கோபங்கொண்டவராய் தோன்றினார்.

''த பாரும்மா... இந்தப் பாழா போற பணத்துல என் தலையை விட்டுக்கிட்டு நேரத்தை என்னால வீணாக்க முடியாது. பாங்க்'கை கவனி. நேற்று மானேஜரிடமிருந்து என்னவோ ஓலை வந்தது 27 பவுண்ட் இருக்குனு.''

''அது பாக்கினு நினைக்கிறேன். இருப்பு கிடையாது.''

''ஆஆஆ...! என்ன பண்ணணுங்கிறே? என் பப்ளிஷர்களுக்கு எழுது. வரும்.''

இதை சந்தேகமாய் உள்வாங்கிக் கொண்டேன். பணத்தைத் திரும்பக் கொண்டு வருவதற்கு பதிலாக, அப்புத்தகங்கள், மேதாவி களிடமிருந்து வியப்பையும் பூரிப்பையும் தான் அவர்கள் எழுதும் கடிதங்கள் வாயிலாக உள்ளே கொண்டு வரும்! இந்த மனுஷன் இப்போது ருடோஸியாவுக்குக் கிளம்புவது எனக்குப் பூரண திருப்தியாயிருந்தது. 'கிளம்பு கிளம்பு சீக்கிரமா' என்று உள்ளுக்குள் நான் பரவசமானேன். அப்போது அப்பாவின் தோற்றத்தில் தெரிந்த ஏதோவொரு மாறுதல் என்னை அசாதாரணமாக அறைந்தது.

''ஒரு கால்ல ப்ரவுன் இருக்கு. அதைக் கழட்டிட்டு ரெண்டு கால்லையும் கறுப்பைப் போடுங்க. மஃப்ளரை மறந்துடாதீங்க. பனிக் கொட்டித் தீர்க்குது.''

*சற்று நேரத்தில் சரியான காலணிகளைப் போட்டுக் கொண்டு, இறுக்கமாய் மஃப்ளரையும் காது கழுத்து எல்லாவற்றையும் சுற்றிக் கட்டிக் கொண்டு கிளம்பினார் அப்பா.*

*அன்று மாலை வெகுநேரம் கழித்துத் திரும்பினார் அவர். எனக்குள் சிறு கிலேசத்தை உண்டுபண்ணும்படியாய், அவரிடம், மஃப்ளரும் மேல் கோட்டும் காணாமலிருந்தன.*

*''என்ன கண்ணு அப்படி பார்க்கிறே? உள்ளே போகும்போது அந்த ரெண்டையும் கழட்டி வெச்சுட்டேன். அத்தனை அசுத்தமாயிருக்கும், உள்ளே.''*

*உணர்ந்து, ஒப்புதலாய் தலையசைத்தேன். ஒருமுறை குகையைக் களைந்துவிட்டுத் திரும்பிய போது, தலை முதல் பாதம் வரை அங்கிருந்த களிமண் பூச்சினால் காய்ந்து வெடித்துத் திரும்பியிருந்தார் அப்பா.*

*'சின்ன ஹாம்ப்ஸ்லே' எனப்படும் இந்தப்பகுதியில் நாங்கள் வந்துக் குடியேறியிருப்பதற்கு முழுமுதற் காரணமே, அருகிலுள்ள ஹாம்ப்ஸ்லே குகைகள்தான். அங்கு, கற்காலத்து ஓடுகளும் எலும்புகளும் குவியல் குவியலாகப் புதைந்துக் கிடப்பதாய் அகழ்வு செய்திகள் உண்டு. கிராமத்தில் ஒரு சின்னஞ்சிறிய அருங்காட்சியகம் உள்ளது. அதன் கண்காணிப்பளனும் அப்பாவும் சேர்ந்துக் கொண்டு, புதையல் தேடுகிறேன் பேர்வழி என பூமியை நோண்டி நோண்டி ஆதிகாலத்து காண்டாமிருகத்தின் எலும்புகளையும் குகைக் கரடியின் ஓடுகளையும் பிடுங்கி வருவார்கள்.*

*அன்று மாலை அப்பா வெகு மோசமாக இருமியபடி இருந்தார். தொடர்ந்த மறுநாள் அவருக்கு ஏகமாக காய்ச்சல் அடிப்பதைக் கண்ணுற்ற நான் டாக்டரிடம் அனுப்பி வைத்தேன்.*

*பரிதாபத்துக்குரிய அப்பாவுக்கு, நோவிலிருந்து மீண்டு வாழ, மற்றொரு வாய்ப்பு அளிக்கப்படவில்லை. வந்தது, இரட்டை நிமோனியா. நான்கு நாட்கள் கழித்து அவர் காலமானார்.*

# அத்தியாயம் - 2

வந்த ஒவ்வொருவரும் என்னிடம் மிகக் கனிவோடு நடந்து கொண்டனர். அதிர்ச்சியிலிருந்த எனக்கு இது மிக்க ஆறுதலாய் அமைந்தது. நான் அப்படியொன்றும் மூலையில் அமர்ந்து துக்கத்தின் உச்சத்துக்குப் போகவில்லை. அப்பா என்னை எப்போதும் நேசித்தது கிடையாது. இது எனக்கே கூட நன்றாய்த் தெரியும். அவர் நேசித்திருந்தால் அதன் பயனாய் நானும் பதிலுக்குப் பாசத்தைப் பொழிந்திருக்கலாம். ம்ம்... இவ்வகை அன்புப் பரிமாற்றம் எங்களுக்குள் இடம்பெற வழியே இல்லாமல் போனது. ஆனால் இருவரும் ஒருவரைச் சார்ந்து மற்றவர் இருக்கும்படி வாழ்ந்தோம். நான் அவரைக் கவனித்துக் கொண்டேன்; விடாது படித்துக் கொண்டேயிருக்கும் அவருடைய குணத்தையும், அறிவியலின் பால் எவ்விதமான விட்டுக் கொடுத்தலுமற்று அவருக்கிருந்த அர்ப்பணிப்பையும் நான் பிரமிப்பாய் போற்றியிருக்கிறேன். வாழ்க்கை, ருசிப்பின் உச்சத்தில் அவருக்கு அமைந்த போது அகாலத்தில் அவர் தவறிவிட்டது, அப்பாவின் மீது எனக்குள் மிக்க இரக்கத்தை உண்டுபண்ணியது. ஆதிகாலத்துக் கலைமான் கொம்புகள், அதேகாலத்து மனித மண்டையோடுகள், சிக்கி-முக்கிக் கற்கள் ஆகியவை சூழ ஒரு சிறு குகைக்குள் அப்பாவைப் புதைத்திருந்தால் நான் திருப்தியாய் உணர்ந்திருப்பேன். ஆனால் கிராமத்து சர்ச்'சில் பளிங்குக் கல்லறைக்குள் புதைத்தால் தான் ஆன்மாவுக்கு நல்லது என்ற பெருசுகளின் பொதுக் கருத்து என் ஆசைக்கு வழிவிடவில்லை. மிக நேர்த்தியாக இது வடிவமைக்கப்பட்டிருந்தாலும், என்னைச் சிறிதளவும் திருப்திபடுத்தவில்லை.

நான் காத்துக் காத்து ஏங்கிக் கிடந்த வஸ்து சுதந்திரம் - அது, எனக்கே எனக்காய் அமைந்துவிட்டது என்பதை நான் உணர எனக்கு சிறிது நாட்கள் பிடித்தன. நான் அனாதையானேன்... கையில் தம்புடி கிடையாது... ஆனால் விடுதலை! இந்நேரத்தில், அப்பாவின் இழப்புக்கு வந்திருந்த அனைவருமே அசாதாரண வகையில் என் மேல்

கரிசனம் காட்டியதை நான் மனமார உணர்ந்து நன்றி கூறினேன். அருங்காட்சியகக் கண்காணிப்பாளன், அவனுடைய மனைவிக்கு அவசரமாய் ஒரு துணை தேவைப்படுவதாய்ச் சொல்லி அதை ஏற்றுக் கொள்ள என்னை உந்தித் தள்ளினான். எங்கள் கிராமத்தின் சிறு நூலகம், ஒரு துணை காப்பாளரைப் பதவியமர்த்துவது என்று திடீரென முடிவெடுத்துக் கொண்டது. கடைசியாய் டாக்டரும் என்னை வந்து பார்த்தார். அப்பாவைக் கவனித்தற்கான தொகையைப் பெற்றுக் கொள்ளாததற்கு பல கோமாளித்தனமான காரணங்களைச் சொன்ன அவர், தயங்கி வழிந்து தட்டுத்தடுமாறி வியர்த்து விழித்து, ஒரு வழியாய் அவரை நான் மணமுடித்துக் கொள்ள வேண்டும் என முடித்தார்.

நான் அப்படி ஆச்சரியித்துப் போனேன்! ஒரு பெரிய வட்டம் வரைந்தாற் போன்ற குண்டு உடம்பிலிருந்த டாக்டருக்கு வயது முப்பதைச் சுற்றி கூட இல்லை. நாற்பதிலிருந்தது. பமீலாவின் ஆபத்துக்கள் படத்தில் இருந்த ஹீரோவோடு துளியும் ஒத்துவராத அமைப்பு. பமீலாவின் காதலனைப் போல ஒரேயடியில் ஒரு கூட்டத்தைச் சிதைக்க வேண்டாம்... இவரால் பல அடிகள் அடித்து ஒரேயொருத்தனையாவது வீழ்த்த முடியுமா என்பது சந்தேகமே! ஒருகணம் துணுக்குற்ற நான் பிறகு என்ன காரணத்துக்காக அவர் என்னை மணமுடிக்க விரும்புகிறார் என்று கேட்டேன். இது அவரைப் பதைபதைத்துத் தள்ளிவிட்டதை நன்கு கவனிக்க முடிந்தது... நேரங்காலம் அறியாது உழைக்கும் ஒரு டாக்டருக்கு மனைவி என்பவள் மிக உதவிகரமானவள் என முணுமுணுத்தார். இப்போது, சூழ்நிலை, சற்று முன்பிருந்ததைவிடவும் மோசமாய் காதலுக்கே வழியற்ற நிலைமைக்கு ஆளானது. ஆனாலும் எனக்குள்ளிருந்த ஏதோவொன்று பேசாமல் ஒப்புக் கொள் என்று என்னைக் கெஞ்சியது. பாதுகாப்பு இதுதான், இப்போது, டாக்டரின் முன்மொழில் மூலம், எனக்கு முன்பு வைக்கப்பட்டுள்ளது! பாதுகாப்பு மேலும் ஒரு வசதியான வீடு. இப்போது நினைத்துப் பார்த்தால், என்மேல் உண்மையான காதலோடு வந்திருந்த அவருக்குக் கடைசியில் நான் ஏமாற்றத்தைத் தந்து குழப்பியே அனுப்பி வைத்துள்ளேன் என்பது விளங்குகின்றது.

''உங்க கனிவுக்கு மிக்க மிக்க நன்றி'' என்றேன் நான். ''ஆனா, இது, சாத்தியமற்ற ஒன்று. ஒருத்தனைப் பைத்தியக்காரத்தனமா நான் காதலிக்காத வரைக்கும், நிச்சயமா என்னால கலியாணம் பண்ணிக்க முடியாது.''

''அப்ப... நீ என்னை?''

''கிடையாது'' - முடிவாய்ச் சொன்னேன்.

அவர் பெருமூச்சு விட்டார். ''ஆனா, ஆனே! மேற்கொண்டு தனியாளா நீ என்ன பண்ணலாம்னு இருக்கே?''

''வீரதீர சாகசங்கள். உலகைப் படித்தல்'' - உடனடியாய் துளிகூட தயக்கமின்றி சொன்னேன் நான்.

''மிஸ் ஆனே... இன்னும் நீ வளராத சின்னக் குழந்தையாகவே இருக்கே. உனக்கு விளங்கலே...''

''எது? நடைமுறை கஷ்டங்களா? எனக்கு விளங்கும் டாக்டர். உலகமறியா பள்ளிக்கூடத்துப் பெண்ணல்ல, நான். நான் ஒரு சண்டைக்காரி பட்டாளத்தான் போல! ஒரு வேளை நீங்க என் கணவராயிருந்தா உங்களுக்கு இது நல்லா புரிஞ்சிருக்கும்.''

''நீ என் வேண்டுகோளை மறுபரிசீலனை செய்வேனு...''

''முடியாது''

அவர் மறுபடியும் பெருமூச்சு விட்டார். ''சரி. அப்போது இன்னொரு விஷயத்தை என்னால முன்மொழிய முடியும். வயசான என் உறவுக்கார பெண்ணொருத்தி வேல்ஸ் பகுதியில வாழறா. அவளுக்கு உதவியா இருக்க ஓர் இளம்பெண்ணைத் தேடிக்கிட்டிருக்கா. இது எப்படி உனக்கு?''

''எதுவும் வேண்டாம், டாக்டர். நான் லண்டன் போகப் போறேன். உலகின் எந்த மூலையிலும் விசித்திர நிகழ்வுகள் நடக்கும்னா, அவை லண்டனிலும் நடக்கும். என் கண்களைத் திறந்து வெச்சுக்கிட்டுக் காத்திருப்பேன் அப்போ ஆச்சரியமான ஒண்ணு முன்னாடி விரியும்! அதைப் பிடிச்சுக்கிட்டு சூடு பறக்கக் கிளம்புவேன்! நான் அடுத்து சைனாவிலோ ஜப்பானிலோ இருப்பதா உங்களுகளுக்கு சேதி வரும் பாருங்க!''

இதே போலவே கரிசனம் காட்டி வந்த எனது அடுத்த பார்வையாளர் - திருமிகு ஃப்ளெம்மிங். அப்பாவுடைய லண்டன் வக்கீல். என்னைப் பார்க்கவென்பதற்காகவே டவுனிலிருந்து மெனக்கெட்டு வந்திருந்தார் அவர். மனித வர்க்கத்தின் வளர்ச்சி குறித்த ஆய்வுகளில் தனிப்பட்ட முறையில் ஒரு சிறந்த அறிவாளியான அவர், அப்பாவின் பரம விசிறி. உயரமாய் மெலிருந்திருந்த அவர், நொடிந்த முகத்துடனும், நரைத்த கேசத்துடனுமிருந்தார். அறைக்குள் நான் நுழைந்ததுமே என்னை வரவேற்க உடனே எழுந்துக் கொண்ட அவர், என் இரு கைகளையும் பிடித்து அவற்றை மிக வாஞ்சையாய் தட்டிக் கொடுத்தார்.

''என்னம்மா இப்படி ஆயிடுச்சு'' என்றார். ''குழந்தே... என்னம்மா இப்படி?''

என்னை நானே தைரியமாய் காட்டிக் கொண்டிருந்த என் நிலைமைக் கழன்றுக் கொள்ள, நிலையிழந்த ஓர் அனாதையின் அவல நிலைமையை மெல்ல மெல்ல நான் உணரத் துவங்கினேன். கழிவிரக்கத்துக்குள் அப்படி என்னை வசியப்படுத்தித் திணித்தார் அவர். ஆதரவு நிறைந்த அன்பு செலுத்தினார். தந்தை ஸ்தானத்து கனிவு காட்டினார். இரக்கமற்ற உலகச் சூழலுக்கு நடுவில் விடப்பட்டு விட்ட ஒரு முட்டாள் பெண்ணாய்த் தான் அவர் என்னைக் கணித்தார் என்பதில் துளியும் சந்தேகம் கிடையாது. ஆனால், இதற்கு எதிர்பதமான ஒரு திடமான பெண் நான் என அவருக்குப் புரிய வைப்பதென்பது இயலாத ஒன்று என்பதை நான் ஆரம்பத்திலேயே கணித்து விட்டேன்.

''அம்மாடி... சில விஷயங்களை உனக்கு நான் புரியும்படியா விளக்க விரும்பறேன்... கவனிப்பியா, ம்?''

''ஓ, யெஸ்.''

''உன் அப்பா... உனக்கே நல்லா தெரிஞ்ச மாதிரி, ஒரு மாபெரும் நிபுணன். வரும் தலைமுறை அவரை தலையில் தூக்கி வைத்துக் கொண்டு ஆடிக் கொண்டேயிருக்கும் அத்தனை கண்டுபிடித்து விட்டுச் சென்றுள்ளார் அவர். ஆனா, அவற்றை வைத்துக் கொண்டு நல்லா சம்பாதிக்கத் தெரியாது தவற விட்டு விட்டவரும் கூட.''

திரு ஃப்ளெம்மிங்'குக்குத் தெரிந்த அளவு இல்லாவிட்டாலும், எனக்கும் கூட இது கொஞ்சம் தெரியும் தான். ஆனால் அப்படி நானே என் வாயால் ஒப்புக் கொள்வதைத் தவிர்த்தேன்... தடுத்தேன். அவர் தொடர்ந்தார்: ''இந்த விஷயமெல்லாம் உனக்குப் புரிஞ்சிருக்கும்னு சொல்ல முடியாது... அதனால, எத்தனை தீர்க்கமா முடியுமோ அப்படி விளக்க முயற்சி பண்றேன்.''

சொன்னது மாதிரியே தேவையற்ற நீளத்துக்கு விளக்கினார். இதன் உச்சகட்டம் என்னவென்றால், வாழ்க்கையை மேற்கொண்டு நான் எதிர்கொள்ள, எனக்கு 87 பவுண்டுகளும் 17 சென்டுகளும் விட்டு வைக்கப்பட்டிருப்பதில் போய் முடிந்தது. எனக்குக் கொஞ்சமும் திருப்தி தராத ஒரு தொகை. இதற்கடுத்து, வேல்ஸிலோ ஸ்காட்லாண்டிலோ அல்லது வேறெங்கோ, இந்த ஃப்ளெமிங்குக்கும் ஒரு வயசான பெண்மணி இருப்பாள் என்றும் அவளுக்கு உதவ ஒரு சின்னப் பெண் வேண்டும் என்ற நிலையிருக்கும் என்றும் எதிர்பார்த்தேன்! ம்... உண்மையில் அப்படி ஏதும் இல்லை!

''இப்போ கேள்வி என்ன'னா'', என்றபடி அவர் முன்னேறினார். ''எதிர்காலம். உனக்கு உயிரோடு வேறெந்த உறவும் இல்லைனு நினைக்கிறேன்.''

''நான் இந்த உலகில் தனித்து நிற்கிறேன்'' என்றேன். சொன்னதும் ஒரு தைரியமான சினிமா ஹீரோயின் போல வசனம் முடிந்ததை உணர்ந்து கொண்டேன்.

''நண்பர்கள் உண்டா?''

''எல்லோருமே என்னிடம் மிகவும் கரிசனமா நடந்துக்கிட்டாங்க'' - நன்றி மிளிரக் குறிப்பிட்டேன்.

''புதுப் பூப்போலக் குலுங்கும் ஒரு சின்னப் பெண்ணிடம் யார் தாம்மா கரிசனமா பேச மாட்டாங்க?'' அன்பு கலந்த பெருமிதத்தோடு குறிப்பிட்டார் அவர். ''சரி, சரி, ஆனே. மேற்கொண்டு என்ன பண்ண முடியும்னு நாம பார்க்கணும்.'' இப்படிச் சொல்லிவிட்டு சற்று நேரம் தயங்கிய அவர், ''சொல்லு - எங்கூட வந்து கொஞ்ச காலம் நீ கழிச்சா எப்படியிருக்கும்?'' என்று கேட்டார்.

இந்த வாய்ப்பைக் கேட்டதும் துள்ளினேன் நான். லண்டன்! எந்த முனையில் நடக்கும் விசித்திரங்களும், லண்டனிலும் நடக்கும்!

''எத்தனை கனிவானவர் நீங்கள்!'' என்றேன் நான். ''உண்மையா நான் அங்கே இருப்பேனா? ஆங்...?! வந்து தேடப்போறேன். நான் வாழ ஒரு வேலையைத் தேடித்தான் ஆகணும், இல்லையா?''

''ஆமாம், ஆமாம்... எனக்கும் புரியுது. சுற்றிப் பார்ப்போம் - தோதா ஏதாவது அமையுதானு!''

உடனடியாக, என் உள்ளுணர்வு ஃப்ளெம்மிங்கின் 'தோதா ஏதாவது அமையுதானு' எனும் கருத்தும் எனக்குள் நான் போட்டிருக்கும் கருத்தும் சேரவே சேராது விலகிப் போவதை உணர்ந்தது. ஆனால், அது என் கருத்தினைத் தூக்கி இவருக்கு முன்வைக்க உகந்த ஒரு நேரமே கிடையாது!

''அப்போ முடிஞ்ச மாதிரினே எடுத்துப்போம். என்னோட கிளம்பி இன்னிக்கே ஏன் நீ வந்துடக் கூடாது?''

''ஓ, தேங்க் யூ... ஆனா, மிஸஸ் ஃப்ளெம்மிங்...''

''உன்னை வரவேற்பதில் என் மனைவி ரொம்ப மகிழ்வா.''

இந்த புருஷர்கள், அவர்களுடைய மனைவிமார்கள் பற்றி எத்தனை தெரிந்து வைத்திருப்பதாய் நினைக்கிறார்களோ, உண்மையிலேயே அந்த அளவுக்கு அவர்கள் தெரிந்துதான் வைத்துள்ளார்களா என எனக்கு சந்தேகமானது. எனக்கொரு புருஷனிருந்தால், என்னை

முதலில் கலந்தாலோசிக்காமல் அனாதைகளை வீட்டுக்குள் கொண்டு வருவதை நான் கடுமையாய் ஆட்சேபிப்பேன்.

''அவளுக்கு ஒரு தந்தியை ஸ்டேஷனிலிருந்து அனுப்பிட்டா ஆச்சு'' என்று தொடர்ந்து கொண்டிருந்தார் வக்கீல்.

எனக்கிருந்த சில பிரத்யேகமான சாமான்கள் உடனே கட்டப் பட்டன. எத்தனைக்கெத்தனை ஓர் அனாதை போல தோன்ற வேண்டுமோ அது அப்படியே நிகழ வேண்டும் என்பதற்காக, எனக்கு மிகப்பிடித்தமான 'என்னோட தொப்பி...', என நான் பலமுறை போற்றிக் கொண்டாடும் எனது வட்டத் தொப்பியைக் கூட இதற்காக அணியாமல் ஒதுக்கி விட்டுக் கிளம்பினேன். என்னை எப்படி திருமதி ஃப்ளெம்மிங் வரவேற்பார் என்பதில் என்னுள் சிறு நரம்பதிர்வின் சாயல் படர்ந்து நிலைத்தது. நான் சென்று நிற்கும் ஏழைமைத் தோற்றமானது என்னைக் காப்பாற்றி விடும் என்ற நப்பாசையும் இருந்தது.

திரு ஃப்ளெம்மிங்கும் படபடப்பாகவே இருந்தார். இதை கென்ஸிங்டன் சதுக்கத்தில் நல்ல உயரமான அடுக்கத்தின் மாடிப் பகுதியிலிருந்த ஒரு வீட்டினை அடைந்தபோது உணர்ந்தேன். போதுமான அளவுக்கு இன்முகம் காட்டி திருமதி ஃப்ளெம்மிங் என்னை உபசரித்தார். குண்டாயும் சாந்தமாயும் 'நல்ல மனைவி ப்ளஸ் அம்மா' என்று சான்றிதழ் தரத்தக்க வகையில் தோன்றினார் அவர். மாசற்ற சுத்தமான ஒரு படுக்கையறை வரை என்னைக் கூட்டிப் போய் விட்டார். எனக்குத் தேவையான அனைத்தும் உள்ளே இருப்பதாய் நம்பிக்கை சொன்னார். கால் மணி நேரத்துக்குள் அறைக்குள் டீ வரும் என்றார். பிறகு நேரத்தை எனக்கே என்று விட்டு விட்டு விலகிப் போனார்.

முதல் தளத்துக்குக் கீழேயிருந்த வரவேற்பறைக்குள் மறுபடியும் அவர் நுழைந்துக் கொண்டிருந்த போது குரலை சற்றே உயர்த்தி அவர் பேசிக் கொண்டிருந்தது எனக்குக் கேட்டது. ''சொல்லு ஹென்றி எதுக்காக இதையெல்லாம்...''

பிறகு என்ன பேசினார் என்பதை நான் விட்டுவிட நேர்ந்தது. ஆனால், அக்குரலில் தொனித்த கடுமையையும், கசப்பையும் வெளிப்படையாகவே உணர முடிந்தது. சில நிமிடங்கள் கழித்து, இன்னும் கடுப்பு கூடியிருந்த ஒரு வாசகம், மேலே மிதந்து வந்தது.

''ம்... ஒத்துக்கறேன் நிச்சயமா அவ ரொம்ப அழகுதான்.''

வாழ்க்கை, மிகக் கடுமையானதாய் தான் உள்ளது. நீங்கள் பார்வைக்கு அழகாய் தோன்றாவிட்டால், ஆண்கள் உங்களுக்கு உகந்த நல்லவராக நடந்துக் கொள்ள மாட்டார்கள். அப்படியிருந்துத் தொலைத்துவிட்டால் பெண்கள் உங்களுக்கு உகந்த நல்லவராக நடந்து கொள்ள மாட்டார்கள்...!

நீண்டப் பெருமூச்சோடே எனது கூந்தலுடனான சிக்கலில் இறங்கினேன். எனக்கு அழகான கூந்தல் உண்டு. அது கறுப்பு - நிஜக் கருப்பு. கருமையான ப்ரௌன் போலெல்லாம் கிடையாது. அது, கழுத்து வழி வழிந்து காதுகளைச் சுற்றிச் சுற்றி படு அடர்த்தியாய் சுருளும். இரக்கமற்ற பிடிகொண்டு அதனைக் கொத்தாகப் பிடித்து மேலே தூக்கினேன். சராசரி காதுகளைப் போலவே... ஆஹ், என் காதுகளும், ஓ கே! இதில் எவ்வித சந்தேகமும் கிடையாது! என்ன, கொஞ்சம் பழைய பஞ்சாங்கம் போல உள்ளது... ஆமாம், 'அவுட் ஆப் பேஷன்' தான்! தலை முடிந்து எழுந்த போது, கையில் தலைகீழாய் கவிழ்த்த குல்லாய் போன்ற ஒரு பாத்திரத்துடனும் தொள தொள வென்று அளவற்ற ஏதோ ஓர் உடையை மாட்டிக் கொண்டும் வரிசையில் நிற்கும் அனாதையாகவே அச்சு அசலாய் ஆகியிருந்தேன் நான்!

நான் கீழிறிங்கிப் போன போது, திருமதி. ஃப்ளெம்மிங்கின் கண்கள், வெளிப்படையாய் தெரிந்த என் காதுகளின் மீது கனிவான ஒரு நோட்டம் விட்டதை நான் கவனித்தேன். திரு ஃப்ளெம்மிங் புதிர்ப் போடப்பட்டவரைப் போல் விழித்தார். 'என்ன பண்ணிக்கிட்டிருக்கா, இந்தப் பொண்ணு?' என்று தனக்குத்தானே சொல்லிக் கொள்கிறாரோ என்று எனக்கு சிறு சந்தேகம் கூட விளைந்தது.

மொத்தத்தில் அன்றைய தினம் நல்லபடியாக கழிந்தது. ஏதாவது வேலை செய்வதற்கு உடனே அன்றைய தினமே நான் வழி தேடிக் கிளம்ப வேண்டும் என்ற தீர்மானத்தில் தினம் முடிந்தது.

படுக்கைக்குப் போன போது கண்ணாடியில் என் முகத்தை நானே கவனமாய் கூர்ந்து பார்த்தேன். உண்மையிலேயே நான் அழகா? நெஞ்சைத் தொட்டு நானே அப்படி ஒப்புக் கொள்ள மாட்டேன்! கூராய் பூமி நோக்கி நீளமாய் விழும் கிரேக்க நாசி கிடையாது. சிகப்பு ரோஜா மொட்டு போன்ற இதழ்கள் இயற்கையில் கிடையாது. 'இருட்டுக்குள் அதிலும் மரங்களடர்ந்த இருட்டுக்குள் வழி காட்டும் இரண்டு விளக்குகள் போன்றவை உன் விழிகள்' என்று ஒருமுறை என் மதகுருவே சொல்லியிருப்பதென்னவோ உண்மைதான். ஆனால்,

இந்த மதகுருக்களுக்கு நிறைய உவமைகள் தெரியும், மானாவாரியாக எடுத்து விட்டுக் கொண்டேயிருக்க! பச்சை நிற கருவிழிகளைப் போர்த்தும் மஞ்சள்நிற இமைகள் - ஐரீஷ் பெண்களுக்கு இயற்கையில் வாய்க்கும்; இவை - எனக்கு அப்படிப் பிடிக்கும். பச்சை நிற விழிகளே! எனக்கும் பச்சை நிற விழிகள் தான்... வீரசாகசம் புரியும் பெண்களுக்கு வெகு ஏற்றவை!

நான் ஒரு கறுப்பு நிறத் துணியை எடுத்துத் தோள்களையும் கைகளையும் தவிர முழுக்கவும் என்னைச் சுற்றி இறுக்கிக் கொண்டேன். பிறகு சீப்பினால் தலை முடியை இழுத்து சிலுப்பிக் காதுகள் மறையும்படி போட்டுக் கொண்டேன். சாதாரணமாய் இருக்கும் வெண்மையையும் தாண்டி பளீரென்ற வெண்மை முகத்தில் தூக்கலாய் தெரியும் வண்ணம், முகமெங்கும் பவுடரை அள்ளிப் போட்டுக் கொண்டேன். உதட்டுச் சாயம் கிடைக்கும் வரை தேடிய நான், கிடைத்ததும் அது தீரும் வரை உதடு முழுக்க அப்பித் தடவினேன். பிறகு கண்ணிமைகளின் அடிப்பகுதி. மையை அப்படி தடவினேன். இறுதியாய், உறை போட்டது போல தோள்கள் முழுவதும் சிகப்பு நிற ரிப்பனால் வளையமிட்டேன். சிறு பட்டாம்பூச்சி க்ளிப்பினை முன் கூந்தலில் செருகினேன். வாயின் ஓர் ஓரத்தில் சிகரெட் ஒன்றினைப் பொருத்திக் கொண்டேன். இத்தனை முயற்சியும் எனக்கு மிகவும் திருப்தி தந்தது.

என் பிம்பத்தைப் பார்த்தபடி 'ஆனே எனும் சாகசக்காரி' என உரக்கவே சொல்லிப் பார்த்தேன். *'ஆனே எனும் சாகசக்காரி - பாகம் ஒன்று - கென்ஸிங்டனிலிருந்த வீடு!'*

இந்தப் பெண்கள் தான், எத்தனைப் பித்து பிடித்தவர்கள்.

# அத்தியாயம் - 3

தொடர்ந்த சில வாரங்கள் என்றே கூட சொல்லலாம்; அவை எனக்கு அப்படி போரடித்தன. திருமதி ஃப்ளெம்மிங்கும் அவருடைய தோழிகளும் உலகமகா அறுவைகளாக எனக்குப்பட்டனர். அவர்களைப் பற்றி மட்டுமே மணிக்கணக்காய் அவர்கள் பேசினார்கள். பிறகு அவர்கள் குழந்தைகளைப் பற்றி... அக்குழந்தைகளுக்கு நல்ல பால் கிடைப்பது எத்தனை கஷ்டமாக உள்ளது என்பது பற்றி... பால் நன்றாயில்லாமல் ஆகிவிட்டால் பால்காரப் பையனிடம் என்னவெல்லாம் சொல்வார்கள் என்பது பற்றி! இது முடிந்ததும் வேலைக்காரி கதை... நல்ல வேலைக்காரி ஒருத்தி கிடைப்பதில் உள்ள சிரமங்கள் பற்றி... அவற்றிற்கு அப்பெண் சொன்ன மறுபதில்கள் பற்றி! ஓஹ்...! இவர்களில் ஒருவரும் செய்தித்தாள்களைப் படிப்பவர்கள் போலவோ அல்லது இவர்களைச் சுற்றியும் உலகமென்று ஒன்று உள்ளது... அதிலும் விசேஷங்கள் நடக்கின்றன என்பவை பற்றியோ லட்சியம் செய்பவர்களாகத் தெரியவில்லை. பிரயாணம் செய்வதை வெறுத்தார்கள். இங்கு இங்கிலாந்தில் எல்லாமே வித்தியாசம் தான் போல.

எல்லாவற்றையும் கேட்டுக் கொண்டு, என்னை மிகப்பிரயத்தனப்பட்டுத் தான் கட்டுப்படுத்தி வைத்திருந்தேன். வந்த பொம்பளைகளில் பலர், பணக்காரிகள். இங்குமங்கும் மேய இந்த உலகமே இவர்களுடையது... மேய்ந்த பிறகு, இந்த அழுக்குப்பிடித்த லண்டனை விட்டு மட்டும் நகர்ந்து விடாமல், பால்காரன் தலையையும் வேலைக்காரி தலையையும் அரைப்பார்கள். இப்படிப்பட்ட பெண்களைப் போல இஷ்டத்துக்கு வாழாமல் கட்டுக்கோப்பாய் என்னை நானே வளர்த்துக் கொண்டிருப்பதால், என் வழியைத் திரும்பிப் பார்த்தபோது, நான் இப்போது மற்றவர்களால் சுலபமாக பொறுத்துக் கொள்ள முடியாத ஒருத்தியாய் வளர்ந்து நிற்பதை உணர முடிந்தது! ஆனால் இதுகள் ஒரு முட்டாள் கூட்டம்... இவர்களுக்குள்ள வேலையை முடிப்பதில் கூட சுரத்தற்ற முட்டாள்கள். வந்ததுகளில் பல,

அசாதாரணமான திறமையற்ற வழியில் தங்கள் வீட்டுக் கணக்குகளைப் போட்டுக் குழப்பியெடுத்திருந்தனர்.

என்னுடைய தனிப்பட்ட விஷயங்கள் வேகமாய் நகரவில்லை. வீடும் சாமான்களும் விற்கப்பட்டன. அவ்வழியில் கிடைத்த பணம் அத்தனையும், பட்டிருந்த கடன்களை அடைத்து விடுமளவுக்குத் தான் இருந்தன. இதுவரையிலும், ஒரே ஒரு பணியினைக் கையகப்படுத்திக் கொள்வதில் கூட நான் வெற்றி பெறவில்லை. வேலை ஒன்று எனக்கு இருந்தாக வேண்டும் என நிஜமாய் எனக்கு எண்ணம் கிடையாது. நான் ஏதாவது ஒரு வீரதீர சாகசத்தை எதிர்பார்த்துக் கிளம்பினேன்றால், அப்படி ஒரு வீரதீர சாகசம் என்னைப் பாதி வழியில் சந்தித்துக் கைகுலுக்கும் என்ற ஸ்திரமான முடிவிலிருந்தேன், நான்! ஒருவன் எதை வேண்டுமென்று கிளம்புகின்றானோ அதனை அவன் பெற்றே விடுகின்றான் என்பது தான் என் வாழ்க்கை தியரி!

என்ன... என் தியரி நிதர்சனமாக நிரூபணமாக வேண்டிய ஒன்றுதான் பாக்கி!

அது ஜனவரியின் ஆரம்பம் - சரியாய் சொல்ல வேண்டுமென்றால், ஜன.8. காரியதரிசி வேண்டுமென்று கேட்டிருந்தாலும், மாங்கு மாங்கென்று உழைக்கப் பொதி மாடு ஒன்றினை எதிர்பார்த்து விளம்பரப்படுத்தியிருந்த ஒரு பெண்மணியிடம் போய், வெற்றி பெறாத இன்டர்வியூ ஒன்றை முடித்துவிட்டு நான் திரும்பிக் கொண்டிருந்த நாள், அது. வருடத்திற்கு 25 பவுண்ட் சம்பளமாம். 12 மணி நேர டியூட்டியாம்! இருவருக்குள்ளும் பொறுமை கழன்றுவிட, இங்கீதமற்றுப் பேசிவிட்டு வெளியேறிய நான், ரயிலடிக்கு வந்து, திரும்ப ஒரு டிக்கெட் வாங்கிக் கொண்டேன். அது மதிய நேரம்.

பிளாட்பாரத்தின் கடைக்கோடி வரை ஒரு தடவை நடந்து சென்றேன். எல்லாம் என் சாகசம் தேடும் மூளையின் விரட்டல்கள்! ப்ளாட்பாரத்தில் ரொம்ப மக்களெல்லாம் இல்லை. அதிலும், கடைக்கோடியில், நானும் இன்னோர் ஆடவனும் மட்டுமே இருந்தோம். அவனைக் கடக்கும் போது, ஒருவகை நிச்சயமற்ற சந்தேகத்தோடு, நான் என் மூக்கை உறிஞ்சிக் கொண்டேன். உலகிலேயே என்னால் ஒரு வாசனையைத் தாங்கிக் கொள்ள முடியாதென்றால், அது, அந்துருண்டை வாசனை தான்! அந்த ஆசாமியின் கனமான மேல் கோட், அந்துருண்டை வாசனையை அள்ளியள்ளிக் கொட்டியது. குளிர்காலம் வரும் வரை பீரோவுக் குள்ளேயே அந்துருண்டைகளோடு இன்னோர் உருண்டையாய் இந்தக்

கோட்டினையும் மாசக்கணக்காய் போட்டு வைத்திருக்க வேண்டும். வ்வே, வாடை தூக்குகின்றது. ப்ளாட்பாரத்தின் நுனியில் நின்று கொண்டிருந்தான். ஏதோ நினைவுக்குள் தன்னை இழந்து விட்டவனாகத் தோன்றிய அவனை, சிரமமின்றி என்னால் கூர்ந்து கவனிக்க முடிந்தது. அவன் ஒல்லியாகவும் குட்டையாகவுமிருந்த ஆசாமி. மாநிற முகம். சின்னதாய் இரு நீலக் கண்கள். சின்னதாய் ஒரு கறுப்பு தாடி.

'வெளிநாடு எங்கிருந்தோ இப்போது தான் திரும்பியிருக்க வேண்டும்' நான் கணக்கிட்டேன். அதனால்தான் அவனுடைய மேல் கோட் அப்படி 'அடிக்கின்றது!' ஆளை வைத்துப் பார்த்தால் இந்தியாவாக இருக்கலாம் எனப்பட்டது. ஆபீஸர் உத்தியோகமாக இருக்காது தாடியெல்லாம் வளர்க்க முடியாதே. டீ எஸ்டேட் நடத்துபவராக இருக்கலாம்.

இந்த நேரத்தில், திரும்பி, மறுபடியும் ப்ளாட்பாரத்துக்குள் வந்துவிட அவன் ஆரம்பித்தான். அப்போது நிமிர்ந்த அவன் என்னை மேலோட்டமாகப் பார்த்தான். பிறகு அவனது பார்வை எனக்குப் பின்னாலிருந்த ஏதோ ஒன்றின் மீது நிலைத்தது. இதற்கு அவன் முகம் மாறிப் போனது. ஏறக்குறைய மயங்கிவிட்ட அளவுக்கு அவனுடைய முகபாவம் பயத்தால் நிலைதடுமாறிப் போனது. ப்ளாட்பாரத்தின் ஒட்டில் நின்று கொண்டிருக்கிறோம் என்பதையே மறந்து விட்டவனாக, ஆபத்திலிருந்து தன்னை இழுத்துக் கொள்ளும் ஒருவனாய் அப்படியே பதுங்குவது போல் ஓரடி எடுத்துப் பின்னால் வைத்த அவன்... சாய்ந்து, தவறி உள்ளே விழுந்து விட்டான். அது மின்சாரத் தண்டவாளம். பிரகாசமான பட்டாசு போன்ற ஒளிச்சிதறல்களும் அவற்றிற்கேற்ப 'பொர... பொர'வென்ற ஓசைகளும் தண்டவாளப் பகுதியிலிருந்து விரைந்தன. நான் நடுநடுங்கிப் போனேன். ஆங்காங்கே இருந்த சொற்பமானவர்களும் ஓடோடி வந்தார்கள். இரண்டு ரயிலதிகாரிகள் விரைந்து நிலைமையைக் கையகப்படுத்தினர்.

நடுநடுங்கும் பயம் கலந்த ஆச்சரியத்தோடு, எங்கு நின்று கொண்டிருந்தேனோ அங்கேயே நான் நடப்பட்ட மரம் போல இருந்தேன். திடுமென நடந்துமுடிந்து விட்ட இப்பிரளயக் காட்சியினால் ஒரு பக்கம் மரத்துப் போயிருந்த நான், இன்னொரு பக்கத்தில், மின்சாரத் தண்டாவளத்திலிருந்து ஆசாமியைத் தூக்கி மறுபடியும் ப்ளாட்பாரத்தில் இறக்கப் பயன்படுத்தப்பட்ட முறைகளை நடுக்கமற்றுப் பார்த்துக் கொண்டிருந்தேன்.

''நான் அங்கே போக எனக்கு முதல்ல வழி விடுங்க. நான் ஒரு மருத்துவன்.''

ப்ரௌன் நிற தாடி வைத்திருந்த ஓர் உயரமான மனிதன் என்னைத் தள்ளிக் கொண்டு முன்னேறி, அசைவற்றுக் கிடந்த உடலை நோக்கி குனிந்தான்.

மருத்துவன் என சொல்லிக் கொண்டவன் கிடந்த உடலைப் பரிசோதித்துக் கொண்டிருந்த போது... என் ஆர்வத்தைத் தூண்டிவிடும் விதமாய், ஒரு நிஜமற்ற பாசாங்குப் போர்வை அவன் செயலில் கவ்வியிருப்பதாய் நான் உணர்ந்தேன். ம்ம்... *இது நிஜம் கிடையாது...* நிஜமாய் இருக்கவும் முடியாது... ம்ம்! இறுதியாய் 'டாக்டர்' நெட்டைக் குத்தலாய் எழுந்து நின்றுக் கொண்டு மறுப்பாய் தலையசைத்தார்.

''மரக்கட்டை போல இறந்தாச்சு. இனி செய்யறதுக்கு ஒண்ணு மில்லே.''

அனைவரும் இப்போது சுற்றிவரக் கூடியிருந்தோம். கோபமான ஒரு ரயில்வே ஆள், ''எதுக்குக் காத்தை மறைக்கிறீங்க? தள்ளி நில்லுங்க. சொல்லணுமா? முட்டாள் போல ஏன் கும்பல் சேர்க்கணும்?'' என கத்தினான்.

அதிர்ச்சி தாளாததால், ஒரு திடீர் கிலி மயக்கம் என்னை ஆட்கொண்டது. குருட்டாம் போக்கில் திரும்பிய நான், படிக்கட்டுகள் ஏறி 'லிஃப்ட்' வரை ஓடினேன். நடந்தவை அனைத்துமே, நான் தாங்கிக் கொள்ளும் அளவைக் கடந்த கொடுமை போல இப்போது நான் உணர்ந்தேன். எல்லாமே எனக்கு சற்று மங்கலமாய் தெரிந்தன. படபடப்பு தந்த மயக்கம். அதிகக் காற்றோட்டம் எனக்குத் தேவையானது. உடலைப் பரிசோதித்த மருத்துவன் எனக்கு ஓரிரு அடிகள் முன்னால் தானிருந்தான். ஒரு 'லிஃப்ட்' கிளம்ப ஆயத்த மாயிருக்க... இன்னொன்று கீழே இறங்கி வந்துக் கொண்டிருக்க... உள்ளே ஏறி விட ஓட்டம் பிடித்தான். அப்படிச் செய்யும் போது ஒரு தாளைக் கீழே தவறவிட்டு விட்டான் அவன்.

நான் நின்றேன். அதை எடுத்தேன். அவனிடம் கொடுக்க அவன் பின்னாடியே ஓடினேன். ஆனால் லிஃப்ட் கதவுகள் என் முகத்தில் அறைந்தாற்போல் மூடிக் கொள்ள, கையில் தாளை ஏந்திய நிலையில் நான் விடப்பட்டேன். அடுத்த லிஃப்ட் மேலெழும்பி தரைத் தளத்தினை அடைந்திருந்த போது நான் தேடி வந்தவன் பற்றிய அறிகுறியே காணோம். ஒருவேளை இது அவனுக்குக் கொஞ்சமும் முக்கியப்படாத ஒரு தாளாயிருக்கும் என நினைத்துக் கொண்ட நான்,

இப்போது, முதன்முறையாக அதில் என்ன இருக்கிறது என பார்த்தேன். ஓரிரு எண்களும் சில வார்த்தைகளும் கிறுக்கலாய் எழுதப்பட்டிருந்த ஒரு நோட்டுப்புத்தகத்தின் பாதித் தாள் அது. அதனை அச்சு அசலாக நேயர்களுக்குக் கீழே தருகின்றேன்:

17·1 22 கில்மார்டன் மாளிகை

இந்த வெறும் ஒற்றை வரியில் எவ்விதமான முக்கியத்துவமும் தென்படவில்லை. இருந்தாலும், அதனை அப்படியே தூக்கி எறிந்துவிட... ஏனோ சுணங்கினேன். அதைப் பிடித்தபடி நான் நின்று கொண்டிருந்த போதே, என்னையுமறியாமல் என் மூக்கினை சற்று வெறுப்பாய் நான் கசக்கினேன். மீண்டும் அந்துருண்டைகள்! கொஞ்ச மாய் அந்தத் தாளை என் மூக்கின் நுனி வரைக் கொண்டு போனேன். ஆமாம்... அதில் அந்த வாசனைத் தூக்கலாயிருந்தது. அப்படியானால் - - -

அத்தாளை ஜாக்கிரதையாக மடித்துக் கொண்டு என் பைக்குள் வைத்துக் கொண்டேன். மெதுவாய் வீட்டுக்கு நடந்து வந்தேன். வழிநெடுக மிக ஆழமாய் சிந்தித்தேன்.

ரயிலடியில் ஒரு கண்றாவியான விபத்தைப் பார்க்க நேர்ந்து விட்டதை திருமதி ஃப்ளெம்மிங்கிடம் விளக்கிய நான், அதனால் மிகவும் நொந்து போயிருப்பதாயும் எனவே என் அறைக்குப் போய் தனிமையிலிருக்க விரும்புவதாயும் சொன்னேன். கருணை கொண்ட அவர், ஒரு கப் டீ குடித்தால் தான் ஆயிற்று என கட்டாயப்படுத்தினார். அது முடிந்ததும் நான் தனியாக விடப்பட, வரும் வழியில் நான் திட்டமிட்டு வந்ததை செயல்படுத்தி பார்க்கத் துவங்கினேன். மருத்துவர் என அறிவித்து வந்த அவன் உடலைப் பரிசோதித்த போது, என் ஆர்வத்தைத் தூண்டிவிடும் விதமாய், ஒரு நிஜமற்ற பாசாங்குப் பார்வை அவனிடம் தென்பட்டதே... அது எதனால் என்று அறிந்துவிட துடித்தேன். பிணமாகி விட்டவளைப் போல முதலில் தரையில் நான் படுத்துப் பார்த்துக் கொண்டேன். பிறகு, அப்படி நான் விழுந்த இடத்தில் ஒரு தலையணையைக் கிடத்திவிட்டு, மருத்துவரின் ஒவ்வோர் அசைவுகளையும் நடவடிக்கைகளையும், எனக்கு ஞாபகத்திலிருக்கும் வரை அப்படியே திருப்பிச் செய்து பார்த்தேன்.

இந்த பரீட்சையை நான் நடத்தி முடித்தவுடன் நான் எதைத் தேடி இத்தனை செய்தேனோ அது எனக்குக் கிடைக்கப் பெற்றேன். வசதியாய் சாய்ந்து அமர்ந்துக் கொண்ட நான், வெறுப்பாய் முகஞ் சுளித்தபடி எதிர் சுவரை உற்றுப் பார்க்கலானேன்.

மாலை செய்தித்தாளில், ரயிலடியில் ஒரு மனிதன் இறந்து விட்டதாய் சிறு சேதி வந்திருந்தது... அது விபத்தா தற்கொலையா என்பது பற்றிய சந்தேகத்தை அச்சேதி கிளப்பியிருந்தது. இது, நான் அடுத்து செய்ய வேண்டிய கடமை என்னவென்பதைப் படம்பிடித்துக் காட்டிவிட; இது சம்பந்தமாய் என் அனுபவக் கதையைக் கேட்ட திரு ஃப்ளெம்மிங்கும் என் கருத்து சரியே என்று குறிப்பிட்டார்.

''இதுகுறித்த பூர்வாங்க விசாரணையின் போது நீ நிச்சயமாய் வேண்டப்படுவாய். ஆங்... நீ என்ன சொன்னே...? அங்கே என்ன நடந்தது என்பதைப் பார்க்குமளவுக்கு அருகாமையில் ஒருத்தருமே இல்லை'னா சொல்றே?''

''யாரோ என் பின்னாலே முன்னேறி வருவதா எனக்கு ஓர் உணர்வு இருந்தது... ஆனா இதை நிச்சயப்படுத்தி சொல்ல முடியலே; அப்படியிருந்தாலும், நான் கிட்டத்துல இருந்த அளவுக்கு அவனால நெருக்கமா இருந்திருக்க முடியாது.''

பூர்வாங்க மரண விசாரணை நடந்தது. தேவையான அத்தனை ஏற்பாடுகளையும் செய்து திரு. ஃப்ளெம்மிங் என்னை விசாரணைக்கு அழைத்துச் சென்றார். இந்த விசாரணை கிசாரணையெல்லாம் எனக்குத் தாள முடியாத ஒரு சோதனையாயிருக்கும் என அவர் நினைத்தார். ஆனால் அப்படியில்லாமல் நான் சாந்தமாய் தானிருக்கிறேன் என்பதைப் பிரயத்தனப்பட்டு நான் மறைத்துக் கொள்ள வேண்டிய தாயிருந்தது.

இறந்தவன், எல் பீ கார்ட்டன் என அடையாளம் காணப்பட்டி ருந்தான். அவனது பாக்கெட்டில், நதிக்கரையை ஒட்டி இருக்கும் மார்லோ எனும் பகுதியில் ஒரு வீட்டைப் போய்ப் பார்க்கும்படி வீட்டுத் தரகனிடமிருந்து வந்திருந்த சிறு குறிப்பினைத் தவிர, வேறெதுவும் கிடைத்திருக்கவில்லை. அக்குறிப்பு, எல் பீ கார்ட்டன், ரஸ்ஸெல் ஓட்டல் என்ற பெயரில் இருந்தது. ஓட்டலின் காரியதரிசி, இந்த ஆள், இதே பெயரில், ஒரு நாளைக்கு முன் வந்து ஓர் அறையை பதிவு செய்து கொண்டதாய் சாட்சி தந்தான். எல் பீ கார்ட்டன், கிம்பர்லி, தென் ஆப்பிரிக்கா என்ற முகவரி ஓட்டலில் தரப்பட்டிருந்தது. ரயிலிலிருந்து

நேரடியாக ஓட்டலுக்கு அவன் வந்ததை வெளிப்படையாய் காரியதரிசியால் காண முடிந்திருந்தது.

நடந்துள்ள சமாச்சாரம் பற்றிப் பேச முடிந்த ஒரே ஆள், இந்தக் காரியதரிசி மட்டும் தான்.

''இது ஒரு விபத்துனா நீ நினைக்கிறே?'' என்று என்னைக் கேட்டார் பூர்வாங்க மரண விசாரணை நடத்திய நீதிபதி.

''அப்படி தான்னு நான் ஸ்திரமா இருக்கேன். எதுவோ ஒன்று அவனை பயமுறுத்தி எச்சரித்தது... உடனே, தான் பின்னுக்கு நகர்கிறோம் என்ற உணர்தலே இல்லாமல் அவன் தன்னிச்சையாக குருட்டாம்போக்கில் பின்னால் நகர்ந்தான்.''

''ஆனா, அப்படி எது அவனை திகைக்க வெச்சிருக்கும்?''

''அது எனக்குத் தெரியாது. ஆனா... அங்கே எதுவோ இருந்தது. அதனால, பிரமை பிடிச்சா போல ஆயிட்டார், அவர்.''

திடகாத்திரமான ஒரு வக்கீல் சில ஆண்களுக்குப் பூனை என்றால் அத்தனை பயம் என்று ஆலோசித்தார். அந்த ஆள் ஒரு பூனையைப் பார்த்திருக்கலாம். இந்த ஆலோசனை புத்திசாலித்தனமாய் எனக்குப் படவில்லை. இருந்தாலும், இது பூர்வாங்க விசாரணையை முடித்து அத்தீர்ப்பினை எழுதும் பதிவேட்டினை அனைவரின் முன்னும் விரித்துப் போட வழி வகுத்துத் தந்தது. வீட்டுக்குப் போகும் அவசரத்திலிருந்த அத்தனை நீதிமான்களும், அதில் தற்கொலை என்பதற்கு பதிலாக விபத்து என்று முடித்து எழுதி கையொப்பமிட்டு ஏட்டினை மூடி விடுவதில் ஆர்வம் காட்டினர்.

''விழுந்தவனைப் பரிசோதித்த டாக்டர்...'' என இப்போது பேசிய நீதிபதி, ''...தானாக முன்னுக்கு வந்து சாட்சி தராதது, எனக்கு அசாதாரணமா படுது. அவர் பெயர் முகவரி எல்லாத்தையும் அந்த சமயத்துலேயே வாங்கியிருக்கணும். அப்படி பண்ணாதது, ஒரு முறைகேடு'' என்று அடித்துச் சொன்னார்.

எனக்குள் நானே சிரித்துக் கொண்டேன். அந்த டாக்டர் பற்றி எனக்கு நானே வடிவமைத்துக் கொண்டுள்ள ஒரு முடிவு இருக்கின்றது. அதன் தொடர்ச்சியாக, உடனடியாய் ஸ்காட்லாண்டு காவல்துறைக்கு ஒரு போன் போட வேண்டும் என்று முடிவெடுத்தேன்.

இந்நிலையில், மறுநாள் காலை, ஒரு பேராச்சரியத்தைச் சுமந்து விடிந்தது. ஃப்ளெம்மிங் குடும்பம் த டெய்லி பட்ஜெட் செய்தித்தாளை வாங்கியிருந்தது. அதில் வெளியாகியிருந்த இரு வேறு செய்திகள் தான் ஆச்சரியத்துக்கான காரணங்கள்.

**ரயிலடி மரணத்தைத் தொடர்பு படுத்தும்
அசாதாரணமான இன்னொன்று.**

**தனிமை வீட்டில், ஒரு பெண்மணி
கழுத்தைத் திருகிக் கொலை**

*செய்தியை ஆர்வமாய் படித்தேன் நான்.*

*மார்லோ பகுதியில் உள்ள மில் வீட்டில், ஒரு பரபரப்பான கண்டுபிடிப்பு நடந்துள்ளது. சர் ஆஸ்டன் பெட்லரின் சொத்தாகும் இந்த மில் வீடு. அது வாடகைக்கு விட காலியாக உள்ளது. ரயிலடியில் மின் தண்டவாளத்தில் விழுந்து தற்கொலை செய்து கொண்டு விட்டதாய் நம்பப்படும் நபரின் பாக்கெட்டில், இந்த வீட்டின் முகவரி முதலில் கண்டெடுக்கப்பட்டுள்ளது. கழுத்துத் திருகப்பட்ட நிலையில் ஓர் அழகிய பெண்ணின் உடல் நேற்று அதே மில் வீட்டின் மாடி அறையில் கண்டெடுக்கப்பட்டுள்ளது. வேற்று நாட்டுப் பெண் என ஊகிக்கப்படும் அவளின் அடையாளங்கள் இன்னும் அறியப்பட வில்லை. துப்பொன்று கிடைத்திருப்பதாக சொல்கிறது, போலீஸ். சர். ஆஸ்டஸ் பெட்லர், வீட்டின் சொந்தக்காரர், ரிவேரா பகுதியில் கெனாஸ் எனும் இடத்துக்கு ஓய்வுக்காகச் சென்றுள்ளார்.*

# அத்தியாயம் - 4

மரணித்து விட்ட பெண்மணியை அடையாளம் சொல்ல ஒரு நாதி முன் வரவில்லை. இதன்மீது நடந்த பூர்வாங்க விசாரணைகள் பின்வரும் உண்மைகளை வெளிக் கொண்டு வந்தன.

ஜனவரி எட்டாம் தேதியன்று மத்தியானம் ஒரு மணி கடந்தவுடன் 'பட்லர் அண்ட் பார்க்' எனும் வீட்டுத் தரக அலுவலகத்தை நாடி, நவநாகரீக ஆடையணிந்து சற்றே வெளிநாட்டு சாயல் பொதிந்திருந்த ஒரு பெண்மணி நுழைந்திருக்கிறாள். லண்டனுக்கு சுலபமாய் வந்து போகும் வசதியிருக்கும்படியாய் தேம்ஸ் நதிக்கரையை ஒட்டி ஒரு வீட்டினை சொந்தமாக வாங்கவோ அல்லது வாடகைக்கு தங்கவோ எதிர்பார்த்து, அவள் அங்கு வந்திருக்கிறாள். பல வீடுகள் பற்றிய தனித்துவங்கள் அவளுக்கு அப்போது விளக்கப்பட்டுள்ளன - இந்த மில் வீடு உட்பட. அவளது பெயரை திருமதி டீ-காஸ்டினா என்று தந்திருக்கிறாள். வசிக்கும் பகுதியாக, ரிட்ஸ். ஆனால், ரிட்ஸில், அந்த முகவரியில், அப்படியொருவரும் இருப்பதாய் தெரிய வரவில்லை. அருகிலிருந்த ஓட்டல் மக்களும் அவரை அடையாளம் காணத் தவறினர்.

மில் வீட்டினை, சர் ஆஸ்டஸ் பெட்லர் வீட்டுத் தோட்டக்கார னுடைய மனைவியான திருமதி ஜேம்ஸ் கவனித்து வந்திருக்கிறார். மாளிகை போலிருந்த மில் வீட்டின் காம்பவுண்ட்டுக்குள் தனித்திருந்த ஒரு சிறு பகுதியில் வசித்து வந்த இவர், சாட்சி சொன்னார். அன்று மாலை மூன்று மணியிருக்கும்... அப்போது ஒரு பெண்மணி மில் வீட்டினைப் பார்ப்பதற்காக வந்திருக்கிறாள். வீட்டுத் தரகன் தந்திருந்த சீட்டினை அவள் நீட்ட, வழக்கமாய் பண்ணுவது போல, வீட்டினுடைய சாவியை எடுத்து அவளிடம் தந்திருக்கிறார் திருமதி ஜேம்ஸ். (தரகனின் அறிமுகச் சீட்டிருந்தால், வீடு பார்க்க வருவோருக்கு ஓர் அங்கீகாரம் விளைந்துவிடும்) வருவோருடன் ஒவ்வொரு முறையும் கூடவே போகும் வழக்கம் இவருக்குக் கிடையாது. இதெல்லாம் நடந்த சில நிமிடங்களிலேயே ஓர் இளைய ஆசாமி வந்திருக்கிறான். அவனை

உயரமானவன்... அகண்ட தோள்கள் கொண்டவன்... பொன்னிற மான முகமும் மெலிதான சாம்பல் நிற விழிகளும் கொண்டவனாக அடையாளம் சொன்னார் திருமதி ஜேம்ஸ். மழுங்க சிரைத்திருந்த அவன் ஒரு ப்ரௌன் நிற மேல் கோட் போட்டிருந்திருக்கிறான். சற்று முன் வீட்டினைப் பார்க்க வந்த பெண்ணுடைய சிநேகிதனாக தன்னை சொல்லிக் கொண்டுள்ள அவன், ஒரு தந்தி அனுப்புவதற்காக தபால் ஆபீசில் சற்று நேரத்தைச் செலவழித்திருக்கிறான். அவனுக்கும் மில் வீட்டுக்குள்ளே போக வழியைக் காட்டிய இவர், அதற்கு பிறகு இச்சமாச்சாரங்களைப் பற்றி எதுவும் யோசிக்கவேயில்லை.

ஐந்தே நிமிடங்கள் கழித்து மறுபடியும் வந்த அவன், சாவிகளைத் திருப்பித் தந்துவிட்டு, அவ்வீடு அவர்களுக்கு ஒத்துவராது என விளக்கியுள்ளான். அந்தப் பெண்மணியை அவனுடன் திருமதி ஜேம்ஸ் பார்க்கவில்லை... ஆனால் அவள் சற்று முன்னால் போய்க் கொண்டிருக்க வேண்டும் என்று எண்ணிக் கொண்டாள். கூடுதலாய் ஒன்றை இவர் கவனித்திருக்கிறாரென்றால்... அது எது குறித்தோ, அந்த இளைஞன், முழுக்கவும் நொறுங்கி நிலைகுலைந்துப் போயிருப்பது போன்ற ஒன்றினை! 'பேய் ஒன்றினைப் பார்த்த ஒருவனைப் போல இருந்தான் அவன். ரொம்பவும் முடியாம ஆகியிருந்தான்' - இது, திருமதி ஜேம்ஸின் வர்ணனை.

அடுத்த நாள் வீட்டைப் பார்க்க வந்த ஒரு பெண்ணும் ஆணும், உடல், வீட்டின் மாடியறைகள் ஒன்றில் கிடப்பதைக் கண்டுபிடிக் கின்றனர். அந்த உடல் - முதல் நாள் வந்த அதே பெண்மணி தான் என்று அடையாளம் காட்டுகிறார் திருமதி ஜேம்ஸ். வீட்டுத் தரகர்களும், அது 'திருமதி டீ-காஸ்டினா' என்றனர். போலீஸ் டாக்டர், குறைந்தபட்சம் 24 மணி நேரத்துக்கு முன்னால் அப்பெண்மணி இறந்திருக்க வேண்டும் என்று கருத்து தந்தார். த டெய்லி பட்ஜெட் செய்தித்தாள், மில் வீட்டில் பெண்மணியைக் கொன்று போட்டு விட்டு, அந்த ஆள் மின் தண்டவாளத்தில் விழுந்து தற்கொலை செய்து கொண்டுள்ளான் என தனது சுய கருத்தை உடனடியாய் பிரசுரித்தது. இருந்தாலும், ரயிலடியில் ஆசாமி இரண்டு மணிக்கு இறந்தபடியாலும், இங்கு மூன்று மணி வரை இப்பெண்மணி ஸ்திரமான உயிரோட்டத்துடன் வாழ்ந்துள்ள படியாலும், இரண்டு சமாச்சாரங்களும் ஒன்றோடொன்று தொடர் பில்லாத தனித்தனியானவை என்ற தர்க்க ரீதியான (லாஜிக்கல்) முடிவு தான் சாத்தியமாயிற்று. ரயிலடியில் விழுந்த ஆசாமியின் பாக்கெட்டி

லிருந்த மார்லோ வீடு பற்றிய விஷயம், நாம் வாழும் இந்த வாழ்க்கையில் எதிர்பாராது நடந்து விடும், சில ஒரே மாதிரியான சமாச்சாரங்களில் ஒன்றாகிப் போனது.

'முகந்தெரியா நபர் அல்லது நபர்களால் நடத்தப்பட்டுள்ள திட்டமிட்ட படுகொலை' என்ற தீர்ப்பு, பூர்வாங்க மரண விசாரணை யில் எழுதப்பட்டு போலீசாரிடம் தரப்பட, போலீசும் (கூடவே இந்த தட டெய்லி பட்ஜெட்' டும்) யாரந்த 'ப்ரௌன் சூட்டில் வந்தவன்' என்ற தேடுதலைத் தொடங்கின. அந்தப் பெண்மணி மில் வீட்டைப் பார்ப்பதற்காக அங்கு நுழைந்தபோது அவ்வீட்டில் வேறு ஒருவரும் இருந்திருக்க வாய்ப்பே கிடையாது என்பதில் திருமதி ஜேம்ஸ் கறாராய் இருந்தபடியாலும், மேலும், சம்பவம் நடந்த பகல் பொழுதில் அந்த இளைஞனைத் தவிர வேறொருவரும் மில் வீட்டுக்குள் நுழைய வில்லை எனும் கருத்து ஸ்திரமாக இருந்தபடியாலும், அவன் தான், அபாக்கியவதி திருமதி காஸ்டினாவைக் கொன்ற கொலையாளி என்ற தர்க்க ரீதியான முடிவுக்கு வர வேண்டியதாயிற்று. அவளுக்குத் தெரியாமல் மெதுவாய் நெருங்கி, ஒரு சிறு தடிமனான துண்டுக் கறுப்புக் கயிற்றால், கத்தி அலறுவதற்கு அவகாசம் தராதபடி அவளது கழுத்தை நெறித்துக் கொலை செய்திருப்பது வெளிப்படையாக தெரிந்தது. கறுப்புப் பட்டினால் நெசவு செய்யப்பட்டிருந்த அவளுடைய கைப்பையில், முழுவதும் எழுதப்பட்டிருந்த சிறு நோட்டு, சில சில்லறைகள், எதுவும் குறிக்கப்படாத ஒரு மெலிதான கைக்குட்டை, லண்டனுக்குத் திரும்ப எடுக்கப்பட்டிருந்த ஒரு ரயில் டிக்கெட் ஆகியன இருந்தன. மேலும் கூர்மையாய் கவனிக்க அதில் வேறொன்றும் இல்லை.

இவையனைத்தையும் தான் த டெய்லி பட்ஜெட் செய்தித்தாளில் வெளியாகியிருந்த விளக்கங்கள். 'ப்ரௌன் சூட்டில் வந்தவன்' யார் என்று கண்டறிந்தே ஆகவேண்டும் என்பது தான் அவர்களுடைய தினசரி போர்க் குமுறலாய் இருந்தது. அப்படி ஒருவனைத் துரத்திச் சென்றுப் பார்த்ததாக ஒரு நாளைக்கு ஐநூறு கடிதங்கள் பத்திரிகை அலுவலகத்துக்கு வர, முகத்தை முழுக்க சிரைத்து நெட்டையாய் வளர்ந்திருந்த ஒவ்வோர் இளைஞனும் 'ப்ரௌன் சூட் தைத்துக் கொண்டால் உங்களுக்கு அத்தனை எடுப்பாயிருக்கும்' என்று சொன்ன தங்களது டெயிலர்களை நெருப்பாய்ப் பார்த்தார்கள்! ரயிலடி மரணம்... விபத்து என்றும், மில் வீட்டு சமாச்சாரத்தோடு எதிர்பாராது

ஒத்துப்போகும் ஓர் ஒற்றுமையாகவும் ஆகிப் போனதால், பொதுஜன ஈர்ப்பிலிருந்து நழுவிப் போயிருந்தது.

அது ஓர் எதிர்பாராத ஒற்றுமை தானா? இதில் நான் இன்னமும் நிச்சயமாகவில்லை. ரயிலடி களேபரம் என் வாழ்வில் நான் என்றுமே முதலிடத்தில் வைக்கவல்ல 'என் அருமை' மர்மம் தான்... இருந்தாலும், இவ்விரு மரணங்களை இணைத்தும் ஏதோ ஒரு வகையான தொடர்பு நிச்சயமாய் இருப்பதாகவே எனக்குத் தோன்றியது. இந்த ஒவ்வொன்றிலும் ஓர் ஆணிருந்திருக்கிறான் வெளிநாடு எங்கோ வாழும் ஓர் ஆங்கிலேயன் என்று பட்டவர்த்தனமாகத் தெரியும்படி! இப்படி இன்னும் சில. இந்த 'இன்னும் சில' என்று நான் அடைமொழி தந்தவைதான், அடுத்து நான் தைரியமாக எடுத்து வைத்த அடியினைச் செய்யத் தூண்டியவை. நேரடியாக நானே ஸ்காட்லாண்டு காவல் துறைக்குச் சென்றேன். சென்று, மில் வீடு பிரச்சினையைக் கையாளுபவர் யாராக இருந்தாலும் அவரைப் பார்த்தே தீர வேண்டும் என நின்றேன்.

எனது வேண்டுகோளைக் குறிப்பாய் அவர்கள் புரிந்துக் கொள்ள சற்று நேரம் பிடித்தது. ஆனால், என் தொடர்ச்சியான பிடிவாதத்தால், இறுதியாய் ஒரு சிறு அறைக்குள் நான் அழைத்துப் போகப்பட்டு துப்பறியும் இன்ஸ்பெக்டர் மீடௌல் என்பவரிடம் அறிமுகப் படுத்தப்பட்டு, விடப்பட்டேன்.

துப்பறியும் இன்ஸ்பெக்டர் மீடௌல் ஒரு சின்ன பையன். இஞ்சி போன்று வளைவுகள் நிறைந்த தலை. வழக்கமாய் என்னை எவை எரிச்சலூட்டுமோ அப்படிப்பட்ட நடவடிக்கைகள் நிரம்பியிருந்த ஆசாமி. இந்த இன்ஸ்பெக்டரைச் சுற்றியே உலா வந்து கொண்டிருக்க வேண்டிய பணியில், மற்றுமோர் ஆசாமி, சாதாரண உடையோடு, சற்றுத் தள்ளியிருந்த மூலையில் 'யாருக்கு வந்த விருந்தோ' எனும் பாணியில் அமர்ந்திருந்தான்.

''குட் மார்னிங்'' என்றேன் நான், நிறு நடுக்கத்துடன்.

''குட் மார்னிங். உட்காருங்க. எங்களுக்கு உதவிகரமா இருக்கக் கூடிய தகவல் எதையோ நீங்க என்னிடம் சொல்ல வந்திருப்பதா கேள்விப்பட்டேன்.''

அப்படி ஏதாவது இருந்தால் அதெல்லாம் எங்களுக்குத் துளியும் தேவையில்லை என்பதை நாசூக்காக உணர்த்திய தினுசில் இருந்தது அவருடைய குரலின் பாவனை! என் பொறுமை கிண்டப்படுவதை நான் உணர்ந்தேன்.

ஆரம்பித்தேன்: ''ரயிலடியில் கொல்லப்பட்ட ஆளைப் பற்றி உங்களுக்கு முழுக்கத் தெரியுமா? மார்லோவிலிருந்த அதே வீட்டைப் போய்ப் பார்ப்பதற்கான சிபாரிசு சீட்டினைப் பையில் வைத்திருந்த ஆசாமி அவன்.''

''ஆஹ்'' என்றார் இன்ஸ்பெக்டர். ''நீங்கதானே, பூர்வாங்க விசாரணையின் போது சாட்சி சொன்ன, அந்த மிஸ் பெட்டிங் ஃபெல்ட்? அப்படி ஒரு சிபாரிசு சீட்டு சர்வ நிச்சயமா அவன் பாக்கெட்டில் இருந்தது. சரி, அதுக்கென்ன இப்போ? இப்படி இன்னும் பலரும் அவங்கவங்க பாக்கெட்டுல சீட்டு வெச்சிருப்பாங்க! என்ன, அவங்க கொல்லப்படலே... அவ்ளோ தான்!''

எனக்குள் உந்தித் தள்ளிக் கொண்டு எழுந்த வேகத்தைப் பற்களைக் கடித்துக் கட்டுப்படுத்திக் கொண்டேன். ''இந்த ஆசாமியின் பாக்கெட்டுல ரயிலின் டிக்கெட் இல்லாதது வித்தியாசமா... நூதனமான ஒன்றா, உங்களுக்குப் படலே?''

''இந்த உலகத்துல ரொம்ப சுலபமா பண்ணக்கூடியவைகளில் ஒன்று... டிக்கெட்டைத் தவறவிட்டு விடுவது. இதை நானே பலமுறை செஞ்சிருக்கேன்.''

''கொஞ்சமும் பணமில்லாதது?''

''சில சில்லறை அவனுடைய பேண்ட் பாக்கெட்டில் இருந்தது.''

''குறிப்பெழுதும் சின்ன நோட்டு அவன்கிட்டே காணலியே?''

''சில ஆண்கள், குறிப்பெழுதும் சின்ன நோட்டு போல எதையும் தங்களோட கொண்டு போறதில்லே.''

மற்றொரு வழியைக் கடைபிடித்தேன். ''அந்த டாக்டர், பிறகு தான் முன்வந்து உதவ முயற்சி செய்யாதது உங்களுக்கு விநோதமான ஒரு நடவடிக்கையா படவேயில்லையா?''

''கால்ல சக்கரத்தைக் கட்டிக்கிட்டு ஓடும் டாக்டர்களுக்கு, பேப்பரின் மூலையில வரும் சின்ன செய்திகளையெல்லாம் படிக்க அவகாசம் இருக்கிறதில்லே. இந்த விபத்து பற்றி அவர் முழுக்க மறந்தே கூட போயிருக்கலாம்.''

''சொல்லப் போனா, மிஸ்டர் இன்ஸ்பெக்டர், எந்தவிதமான விநோதமான விஷயங்களையும் இதுல பார்த்துடக் கூடாது என்பதுல நீங்க முடிவா இருக்கீங்க'' கத்தி போன்ற வார்த்தைகளை, இனிமையாகச் சொன்னேன்.

''ஆனா, மிஸ், உங்களுக்கு, இந்த 'விநோதமான', 'நூதனமான' போன்ற வார்த்தைகளெல்லாம் அளவுக்கதிகமா பிடிச்சிருக்குனு நான்

நினைக்கிறேன். இளம்பெண்கள் துறுதுறுவானவர்கள் எனக்குத் தெரியும்! அட்வெஞ்சர்ஸ்... வீரசாகசங்கள்... இப்படி! ஆனா, நேரம் பத்தமா அலையும் என் போன்றவர்களால...''

இந்தக் குறிப்பின் அர்த்தத்தை அறிந்து கொண்ட நான் எழுந்து விட்டேன்.

இப்போது மூலையிலிருந்த ஆசாமி சுரத்தற்றக் குரல் தந்தான். ''தன்னுடைய கருத்து என்ன என்பதை நமக்கு முன்னால் வைப்பதற்காக இந்தம்மா வந்திருந்தால்...? இன்ஸ்பெக்டர்...?''

காத்திருந்தவரைப் போல உடனடியாக இந்த ஆலோசனைக்கு செவி மடுத்தார் இன்ஸ்பெக்டர். ''ஓ... அப்படியானால் செய்யட்டுமே! உட்காருங்க, மிஸ் பெட்டிங்ஃபெல்ட். ஒடுக்கப்பட்டதா நினைக்காதீங்க, ப்ளீஸ். நீங்களா கேள்விக் கேட்டீங்க... சூசகமா சில குறிப்புகளைப் பேசினீங்க... அவற்றுக்கு என் கருத்துகளைப் பதிலா ஆக்கினேன். ஓ.கே. இப்ப சொல்லுங்க. உங்க மூளையில என்ன தான் இருக்கு என்பதை விரிச்சுப் போடுங்க. கம் ஆன்.''

நான், அடிக்கப்பட்ட சுய மரியாதைக்கும், என் கோட்பாடுகளை விவரிக்கப் பொங்கிக் கொண்டு வந்த ஆசைக்கும் நடுவே, ஊசலாடினேன். அடிக்கப்பட்ட சுயமரியாதை, ஒதுங்கி நின்றது.

''பூர்வாங்க விசாரணையின் போது அது தற்கொலை கிடையாது என்பதுல நீங்க ஸ்திரமா இருந்தீங்க, இல்லியா?'' - இன்ஸ்பெக்டரே துவக்கி வைத்தார்.

''ஆமாம். அதுல நான் ஸ்திரம் தான். அந்த ஆசாமி அப்படி பயந்து கிலி பிடிச்சுப் போனான். எது அவனை அப்படி அச்சுறுத்தியது? அது நான் கிடையாது. ஆனா எவனோ ஒருத்தன் எங்க இருவரையும் நாடி ப்ளாட்பாரத்தில் நடந்து முன்னேறி வந்திருக்கலாம் - அந்த எவனையா இவன் அடையாளம் கண்டிருக்கலாம்.''

''நீங்க யாரையும் பார்க்கலையா?''

''ம்ம்'' ஒப்புக் கொண்டேன் நான். ''நான் என் தலையைத் திருப்பவேயில்லை. அப்புறம், உடல் தண்டவாளத்திலிருந்து மீட்கப் பட்ட உடனேயே, தன்னை ஒரு மருத்துவன் என்று அறிமுகப்படுத்திக் கொண்ட ஒரு மனிதன், முண்டியடித்துக் கொண்டு அதை பரிசோதனை செய்யும் சாக்கில் முன்னுக்கு வந்தான்.''

''இதுல அசாதாரணமா எதுவுமே கிடையாது'' என்றார் இன்ஸ்பெக்டர், வறட்சியாய்.

''ஆனா, அவன், டாக்டர் கிடையாது.''

''என்னது?''

''அவன், டாக்டர் கிடையாது'' - நான் மறுபடி சொன்னேன்.

''அதெப்படி உங்களுக்குத் தெரியும், மிஸ் பெட்டிங் ஃபெல்ட்?''

''அட்சர சுத்தமா இதுக்கு பதில் சொல்லி விளக்குவது கடினம். போர்க்காலங்களில்* (★ முதல் உலகப்போரை ஒட்டி எழுதப்பட்ட நாவலிது!) நான் ஆஸ்பத்திரிகளில் வேலை செஞ்சிருக்கேன். டாக்டர்கள் எப்படி உடலைக் கையாளுவார்கள் என்று அப்போ நான் பார்த்திருக்கேன். மருத்துவப் பணிக்கே உரித்தான ஒருவகை ஒட்டுதலற்ற மரத்துப் போன தன்மை - அது, இவனிடம் காணப்பட வில்லை. தவிர, வழக்கமா, இதயத்துடிப்பை, எந்த ஒரு டாக்டரும் உடலின் வலப்பக்கத்தில் உணர முயற்சி செய்ய மாட்டாங்க!''

''அவன் அப்படியா செஞ்சான்?''

''ஆமாம். என்னவோ தப்பா நடந்துக்கிட்டிருக்கு என்பதைத் தவிர, இதை முக்கியப்படுத்தி நான் ஸ்தலத்துல கவனிக்கலே. ஆனா இதை நான் வீடு திரும்பியதும் எனக்கு நானே பரீட்சை செஞ்சு பார்த்தேன். அப்போ தான், டாக்டரின் முழு நடவடிக்கைகளும் எதுக்காக எனக்கு ஒரு நிஜமற்ற பாசாங்கு போல அங்கே தோணிச்சு என்பதன் காரணமே விளங்கியது.''

''ஹ ூம்'' என்றார் இன்ஸ்பெக்டர். பேனா மற்றும் தாளைத் தேடி அவர் மெல்ல நகர்ந்தார்.

நான் தொடர்ந்தேன்: ''அப்போ, அங்கே வீழ்ந்துக் கிடந்த ஆசாமியின் சட்டைப் பகுதி முழுவதும் கையை மேய விட்ட அவனுக்கு, அங்கேயிருந்த பாக்கெட்டிலிருந்து அவனுக்குத் தேவை யான எதையும் எடுத்துவிட ஏகப்பட்ட அவகாசம் இருந்திருக்கு.''

''இது சாத்தியமான ஒண்ணா எனக்குப் படலே'' என்றார் இன்ஸ்பெக்டர். ''ஆனா...'' என்றவர், பிறகு ''சரி... அவனை முழுக்க உங்களால விவரித்து சொல்ல முடியுமா?'' என்றார்.

''அவன் நல்ல நெட்டை. அகலமான திரண்டத் தோள்கள். நல்ல இருண்ட ஒரு நிறத்துல மேல் கோட்டு போட்டிருந்தான். கறுப்பு ஷூ. வட்ட தொப்பி. கூர் செய்யப்பட்டிருந்த ஒரு சின்ன கறுப்பு தாடியும், தங்க முலாம் பூசப்பட்டிருந்த மூக்குக் கண்ணாடியும் - முகத்தில்.''

''மேல் கோட், மூக்குக் கண்ணாடி, கறுப்புக் குறுந்தாடி... இதையெல்லாம் கழட்டி எறியுங்க. இப்போ, அவனை அடையாளம்

*காட்ட மிச்சமா ஒண்ணுமேயிருக்காது'' - சொன்னார் இன்ஸ்பெக்டர். ''அவன் நினைச்சா ஐந்தே நிமிஷத்துல அவனுடைய தோற்றத்தை அப்படியே தலைகீழா மாற்றிக்க முடியும் - அவன் நிச்சயமா அப்படி செய்வான் செஞ்சிருப்பான்... அவன் மட்டும் ஒரு கை தேர்ந்த பிக்-பாக்கெட் அடிப்பவனா இருந்தால்...?!''*

*இந்த அர்த்தத்திலா, மடிந்துக் கிடந்தவனுடைய பாக்கெட் துளாவப்பட்டதாய் நான் சொன்னேன்...?! அந்தக் கணமே 'லாயக்கற்றவன்' என முத்திரை குத்தி, இன்ஸ்பெக்டர் மீது எனக்கிருந்த அத்தனை நம்பிக்கைகளையும் தூக்கி எறிந்துவிட்டேன்.*

*கிளம்ப நான் எழுந்த போது, ''அவனைப் பற்றி மேற்கொண்டு எதுவும் உங்களால் தர முடியாதா?'' என சற்று அதிகாரமாய் கேட்டார் அவர்.*

*''முடியும்'' - குண்டடியாய் ஒரு வார்த்தையை சொல்லக் காத்திருந்த நான், கிடைத்திட்ட இந்த அவகாசத்தை விட்டுவிட தயாராயில்லை. ''அவன் தலை வேறெங்குமே காணக்கிடைக்காத அளவுக்கு ஓர் ஆதிகாலத்து நெருப்புக் கோழியின் முட்டை வடிவத்துல இருந்தது. ப்ராசி-செஃபாலிக்! இதைப் போய் அவனால வேறெங்கும் மாற்றித் தைத்துக் கொள்ள முடியாது, என்ன!''*

*இதை எப்படிக் குறிப்பிட்டு எழுதுவது என அறியாது, இன்ஸ்பெக்டரின் பேனா நர்த்தனமாடியதை நான் வெகுவாய் ரசித்தேன். அடியில் மிகக் குறுகி, மேலே வெகுவாய் விரிந்து ஒரு கூம்பு போல அவன் தலையிருந்தது என நான் தந்த முக்கியக் குறிப்பினை எழுத இயலாது அவர் விழித்தது படு துல்லியமாய்த் தெரிந்தது. தவிர, இதன், ப்ராசி-செஃபாலிக் என்ற ஆங்கில உயிரியல் பெயரினை, நிச்சயமாய் அவருக்கு உச்சரிக்க வரப்போவதில்லை!*

*ஆஹ்ஹா... தவிக்கட்டும் குள்ளன்!*

# அத்தியாயம் - 5

வெறுப்புடன் கூடிய கோபம் முண்டியடித்த போதிலும், அடுத்து நான் செய்ய வேண்டிய கட்டம், வெகு சுலபமாய் கையாளும் வசதியோடு எதிர்பாராமல் கையில் கனிந்து விழுந்துள்ளதை நான் அறிந்தேன். ஸ்காட்லாண்டு காவல்துறைக்கு நான் கிளம்பிய போது என் மண்டைக்குள் பாதியளவு தயாராயிருந்த ஒரு திட்டத்துடன் தான் கிளம்பியிருந்தேன். ஸ்காட்லாண்டில், விஷயம் திருப்தியளிக்காமல் ஆகிவிட்டால் (அது, பரிபூரணமாய் வெற்றியற்றே முடிந்தது), அதனைக் கோபங்கொள்ளாது பொறுமையாய் நான் எதிர்கொண்டு வென்று விடும்பட்சத்தில், நடைமுறைபடுத்த ஒன்று.

கோபத்திலிருக்கும் போது ஒரு விஷயத்தை வேகமாய் கையாண்டு விடாமல் உள்பக்கமாய் ஒடுங்கி விட்டால் அது தரும் வெற்றியே அலாதி தான். அப்படிப்பட்ட வெற்றி தான் இப்போது எனக்கு அமைந் திருந்தது. இன்ஸ்பெக்டரிடம் ஏற்பட்ட கசப்பினில் மனத்தினைப் போட்டு உழற்றிக் கொள்ளாமல் நேராய் திருமிகு நாஸ்பி வீடு நோக்கி நடையைக் கட்டினேன்.

கோடானு கோடி விலை போகவுள்ள த டெய்லி பட்ஜெட்டின் சொந்தக்காரர், திருமிகு நாஸ்பி. மற்ற செய்தித் தாள்களையும் அவர் நடத்தி வந்தார் - பற்பல. ஆனால் த டெய்லி பட்ஜெட் தான் அவருடைய செல்லக் குழந்தை. எத்தனையிருந்தும், த டெய்லி பட்ஜெட்டின் சொந்தக்காரராகத் தான் அவர் யுனைடெட் கிங்டம்மின் பட்டி தொட்டியெல்லாம் அறியப்பட்டார். இந்த மாபெரும் பிரபலஸ்தரின் தினசரிப் பிரயாணத் திட்டங்கள் சமீபத்தில் வெளிப்படையாகப் பிரசுரமாகியிருந்தபடியால், இந்தக் கணக்கில் திருமிகு நாஸ்பி எங்கிருப்பார் என்பதை நானறிந்தேயிருந்தேன். இது, அவர், அவருடைய சொந்த வீட்டில், பதில் எழுத வேண்டிய குறிப்புகளைப் பற்றி அவரது காரியதரிசிக்கு உத்தரவிட்டுக் கொண்டிருக்கும் நேரம்.

அவரைப் பார்க்க வேண்டும் எனச் சொல்லிக் கொண்டு வரும் எந்த இளம் பெண்ணும் உடனே வரவேற்பு தரப்பட்டு அப்பெரும்

புள்ளியைப் பார்க்க உள்ளே அனுமதிக்கப்படுவார்கள் என்பது எல்லோரையும் போலவே நானும் துளியும் எதிர்பார்க்காத ஒன்றுதான்! ஆனால் இச்சூழ்நிலையை எதிர்கொள்ள நான் கவனம் செலுத்தியிருந்தேன். ஃப்ளெம்மிங்கிடம், அவரைக் காண வரும் பார்வையாளர்கள் தரும் முகவரி அட்டைகளின் ஒரு தொகுப்பு இருந்தது. அதில் இங்கிலாந்தின் மிகப் பிரபலமான விளையாட்டு வீரரான லோம்ஸ்லே'யின் முகவரி அட்டையுமிருந்தது. அதை உருவி எடுத்துக் கொண்டேன். அதன் நடுவிலிருந்த சிறு இடைவெளி பகுதியில், 'உங்கள் பொன்னான நேரத்தில் சில நிமிடங்களை செல்வி ஆனே பெட்டிங் ஃபெல்டுக்கு ஒதுக்கவும்' என எழுதினேன். தர்மம் அறம் இதுகளையெல்லாம் ஒரு வீரதீர சாகசப் பெண் ரொம்பவும் கையாளக் கூடாது!

இது, வேலை செய்தது. காவலாளி, அட்டையை வாங்கிக் கொண்டு அதைத் துளையிடுவது போல கண்களாலேயே ஆராய்ந்தான். அப்போது அவன் கூட, வெளிறிப் போயிருந்த ஒரு காரியதரிசியும் வந்து சேர்ந்துக் கொண்டான். அவனுக்கும் அதிகம் புரியாததால் அதனை வாங்கிக் கொண்டு உள்ளே போனவன், பின் திரும்பி வந்து, அவனைப் பின்தொடருமாறு வேண்டியபடி உள்நோக்கி நகர்ந்தான். அவன் சொன்னபடி செய்தேன். விசாலமான ஓர் அறைக்குள் நான் நுழைய, ஏதோ வேற்றுலகத்திலிருந்து இறங்கி நான் வந்திருப்பதைப் போல என்னை பாவித்து... பயந்து நடுங்கித் தோன்றிய ஒரு டைப்பிஸ்ட், என்னை நோக்கி ஓட்டமும் நடையுமாய் வந்தாள். இப்போது கதவு அடைக்கப்பட்டது. அங்கிருந்த திருமிகு நாஸ்பியை முகத்துக்கு முகம் பார்த்தபடி - நான்.

திருமிகு நாஸ்பி - அளவில் பெரிய மனிதன். பெரிய தலை. பெரிய முகம். பெரிய மீசை. பெரிய வயிறு. என்னை எனக்குள் இழுத்து பத்திரப்படுத்திக் கொள்ள வேண்டியதாயிற்று. இப்படியெல்லாம் பெருசாக இருக்கும் இந்தப் பெருசை விமர்சிக்க நானிங்கு வரவில்லை. அவர் ஏற்கனவே உறுமிக் கொண்டு வேறு இருந்தார்: ''ம்... என்ன சமாச்சாரம்? லோம்ஸ்லே'க்கு என்ன வேணுமாம்? நீ என்ன அவன் செகரட்டரியா? என்ன கூத்து இதெல்லாம்?''

''அதாவது...'' என்ற நான், எத்தனைக்கெத்தனை நடுக்கமற்றவளாய் காட்டிக் கொள்ள முடியுமோ அத்தனை சாந்தமாகக் காட்டிக் கொள்ள முயற்சித்தபடி பேசினேன்: ''எனக்கு லோம்ஸ்லேயைத் தெரியாது... அவருக்கும் நான் யார்னு சுத்தமா எதுவும் தெரியாது. நான்

தங்கியிருக்கும் வீட்டு சொந்தக்காரரிடமிருந்து இந்த முகவரி அட்டையை நான் பதுக்கினேன்... அதிலுள்ள சிபாரிசு வார்த்தைகளை நானே என் கைப்பட எழுதினேன். நான் எப்படியாவது உங்களை சந்திச்சே ஆகணும் என்பது தான் இதுல மிக அத்தியாவசியமான ஒன்று.''

தலைகுப்புற விழுந்து விட்டதைப் போல அவர் காட்டிய படபடப்பு, அவருக்கு ஒருவேளை வலிப்பு போன்ற ஏதாவது நரம்புத் தளர்ச்சி இருக்குமோ என்று கூட என்னை எண்ண வைத்தது. ஆனால் உடனேயே ஓரிரு மடக்கு எச்சிலை விழுங்கிக் கொண்டு அப்பட படப்பிலிருந்து மீண்டு விட்டார் அவர். ''உன்னுடைய அசகாய துணிச்சலை வியக்கிறேன், பொண்ணே! கவனி... உன் பேச்சில் சாரமிருந்து நான் ஈர்க்கப்பட்டால்... என்னுடன் பேச உனக்கு இரண்டு நிமிடம் அவகாசம் தரேன்.''

''அதுவே ரொம்ப அதிகம்'' என்றேன் நான். ''மேலும் என் பேச்சில் உங்களுக்கு சாரம் நிறைய இருக்கும். இது மில் வீட்டு மர்மம் பற்றியது.''

''ப்ரௌன் சூட்டில் வந்தவன் யார்? அப்படினு நீ கண்டுபிடிச்சிருந்தா அதை நீ எடிட்டருக்கு எழுதிப் போடலாம்'' என்று அவசரமாய் இடைமறித்தார் அவர்.

''நீங்க இடைமறிச்சா, ரெண்டு நிமிஷத்துக்கு மேலே நான் போக வேண்டியிருக்கும்'' - கறராய் குறிப்பிட்டேன் நான். ''ப்ரௌன் சூட்டில் வந்தவன் யார்? என்பதை நான் கண்டுபிடிக்கலே. ஆனா அதை நான் செஞ்சு முடிக்கத்தான் போறேன்.''

எத்தனை சிக்கனமாய் வார்த்தைகளைக் கையாள முடியுமோ அப்படிச் செய்து, ரயிலடியில் அரங்கேறிய விபத்தின் உண்மை சாராம்சத்தையும் அதிலிருந்து நான் எனக்குள் அடைந்திருந்த முடிவுகளையும் அவர் முன் வைத்தேன். முடித்ததும் நான் கொஞ்சமும் எதிர்பாராது அவர் கேட்டார். ''ஆதிகாலத்து நெருப்புக் கோழி முட்டை பற்றியெல்லாம் உனக்கென்ன தெரியும்?''

நான் அப்பா பற்றி சொல்ல வேண்டியதாயிற்று.

''ஓ அந்த மனிதக்குரங்கு மனுஷனா, ஆங்? அதனால தான் உனக்குள்ளேயே மேதாவித்தனம் பொங்கி வழியுது! இருந்தாலும் நீ சொன்ன சமாச்சாரங்களெல்லாமே மிகவும் சத்தற்றவை. மேற்கொண்டு போக உதவாத நோஞ்சான் காரணங்கள். இப்ப இருக்கிற நிலைமையில - நீ சொன்ன எதுவும் நமக்கு உதவாது.''

''எனக்கும் இது நல்லா தெரியும்.''

''அப்ப என்ன வேணும் உனக்கு?''

''இந்த சமாச்சாரத்தை இன்னும் ஆழமா நான் துப்புத் துலக்க, உங்க பேப்பர்ல எனக்கொரு வேலை வேணும்.''

''அதெல்லாம் முடியாதும்மா. எங்களுடைய ஸ்பெஷல் நிருபரை இதன் மேலே தூக்கி வெச்சிருக்கோம்.''

''எனக்கும் பிறப்பிலேயே ஸ்பெஷல் சாதுர்யம் இருக்கு.''

''அதுக்குத் தான் இப்போ உங்கப்பாவைப் பற்றி சொன்னியா, ஆங்?''

''ஓ, அப்படி கிடையாது திரு நாஸ்பி. எனக்குனு உள்ள சாமர்த்தியம் மூலமா பல கூடுதலான தகவல்களை நான் தேடி வெச்சிருக்கேன்.''

''ஓ, உன்கிட்டே இருக்கு, இல்லே? ரொம்பச் சூட்டிகையான பொண்ணா இருக்கே, நீ...! என்னது அது?''

''தன்னை ஒரு டாக்டர்னு பீற்றிக்கிட்ட ஆசாமி லிஃப்டுல ஏறும் போது ஒரு துண்டுச் சீட்டைத் தவற விட்டுட்டான். அதை நான் எடுத்தேன். அது முழுக்க அந்துருண்டை நெடி. அதே நெடி தான் - செத்த ஆள் மீதும்; 'டாக்டர்' மேல அப்படி கிடையாது. ஆக, இந்த 'டாக்டர்', அவ்வுடலிலிருந்து தான் இதை எடுத்திருக்கனும் என்பது எனக்கு உடனடியா புரிஞ்சுப் போச்சு. ரெண்டு வார்த்தைகளும் சில எண்களும் அதிலிருந்தன.''

''எங்கே... அதை நாங்களும் பார்க்கிறோம்?'' விட்டேற்றித் தனமாய் தனது கையை நீட்டினார் திரு. நாஸ்பி.

''ம்ம்'' சிரித்தபடி சொன்னேன். ''அது நான் கண்டுபிடிச்சது... இல்லையா!''

''என் கணிப்பு சரியே தான். நீ சூட்டிகை நிறைஞ்ச பொண்ணே தான். அதை பிடிச்சுக்கிட்டே தொங்கு, சரியா! இதைக் கொண்டு போய் நீ போலீஸ் கிட்டே காட்டாதது குற்றமில்லையா, ஆங்?''

''அப்படிச் செய்யத் தான் இன்னிக்குக் காலையிலேயே நான் ஸ்காட்லாண்டு போயிருந்தேன். இந்தத் தண்டவாள விஷயம், அந்த மார்லோ வீடு சமாச்சாரத்தோட எந்த வகையிலும் தொடர்புள்ளது கிடையாதுனு அப்படி சத்தியம் பண்றானுங்க, அவனுங்க. இந்த சந்தர்ப்பத்துல அந்தத் துண்டுத் தாளை என்னிடம் வைத்துக் கொள்வதே சரியானதுனு ஆனேன். தவிர என்னை வெறுப்பேத்தின அந்த இன்ஸ்பெக்டர்... ஓஹ்...!''

''வந்த துப்பை உபயோகப்படுத்திக்கத் தெரியாத கிட்டப்பார்வை பய! சரி, கவனி, சின்னவளே... இப்போதைக்கு இவை தான் நான் செய்யக் கூடியவை: நீ போய்க்கிட்டிருக்கிற இந்த வழியிலேயே தொடர்ந்து உழை. உனக்கு ஏதாவது கிடைச்சா, அதாவது நியூஸ் பேப்பர்ல பிரசுரிக்கும் அளவுக்கு தகுதி வாய்ந்ததா ஏதாவது கிடைச்சா அதை நீ எங்களுக்கு அனுப்பு. உனக்கு நீ கேட்ட வாய்ப்பு கிடைக்கலாம். நிஜத் திறமைக்கு த டெய்லி பட்ஜெட்டில் எப்பவுமே இடம் உண்டு.''

இதற்காக அவருக்கு நன்றி சொல்லிக் கொண்ட நான், உள்ளே வரக் கடைபிடித்த வழிக்காக மன்னிப்புக் கோரினேன்.

''பாதகமில்லே. அது எனக்குப் பிடிச்சிருந்தது. அதுவும் ஓர் அழகான இளம்பெண்ணிடமிருந்து எனும் போது! ஏய்... நீ ரெண்டு நிமிஷம் போதும்னே... இடை மறிச்சா மூணுனே இல்லையா...?! ஒரு பெண்ணுக்குப் பேச வாய்ப்புக் கிடைச்சும் அவகாசத்தைக் குறைத்துக் கேட்பது, பெருமைப்பட வேண்டிய ஒண்ணு தான்...! எல்லாம் அறிவியல் சார்ந்த பயிற்சி, ஆங்...?!''

நீண்ட நெடுதூரம் ஓடி வந்தவனைப் போல மூச்சிரைத்துக் கொண்டு தெருவில் மறுபடியும் இறங்கியிருந்தேன் நான். திரு. நாஸ்பியை நினைக்கும் போது, விஷய ஞானம் கொண்ட ஒரு சிநேகிதன் கிடைத்தது போல தோன்றியது எனக்கு.

## அத்தியாயம் - 6

வெற்றிக் கொண்டாட்டக் களிப்போடு நான் வீட்டை அடைந்தேன். நான் யோசித்து போட்டிருந்த திட்டங்கள் அத்தனையும் எத்தனை எதிர்பார்த்திருப்பேனோ அதையும் விட அதீதமாய் வெற்றி பெற்றிருந்தன. திருமிகு நாஸ்பி ஒரு திறந்த மனம் கொண்ட அறிவாளராய் நடந்து கொண்டார். அது, ஒன்றே ஒன்றினைத் தான் இப்போது எனக்கு நினைவுபடுத்தியது. அவர் சொன்னது மாதிரி, 'நியூஸ் பேப்பர்ல பிரசுரிக்கும் அளவுக்கு தகுதி வாய்ந்ததா ஏதாவது எனக்கு கிடைக்கணும்.' அறையில் தனியாய் ஆனதும் என் சொத்தான அந்த ஒற்றைத் துண்டுத் தாளை எடுத்துக் கொண்ட நான், மிகத் தீவிரமான கவனத்தோடு அதைப் படித்தேன். இதில் தான் இம்மர்மத்துக்கான துப்பே அடங்கிக் கிடக்கின்றது.

முதலில்... இந்த எண்கள் எதனைக் குறிக்கின்றன? ஐந்து எண்கள் இருக்கின்றன... இரண்டாவதுக்கு அடுத்து ஒரு புள்ளி. ''பதினேழு... நூற்று இருபத்தியிரண்டு'' - அவற்றை இப்படி நான் முணுமுணுத்தேன்.

இது, எதை நோக்கியும் உருப்படியாய் கொண்டு செல்வதாய் தோன்றவில்லை.

அடுத்து அவையனைத்தையும் நான் கூட்டிப் பார்த்தேன். கதைகளில், இப்படியேதாவது பண்ணும் போது தான் வியத்தகு முடிவுகள் உருவாகும்.

''ஒன்றும் ஏழும் சேர்ந்து எட்டு... அதனோடு மேலும் ஒன்று சேர, ஒன்பது... அதனோடு இரண்டு சேர, பதினொன்று... மேலும் ஓர் இரண்டு... மொத்தம் பதின்மூன்று!''

பதின்மூன்று! திகைத்தேன்! சாபக்கேடான எண்: பதின்மூன்று! இந்த அத்தனை பிரச்னைகளையும் அப்படியே நான் விட்டு விட்டு ஓடிவிட வேண்டும் என்பதற்கான எச்சரிக்கையா, இது? நிச்சயமாய் இருக்கலாம். எப்படியோ... எச்சரிக்கை என்பதைத் தவிர, இது துளிகூட உபயோகமற்றதாய் பட்டது. சதித்திட்டம் போடும் ஒருத்தன் பதின்மூன்றைக் குறிப்பிட இப்படி நீட்டி முழக்கி ஒரு வழியைத்

தெரிந்தெடுப்பான் என்று என்னால் நம்ப முடியவில்லை. பதின்மூன்று என்றே எழுதி விடுவானே! *13 - இப்படி!*

அதிலிருந்த ஒன்றுக்கும் அதற்கடுத்திருந்த இரண்டுக்கும் இடையே தீர்க்கமான இடைவெளி இருந்தது. அதன்படியே போனேன்... இருபத்தியிரண்டை, நூற்றி எழுபத்து ஒன்றிலிருந்து கழித்தேன். இதன் முடிவு: நூற்று ஐம்பத்தொன்பது. மறுபடியும் செய்தேன். ஓஹ்... அது, நூற்று நாற்பத்தொன்பது! இதுபோன்ற எண் கணித பயிற்சிகள், கணக்குப் படிக்கும் ஒருவனுக்கு மிக அற்புதமான பயிற்சியாகலாம்... ஆனால் கையிலுள்ள மர்மத்தை உடைக்கும் வழியைப் பொறுத்த வரை, ம்ம்... எள்ளளவும் உபயோகமில்லாமல் இருந்தது. கூட்டிப் பெருக்கும் இந்த எண் விளையாட்டை அப்படியே விட்டு வைத்து, வார்த்தைகளை அள்ளிக் கொண்டேன்.

*கில்மார்டன் மாளிகை.* ஒன்று நிச்சயம். இது ஓரிடம். ஏதோ பிரபுவோ அல்லது ஜமீன்தாரரோ, பரம்பரை பரம்பரையாய்ப் போற்றிப் பாதுகாக்கும் இடமாயிருக்கலாம். (தொலைந்து விட்ட வாரிசு? அல்லது, யார் தான் இதன் வாரிசு?) அல்லது பல சின்னங்களும் சிற்பங்களும், இடிபாடுகளுக்குள் புதைந்துக் கிடக்கும் இடமாயிருக் கலாம். (ஆதிகாலத்துப் பொக்கிஷங்கள்?)

இச்சிந்தனையின் முடிவாய், ஆதிகாலத்துப் பொக்கிஷங்கள் எனும் தியரியை அங்கீகரித்தேன். வலப்பக்கம் திரும்பு... அப்படியே ஒரடி நட... பின் இடப்பக்கம் திரும்பு... அத்திசையில் எட்டடி... அங்கு ஒரடி நோண்டு... தெரியும் படிகளின் வழியாக இருபத்தியிரண்டு படிகள் இறங்கு. இதுபோல! இந்த வித்தைகளையெல்லாம் நான் பிறகு நடத்திக் கொள்ளலாம். முதலில் பண்ண வேண்டியது அந்த கில்மார்டன் மாளிகையை அடைவது!

ஒருவருமறியாது தந்திரமாக என் அறையிலிருந்து திடுமென வெளியேறிய நான், திரும்பும் போது சில குறிப்புப் புத்தகங்களைக் கழுத்து வரை அடுக்கிக் கொண்டு வந்தேன். இடங்கள் பற்றியவை.

நேரம் ஓடியது. சிரத்தையோடு தேடினேன். ஆனால் வளர்ந்தது வெறுப்பு தான். முடிவில், நான் பார்த்துக் கொண்டிருந்த கடைசிப் புத்தகத்தைப் பெரும் ஓசையோடு அடித்து மூடினேன். கில்மார்டன் மாளிகை என்ற பெயரில் ஓரிடம் இருப்பதாகவே எந்தப் புத்தகத்திலும் குறிப்பு இல்லை.

எதிர்பாரா ஒரு முட்டுக்கட்டை. அப்படி ஓரிடம் இருக்கத்தான் வேண்டும். இல்லையென்றால், எதற்காக ஒருத்தன் அப்படி ஒரு

பெயரைத் தயார் செய்து அதை ஒரு துண்டுச் சீட்டில் வேறு எழுத வேண்டும்?

இன்னோர் எண்ணம் எனக்குப்பட்டது. இது, நகரத்தின் சுற்றுப்புறம் எங்கேயாவது பாழடைந்த நிலையிலுள்ள ஓர் அரண்மனையாக இருக்குமா...? அதற்கு இப்படி ஒரு பெயரை அதன் சொந்தக்காரன் யோசித்து யோசித்து உருவாக்கியிருப்பானா? இதுவே உண்மையாகி விட்டால் அப்படியொன்றைத் தேடிக் கண்டுபிடிப்பது அசாதாரணமான ஒன்றாகிவிடும். இருளடைந்துப் போய் தரையில் உட்கார்ந்து விட்டேன். (ரொம்ப முக்கியமாக ஒன்றினை உடனே செய்தே தீரவேண்டும் என்றால், தரையில் சம்மணமிட்டு உட்கார்ந்து விடுவேன்) இந்தக் கிளைப் பிரச்னையிலிருந்து எப்படி விடுதலை யாவது என அல்லாடினேன்.

நான் பிடித்துக் கொண்டு வசதியாக மேலும் மேலும் ஏற கயிறு ஏதாவது தென்படுகின்றதா? மிக உண்மையாய் நான் சிந்திக்கத் துவங்க... ஒரு நிலையில் துள்ளிக் குதித்து உற்சாகமாய் எழுந்து நின்றேன். நான் 'கொலை நடந்த இடத்தைப்' போய்ப் பார்க்க வேண்டும். மிகச் சிறந்த துப்பறியும் நிபுணர்களால் எப்போதும் கடைபிடிக்கப்படும் ஓர் எழுதப்படா சட்டம்!இது எத்தனை நாட்கள் கழித்து இடம்பெற்றாலும் சரி... அவர்கள் கண்களுக்கு மட்டும், போலீஸ் கவனிக்காது விட்டு விடும் எதாவது சிக்கும். எனக்கு வழி கிடைத்து விட்டது. நான் மார்லோ மில் வீட்டுக்குப் போயாக வேண்டும்.

ஆனால் நான் எந்த வழியைக் கடைபிடித்து அவ்வீட்டுக்குள் நுழைவது? நினைவில் தோன்றிய பல சாகச வழிகளைப் புறக்கணித்த நான், கடைசியாய், மிக சிம்பிளான வழியைக் கையிலெடுத்துக் கொண்டேன். அந்த வீடு வாடகைக்காக உள்ளது... இன்னும் கூட அப்படித்தான் இருக்க வேண்டும். நான் ஒரு வாடகைக்காரியாக இருந்து விட்டுப் போகிறேன்!

மில் வீடு வாடகைக்கு இருக்கும் சேதி தரகனிடம் பதியப் பட்டிருப்பதால் அவன் மூலமாகவே போனால் சிக்கல்கள் கணிசமாய் குறையும். எனவே தரகன் மீது அம்பெய்த முடிவெடுத்தேன்.

இங்கு நான் சற்று நிதானித்தேன். என்னை ஓர் அனாதையாய் பாவித்துக் கூடவே அழைத்து வந்து தங்கவும் இடம் தந்திருப்பவரைத் தவிர்த்தேன். தனியாய் கிளம்பினேன். அமைதியாய் தோன்றிய ஒரு கிளார்க், ஆரேழு பற்றி குறிப்புகள் தந்தான். என்னுடைய சாதுர்யம்

அனைத்தையும் மூட்டை கட்டியிழுத்து, ஒவ்வொன்றுக்கும் வெவ்வேறு மறுப்பு சொல்ல வேண்டியதாயிற்று! முடிவில் மூலையில் போய் முட்டிக் கொண்டு நிற்கும் நிலை உண்டானதும் வெறுமனே ஆனேன்.

''இவை தவிர வேற உங்ககிட்டே இல்லவே இல்லையா'' என்று, க்ளார்க்கின் கண்களைப் பரிதாபமாய் ஊடுருவியபடி கேட்டேன். ''நதிக்கரையோரம்பா! பெரிய தோட்டத்தோட! கொஞ்சந்தள்ளி ஒரு சின்ன வீட்டுல, வேலைக்காரி ஒருத்தி கூடவேயிருக்கிற வசதியோட!'' மில்வீட்டின் முக்கியக் குறிப்புகளை செய்தித்தாள்களிலிருந்து அறிந்து வைத்திருந்த ஞானத்தின் உதவியோடு, அள்ளிவிட்டேன்.

''அப்படினா மில் வீடு தான் லாயக்கு'' என்றான் அவன் கடைசியாய். ஆனால் சந்தேகமாய்!'' சர் ஆஸ்டஸ் பெட்லரோட இடம், மில் வீடு. தெரியுதா?''

''தெரியலியே. எந்தப் பக்கத்துல...?'' தட்டுத் தடுமாறினேன்.

''கேட்டீங்களே ஒரு கேள்வி! இங்கே தாம்மா கொலை நடந்திருக்கு. அதனால்... உங்களுக்கு இந்த இடம் பிடிக்காம...''

''ஷூ'' என்று நிறுத்தினேன் நான்! ''இதெல்லாம் என்னை ஒண்ணும் பண்ணாது'' என பரிகாரம் பண்ணும் பாணியில் சொன்னேன். என் திறமை இங்கு மெல்ல வேரூன்றுவது போல தோன்றியது. ''அப்படினா - இந்த வீடு எனக்கு இன்னும் வாடகைக் கம்மியா கிடைக்கலாமில்லே?!''

அப்படிப் போடு அரிவாளை! கொன்னுட்டேன்... நான்!

''ஆமாமாம்... அப்படிக் கூட ஆகலாம். அப்படியே கிடைச்சாலும், தினசரி வாழ்க்கையை நடத்த ரொம்பக் கஷ்டமா இருக்கும்மா. வீட்டு வேலைக்கு சேர பயந்துக்கிட்டு வேலைக்காரிங்க வர மாட்டேம் பாளுங்க! பல தொல்லைங்க, இந்த மாதிரி...! உங்களுக்கு முதல்ல வீடு பிடிக்கட்டும். பிறகு மீதியைப் பேசுவோம். என்ன, சீட்டு எழுதட்டுமா?''

''ப்ளீஸ்.''

கால் மணி நேரம் கடந்த பிறகு, மில் வீட்டைக் கவனித்துக் கொள்பவளின் வீட்டில் இருந்தேன். என் கதவுத் தட்டலைக் கேட்டதும், கதவு விரிந்து திறக்க... திறந்ததும் பொங்கி வழிவது போல் ஒரு நடுத்தர வயது பொம்பிளை வந்து விழுந்தாள்.

''யாரும் அந்த வீட்டுக்குள்ளே போக முடியாதும்மா... புரியுதில்லே? கிளம்புங்க முதல்ல. சர் ஆஸ்டஸின் கட்டளை இது. நிருபனுங் களாம்...! நீங்களும் உங்க பொழப்பும்.''

உறைந்து போன நான், ''அந்த வீடு வாடகைக்குனு சொன் னானே...'' என்றேன் நான், கையில் தரகன் தந்தச் சீட்டினைப் பிடித்துக் கொண்டு. ''அது ஏற்கனவே யாருக்காவது விடப்பட்டிருக்கா...''

''ஓஓஓ... மன்னிச்சுடுங்க, மிஸ். இந்த நியூஸ் பேப்பர் ஆளுங்களாலே நான் அரண்டுப் போயிருக்கேன். ஒரு நிமிட அமைதி கூட கிடையாது. ஊஃப்...! வீட்டை இன்னும் யாருக்கும் வாடகைக்கு விடலேம்மா - இப்ப உடனடியா அங்கே யாரும் வருவாங்களானும் தெரியலே.''

''உத்திரம் சரியில்லையா?'' ஈடுபாடு பொதிந்து முணுமுணுத் தேன்.

''சர்தாங்...! உத்திரம் எல்லாம் நல்லாத்தானிருக்கு. அந்த வெளிநாட்டுப் பொம்பிளை இந்த வீட்டுல தான் கொல்லப்பட்டா எனும் செய்தியையே நீங்க படிக்கலே போலிருக்கு...!''

விட்டேற்றித்தனமான குரலில், ''ஏதோ படிச்ச ஞாபகமிருக்கு'' என்றேன்.

இதில் ஆர்வமாய் நான் காட்டிக் கொள்ளாதது, இந்த சமத்தான பொம்பிளையை என் வலைக்குள் இழுத்து வந்து போட்டது. கொஞ்சமாவது ஈடுபாட்டினை நான் காட்டியிருந்தாலும், போச்சு... அவ்வளவுதான்... மூடிய சிப்பியாய் மூடி விட்டிருப்பாள். தற்சமயம் அவள் என் கடிவாளத்துக்குள் கட்டப்பட்டு விட்டாள்.

''நீங்க படிச்சிருக்கணும் மிஸ்... மறந்திருப்பீங்க! எல்லா செய்தித் தாள்களிலும் வந்திருந்ததே. எவன் செஞ்சானோ அவனைக் கையும் களவுமா பிடிக்க த டெய்லி பட்ஜெட் தொடையைத் தட்டிக்கிட்டு கிளம்பியிருக்கு... அவங்களைப் பொறுத்த வரைக்கும், நம்ம போலீஸ் கூட்டமே - வெறும் தத்தி! அந்த ஆளு செம ஸ்மார்ட்டாவும், பார்க்கிற ...க்கு எவ்விதமான குத்தங்குறை இல்லாதவனா தெரிஞ்சாலும் பார்த்துக்கிட்டே இருங்க... இந்தப் பேப்பர் காரனுங்க பிடிச்சுடு வானுங்க. அவனைப் பார்த்தாலே ஒரு பட்டாளத்து வீரன் போல தோணும்...! ஆஹ்... அவன் போர்ல அடிபட்டிருக்கணும், ஆமாம்! அப்படிப்பட்டவங்களுக்குத் தான் இப்படியெல்லாம் செய்யற மாதிரி மூளைத் திருகிப் போயிடும்; என் அக்கா பையன் கூட வில்லங்கமா

என்னத்தையோ செஞ்சான். வந்த அந்த ஆளை, செத்த அந்தப் பொண்ணு தப்புத் தண்டாக்கு பயன்படுத்தியிருக்கும் இந்த வெளிநாட்டு செம்மங்களே இப்படித்தான். அவ அழகா இருந்துட்டா மட்டும் நல்லவளா ஆயிடுவாளா? இதனால அவங்க ரெண்டு பேருக்குள்ளே என்ன கசமுசாவோ...! இதோ... நீ நிக்கிறயே... இங்கேயே நின்னுக்கிட்டுத்தான் சாவியைக் கேட்டா, புண்ணியவதி.''

''அவ கறுப்பா, சிகப்பா?'' - நான் நுழைய ஆரம்பித்தேன். ''இந்த செய்தித்தாள் சேதிகளை வெச்சுக்கிட்டு அதெல்லாம் சொல்ல முடியாதில்லே...?''

''கன்னங்கறுக்க கேசம். படு வெள்ளையா முகம். இயற்கையில இப்படி ஒரு வெள்ளை முகம் அமையாதுனு அப்ப நான் நினைச்சேன். உதடு முழுக்க வழிய வழிய அப்படி சாயம் அடிச்சிருந்தா ரத்தம் போல. அதைப் பார்க்கவே நான் விரும்பலே. இந்த அழகுல, திட்டுத் திட்டாப் பவுடர் வேற.''

பழகிய பழைய நண்பர்களைப் போல இப்போது உரையாட ஆரம்பித்திருந்தோம். அடுத்த கேள்வியைப் போட்டேன். ''அவ படபடப்பாகவோ... இல்லே நிலைகுலைஞ்சவளாகவோ தெரிஞ் சாளா?''

''அப்படியெல்லாம் துளியும் கிடையாது. எதை நினைச்சோ ஆச்சரியமும் வியப்பும் அடைஞ்சவளைப் போல தனக்குத்தானே அவ சிரிச்சுக்கிட்டிருந்தா. கலகலப்பா. ஆமாம். அதனால தான் மறுநாள் மத்தியானம் அந்த வீட்டுல கொலை விழுந்திருக்குனு விழுந்தடிச்சுக் கிட்டு அவனுங்க போலீசைக் கூப்பிட ஓடினப்போ, நான் ஒரு இறகு போல உதிர்ந்துப் போனேன்! இந்த அதிர்ச்சியிலிருந்து நான் மீளவேப் போறதில்லே. அந்தி சாய்ந்த பிறகு, ஓஹ்... ஒரே ஒரு தடவை கூட என்னால அந்த வீட்டுக்குள்ளே இனி நுழைய முடியாது. இத்தனை ஏன்... சர் ஆஸ்டஸ் முட்டி போட்டு கெஞ்சாத குறையா என்கிட்டே கேட்டுக்கலைனா... என்னிக்கோ இந்த எல்லையை விட்டே ஓடியிருப்பேன். நடுங்குதுமாங்கறேன்!''

''சர் ஆஸ்டஸ் பெட்லர், கெனாஸ்... அதான் ரிவேரா பகுதில இருக்கார்னுல்லே நினைச்சேன்?''

''ஆமாம்மா. சேதியைக் கேள்விப்பட்டு தான் இங்கிலாந்துக்கு வந்தார். அவரோட காரியதரிசி, மிஸ்டர் பகெட்'டுனு பேர்... 'ரெட்டை சம்பளம் தரேங்கிறாரு... போயிடாதீங்க'னான். இந்த ஜேம்ஸுக்குப் பணம்னா போதும். தங்கிட்டேன்.''

பிறகு, ''அப்புறம், உடனேயே வந்த அந்த இளைய ஆள் இருக்கானில்லே...'' என்று, உரையாடல் நின்ற இடத்துக்குத் திரும்பினார் மிஸஸ் ஜேம்ஸ். ''அவன் நிலைக்குலைஞ்சிருந்தான். அவன் கண்கள்... நல்லா கவனிச்சேன், அந்த சாம்பல் நிறக் கண்களை... அவை, மினுமினுத்துக் கொண்டிருந்தன. கிளர்ச்சியா யிருக்கான்'னு நான் நினைச்சேன். ஆனா அதுல தப்பு எதாவது இருக்கும்னு நான் நினைக்கவேயில்லேம்மா. அவன் உள்ளே போய்ட்டு, திரும்பி கோழி திருடியவன் போல மலங்க மலங்க வந்தபோதும்... எனக்கு எதுவும் தப்பாப் படலே.''

''எத்தனை நாழி அவன் வீட்டுல இருந்தான்?''

''ஓ, ரொம்ப நேரமெல்லாம் கிடையாது. என்ன... ஐந்து நிமிஷமிருக்கலாம்.''

''அவன் என்ன உசரம் இருந்திருப்பான்னு நினைக்கிறீங்க? ஆறடியை ஒட்டி?''

''அப்படி சொல்லலாம்.''

''மழுங்க சரைச்சிருந்தான்னு சொன்னீங்க, ம்?''

''ஆமாம், மிஸ். டூத் பிரஷ் மீசையெல்லாம் கிடையாது.''

''அவனுடைய முகவாயும்... நல்லா பளபளனு மினுமினுப்பா இருந்ததா?'' - உள்ளுக்குள்ளிருந்து வந்த ஒரு விசையால் இதை நான் கேட்டுவிட்டேன்.

திருமதி ஜேம்ஸ், பயப்பட்டுப் போய் என்னை முறைத்தார். ''இப்போ நீங்களே இதைக் கேட்டதாலே, நானே வாய் விட்டு சொல்றேன் மிஸ்... ஆமாம். உங்களுக்கு எப்படி மிஸ் இதெல்லாம் தெரியும்?''

''ஓர் ஈடுபாடு தான். தவிர, ஏறக்குறைய எல்லா கொலைகாரனுங்களுக்கும் பளபளக்கும் முகவாயிருக்கும்'' என்று ஈவிரக்கமற்று விவரித்தேன்!

அப்படியே நம்பி ஏற்றுக் கொண்டார் மிஸஸ். ''இப்ப தான் மிஸ் நான் நம்பறேன். இப்படியெல்லாம் நான் முன்னே பின்னே கேள்விப்பட்டது கூட கிடையாது.''

''அப்படியா? அப்படினா அவன் தலை என்ன மாதிரி இருந்ததுனு நீங்க கவனிச்சிருக்க மாட்டீங்கனு நினைக்கிறேன்.''

''அது சாதாரணமாதானிருந்தது மிஸ். போதும், போதும்! எவ்ளோ நேரம் நிப்பீங்க. உங்களுக்கு சாவிகளைக் கொண்டு வரட்டுமா?''

அவற்றைப் பெற்றுக் கொண்ட நான், மில் வீட்டுக்கான என் பாதையில் இறங்கினேன். படிப்படியாய் கட்டப்பட்டு எழுந்துள்ள என் திட்டங்கள் எல்லாம் இதுவரையில் சரியென்று நான் விளங்கிக் கொண்டேன். மிஸஸ் ஜேம்ஸ் விவரித்த ஆசாமிக்கும் நான் ரயிலடி 'டாக்டராய்' பார்த்த ஆசாமிக்குமான வேறுபாடுகள் முக்கிய மற்றவையாய் ஆயின. ஒரு கோட், ஒரு தாடி, ஒரு தங்க முலாம் பூசப்பட்ட மூக்குக் கண்ணாடி. இவை போதுமே, நிஜத்தை மறைத்து விட! 'டாக்டர்' நடுத்தர ஆள் போலவே தோன்றினான்... ஆனால், அவன் வீழ்ந்துக் கிடந்த உடலை நோக்கி குனிந்த விதம் அப்படி யில்லாமல் இளைய ஒருவன் செய்தது போல இருந்ததை என்னால் நினைவுபடுத்திக் கொள்ள முடிந்தது. அதில் ஓர் இளக்கம்... துரித வளைவு இருந்தது ஓர் இளைஞனின் எலும்பு இணைப்புகளைக் காட்டிக் கொடுக்க!

விபத்தில் பரிதாபமாய் போய் சேர்ந்தவன் (அந்துருண்டை ஆசாமி என எனக்குள் நான் பெயரிட்டுக் கொண்டேன்) மற்றும் அந்த வெளிநாட்டுப் பெண் என்று சொல்லப்படும் திருமதி டீ-காஸ்டினா ஆகிய இருவரும் மில் வீட்டில் சந்தித்துக் கொள்வதாய் ஏற்பாடு. இப்படித்தான் தொங்கிக் கொண்டிருக்கும் துண்டுகளை நான் சேர்த்துப் பார்த்தேன். 'கண்காணிக்கப்படுகிறோம்...' என்பதற்காகவோ அல்லது வேறு எதற்காகவோ பயந்து போயிருந்த அவர்கள் ரெண்டு பேருமே, இந்த வீட்டை ஒரே நேரத்தில் வந்து பார்க்கும்படியாய் தரகனிடமிருந்து சாமர்த்தியமாய் ஒப்புதல் சீட்டினை வாங்கிக் கொள்கிறார்கள். அப்போது தான் மில் வீட்டில் இடம்பெறும் அவர்களது சந்திப்பானது எதேச்சையாய் நடந்த ஒன்று போல அமையும்.

அந்த அந்துருண்டை ஆசாமி, 'டாக்டரை' அரசலும் புரசலுமாய் பார்த்து விட்டான் என்பதும் - எதிர்பார்த்தேயிராத இச்சந்திப்பு அந்த ஆசாமிக்குள் ஓர் எச்சரிக்கை மணியாய் அமைந்துவிட்டது என்பதும் - நான் மிக நிச்சயமாய் முடிவு செய்திருக்கும் மற்றொரு நிதர்சனம். பிறகு என்ன நடந்தது? 'டாக்டர்' அவனது மாறுவேடத்தைக் கலைத்திருக்க வேண்டும். கலைத்துவிட்டு மார்லோ வரை அந்தப் பெண்ணை பின்தொடர்ந்திருக்க வேண்டும். (அவள் மில் வீட்டில் இருப்பாள் என்பது அவனுக்கு எப்படி தெரிந்திருக்கும்? மடிந்த ஆசாமியின் சட்டைப் பையிலிருந்து அவன் ஒரு டாக்டராய் இயங்கும் போது 'எடுத்திருக்கக் கூடிய தரகனது சீட்டின் மூலம்) இப்படி அவன்

தாடியைக் கலைத்து எறிந்தது ஒரு வேளை அவசர அவசரமாயிருந்தால், முகவாயில், முழுக்கத் துடைக்கப்படாத 'ஸ்பிரிட் கம்', பளபள என்று தங்கியிருக்கும். அதனால் தான் அப்படி ஒரு கேள்வி, திருமதி ஜேம்ஸுக்கு.

இப்படிப்பட்ட சிந்தனையில் மூழ்கியபடியே, அக்காலத்து ஃபேஷனில் மிகத் தாழ்ந்த உயரம் கொண்டிருந்த வீட்டின் நிலைக்கதவினை நான் அடைந்திருந்தேன். சாவி போட்டு பூட்டினைத் திறந்து நான் உள்ளே போனேன். முன்னறையும் உத்திரம் தாழ்ந்த ஓர் அறையாகவும் கடும் இருட்டாகவும் இருக்க... அந்த இடமே, சிலந்தி வாடையிலும் வெளவால் அடைந்திருந்தால்இருக்கவல்ல அடர்த்தியான மூக்கடைக்கும் வாடையிலுமிருந்தது. என்னைக் கட்டுப் படுத்திக் கொள்ள எத்தனித்தும், இயலாது நடுங்கினேன். சில நாட்களுக்கு முன்னால் 'சிரித்த முகத்தோடு' இங்கு வந்திருந்த அந்தப் பெண்ணுக்கு, பாதகமாய் எதையோ குறிக்கும் ஒரு பயம், இந்த வீட்டில் நுழைந்த கணமே அவளது முதுகுத் தண்டில் பாயமலா இருந்திருக்கும்? நான் ஆச்சரியமானேன். நுழைந்தவுடனேயே அந்த 'சிரிப்பு' அவளது முகத்திலிருந்து வற்றிப் போய், விளக்க முடியாத ஒரு கிடுக்கிப் பிடி அவள் இதயத்தைப் பிசைந்திருக்காதா? அல்லது, பாழும் விதி அவளைத் தள்ளிவிட்டு சில நொடிகளில் ஜெயிக்கயிருப்பதை அறியாமலேயே அவள் அதே 'சிரித்த முகத்தோடு' மேலேறிப் போயிருப்பாளா? என் இதயத் துடிப்பு சற்று எகிறிப் போய் நின்று கொண்டது. உண்மையிலேயே - இந்த வீடு - இப்போது - காலியாகத் தானிருக்கின்றதா? அல்லது, பாழும் விதி, இப்போது எனக்காகவும் விழித்துக் கொண்டு காத்திருக்கின்றதா? 'சூழல்' என அடிக்கடி பயன்படுத்தப்படும் வார்த்தையின் அடி வரையினாலான அர்த்தத்தை நான் இப்போது விளங்கிக் கொண்டேன். இந்த வீட்டில் ஒரு 'சூழல்' இருக்கின்றது... கொடூரம் சூழ்ந்த சூழல் கெடுதல் நிறைந்த அபாயத்தோடு! தீமை கொண்ட பழி தீர்க்கும் வஞ்சத்தோடு!

# அத்தியாயம் - 7

என்னை அமுக்கிய கிலியை உதறி ஓரங்கட்டி விட்டு, விரைவாக நான் மாடிக்குப் போனேன். துக்கம் நடந்து முடிந்த அறையினைக் கண்டு கொள்வதில் எனக்கு ரொம்ப சிரமம் இருக்கவில்லை. உடல் கண்டெடுக்கப்பட்ட தினத்தன்று நல்ல மழை... ஆகவே, தரை விரிப்பு போடப்படாத தரை முழுவதும், எல்லா கோணங்களிலும், களி மண் பூட்ஸின் அடிச்சுவடுகள் அப்பிக் கிடந்தன. இதில், முந்தைய நாள் வந்திருந்த கொலைகாரன், அவனுடைய அடிச்சுவடு எதையாவது விட்டிருப்பானோ என வியந்து நின்றேன் நான்! அப்படியேதாவது இருந்திருந்தாலும், அதுபற்றி சொல்லப் பிரியப்படாது போலீஸ் மௌனமாகவே இருக்கும் என்பது நிஜமானாலும், அப்படி ஒரு தடயம் கிடைத்திருக்குமா என்பதில் எனக்கு இப்போது சிறு சந்தேகம் வந்தது. கொலை நடந்த அன்று சீதோஷ்ணம் வறட்சியாகவும் இனிமை யானதாகவும் தானிருந்தது.

கவனத்தை ஈர்க்கும் எதுவும் அந்த அறையில் இல்லை. அது ஏறக்குறைய ஒரு சதுர அறை. அகண்ட இரு ஜன்னல்கள். ஏதுமற்ற வெள்ளைச் சுவர்கள் மற்றும் வெறும் தரை. நான் கவனமாய் தேடினாலும், அங்கிருந்து ஒரு குண்டுமணி கூட கிடைக்காத நிலைமை தான் நிலவியது. துப்பறிய என்றே பிறந்துள்ள அந்த டிடெக்டிவ் இன்ஸ்பெக்டருக்கு, கவனிக்காமல் விடப்பட்ட எந்தவொரு தடயமும், பாவமும்... கிடைத்திருக்காது!

நான் என்னோடு ஒரு பென்சிலும் சிறு நோட்டுப் புத்தகமும் கொண்டு வந்திருந்தேன். குறிப்பெடுத்துக் கொள்ளும்படி அங்கு எதுவும் தென்படவில்லை; ஆனாலும், எனது தேடுதல் தாகத்தைக் கொஞ்சம் தணிக்க, அவ்வறையின் அமைப்பினை ஒரு கோட்டுச் சித்திரமாய் நான் பதிந்து கொண்டேன். பிறகு என் பென்சிலைப் பைக்குள் போட்டுக் கொள்ளும் இயக்கத்தில் நான் இறங்கிய போது, அது என் கையிலிருந்து நழுவி விழுந்து தரை போன அமைப்பில் உருண்டோடியது.

நிஜத்தில், இந்த மில் வீடு ஓர் அரதப்பழசு. அதன் தரைகள் மிகவும் சீரற்றுக் கிடந்தன. பென்சில், நிற்காமல், வேகம் கூடிக் கொண்டே, ஒரு ஜன்னலின் கீழ்ப்பகுதி சுவற்றில் போய் முட்டும் வரை உருண்டோடி நின்றது. ஒவ்வொரு ஜன்னலின் கீழ் முடிவிலும், உட்காருவதற்கு வசதியான ஒரு திட்டிருந்தது. அதன் கீழே, சுவற்றில், தரை வரை நீண்ட, மூடி போட்ட ஓர் அலமாரி. அலமாரிகள் இப்போது மூடியிருந்தன. ஆனால், அவை மட்டும் திறந்திருந்தால் என்னுடைய பென்சில் மளமளவென்று உருண்டு அதனுள்ளேயே போய் விழுந்திருக்கும் என்று, ஏனோ இப்போது சட்டென்று எனக்குத் தோன்றியது. அந்த அலமாரியின் தள்ளுக் கதவை நான் தள்ள... பென்சில் மிக சமர்த்தாக உள்ளே உருண்டு போய் தனக்கென ஓரிடத்தை உட்புறக் கோடியில் ஆக்கிரமித்துக் கொண்டது. அதை எடுத்தேன். எடுத்தபோது அறையில் ஒளி மிகக் குறைந்திருந்ததாலும் அந்த அலமாரியே கூட மிகவும் தாழ்ந்து அமைந்திருந்த அமைப்பினாலும் ஒருவர் உள்ளேயிருந்து எடுக்க வேண்டியதைப் பார்க்க முடியாது என்பதையும் குத்து மதிப்பாக ஸ்பரிசித்து உணர்ந்து தான் எடுக்க வேண்டும் என்பதையும் குறித்துக் கொண்டேன். உள்ளே சென்ற என் பென்சிலைத் தவிர அந்த அலமாரி காலியாகத்தானிருந்தது. ஆனால் எதிலும் முழுமையை எதிர்பார்க்கும் என் குணத்துக்கு, அடுத்த அலமாரியின் மீது சந்தேகம் வந்தது.

முதல் பார்வையில் அதுவும் காலியாக இருப்பதாகத்தான் பட்டது. ஆனால் கையை உள்ளே நுழைத்து, எதையும் விட்டு விடாது நான் துளாவிப் பார்க்க, உட்புற எல்லையில், சிறு உருளைப் போன்ற ஏதோ ஒன்றினை என் கை தீண்டுவதை நான் உணர்ந்தேன். அதனை என் கையில் வசப்படுத்தியதுமே அது என்ன என்பது எனக்குப் புரிந்துப் போயிற்று. ஒரு ரோல் கொடாக் போட்டோ சுருள். இங்கே இருக்கிற தய்யா, ஒரு துப்பு!

உடனேயே, தாமதமின்றி, இந்தச் சுருளில் உள்ள படங்கள் சர் ஆஸ்டஸ் பெட்லருக்குச் சொந்தமான மிகப்பழைய படங்களாகத் தானிருக்க வேண்டுமென்றும், உள்ளே உருண்டு ஒளிந்திருந்த இச்சுருள், இப்பகுதியினைக் காலி பண்ணும் போது கவனக்குறைவாக இங்கேயே விடப்பட்டிருக்கும் என்றும் நான் உணர்ந்தேன். ஆனால் முழுவதுமாக நான் இப்படி நினைக்கவில்லை என்பதையும் சொல்லி விடுகிறேன்.

போட்டோ சுருள் இருந்த சிறு உருளையை சுற்றி ஒட்டியிருந்த சிகப்புப் பட்டி மிகவும் புதிதான ஒன்றாயிருந்தது. இங்கு ஓரிரு நாட்களாய் கிடந்த மாதிரி தான் அதில் தூசு படிந்திருந்தது - அப்பட்டமாய் சொல்ல வேண்டுமென்றால், கொலையை ஒட்டிய காலத்திலிருந்து கிடந்தது போல! ரொம்ப நாட்களாய் சுருள் உள்ளேயே கிடந்திருந்தால் அதன் மீது தடிமனான தூசுப் போர்வையே படிந்திருக்கும்.

யார் இதை நழுவ விட்டிருப்பது? அந்தப் பெண்ணா? அந்த ஆணா? அந்தப் பெண்ணின் கைப்பையில் இருந்த அத்தனையும் சிதறாத நிலையில் இருந்த மாதிரி தான் எனக்கு ஞாபகம். ஒரு போராட்டத்தின் விளைவாய் பையின் வாய் திறந்து அதனால் இந்த போட்டோ சுருள் கவிழ்ந்து விழுந்து உருண்டிருந்தால், நிச்சயமாக பைக்குள்ளிருந்த சில்லறைகளுமல்லவா இங்கே சிந்தியிருக்க வேண்டும்? கிடையாது... அந்தப் பெண்ணல்ல, இந்தச் சுருளைத் தவற விட்டிருப்பது.

அப்போது திடுமென்றும் சந்தேகமாயும் நான் காற்றை உள்ளுக்கிழுத்தேன். அந்துருண்டை வாடை என்னை விடாமல் பிடித்துக் கொண்டு விட்டதா, என்ன?! போட்டோ சுருளும் அப்படித்தான் வாடையடித்தது என்று என்னால் சத்தியம் பண்ண முடியும். மூக்குக்குள்ளேயே அதைக் கொண்டு போய் வைத்து நுகர்ந்தேன். அதில், வழக்கமாய் அதற்கே உரிய சுருள் வாசனை மண்டிக்கிடந்தாலும், அதனையும் மீறி, நான் மிக வெறுக்கும் வாடையை என்னால் சுலபமாய் பிரித்து உணர முடிந்தது. விரைவாய் இதற்கான காரணத்தை அறிந்தேன். அலமாரித் தள்ளுக் கதவின் கரடு முரடான மரப்பகுதியில், துணியின் சில நூலிழைகள் மாட்டிக் கொண்டு இழுபட்டு அறுந்துத் தொங்கிக் கொண்டிருந்தன. அந்த நூல் பகுதிகளும் அடர்த்தியான அந்துருண்டை வாடையில் ஊறியிருந்தன. ஆக, இந்த போட்டோ சுருள், ரயிலடியில் மரணமடைந்த ஆசாமியின் மேல் கோட் பாக்கெட்டில் வைத்து, சமீபத்தில் எப்பொழுதோ எடுத்துச் செல்லப்பட்டுள்ளது. அவன் தான் இதை இங்கே தவற விட்டவனா? வாய்ப்பில்லை. அவனுடைய ஒவ்வொரு நடவடிக்கைகளுக்கும் கணக்குள்ளது.

இதைத் தவற விட்டிருப்பது அவன் அந்த 'டாக்டர்'. அந்தத் துண்டுச் சீட்டை எடுத்தபோது இந்தச் சுருளையும் அவன் எடுத்திருக்க வேண்டும். அந்தப் பெண்ணோடு போராடிய போது அவன் தான் இதனை இங்கே நழுவ விட்டிருக்கிறான்.

அடுத்த வழிக்கான க்ளூ எனக்கு கிடைத்து விட்டது. இந்த போட்டோ சுருளை விரிவாக்கி நிஜப்படங்களை வாங்குவேன்... அதன்மேல், மேற்கொண்டு நான் என்னென்ன செய்வது என்பது புலனாகும்.

மிக உற்சாகமாய் மில் வீட்டை விட்டுக் கிளம்பிய நான், திருமதி ஜேம்ஸிடம் சாவிகளைத் திருப்பித் தந்துவிட்டு, எத்தனை சீக்கிரம் முடியுமோ அத்தனை வேகமாக ரயிலடிக்கு வழி செய்து கொண்டு ஸ்டேஷனை அடைந்தேன். டவுனுக்குத் திரும்பிக் கொண்டிருக்கை யில் என் பொக்கிஷத் தாளை எடுத்து மறுபடியுமொரு முறை புத்தம் புதிதாய் ஆராய்ந்தேன். அதிலிருந்த எண்கள் சட்டென ஒரு புது அர்த்தத்தை அடைந்தன. ஒரு வேளை அவை ஒரு தேதியைக் குறித்தால்? 17 1 22...! ஜனவரி, 1922. ஓ... நிச்சயமாக இப்படியே தானிருந்தாக வேண்டும்! இப்படி ஆரம்பத்திலேயே கண்டுபிடிக்காமல் கோட்டை விட்டிருக்கும் எத்தனை பெரிய முட்டாள் நான்! இது தான் சரி எனும்பட்சத்தில், கில்மார்டன் மாளிகையின் அடிச்சுவட்டினை நான் உடனடியாக அடையாளம் கண்டே தீரவேண்டும். இன்று 14 ஆகையால்...! மூன்றே நாட்கள்! ரொம்ப ரொம்பக் கம்மி! எங்கே போய் தேடுவது என்ற இலக்கே இல்லாத நிலையில் இது நம்பிக்கையற்ற முயற்சி!

போட்டோ சுருளைக் கொண்டு போய் படமாக்கத் தருவதற்கு இன்று காலங்கடந்திருந்தது. கென்ஸிங்டனில் நான் தங்கியிருக்கும் வீட்டுக்கு இரவு சாப்பாட்டுக்கு முன் போய் சேர வேண்டும். நான் உருவாக்கியிருக்கும் முடிவுகள் அனைத்தும் சரிதானா என சோதித்துப் பார்த்துக் கொள்ள சுலபமான ஒரு வழியிருப்பதாய் எனக்குப்பட்டது. மரணமடைந்து விட்ட ஆசாமியின் இருப்பில் ஒரு காமிரா இருந்ததா என்று திரு ஃப்ளெம்மிங்கைக் கேட்டேன். இந்த கேஸில் அவர் தனிப்பட்ட ஈடுபாடு கொண்டிருப்பது எனக்குத் தெரியும்... இது சம்பந்தமான எல்லா விளக்கங்களும் அவருக்குத் தண்ணீர் பட்ட பாடாய் ஆகியிருந்தது.

எனக்கு ஆயாசமும் வெறுப்பும் உண்டாக்கும் வகையில் அப்படி ஏதும் அவன் இருப்பில் கிடையாது என்றார் அவர். எவ்விதமான குண்டு மணியையும் விட்டு விடாமல், எதுவும் துப்பு தந்து கேஸுக்கு வெளிச்சம் போடலாம் என்ற எதிர்பார்ப்பில், கறாராக தேடப்பட்டிருக் கின்றன. எவ்வகையான புகைப்பிடிக்கும் கருவியும் அவனிடம் இருந்திருக்கவில்லை என்ற பதிலில் அவர் ஸ்திரமாய் இருந்தார்.

*நான் போட்டிருந்த தியரியில் ஒரு பின்னடைவு. அவனிடம் காமிரா இல்லையென்றால் எதற்காக அவன் ஒரு சுருள் முழுக்க போட்டோ பிலிம்கள் அடங்கிய உருளையைச் சுமந்துக் கொண்டிருந்திருக்க வேண்டும்?*

*எனக்குப் புதையலாய் வந்துள்ள போட்டோ பிலிம்களைத் தெளிவானப் படங்களாக்க, மறுநாள் காலை வெகு சீக்கிரமாகவே கிளம்பிவிட்டேன். இவ்விஷயத்தில் நான் எத்தனை துடிதுடிப்பா யிருந்தேன் என்பதற்கு, இதைப் படங்களாக்க பக்கத்தில் எந்த லோக்கல் ஸ்டுடியோ மீதும் நம்பிக்கை வைத்து நான் போகாமல் நேராய் கொடாக் தலைமையிடத்துக்குப் போனதே ஒரு பெரும் அத்தாட்சி! சுருளைத் தந்துவிட்டு அதன் ஒவ்வொரு பிலிமின் படத்தையும் தயார் செய்ய வேண்டும் என்றேன். இப்படி சேர்ந்திருந்த பல சுருள்களோடு நான் ஒப்டைத்திருந்த சுருளையும் சேர்த்துக் கொள்வதற்காக அதை எடுத்தான், கடைக்காரன்.*

*என்னைப் பார்த்தான் அவன். ''தப்பா கொண்டு வந்துட்டீங்கனு நினைக்கிறேன்'' என்றான் புன்னகைத்தபடி.*

*''ஓ, நோ'' என்றேன் நான். ''நிச்சயமா அப்படி ஏதும் தப்பா பண்ணலேப்பா.''*

*''நீங்க என்கிட்டே தவறான சுருளைத் தந்திருக்கீங்க. இது படமெடுக்கப்படாத ஒரு சுருள், மிஸ்.''*

*அத்தனை மட்டு மரியாதையும் சிதைந்து போக தொங்கிய முகத்தோடு நான் வெளியேறினேன். எத்தனை முட்டாளாக ஒருத்தன் நடந்து கொள்ள முடியும் என்பதற்கு, இப்பொழுதும் எப்பொழுதும் நான் நினைத்துக் கொண்டேயிருக்கும்படியாய் அமைந்த கசையடியாய் ஆனது, இது!*

*நான் அப்படியே நடந்தபடியிருந்தேன். வழியில் ஒரு பெரிய கப்பல் அலுவலகத்தை கடந்தேன். அப்போது திடுமென்று நின்றேன். அலுவலகத்தின் நுழைவிலிருந்த விசாலமான மைதானத்தில் ஏதோ ஒரு கம்பெனி தயாரித்துள்ள அதன் அழகான படகின் மாடல் விளம்பரப் படுத்தப்பட்டிருந்தது. அது கெனில்வொர்த் மாளிகை என பெயரிடப் பட்டிருந்தது. ஒரு மிருக பலம் கொண்ட எண்ணம் என் மூளையைக் கீறி வெளியானது. இந்தக் கப்பல் அலுவலகக் கதவை அழுத்தமாய் தள்ளி உள்ளே போனேன். வரவேற்பாளன் வரை போன நான் தட்டுத்*

தடுமாறித் திக்கிப் பேசும் பாணியில் முணுமுணுத்தேன்: ''கில்மார்டன் மாளிகை?''

''17ஆம் தேதி. முதல் வகுப்பா, இல்லே ரெண்டாம் வகுப்பா?''

''எவ்ளோ?''

''முதல் வகுப்பு, எண்பத்தியேழு பவுண்டுகள்...''

மேலே அவனை நான் பேசவிடவில்லை. இப்படி என் அதிர்ஷ்டம் ஒத்துப்போனதை என்னால் அப்போது தாள முடியவில்லை. சொத்தாய் என் கையில் வந்து தங்கியிருக்கும் இதே தொகை! இந்த அத்தனையையும் வாரியெடுத்து, இந்த ஒரே கூடையில் போடப் போகிறேன்.

''முதல் வகுப்பு.''

இப்போது நான் என் சாகசத் தேடலுக்குள் என்னை முழுக்க ஒப்படைத்துத் தயாரானேன்.

# அத்தியாயம் - 8

*(சர் ஆஸ்டஸ் பெட்லர் எம்.பி. டைரியிலிருந்து எடுத்தவை)*

*எப்போதுமே நான் நிம்மதியாக இருக்க முடியாதது போலவே எல்லாம் நடப்பது, ஓர் அசாதாரண விஷயமாக உள்ளது. அமைதியான வாழ்க்கையை நேசிக்கும் ஒரு மனிதன், நான். க்ளப்புக்குப் போகப் பிடிக்கும்... சீட்டாட்டமும். விருந்து போல அருமையாய் சமைக்கப்பட்ட உணவு, நிறைய ஒயின். கோடைக்காலத்தில் இங்கிலாந்து எனக்குப் பிடிக்கும். குளிர்க்காலத்தில் ரிவேரா. அமளி துமளி நிறைந்து உணர்ச்சிப்பூர்வமாய் நடைபெறும் விஷயங்களில் பங்கு கொள்வதில், எனக்கு ஆசையே இருந்ததில்லை. இப்படிப்பட்ட வற்றையெல்லாம், குளிருக்கு அடக்கமாக மூட்டப்பட்ட கனப்புக்கு முன்னால் உட்கார்ந்துக் கொண்டு, எப்போதாவது செய்தித்தாளில் படிப்பதில் எனக்கு ஆட்சேபணை கிடையாது. ஆனால் அதுவும் அப்படி நான் செய்ய விரும்பினால் மட்டுமே. என் வாழ்க்கையில் எனக்குள்ள ஒரே குறிக்கோள் பரிபூரண வசதி. இதை அடைந்துவிட, தேவையான அளவு சிந்தனையையும் கணிசமான அளவு பணத்தையும் நான் அர்ப்பணித்திருக்கிறேன். ஆனால் இதில் நான் எப்போதுமே வென்றிருக்கிறேன் என்று சொல்லிவிட முடியாது. எனக்கு ஒன்றும் நடக்காமலே இருந்தாலும், என்னைச் சுற்றி ஏதாவது நிகழத்தான் செய்கின்றது... இதில், என் கட்டுப்பாடுகளையும் மீறி, பலமுறை, நான் உள்ளிழுக்கப்பட்டு, ஓர் அங்கமாக்கப்பட்டு விடுகிறேன். ஓர் அங்கமாய் எதிலும் இருப்பதை - நான் வெறுக்கிறேன்.*

*இப்படியெல்லாம் என் மூளை இப்போது சுழல்வதற்கு முழுமுதற் காரணம், இந்த பகெட் பயல், அழகிய இக்காலைப் பொழுதில், கையில் ஒரு தந்தியோடும், இறுதி ஊர்வலத்தில் இருப்பது போல ஓசையற்ற முகத்தோடும், என் படுக்கையறைக்குள் நுழைந்து நின்றதே ஆகும்.*

*பகெட், என் காரியதரிசி. என் கட்டளையை மரியாதையாய் நிறைவேற்றுவதை ஒரு பக்தி போல நிகழ்த்துபவன். வரிந்துக் கட்டிக் கொண்டு பணிகளை செய்பவன். கடுமையாய் உழைக்கும் பயல். இப்படி*

எல்லா வகையிலும் பிரமிக்க வைப்பவன். ஆனாலும் என்னை அதிகம் கடுப்பேற்றுவதில், இவனை விஞ்சி எனக்கு ஒரு வேறு ஒருவரைத் தெரியாது! இவனிடமிருந்து எப்படித் தப்பிப்பது என்பதில் என் மூளையைப் போட்டு நீண்ட நெடுநாட்களாய் நான் பிழிந்தெடுத்துக் கொண்டே யிருக்கிறேன்! இவனைப் போல காலையில் சூரியனுக்கு முன் எழுந்து, வேலைகளை ஏதோ பொழுதுபோக்காய் விளையாடுவது போல ஆசையாசையாய் செய்து, மேலும் தன் பெயரில் எவ்விதப் பொல்லாப்பும் இல்லாத ஒருத்தனை - அத்தனை சுலபமாக காரியதரிசி பதவியிலிருந்தும் தூக்கிவிட முடியாது. இந்தப் பயலைப் பற்றிய ஒரே ஒரு விநோதமான விஷயம். இவனுடைய மூஞ்சி. பழி வாங்க அந்தக் காலங்களில் அரண்மனைகளில் ஏற்பாடு செய்யப்படும் விஷம் வைப்பவனைப் போன்ற முகம், இவனுடையது.

கூடிய சீக்கிரத்தில் என்னை எவ்வித வேலையும் பண்ண இயலாதபடி இவன் முடக்கிப் போட்டாலும் ஆச்சரியப்படுவதற்கில்லை. எந்த வேலையாயிருந்தாலும், அதனை, பெரிசுபடுத்தாமல், மிகவும் லகுவாக, காற்று போலக் கையாண்டு முடிக்க வேண்டும் என்பதுதான், 'வேலை' என்பது பற்றிய எனது கருத்து: 'ஓர் அற்பமான விஷயம் போல கருதி எளிதாய் முடிக்க வேண்டும்'... எனலாம்! வாழ்க்கையில் எதையாவது இவன் எளிதாய் கருதியிருப்பானா என்பதே எனக்கு சந்தேகமாய் உள்ளது. இவன் எல்லாவற்றையும் 'பிரமாதமாய்' பார்க்கிறான்: ஸீரியஸாக! இது ஒன்று தான் இவனோடு இருப்பதையே ஒரு நரகமாக ஆக்கிப் போடுகின்றது.

போன வாரம், இவனை ஃப்ளாரன்ஸ் பகுதிக்கு மூட்டை கட்டி விடுவது என்ற பிரகாசமான ஒரு முடிவுக்குப் போனேன். ஃப்ளாரன்ஸ் பகுதி பற்றியும் அங்கு போக வேண்டும் என்று எத்தனை ஏங்குகிறான் என்பது பற்றியும் என்னிடம் இவன் பேசினான்.

''என்னருமை பகெட்'' என அழாத குறையாக அழைத்த நான், ''நீ நாளைக்கே கிளம்பலாமாப்பா!'' என்றேன். ''உனக்கு ஆகும் அத்தனை செலவும் - என்னுது!''

ஃப்ளாரன்ஸ் பகுதிக்குப் போவதற்கு ஜனவரி உகந்த காலமே கிடையாது... ஆனால் இவனுக்கு எல்லாமும் ஒன்றுதான். கக்கத்தில் ஒரு சுற்றுலா புத்தகத்தையும் இடுக்கிக் கொண்டு, கலையரங்கம் அது இது என்று தெருத்தெருவாக இவன் போகவுள்ளதை என்னால் கற்பனை செய்துக் கொள்ள முடிந்தது. நான் செலவழிக்கவுள்ள தொகைக்கு, ஒரே ஒரு வாரம் மட்டுமே சுதந்திரம் என்பது, ரொம்பக் கம்மிதான்!

*பகெட் இல்லாத அந்த வாரம், ஒரு மனோஹரமான வாரமாக அமைந்தது. என்னவெல்லாம் பண்ண வேண்டும் என நினைத்திருந்தேனோ அவையனைத்தையும் பண்ணினேன். எதெல்லாம் வேண்டாமென்று ஒதுக்கினேனோ அவற்றையெல்லாம் நினைக்கக் கூட இல்லை. எனக்கே எனக்காக! ஆனால், குளிர் இன்னும் அடங்காத காலை ஒன்பது மணிக்குக் கண் சிமிட்டியபடி நான் விழித்த போது, எனக்கும் இன்பத்தை அள்ளித் தரும் காலைப் பொழுதுக்கும் இடையே ஒரு தடைக்கல்லாக பகெட் வந்து நின்று விட்டதை என் மனம் உணர... ஒஹ்... தீர்ந்துப் போனது, அத்தனை சுதந்திரமும்.*

*''ஏம்பா!'' என அழைத்த நான் கேட்டேன்: ''இறுதி ஊர்வலம் முடிஞ்சுப் போயிடுச்சா... இல்லே இனிமே தான், காலையா?''*

*பகெட் முகத்தின் பாவனையைக் குறித்த என்னுடைய வறட்சியான இந்த நகைச்சுவையை, ரசித்தவனாக இவன் தெரியவில்லை. வெறுமனே முழித்தான். ''அப்படினா, உங்களுக்குத் தெரியுமா, சர் ஆஸ்டம்ஸ்?''*

*''எதைத் தெரியுமா?'' என குறுக்குக் கேள்வி கேட்டேன் நான். ''உன் முக லட்சணத்தை வெச்சு, யாரோ உன்னோட நெருக்கமான உறவுக்குக் காலையில இறுதிச் சடங்கோனு அப்படிக் கேட்டேன்.''*

*இந்தப் பரிகாசத்தை எத்தனை முடியுமோ அத்தனை தூரம் தள்ளி வைத்தான் பகெட். ''இதுபற்றி உங்களுக்குத் தெரிஞ்சிருக்காதுனு நினைச்சேன்'' - சொல்லிவிட்டு தந்தியைத் தட்டிக் காட்டினான். ''ஒன்பது மணிக்கெல்லாம் எழுந்து விடுவது உங்களுக்குப் பிடிக்காத விஷயம்னு எனக்குத் தெரியும்'' - ஒன்பது மணியை ஒரு நாளுடைய பகல் பொழுதின் நடுப்பகுதி என்று அழுத்தி விளக்குவதில் குறியாயிருந்தான் காரியதரிசி. ''ஆனா இந்தச் சூழல்ல - ''எனச் சொல்லிவிட்டு மறுபடியும் தந்தியைத் தட்டினான்.*

*''என்ன அந்தச் சூழல்?'' - கேட்டேன் நான்.*

*''மார்லோ போலீசிடமிருந்து உங்களுக்கு வந்திருக்கும் தந்தி இது. ஒரு பெண் உங்க வீட்டுல கொல்லப்பட்டிருக்கா.''*

*இது என்னை சத்தியமாய் துள்ளியெழ வைத்தது. ''என்னய்யா பூகம்பம் கிளப்பறே?'' என வியந்தேன் நான். ''என் வீட்டுல எதுக்கு? யார் அவளைக் கொன்னதாம்?''*

*''அவங்க சொல்ல மாட்டேங்கிறாங்க. நாம உடனே இங்கிலாந்துக்குப் போயிடலாம்னு நினைக்கிறேன், சர் ஆஸ்டஸ்.''*

*''அப்படியெல்லாம் நீ எதையும் நினைக்க வேண்டாம். எதுக்காக நாம போகணும்?''*

*''போலீஸ்...''*

*''ப்ச்... அந்தத் தந்தியைத் தட்டறதை நிறுத்து! எனக்கும் போலீசுக்கும் இதுல என்ன இருக்கு?''*

*''உங்க வீடு, அது.''*

*''அது...'' என்ற நான், ''என்னோட துர்பாக்கியமாதான் படுதே தவிர, என் தப்பா படலே'' எனக் குறிப்பிட்டேன்.*

*குழப்பமாய் தலையை மறுத்து அசைத்துக் கொண்டான் பகெட். ''இது தொகுதி மக்கள் கிட்டே எதிர்பாரா விளைவைக் கொண்டு வரும்...'' என துக்கமாய் முணுமுணுத்தான்.*

*அப்படி ஏன் ஆக வேண்டும் என எனக்கு எதுவும் பிடிபடவில்லை - எனினும், இதுபோன்ற சமாச்சாரங்களில் பகெட்டின் உள்ளுணர்வு எப்போதுமே சரியாயிருப்பதாய் நான் உணர்வதுண்டு. கேள்விப்படும் விஷயங்களை அப்படியே எடுத்துக் கொண்டு பார்க்கும் தொகுதி ஜனங்களுக்கு, எம்.பி. வீட்டில் ஒருத்தி வந்து கொலை செய்யப்பட்டு விட்டாள் என்ற சேதி தான் விஸ்வரூபமாய் தெரியுமே தவிர, இத்தனை நாட்களும் பொல்லாங்கு ஏதுமின்றி இருந்த எம்.பி. அல்ல!*

*''அவ ஒரு வெளிநாட்டுக்காரி வேற. இது இன்னும் விஷயத்தை சிக்கலாக்குது'' என குழம்பிக் கொண்டிருந்தான் பகெட்.*

*மறுபடியும் இவனே சரியென்று நான் நம்பினேன். நீங்கள் சேர்த்து வைத்த நற்பெயர் எல்லாவற்றுக்கும், உங்களது வீட்டுக்கு வந்திருந்த ஒரு பெண் கொல்லப்பட்டு விட்டாள் என்பது எப்படி சமாதி கட்டி விடுமோ, அந்தப் பெண் உள்நாடு அல்ல என்ற கூடுதல் தகவல், ஒரேயடியாய் தலை தூக்கவே முடியாமல் பண்ணிவிடும்.*

*அப்போது மற்றோர் எண்ணம் என்னை உசுப்பியது. ''கடவுளே...'' என்ற நான், ''இது கரோலினைக் கலங்கடித்து விடக்கூடாது'' என்றேன்.*

*கரோலின் தான் எனக்கு சமைத்துப் போட்டுக் கொண்டிருக்கும் பெண். இவளே, தோட்டக்காரன் ஜேம்ஸின் மனைவியும் ஆகிறாள். அவனுக்கு எப்படிப்பட்ட பொண்டாட்டியாக இவள் இருக்கிறாளோ தெரியாது... ஆனால், ஓர் அதியற்புத சமையக்காரி, இவள். இன்னொரு பக்கம் பார்த்தால், இந்த ஜேம்ஸ், அப்படியொன்றும் நல்ல தோட்டக்காரன் கிடையாது. இருந்தாலும் அவனுடைய சுமாரான வேலையைப் பொறுத்துக் கொண்டு அவர்களிருவரும் தங்க ஒரு சின்ன இடமும் விட்டு வைத்திருக்கிறேன் - கரோலினின் சமையல், கை நழுவிடக்கூடாது என்பதற்காக.*

*''இந்தச் சம்பவத்துக்குப் பிறகு அவ தொடர்ந்து அங்கே தங்குவானு எனக்குத் தோணலே'' என்றான் பகெட்.*

*நான் இங்கிலாந்துக்குத் திரும்பியாக வேண்டும் என்று தோன்றியது. நான் இப்படி செய்தே தீரவேண்டும் என்று படு தீவிரமாயிருந்தான் இந்த பகெட். மேலும் கரோலினை வேறு வழிக்குக் கொண்டு வரவேண்டும்.*

**மூன்று நாட்கள் கழித்து.**

*குளிர்காலத்தில் இங்கிலாந்திலிருந்து வெளியேறி விடலாம் என்ற நிலையிருந்தாலும் அப்படி செய்து விடாது இங்கேயே இருப்பவர்களை என்னால் தாங்கிக் கொள்ளவே முடிவதில்லை. வெறுப்பின் உச்சத்துக்கு ஒருத்தரை இட்டுச் சென்றுவிடும் சீதோஷ்ணம். இந்த எல்லாத் தொல்லையும் என்னை வெறுப்பேற்றுகின்றன. ச்சே. மில் வீடு எக்கச்சக்கமாய் பிரசித்தமாகி விட்டதால் இனி அதனை வாடகைக்கு விடுவது என்பது முடியவே முடியாத ஒரு காரியம் என்றனர் தரகர்கள். ஒரு வழியாய் கரோலின் சமாதானப்படுத்தப்பட்டாள். இரட்டைச் சம்பளம் என்ற வழியில். இதைக் கெனாஸிலிருந்து ஒரு தந்தி மூலமாக இவளுக்குத் தெரிவித்திருந்தாலே போதுமானதாயிருந்திருக்கும். சொல்லப் போனால், நான் தலைதலையாய் அடித்துக் கொண்டது மாதிரி, நாங்கள் திரும்பி இங்கு வந்து அள்ளிக் கட்டிக் கொண்டது ஏதுமில்லை. ஆனால், கேட்டானா பகெட்? நான் நாளைக்கே கிளம்பப் போகிறேன்.*

**ஒருநாள் கழித்து.**

*மிகவும் ஆச்சரியமான பல விஷயங்கள் நடந்தன. துவக்கமாய் சொல்ல... சர், ஆகஸ்டஸ் மில்ரே'வைச் சந்தித்தேன். இந்த அரசாங்கம் உருவாக்கி சமூகத்துக்குள் விட்டுள்ள ஒரு கிழ முட்டாள் கழுதைக்கான அற்புதமான உதாரணம்! ராஜதந்திர ரகசியத்தன்மை மிளிர, பலர் கூடியிருந்த க்ளப்பில் என்னை மட்டும் தனியாய் இழுத்துக் கொண்டு அமைதியாயிருந்த ஒரு மூலைக்கு தள்ளிப் போனார் அவர். அந்த இருட்டில் என்னோடு நிறைய பேசினார். தென் ஆப்பிரிக்கா பற்றி. அங்குள்ள தொழில் விருத்திகள் பற்றி. ஒரு ஸ்டிரைக் வரும் என்று பரவிக்கிடக்கும் புரளிகள் பற்றி. அந்த ஸ்டிரைக்கை உசுப்பி விட்டுக் கொண்டிருக்கும் ரகசியக் காரணங்கள் பற்றி. எத்தனை பொறுமையாக முடியுமோ அப்படிக் கேட்டேன். இறுதியாய் தன்னுடைய குரலை மிகவும் தாழ்த்தி முணுமுணுப்பாக்கிக் கொண்டு, சில ஆவணங்கள் இப்போது வெளிச்சத்துக்கு வந்துள்ளதாகவும் அவற்றைக் கொண்டு போய் உடனடியாய் தலைமை ஜெனரல் ஸ்மட்ஸ்-ன் கைகளில் வைத்துவிட வேண்டும் என்பதையும் விளக்கினார்.*

*''நீங்க சொல்றதுக்கு ரெண்டாவது கருத்து இருக்க முடியாது'' என்றேன், ஒரு கொட்டாவியை விடுவித்துக் கொண்டு.*

*''ஆனா அவற்றை நாம எப்படி அவர் வரை கொண்டு போவது? இதுல சமுதாயத்தில் நமக்கிருக்கும் நிலைமை நுண்மையானது மிகவும் தர்மசங்கடமானது.''*

*''எதனால?''*

*''நீங்க வகிக்கும் பதவியினால.''*

*''இதுல பதவியைக் கொண்டு வந்து ஏன் நுழைக்கணும்?'' என்றேன் நான், சாதாரணமாய். ''ரெண்டனா ஸ்டாம்ப் வாங்கி ஒட்டி அதைப் பக்கத்திலிருக்கும் தபால் பெட்டில கொண்டு போய் போட வேண்டியது தானே!''*

*இந்த ஆலோசனையால் சட்டெனஅதிர்ந்து விட்டவரைப் போல ஆனார் அவர். ''என்னருமை பெட்லர்! சாதா தபால்லியா!''*

*இந்த அரசாங்கம், அதனுடைய ரகசிய ஆவணங்களைக் கொண்டு போய் வேறிடம் சேர்ப்பதற்கு, எதற்காக ராஜ தூதுவர்களை மட்டுமே நியமித்து இந்த சின்ன வேலையை ஒரு திருவிழா போல ஆக்க வேண்டும் எனும் கேள்வி, என் முன் எப்போதும் நிற்கும் ஒரு முடிச்சவிழாத மர்மமாகும். ''அப்படி தபால்ல போட விருப்பமில்லேனா, உங்க உதவியாளர்கள் ஒருத்தன் கிட்டே கொடுத்தனுப்ப வேண்டியதுதானே... அவனுக்கும் புது இடம் ஒன்றுக்கு பிரயாணம் போய்ட்டு வந்த குஷியிருக்கும்.''*

*''முடியவே முடியாது'' - வலுவற்று தளர்ச்சியாய் தலையை மறுத்து அசைத்தார் அவர். ''அப்படி செய்ய முடியாததுக்குக் காரணமிருக்கு பெட்லர், காரணமிருக்கு.''*

*''என்னய்யா ரொம்ப தான் சோகம்...'' என்றபடி எழுந்த நான், ''எல்லாம் கேட்க ருசிகரமானதானிருக்கு. ஆனால் நான் கிளம்பியாகணும்...'' என நகர ஆரம்பித்தேன்.*

*''ஒரு நிமிஷம், அருமை பெட்லர், ஒரே ஒரு நிமிஷம். கெஞ்சிக் கேட்டுக்கிறேன். என்கிட்டே இப்போ சொல்லுங்க - அது ரகசியமா இருக்கும். நீங்க துரித காலத்துல தென் ஆப்பிரிக்க நாட்டுக்கு ஒரு பயணம் மேற்கொள்ள திட்டமிட்டிருப்பது உண்மைதானே? உங்களுக்கு அங்குள்ள ருடேஸியா பகுதி மேல தீரா மோகமிருக்கு என்பது எனக்குத் தெரியும். ருடேஸியா நமது ஐக்கிய நாடுகளுடன் ஒரு நாடா இணையுமா எனும் கேள்வியின் மீது உங்களுக்கு தனிப்பட்ட வலுவான ஈடுபாடு இருக்கு.''*

*''ம்... இன்னும் ஒரு மாச காலத்துல அங்கே ஒரு பிராயணம் போய்ட்டு வரலாம்னு எண்ணமிருக்கு.''*

*''அதை ஏன் உங்களால் சீக்கிரமாவே பண்ண முடியாது? இந்த மாசமே? ஏன், இந்த வாரமே?''*

*''என்னால அது முடியும்'' என்றேன் நான், அவரை இப்போது புது ஈடுபாட்டோடு பார்த்தபடி. ''ஆனா அப்படி அவசர அவசரமா பண்ணனுமானு எனக்கே தெரியலே.''*

*''அதனால, அரசாங்கத்துக்கு ஒரு மாபெரும் உபகாரம் செய்தவரா ஆவீங்க - மிகப்பெரிய உபகாரம் பண்ணினவரா!''*

*''என்ன... என்னை போஸ்ட்மேனா ஆக்கறீங்களா?''*

*''ஓஓஓ...! மிகச்சரியா! நீங்க போவதால, ஆஹ்... எல்லாமே ரொம்ப கௌரவமா முடியும்.''*

*நான், ''சரி'' என்றேன், மெதுவாய். ''நான் பரபரனு உடனடியா பண்ண விரும்பும் ஒண்ணே ஒண்ணு... முதல்ல இந்த இங்கிலாந்தை விட்டு எத்தனை சீக்கிரம் முடியுமோ அத்தனை சீக்கிரமா வெளியேறிவிடுவது - என்ன குளிர்ப்பா இது! அதனால, உங்க கோரிக்கையைத் திருப்தி செய்யறதுல எனக்கு ஒரு சங்கடமும் இல்லே.''*

*''தென் ஆப்பிரிக்காவில சீதோஷ்ணம் உங்களுக்கு அத்தனை குதூகலமானதாயிருக்கும் - கொண்டாட்டமாயிருக்கும்.''*

*''ஹலோ... இந்த சீதோஷ்ணம் பற்றியெல்லாம் எனக்கு வேண்டிய அளவு தெரியும். சமீபத்துல கூட அங்கே போயிருந்தேன்.''*

*''நான் உண்மையிலேயே உங்களுக்கு ரொம்ப கடமைப்பட்டிருக்கேன், பெட்லர். உடனடியா அந்த பாக்கெட்டை ஒரு நம்பகமான ஆள் மூலமாக உங்களுக்கு நான் அனுப்பி வைக்கிறேன். தலைமை ஜெனரல் ஸ்மட்ஸின் கரங்களில் நேரடியாய் தரப்பட வேண்டியவை அவை - நல்லா புரியுதா? கில்மார்டன் மாளிகை சனிக்கிழமை கிளம்புது. ரொம்ப நல்ல பயணியர் கப்பல்.''*

*இருவரும் விடை பெற்று பிரியும் வரை சற்று தூரம் அவரோடு சேர்ந்து நடந்தேன் நான். அன்போடு கைகளைப் பிடித்துக் குலுக்கிய அவர் வாஞ்சையாய் மீண்டும் நன்றி தெரிவித்துக் கொண்டார். விசித்திரமான வழிகளைத் தேவையில்லாமல் கடைபிடித்து இந்த பகெட்டைப் போலவே இத்தனூண்டு வேலைகளையும் மிகப் பெரிசாக்கும் அரசாங்கத்தை எண்ணி வியந்தபடி வீடு திரும்பினேன்.*

*தொடர்ந்து வந்த சாயங்காலப் பொழுதில், தனிப்பட்ட முறையில் என்னைப் பார்ப்பதற்காக ஒரு ஜெண்டில்மேன் வந்துக் காத்திருப்பதாகவும் ஆனால் அவன் தனது பெயரைத் தெரிவிக்க மறுப்பதாகவும் என்னுடைய*

*பட்லர் வந்து என்னிடம் சொன்னான். என் மேல் இந்த இன்சூரன்ஸ் பயலுகளுக்கு எப்போதுமே தாளாத அவா உண்டு ஆகையால் வந்திருப்பவனைப் பார்க்க முடியாது என்று சொல்லி விட்டேன் நான். மிஸ்டர் பகெட், இந்த ஒரு சமயத்தில் எனக்கு நிஜ உபகாரமாக இருக்கலாம் என்றாலும், துரதிருஷ்டவசமாக, அதிகபட்ச பித்த மயக்கத்தில் விழுந்துக் கிடந்தான். பகெட் போன்ற எஜமானனுக்கு மிக உண்மையான கடும் உழைப்பாளிகள், வயிற்றை சரிவர பாதுகாத்துக் கொள்ளாததாலேயே பித்தம் சம்பந்தப்பட்ட நோய்களில் விழுந்து விடுகிறார்கள்.*

*போன பட்லர் திரும்பினான். ''சர் ஆஸ்டஸ்...'' என்று மரியாதையாய் சல்யூட் வைத்தான். ''மிஸ்டர் மில்ரே என்பவரிடமிருந்து வருவதாக உங்களிடம் தெரிவிக்க சொல்கிறான்.''*

*இது, விஷயத்தின் மீது எனக்கிருந்த அணுகுமுறையை முழுக்கவும் மாற்றிப் போட்டது. ஓரிரு நிமிடங்களில், என்னைப் பார்க்க வந்திருந்த பார்வையாளனை நான் எனது லைப்ரரியில் எதிர் கொண்டிருந்தேன். அநியாயமாய் வளர்ந்து கொழித்திருந்தான் அவன்; முகம் ஆழமாய் கன்றி, முறுகலாய்ப் பண்பட்டுக் கிடந்தது. கண்ணின் ஓரத்திலிருந்து முகவாய் வரை குறுக்காய் ஒரு வெட்டுத் தழும்பு இறங்கியது. ரகசியம் பொதிந்து இறுக்கமானவனாயிருந்தாலும், ஆணழகாய் இருந்திருக்க வேண்டிய அவனுடைய முகத்தை இத்தழும்பு அசிங்கப்படுத்தியிருந்தது.*

*''ம்?'' என்றேன் நான். ''என்ன விஷயம்?''*

*''மிஸ்டர் மில்ரே உங்களைப் பார்க்கும்படி அனுப்பியிருக்கிறார், சர் ஆஸ்டஸ். உங்க செகரெட்டரி எனும் நிலையில், உங்களுடைய தென் ஆப்பிரிக்கா பிரயாணத்தில் நான் கூட வரவேண்டியுள்ளது.''*

*''ஒஹ்... மேன்'' என்ற நான், ''எனக்கு ஏற்கனவே ஒரு காரியதரிசி இருக்கான்'' என்றேன். ''அதேபோதும்! இன்னொண்ணு எனக்கு வேணாம்.''*

*''உங்களுக்கு ஒரு செகரட்டரி இருக்கணும்னு தெரியும், சர் ஆஸ்டஸ். அந்தக் காரியதரிசி இப்ப எங்கே?''*

*''பித்த மயக்கத்துல தலைதூக்க முடியாம விழுந்துக் கிடக்கான்'' - விளக்கினேன் நான்.*

*''அது வெறும் பித்த மயக்கம் தான்னு நீங்க நிச்சயமா இருக்கீங்களா?''*

*''ஆமாம், அதுதான். பிறகு? அடிக்கடி அவனுக்கு வரும்.''*

*என் பார்வையாளன் புன்னகைத்தான். ''அது பித்த மயக்கமாக இருக்கலாம். இல்லாமலும் இருக்கலாம். என்னனு காலம் காட்டும். ஆனா ஒரு விஷயம் சொல்றேன், சர் ஆஸ்டஸ். உங்க செகரட்டரியை இந்தப்*

*பிரயாணத்துல உங்கிட்டேயிருந்து விலக்கி வைக்க முயற்சிகள் நடந்தா... அதுக்காக மிஸ்டர் மில்ரே ஆச்சரியப்பட மாட்டார். ஆங்... ஆங்... இதுக்காக உங்களைப் பற்றி நீங்க பயப்படத் தேவையில்லை'' - கணநேர எச்சரிக்கை என் முகத்தில் மின்னியிருக்க வேண்டும் என எண்ணுகிறேன் - ''உங்களுக்கு எவ்வித பயமுறுத்தலும் கிடையாது. உங்க செகரட்டரியை வழியிலிருந்து ஒதுக்கி நிறுத்திட்டா அதுவே எதேஷ்டம். உங்களை அணுகுவது மிக சுலபமாகிப் போகும். ஓகே? எப்படியோ... மிஸ்டர் மில்ரே, நான் உங்களோடு வருவதை விரும்பறார். தேவையான அத்தனை செலவுகளும்... கவலையே வேண்டாம்... எங்களது. ஆனால் பாஸ்போர்ட் விஷயத்தை மட்டும் நீங்க தான் கவனிச்சாகணும். இந்த விஷயத்துல ரெண்டாவது செகரட்டரியுடைய உதவிகள் தேவை என்று நீங்க முடிவு செய்திருப்பது போல இருக்கணும்.''*

*எடுத்துக் கொண்ட விஷயத்தில் முடிவாயிருக்கும் இளைஞனாய் தெரிந்தான் அவன். இருவரும் ஒருவர் மாற்றி ஒருவர் முறைத்துக் கொண்டிருந்தாலும், என் விழிகளைத் தாழ்த்தி இறக்கியவன் அவனே!*

*''ம்... சரி'' என்றேன் நான், சற்று சுரத்தற்று.*

*''நான் உங்க கூட வருவது பற்றி எதையுமே நீங்க யாரிடமும் சொல்லக் கூடாது.''*

*''ம்... சரி'' - மறுபடியும் சொன்னேன் நான்.*

*இப்படி ஒருத்தனை இவ்விஷயத்தில் கூட வைத்துக் கொள்வதும் நல்லதே என்றாலும், எனக்குள் இருந்த உள்ளுணர்வு, நான் உள்ளே உள்ளே அமுக்கி இழுத்துச் செல்லப்படுவதாய் உணர்த்தியது. மனம் முழுவதும் நிம்மதியை அனுபவித்துத் திளைத்துள்ள போது, இப்படி!*

*கிளம்புவதற்காகத் திரும்பிய பார்வையாளனை நான் நிறுத்தினேன். வஞ்சப் புகழ்ச்சியாய், ''என்னுடைய புது செகரட்டரியுடைய பேரைத் தெரிஞ்சுக்கிட்டா வசதியா இருக்கும்'' என்றேன்.*

*சில கணங்கள் நின்றான். ''ஹார்ரி ரேபர்ன், அழகா பொருந்தும் பேரா படுது'' என்றான்.*

*இது, கொழுப்பெடுத்த விதமாய் விடையைத் தருவது!*

*''ம்... சரி'', என்றேன் நான், மூன்றாவது முறையாக!*

## அத்தியாயம் - 9

**(ஆனே'யின் பதிவு தொடர்கின்றது)**

*கடலில் பிரயாணம் பண்ணவே முடியாத 'தலைசுற்றல் வியாதி', ஒரு சாகச ஹீரோயினுக்கு இருப்பது மாபெரும் துர்லபம். புத்தகங்களில் கப்பல் எத்தனை தள்ளாடி குலுங்குகின்றதோ அதை அத்தனை விரும்பிக் கொண்டாட்டம் கொள்கிறாள் கதாநாயகி. அலைகளின் போக்குக்கு அல்லாடும் படகினால் அநேகமாக எல்லோரும் திணறிப் போக, இவள் மட்டும் உச்சியில் ஏறி ஆடாது தைரியமாய் உலா வருவாள். புயல் நேரங்களில் கண்டிப்பாய் அகமகிழ்வாள். ஆனால், ஒரு கடுமையான முதல் குலுக்கலைக் கில்மார்டன் தந்தபோது, அப்படியே வெளிறிப் போய் கீழே குனிந்து விட்டேன் என்பதை மிகவும் வருத்தத்துடன் தெரிவித்துக் கொள்கிறேன். பரிதாபப்பட்ட ஒரு கடல் சிப்பந்தி என்னைத் தாங்கிக் கொண்டாள். வறுத்த ரொட்டியும் சுக்குத் துண்டும் உதவும் என ஆலோசித்தாள்.*

*என் அறைக்குள்ளேயே மூன்று நாட்களுக்கு முக்கலும் முனகலுமாய்க் கிடந்தேன் நான். அந்தக் குமட்டல் பிரளயத்தில் நான் தேடி வந்ததையே தூர எறிந்திருந்தேன். மர்மங்களைத் தீர்க்கத் துடிக்கும் ஈடுபாடெல்லாம் வற்றி வறண்டுப் போயின. கப்பல் அலுவலகத் திலிருந்து மார்பெரும் வெற்றிக் களிப்போடு தங்கியிருந்த கென்ஸிங்டன் சதுக்கத்துக்கு துள்ளியோடி வந்த ஆனே அல்ல இப்போது இருப்பது. நான் இப்போது முழுக்கவும் வேறு.*

*கென்ஸிங்டன் வீட்டில், வரவேற்பறைக்குள் திடுமென்று நான் நுழைந்ததை நினைக்கும் போது இப்போது எனக்கு சிரிப்பு வந்தது. திருமதி ஃப்ளெம்மிங் மட்டும் தனிமையிலிருந்தார். நான் நுழையும் போது அவர் தலையைத் திருப்பினார். ''ஓ, இது நீ தானா, என் ஆனே! உன்கிட்டே கலந்துப் பேச வேண்டிய ஒண்ணு இருக்கு.''*

*எனது பொறுமையற்ற நிலைமையைக் காட்டிக் கொள்ளாமல், ''ம்?'' என விஷயத்தைக் கேட்டேன் நான்.*

''இந்த எமரி என்னை விட்டுக் கிளம்பறா.'' எமரி, இந்த வீடு முழுக்க மேற்பார்வையிடும் பணியாள். ''நீயும் வேலை தேடுவதில் இதுவரை எந்த வெற்றியும் அடையாததால், இனிமே நீ அந்த இடத்துல இருக்கலாமேனு தோணிச்சு நீ இனி முழுக்கவும் எங்களோடயே இருந்துட்டா எத்தனை நல்லாயிருக்கும்?''

நான் திணறிப் போனேன். அவருக்கு நான் தேவையில்லை. எனக்குத் தெரியும். இருந்தாலும் கிருத்தவனுக்குத் தேவையாய் போதிக்கப்பட்டுள்ள தயாள குணம் தான் அவரை இப்படி முன்மொழியச் செய்துள்ளது. அவரை ரகசியமாய் விமர்சித்தமைக்காக சுய பச்சாதாபம் கொண்டேன். அப்படியே அறைக்குக் குறுக்காய் அவரை நோக்கி விரைந்தோடிய நான் அவரது கழுத்தில் கர வளையமிட்டுக் கொண்டு, ''நீங்கள் அற்புதம்'' என்றேன். ''என் டியர், டியர், டியர்! இத்தனைக்கும் மிக்க நன்றிகள். ஆனா, நான், சனிக்கிழமை, தென் ஆப்பிரிக்காவுக்குக் கிளம்பறேன்.''

எதிர்பாராது நான் ஓடிப்போய் விழுந்தது அவர் கண்களை மலங்க மலங்கத் திறக்கச் செய்திருந்தது. இப்படி திடுதிப்பென்று அன்பை விளக்கும் விதமெல்லாம் அவருக்குப் பழக்கமில்லை போலும். என் வார்த்தைகள் வேறு அவரை மேலும் முழிக்கச் செய்தன.

''தென் ஆப்பிரிக்காவுக்கு? அருமை ஜானே. அப்படிப்பட்ட விஷயத்தையெல்லாம் நாம ஜாக்கிரதையா யோசிக்கணும்மா.''

இதுக்கு மேல் வெட்டியாய் பேச்சு வேண்டாம் என ஆனேன். பிரயாணத்துக்கான டிக்கெட்டை நான் ஏற்கனவே எடுத்தாகிவிட்டது என்பதை விளக்கினேன். அங்கு போய் தரையிறங்கியதும் ஒரு சிகையலங்கார நிலையத்தில் பணியினை ஒப்புக் கொள்ள முடிவாகியுள்ளது என்பதையும் முன் வைத்தேன். இதை மட்டும் தான் அந்தச் சடுதியில் என்னால் நினைக்க முடிந்தது. தென் ஆப்பிரிக்காவில் சிகையலங்கார அழகு நிலையங்களில் பணியாற்றப் பெண்களுக்கு ஏகப்பட்ட கிராக்கி உள்ளது. இப்படி நான் சொன்னேன்! என் நல்லவைகளை நானாக கவனித்துக் கொள்ளும் பக்குவம் எனக்குள்ளது என்று அவருக்கு நம்பிக்கை தந்தேன். இறுதியில், அவர் கையிலிருந்து எப்படியோ நான் உதறப்பட்டு விட்டேன் என்பதால் நீண்டப் பெருமூச்சு ஒன்றினை வெளியிட்டபடி, இத்திட்டத்தை, மேற்கொண்டு விசாரணைகள் இல்லாமல் ஏற்றுக் கொண்டார் அவர். கிளம்பும் போது ஓர் உறையை என் கைக்குள் வைத்தார். அதற்குள் புத்தம் புதியதாய்

மொறுமொறுவென்றிருந்த ஐந்து, ஐந்து பவுண்ட் நோட்டுகளைப் பார்த்தேன். கூடவே: 'இதை நீ மறுக்காமல் என் அன்பளிப்பாய் ஏற்றுக் கொள்வாய் என நம்புகிறேன்.' உள்ளத்தில் அவர் மிகவும் நல்ல கனிவான பெண் தான். அவருடனே தொடர்ந்து நான் இருந்திருப்ப தென்பது நினைத்துப் பார்க்க முடியாத ஒன்றாயிருந்தாலும் - இதோ, இதுதான், அவருடைய அப்பழுக்கற்ற குணம்!

ஆகவே நான் இப்போது இங்கு! என் சாகசங்களைத் தொடர்ந்தபடி வெறும் இருபத்தைந்து பவுண்டுகளை மட்டும் பையில் வைத்துக் கொண்டு உலகை எதிர்நோக்கி நிற்கிறேன்!

அது பிரயாணத்தின் நான்காவது நாள். கடல் சிப்பந்தி எனக்கு ஒதுக்கப்பட்டிருந்த அறைக்குள் வந்தாள். இப்படி ஒண்டிக் கொண்டுக் கிடக்கக் கூடாது என கெஞ்சும் விதத்தில் விளக்கிய அவள் நான் படுக்கையை விட்டு எழுந்து வெளிய வந்தே ஆகவேண்டும் என்றாள். சீக்கிரத்திலேயே உயிரை விட்டு விட வேண்டும் எனும் அளவுக்கான முடிவில் கிடந்த நான், படுத்திருப்பதால் தேவலை என தோன்ற வைக்கும் இப்புகலிடத்திலிருந்து தலையைத் தூக்க ஸ்திரமாய் மறுத்து விட்டேன். ஒரு நிலப்பகுதி நெருங்கிக் கொண்டிருக்கிறது எனச் சொல்லி எனக்கு ஆசை காட்டினாள் அவள். நெஞ்சுக் கூட்டுக்குள் நம்பிக்கைத் துளிர்த்தது. ஓ... நான் படகிலிருந்து இறங்கிவிட முடியும்... கரைக்குப் போகலாம். ஆஹா! என்ன விலை கொடுத்தாவது கரையிறங்கி விட வேண்டும்!

தலைச் சுற்றலுக்கு பயந்து காது, கழுத்து, முகம், உடம்பு என எல்லாவற்றையும் கனமான கம்பளிகள் கொண்டு சுற்றிப் படுத்தேயிருந்ததால், என் பாதங்கள், ஒரு கோழிக்குஞ்சின் கால்கள் போல நிற்கக் கூட முடியாமல் சத்தற்றுப் போயிருந்தன. தடுமாறி எழுந்து ஒரு ஜட மூட்டையாய் அருகிலிருந்த நாற்காலியில் என்னை உடனே போட்டேன். கப்பல் பிராணிகளுக்கு உணவு உடை போன்றவற்றைக் கவனித்துக் கொள்ளும் செந்நிற வாலிபன் (கண்காணிப்பாளன்), இன்னும் விடலைத் தோற்றம் மாறாத வழுவழுவென்ற முகத்தோடு, என்னை நாடி வந்து அருகிலேயே அமர்ந்தான்.

''ஹல்லோ! என்ன... எங்கேயாவது ஓடிடலாமானு தோணுதா... ஆங்?!'' என்றான்.

''ஆமாம்'' என்று அவனை வெறுத்தபடி பதில் சொன்னேன். உடம்பை மட்டுமல்லாது மனத்தையும் சேர்த்துக் குமட்டிப் போடும் இந்தக் கடல் பிரயாண வியாதி என்னை எல்லாவற்றையும் வெறுக்க வைத்தது.

''பார்த்துக்கிட்டே இருங்க... நாமளா அப்படி திண்டாடி மண்டை கலங்கிப் போனதுனு நாளைக்கு நீங்களே சிரிக்கப் போறீங்க! ரெண்டு நாளா கடல்ல தீவிரமான தரைக்காற்று. அதான் அத்தனைக் கொந்தளிப்பு ஆட்டம். ஆனா, அற்புதமான சீதோஷ்ணம் நமக்காக இனி காத்திருக்கு. கடற்கரையில் இறங்கினதும் முதல் வேலையா உங்களை ரங்கராட்டினம் ஏத்தப் போறேன்... ஆங்!''

இதற்கு நான் மறுபதில் தரவில்லை.

''இப்படியே வாழ்க்கைப் போயிடுமோனு பயப்படறீங்களா? ஆனா உங்க நிலைமையை விட படு மோசமா தள்ளாடினவங்களை யெல்லாம் நான் பார்த்திருக்கேன். ரெண்டு நாள் போகும்... பிறகு அவங்க தான் கப்பலின் உயிர்ப்பும் துடிப்புமா உலாவுவாங்க. நீங்களும் அப்படிதான், பாருங்களேன்.''

அப்பட்டமாய் அவன் புளுகுகிறான் என்று பட்டென்று சொல்லி அவனோடு மோதிப்பார்க்க துடித்தாலும், அப்போது அந்த நிலையில் நானில்லை. ஆகவே, அப்படி ஒரு பார்வையைப் பார்த்து அந்தப் பையனுக்கு உணர்த்தி விடுதில் இறங்கினேன். துள்ளல் குறையாமல் மேலும் சற்று நேரம் வம்படித்த அவன் என்னிடமிருந்து எவ்வித பதில்களும் கிடைக்காததால் பிறகு பரிதாபமாய் எழுந்துப் போனான். படகில் மக்கள் அப்படி போனார்கள்... மறுபடியும் இப்படி போனார்கள். சுறுசுறுப்பாயிருந்த ஜோடிகள் உடற்பயிற்சி செய்தார்கள். குதித்தாடின குழந்தைகள். சிரித்துச் சிரித்துக் கும்மாளமிட்டனர், இளையவர்கள். என்னைப் போல கிறுகிறுத்துப் போயிருந்த ஒரு சிலர், தத்தம் படுக்கைகளில் மூழ்கிக் கிடந்தனர்.

தேவையான அளவு வெதுவெதுப்போடு, அதிக குளிரில்லாமல் காற்று மென்மையாயிருந்தது. சூரியன் பளீரென்று கொண்டாடினான். என்னையும் அறியாமல் நான் சிறு உற்சாகத்தினை உணர்ந்தேன். அப்படியே மக்களைக் கவனிப்பதில் இறங்கினேன். குறிப்பாய் ஒரு பெண்மணி என்னைக் கவர்ந்தாள். முப்பதை ஒட்டிய வயது. மத்திம உயரம். செம வெள்ளை. பருவிழுந்த முகத்தில் நீலநிற விழிகள். அவரது உடை வேலைப்பாடுகள் அற்று சுத்தமாயிருந்தாலும், அதில்

தெறித்த அந்த விளக்க முடியாத 'நறுக்குகள்', பாரீஸின் குணாதிசயத் தைச் சொல்லின. மேலும் இணக்கமும் ரம்மியமும் வெளிப்பட தன்னைத் தானே வசப்படுத்தி ஆளும் மெருகிலிருந்த அவர், இந்த சிறு கப்பலின் சொந்தக்காரி போல வசீகர கம்பீரத்தோடு தெரிந்தார்!

அவருடைய கட்டளைகளுக்குப் பணிந்து கப்பல் சிப்பாய்கள் இங்குமங்குமாய் ஓடிக் கொண்டிருந்தனர். ஏகமாய் குஷன் பொதிக்கப்பட்டிருந்த ஓர் உயரமான மற்றும் விசாலமான இருக்கை, அவருக்கென்று ஸ்பெஷலாய் இருந்தது. அதில், தான் எந்தப் பகுதியில் அமர்வது என்பதில் மூன்று முறை மனதினை மாற்றிக் கொண்டார் அவர். அப்படிச் செய்த ஒவ்வொரு முறையும் ஈர்க்கும்படியாகவும் புதுமலர் போன்ற வசீகரத்துடனும் அவர் நடந்து கொண்டார். தனக்கு என்ன வேண்டும் என்பதை அறிந்து அதனைத் தவற விடாமல் அடைந்து, அப்படிச் செய்யும் போது ஒருவர் மனத்தினையும் புண்படுத்தி விடாமல் நடந்துக் கொள்ளும் மிகச் சொற்பமான ஓரிரு மானிடர்களில் ஒருவராய்த் திகழ்ந்தார் அவர். வந்திருக்கும் 'கிறுகிறு' மட்டும் எனக்கு குணமாகி விட்டால், அவருடன் உடனடியாய் போய் ஆசையாய் பேசி விடுவதை, என்னைச் சந்தோஷப்படுத்தும் ஒரு முக்கிய நிகழ்வாய் நான் கருதுவேன்.

கடற்கரை பகுதியை மதியப் பொழுதில் வந்தடைந்தோம். அப்பகுதியின் பெயர் மதீரா. அப்போதும், நடந்தாலே கிறுகிறுத்துத் தள்ளுவது போன்ற நினைப்பிலேயே ஒரு ஜடமாய் நான் கிடந்தாலும், ஓவியங்களில் வரும் அலங்கார வியாபாரிகளைப் போல, கப்பலுக்குள் நிஜத்தில் வந்து, தங்களுடைய விற்பனை சாமான்களைக் கடை விரித்துப் போட்ட வியாபாரிகளை நான் மிக ரசித்தேன். அதில் பூக்களும் விற்கப்பட்டன. ஒரு வயலெட் நிறப் பூங்கொத்தில் என் மூக்கு முழுவதையும் அப்படியே புதைத்து அது ஊட்டிய இனிப்பான நறுமணத்தால் என்னுள் விறுவிறுவென கூடிய முன்னேற்றத்தைத் தனித்துப் பிரித்து உணர்ந்தேன். ஏதோ கடல் பிரயாணமே ஒரு முடிவுக்கு வந்து விட்டதைப் போல சராசரியாகி விட்டதாய் பட்டது. பிஞ்சுக் கோழிகளைப் போட்டு அறுசுவையாய் செய்யப்பட்டுள்ள கோழிக் குழம்பு பற்றி எனது பணிப்பெண் வந்து சொன்னபோது, 'என்னால் சாப்பிட முடியுமா?' என்று மறுத்தேன் ஆனால் சன்னமாய்! அது வந்தபோது, ருசித்தேன்.

கூடுதலாய் இன்னொரு மெத்தையைக் கொண்டு வந்து பணிப்பெண் என்னிடம் கொடுத்த போது, என்னை ஈர்த்துக் கொண்டிருக்கும் அப்பெண்மணி யாரென்று கேட்டேன்.

''ஓஹ்!அவங்க சமூகத்துல மிகப் பிரபலமான ஒரு பெண்மணி. திருமதி க்ளாரன்ஸ் ப்ளேர். அவங்களைப் பற்றி செய்தித் தாள்கள்ல நீங்க நிறைய படிச்சிருக்கணுமே.''

ஒப்புதலாய் தலையசைத்தேன், அவரை இப்போது புதுப்பித்த ஈடுபாட்டோடு பார்த்தபடி. திருமதி ப்ளேர், கூர்மையான சாதுர்யமும் சுறுசுறுப்பும் ஒருங்கே கொண்டுள்ள ஒருசில புத்திசாலிப் பெண்மணிகளில், முதன்மையானவராய் அறியப்படுபவராவார். இன்றைய தேதியில் இவர் தான் மையப்படுத்தப்பட்டு கவனிக்கப் படுபவர் என்பதால் வியப்புக் கூடிய பிரமிப்போடு அவரைப் பார்த்தேன். கப்பல் பிரயாணத்தில் ஏற்படும் சங்கடமான வெறுக் கடிக்கும் அனுபவத்தைப் பலர் போய் அவரிடம் சொன்னார்கள். அவற்றை, ஒவ்வொரு முறையும், சாந்தமாகக் கையாண்டுக் கிள்ளித் தூர எறிந்த அவருடைய இனிமையை நான் பாராட்டியே விட்டேன். வலிமையாகவும் வாய்திறவாமலும் தெரிந்த அந்தக் கப்பல் சிப்பந்தியைத் தன்னைக் கவனித்துக் கொள்ள அவர் வைத்துக் கொண்டுள்ளதாய் தோன்றியது; அவனும், பிரத்யேகமாய் அவனுக்கு அளிக்கப்பட்டுள்ள இந்த கௌரவத்தை நன்கு அறிந்துள்ளவனாய் பட்டது.

மறுநாள், அவரைக் கவனித்துக் கொண்டிருந்த அந்தக் கப்பல் சிப்பந்தியுடன் ஒவ்வோர் அறையாய் ஒரு சுற்றுச் சுற்றி வந்த பிறகு, நான் ஆச்சரியப்பட்டுப் போகும்படியாய், எனது இருக்கைக்கு அருகே வந்து நின்றார் திருமதி ப்ளேர்.

''இன்னிக்குப் பரவாயில்லாம தோணுதா?''

நன்றி சொன்ன நான், கொஞ்சம் கொஞ்சமா மனுஷ வாழ்க்கையில பிடிப்பு வருவது போல தோன்றுவதாய்க் குறிப்பிட்டேன்!

''நேற்று ரொம்ப மோசமா தெரிஞ்சே - முகத்துல துளி மனுஷக்களை இல்லாம! நானும் கலோனல் ரேஸும், இந்த யாத்திரை உங்க இறுதி யாத்திரையா ஆகிடக் கூடாதுனு வேடிக்கையா சொல்லிக்கிட்டோம்.''

நான் சிரித்தேன். ''காற்றோட்டமா வெளியே வந்ததுலே தேவலை யாகியிருக்கு.''

''தூய்மையான புதுக் காற்றுக்கு ஈடு கிடையாது'' சொன்னார், அவருடன் கூடயிருந்த, கலோனல் ரேஸ்.

''ஒடுக்கமான அறைக்குள்ளேயே அடைந்துக் கிடப்பது, ஒருத்தரைக் கொன்னேப் போட்டுடும்'' என்றார் திருமதி ப்ளேர். ஒரு சின்னத் தலையசைப்பில் கூட வந்திருந்தவனை விலக்கியபடி என்னருகிலிருந்த இருக்கையில் அமர்ந்தார். ''காற்றோட்டமான பகுதியில ஓர் அறை காலியாயிருக்குனு நினைக்கிறேன்'' ஆலோசித்தார்.

இதற்கு நான் மறுத்துத் தலையசைத்தேன்.

''டியர்! ஏன் நீ அறையை மாத்திக்கக் கூடாது? நிறைய அறைங்க காலியாகியிருக்கு, தெரியுமா? ஏகப்பட்ட பேர் மதீரால இறங்கியாச்சு... கப்பல் ஏற ்தாழ காலி. கப்பல் சிப்பந்திக்கிட்டே இது பற்றிப் பேசு. அவன் சூட்டிகையான பையன். எனக்குத் தரப்பட்ட இடம் பிடிக்காததால அழகான இன்னொரு ரூமுக்கு மாறிட்டேன். லஞ்சுக்குக் கீழே போகும் போது நீ இதைப் பேசிடு.''

நான் நடுங்கினேன். ''என்னால ஓரடி எடுத்து வைக்க முடியலே.''

''சிறுபிள்ளைத்தனமா பேசக்கூடாது. ம் எழுந்திரு... என்னோட ஒரு சிறு நடைக்கு இப்பவே நீ வர்றே.''

ஊக்குவிப்பாய் என்னைப் பார்த்துக் கண் சிமிட்டினார். ஆரம்பத்தில் கால்களே விளங்காமல் போய்விட்டதாய் உணர்ந்தேன். ஆனால் விறுவிறுவென்று மேலும் கீழும் இருமுறை நடந்த பிறகு, சற்று தேறியது போலவும் பிரயோஜனமான ஒருத்தியைப் போலவும் என்னை நான் உணரத் துவங்கினேன்.

இப்படி ஓரிரு முறை மேலும் சென்ற போது, கலோனல் ரேஸ் எங்களுடன் வந்து மறுபடியும் சேர்த்துக் கொண்டார். ''அதோ... அந்த மறுபக்கத்திலிருந்து, டேனரீஃப் மலையின் வாட்டசாட்டமான உச்சியை உங்களால பார்க்க முடியும்.''

''பார்க்க முடியுமா? ஓ! அதை என்னால படம்பிடிக்க முடியும்னு நினைக்கிறீங்களா?''

''அது கஷ்டம்.''

இதற்கு திருமதி ப்ளேர் சிரித்து விட்டார். ''நான் பிடித்த சில படங்கள் ரொம்பவே நல்லாயிருக்கும். ஆங்!''

நாங்களெல்லாம் கப்பலின் மறுபக்கத்திற்கு போனோம். வெள்ளையாயும் பனி நிறத்திலும் விட்டு விட்டுத் தெரிந்தபடி, மெல்லிய ரோஸ் நிற பனிப் புகையால் வளையமிடப்பட்டிருந்த பளபளப்பான மலை முகடு, கம்பீரமாய்த் தெரிந்தது.

நம்பிக்கைத் தராத கலோனல் ரேஸின் குறிப்பினை ஓரம் வைத்து விட்டு, தீவிரமாய் ஒரு படம் பிடித்தார் அவர் உடனேயே, ''ஓஹ்...'' என்றார் சற்று வருத்தமாய். ''ரோல் தீர்ந்துடுச்சு.''

புன்னகைத்தார் கலோனல். ''சாமான்களைப் பயன்படுத்தத் தெரியாம, அதை வெறும் பொம்மை போல ஒரு குழந்தைக் கையில் வெச்சிருப்பதைப் பார்க்க எனக்கு ரொம்பப் பிடிக்கும்!''

''ஓவரா கிண்டல் வேணாம்'' என்ற திருமதி ப்ளேர், ''என்கிட்டே இன்னொரு புது ரோல் இருக்காக்கும்'' என்றார்!

அதனைத் தன்னுடைய ஸ்வெட்டர் பையிலிருந்து முழக்கமாய் வெளியிலெடுத்தார் அவர். அப்போது திடீரென்று ஒரு பெரிய ஆட்டம் போட்ட படகின் குலுக்கல் அவரதுக் கட்டுப்பாட்டை நிலைகுலைய வைத்தது. தன்னைத் தானே நிலைபடுத்திக் கொள்ள கப்பலின் சிறு கைப்பிடியைப் பிடிக்க அவர் சாய்ந்தபோது, கையிலிருந்த புதுச் சுருள் ஒரு பக்கமாய் தூக்கியெறியப்பட்டது.

''ஓஓ'' படங்களில் வருவது போல கண்ணகல நிராசையானார் திருமதி ப்ளேர். முன்னால் வளைந்து பார்த்தார். ''அது கடலுக்குள்ளே விழுந்துடுச்சா என்ன?''

நாங்கள் கவனிக்காத விதத்தில் எங்களுக்குப் பின்னால் சில அடிகள் தள்ளி வந்து நின்றுக் கொண்டிருந்த சின்னப் பையனொருத்தன், நீண்டிருந்த ஓர் அறிவிப்புக் குழலைக் காது கிழிய ஊதினான்.

''லஞ்ச்'' என இப்போது திருமதி ப்ளேர் பரவசமடைந்து அறிவித்தார். ''காலை சிற்றுண்டிக்குப் பிறகு இதுவரை எதுவுமே சாப்பிட கிடைக்கலே. ரெண்டு கப் டீ தவிர. லஞ்ச், மிஸ் பெட்டிங் ஃபெல்ட்?''

குழப்பமாய், ''கேட்டேன்'' என்றேன் நான். ''எனக்கும் பசிக்கிற மாதிரி தான் இருக்கு.''

''அப்ப ரொம்ப நல்லதாப் போச்சு. நீ கப்பல் சிப்பந்தி டேபிள்லேயே உட்கார்ந்துக்கிற, ஓ.கே? புது அறை பற்றி அவனை சம்மதிக்க வை.''

எழுந்து சாப்பிடும் பகுதிக்கு நானாய் போனேன். சின்னதாய் எதையோட சாப்பிட ஆரம்பித்த நான், முடிக்கும் போது ஏராளமாய் தின்றுத் தீர்த்திருந்தேன். நேற்று உருவாகியிருந்த என் தோழன், நான் மீண்டும் சாப்பிடும் அளவுக்கு முன்னேறியிருப்பதற்கு வாழ்த்துக்கள் சொன்னான். எல்லோருமே அவரவர்களது அறைகளை இன்று மாற்றிக் கொள்வதாய் சொன்ன அவன், காலந்தாழ்த்தாது, மேலே நல்லக் காற்றோட்டமான ஓர் அறைக்கு என்னை மாற்றித் தருவதாய் சம்மதித்தான்.

நானமர்ந்திருந்த டேபிளில் நான்கு பேர் இருந்தோம். நான், இரண்டு முதிர் பெண்மணிகள், 'பரிதாபம்மிக்க கறுப்பர்கள்' என்று மனமிளகிப் பேசிய ஏதோ ஒரு தர்ம ஸ்தாபனத்தைச் சேர்ந்த 'பாஸ்டர்' எனும் மதகுரு போன்ற ஓர் ஊழியர்.

ஏனைய டேபிள்களையும் ஒரு சுற்றுப் பார்த்தேன். திருமதி ப்ளேர், கப்பலின் கேப்டன் இருந்த டேபிளைப் பிடித்திருந்தார். கலோனல் ரேஸ், அவருக்கு அடுத்து. கேப்டனின் மற்றொரு புறத்தில், தனிப்பட்டுத் தெரிந்த ஒரு நரை முடி ஆசாமி இருந்தார். இந்த சிறு கப்பலில் இதுவரை ஏறத்தாழ அனைவரையுமே நான் ஓரிரு முறை பார்த்து விட்டேன். ஆனால் இதுவரை கண்ணில் பட்டேயிராத ஒருத்தரும் இருக்கிறார். வெளியே தலை காட்டியிருந்தாரேயாயின் அவர் என் கண்களிலிருந்து தப்பித்திருக்க முடியாது. நல்ல நெட்டையாயும் கருமையாயும் இருந்தார். அவரிடமிருந்து கள்ளமும் கபடும் நிறைந்து வெளியான ஒருவித வஞ்சக அமைப்பு என்னை அறைந்தது. கப்பல் கண்காணிப்பாளனின் சிப்பந்திப் பெண்ணிடம் சிறு ஆர்வம் பொங்க அவர் யாரென்றுக் கேட்டேன்.

''அந்த ஆசாமி? ஓ... அது சர் ஆஸ்டஸ் பெட்லரின் காரியதரிசி. பேர் பகெட். அப்படி ஒரு கடல் பிரயாண வியாதி, பாவம், அவருக்கு. தலை தூக்க முடியலே. வெளியே தலை காட்டவேயில்லையே! ரெண்டு காரியதரிசிகளைக் கூட கூட்டி வந்திருக்கார், சர் ஆடம்ஸ். ரெண்டும் இப்படித்தான். இவராவது இப்போ எழுந்து தலையைக் காட்டறார். இன்னொருத்தர் இன்னும் கண்ணே விழிக்கலே.''

ஆக, சர் ஆஸ்டஸ் பெட்லர், மில் வீட்டின் சொந்தக்காரர், கப்பலில் இருக்கிறார். இது எதிர்பாராது எதேச்சையாக நிகழும் ஒன்றாயிருக் கலாம். அப்படியே ஆயினும்- - -

எனக்குத் தகவல் தந்து கொண்டிருந்த கண்காணிப்பாளன், ''அது, சர் ஆஸ்டஸ்'' என்று தொடர்ந்து கொண்டிருந்தான். ''கேப்டனுக்கு அடுத்து உட்கார்ந்திருப்பது.''

தற்சமயம் காரியதரிசியின் முகத்தை நான் ஆழ்ந்துப் படிக்க படிக்க, அதில் எனக்கு விருப்பமும் மளமளவென்று குறைந்துக் கொண்டி ருந்தது. சவக்களையாயிருந்த அம்முகத்தில் ரகசியமிருந்தது. கனமான இமைகளிருந்தன. மிகவும் தட்டையாய் அமைந்திருந்த அபூர்வத் தலையிருந்தது. இவையனைத்தையும் சேர்த்து அருவருப்பைத் தந்தன. சந்தேகம் கலந்த பயத்தை உண்டுபண்ணின.

பகெட் கிளம்பிய அதேநேரத்தில் கிளம்பிய நான், கப்பலின் மேற் பகுதிக்கு அவர் ஏறும்போது மிகவும் நெருக்கமாய் பின்தொடர்ந்தேன். அவர், சர் ஆஸ்டஸுடன் பேசிக் கொண்டிருந்தார். அவற்றில் ஓரிரு துண்டுகளை நான் கேட்டேன்.

''அப்போ அறையைப் போய் நான் உடனடியா பார்த்துடறேன், சரிதானே? உங்ககூட, அந்த அத்தனை ட்ரங்க் பெட்டிகளுக்கு நடுவுல உட்கார்ந்துகிட்டு என்னால எந்த வேலையும் பண்ண முடியாது.''

''எங்கப்பனே...!'' என்று சலிப்பான சர் ஆஸ்டஸ், மறுபதில் தர ஆரம்பித்தார்: ''நானிருக்கும் அறை ரெண்டு நோக்கங்களுக்காக. 1. நான் நிம்மதியா அங்கே தூங்க. 2. உடைகளை அமைதியா மாற்றிக்க. உன்னை என் அறைக்குள்ளே மேய விட்டு, லொட்டு லொட்டுனு அந்த டைப்-ரைட்டர் இயந்திரத்தை நீ பேய்த்தனமா தட்டித் தட்டி என்னை இம்சிக்க அல்ல.''

''இதையே தான் நானும் சொல்றேன், சர் ஆஸ்டம்ஸ். நீங்க தங்க அந்த அறை. ஆனா நம்ம வேலையைப் பண்ணுவதற்கும் ஓரிடம் வேணுமில்லே...''

இந்த இடத்தில் நான் அவர்களுடைய அருகாமையிலிருந்து விலகிக் கொண்டு, என் பொருட்களை அகற்றுவது ஒழுங்காய் நடந்து கொண்டிருக்கிறதா என்று பார்க்கப் போனேன். இந்தப் பணியில் கப்பல் சிப்பந்தியொருவன் ஈடுபட்டுக் கொண்டிருப்பதை நான் பார்த்தேன்.

''ரொம்ப அருமையான அறை, மிஸ். ஏ பீ ஸீ டீ என்று நாலு பகுதிகள்ல அறைகளிருக்கு. உங்க அறை டீ பகுதியில. எண் 13.''

''ஓ, நோ'' - உரக்க அலறி விட்டேன் நான். ''13, வேணாம்.''

13 என்பதில் மிகுந்த மூடநம்பிக்கை கொண்டவள் நான். பார்க்கப் போனால் அது மிக அருமையான அறையே; அதை நான் நேராகவே போய் பார்த்தேன். முதல் தர அறை, ஆகவே நப்பாசை கொண்டு தயங்கினேன். ஆனால் முட்டாள்தனமான மூடநம்பிக்கையே வென்றது. அழாத குறையாக சிப்பந்தியிடம் முறையிட்டேன்: ''நான் இருக்க இங்கே வேற அறைகளே இல்லையா?''

சிப்பந்தி சிந்தித்தான். ''ம்... 17 இருக்கு. மாடியில. காலைல அது காலியாத்தானிருந்தது... ஆனா இப்போ அதை யாருக்காவது கொடுத்திருக்கலாம் என்பது என் ஊகம். இருந்தாலும்... எந்த ஜென்டில்மேன் சாமான்களும் இது வரைக்கும் உள்ளே வராததாலும், எந்த ஜென்டில்மேனும் பெண்களைப் போல அத்தனை தீவிரமான

மூட நம்பிக்கை உடையவர்கள் கிடையாது என்பதாலும், நிச்சயமா அவர் அறையை மாற்றிக் கொள்வார்னு தான் நம்பறேன்!''

இந்த ஆலோசனையை நான் நன்றி தெரிவித்து பெற்றுக் கொண்டேன். என் சிப்பந்தி நேராய் புறப்பட்டு கப்பல் கண்காணிப்பாளனிடம் அனுமதிப் பெறப் போனான். பல்லிளித்தபடி அந்த ஆள், ''அதனால என்ன... பரவாயில்லே மேடம்... வாங்க அங்கேயே போகலாம்'' என்றான்.

17 அறைக்கு வழிகாட்டியபடி முன்னால் போனான் அவன். எண் 17, சற்று முன் நான் பார்த்த எண் 13 போல பெரியதாகவும் அருமையாகவும் இருக்கவில்லை. ஆனாலும் வெற்றிக் களிப்பு நிறைந்து திருப்தியானேன் நான்.

''உங்க சாமான்களை இப்பவே கொண்டு வந்துடறேன், மிஸ்'' என்றான் சிப்பந்தி.

ஆனால் அதேசமயத்தில் முகத்தில் வஞ்சகமும் கபடும் தெறிக்க பேயறைந்தாற் போலிருந்த அதே காரியதரிசி, அறையின் கதவை மறித்தபடி வந்து நின்றார். ''மன்னிக்கணும்'' என்று ஆரம்பித்தார். ''சர் ஆஸ்டஸ் பெட்லருடைய உபயோகத்துக்காக இந்த அறை ரிஸர்வ் பண்ணிப்பட்டிருக்கே.''

''அதனால பரவாயில்லே, ஸார்'' என்றான் உடனிருந்த கப்பல் சிப்பந்தி. ''இதுக்குப் பதிலா அறை எண் பதின்மூன்றை நாங்க தயார்படுத்திக்கிட்டிருக்கோம்.''

''கிடையாது. எனக்குத் தரப்படவிருந்தது, 17 தான்.''

''13, இதை விட நல்ல கேபின், ஸார் - பெருசு.''

''நான் எண் 17-ஐ ஸ்பெஷலா தேர்ந்தெடுத்தேன்... இதுக்குக் கண்காணிப்பாளரும் ஓகேனு சொன்னாரே.''

''மன்னிக்கணும், ஸார்'' என்றேன் நான் ஓர் அரிவாள் வெட்டாய். ''எண் 17 எனக்காக ஒதுக்கப்பட்டிருக்கு.''

''இதுக்கு என்னால் ஒப்புக்க முடியாது.''

திண்டாடிப் போனான் சிப்பந்தி. ''இந்த இன்னொரு கேபின் இதைவிட சிறப்பானது தானே தவிர---''

அவனைப் பேச விடாது, பேயறைந்தவன் ''எனக்கு 17 வேணும்'' என்றார்.

''என்ன இதெல்லாம்?'' - அதிகாரமாய் கேட்டது ஒரு புதுக்குரல். ''ஏய், சிப்பந்தி, என் பெட்டி படுக்கையெல்லாம் கொண்டுவந்து இந்த

அறையில போடு. இது என் கேபின்!'' சொன்னது லஞ்ச்சில் எனக்கடுத்து அமர்ந்திருந்த ரெவரிட் - எட்வர்ட்.

''இடைஞ்சலுக்கு மன்னிச்சுக்கணும்'' என்றேன் நான் அவரிடம், ''இது என் கேபின்.''

''இது சர் ஆஸ்டஸ் பெட்லருக்கு ஒதுக்கப்பட்டுள்ளது'' என்றார் பகெட்.

ஆக அனைவரும் சூடாக ஆரம்பித்தோம்.

''இந்த விஷயத்துக்காக இத்தனை வாதாட வேண்டியுள்ளதை நினைச்சு... வருந்தறேன்'' என்று தாழ்மையான புன்னகையோடு எட்வர்ட் சொன்னாலும், இந்த சாதுத்தன்மை அறைக்குள் நான் நுழைந்தே தீருவேன் என்ற அவரது இறுதியான முடிவினை மூடி மறைக்க தவறியது. தாழ்மை மிகுந்த சாதுவானவர்கள், எப்போதுமே சாமானியத்துக்கு இளகாமல் அடம்பிடிப்பவர்களே நான் கவனித்திருக்கிறேன். இப்படிச் சொல்லிவிட்டு அறைக்குள் நழுவி நுழைந்து விடத்தான் அவர் பார்த்தார்.

''கடலலைகளைப் பார்த்தபடி இருக்கும் கேபின் 28 தான் நீங்க போக வேண்டிய அறை, ஸார்'' என்றது, சிப்பந்தி! ''அற்புதமான கேபின், ஸார்.''

''இதைப் போய் நான் திருப்பித் திருப்பிக் கேட்க வேண்டியது, எனக்கே கஷ்டமாயிருக்கு. 17-ஆம் கேபின் தான் எனக்கு என்று சத்தியமே பண்ணினாங்க.''

நாங்கள் மேற்கொண்டு வழியற்ற ஒரு முக்குக்கு வந்து முட்டிக் கொண்டு நின்றோம். வளைந்து விடக்கூடாது என்பதில் நாங்கள் ஒவ்வொருத்தரும் முடிவாயிருந்தோம். ஒழுங்காய் சொல்லப் போனால், இந்தப் போட்டியிலிருந்து நான் அழகாக விலகிக் கொண்டு, கேபின் எண் இருபத்தியெட்டினை ஒப்புக் கொள்வதன் மூலம் நிலைமையை மட்டுப்படுத்தியிருக்கலாம். கேபின் எண் 13 எனக்கு வராதபட்சத்தில் வேறெந்த அறை எனக்கு வந்தாலும் அது ஒரு பெரிய பொருட்டே கிடையாது. ஆனால் என் ரத்தக் கொதிப்புக் கூடியன்றோயிருந்தது. நான் போய் முதல் ஆளாக விட்டுக் கொடுப்பதாவது என்ற துடிப்பு தான் என்னிடம் மிகுந்திருந்தது. இந்த எட்வர்டை நான் விரும்பவில்லை. பொய்ப்பல் வைத்திருக்கிறான் கிழவன்... சாப்பிடும் போதெல்லாம் அதை நாக்கால் சரி செய்துக் கொண்டு! ஒன்றுமில்லாத விஷயங்களுக்காகத் தான் பல ஆண்கள் வெறுக்கப்படுகிறார்கள்!

சொன்னதையே நாங்களனைவரும் மறுபடியும் ஒருமுறை சொன்னோம். இப்போது, சிப்பந்தி, இதைவிட மற்ற இரு கேபின்களும் மிகச் சிறந்தவை என்பதை சற்று கடுமையாகவே முன்வைத்தான். அதை யார் கேட்பது!

பகெட் அவரது பொறுமையையிழக்க ஆரம்பித்தார். எட்வர்ட் அமரிக்கையாய் தன்னைக் கவனித்துக் கொண்டார். சிறு முயற்சியின் பேரில் நானும் அமைதி காத்தேன். ஆயினும், இதுவரை, எங்களில் ஒருவரும், இக்கேபினின் ஓர் அங்குலத்தைக் கூட விட்டுக் கொடுக்கத் துணியவில்லை.

சிப்பந்தியிடமிருந்து என்னை நோக்கி தரப்பட்ட ஒரு கண்ணடிப்பும், ஏதோ சிறு முணுமுணுப்பும்... ஓர் ஊமை சமிக்ஞையாய் என்னை அடைந்தன. காட்சியிலிருந்து அகல்வது தெரியாமல் அகன்றேன். இருவரும் சற்றுத் தள்ளி இணையும் போது அங்கு உடனடியாய் கண்காணிப்பாளனை நான் சந்திக்கும்படி ஆனது, என் அதிர்ஷ்டம் தான்.

''ஓ, ப்ளீஸ்...'' என்றேன் அவனிடம். ''நீ தானே எனக்கு கேபின் பதினேழுனு சொன்னது? இப்பப் பாரு. மற்றவங்க நகரப் போறதில்லே. மிஸ்டர் பகெட், மிஸ்டர் எட்வர்ட். நீ எனக்கு அந்தக் கேபினை வாங்கித் தரணும். செய்வியா?''

கப்பல் ஊழியர்களைப் போலப் பெண்களுக்கு சகாயமாக வேறு ஒருவர் கிடையாது என்பது என்னுடைய தனிப்பட்ட அசைக்க முடியாத கருத்து. என்னருமை கண்காணிப்பாளனும் இக்கருத்தை நிரூபிக்கத் தவறவில்லை. காட்சிக்குள் ஒரு புது பாத்திரமாக நுழைந்த அவன், விவாதித்துக் கொண்டிருந்த அவர்களிடம், கேபின் எண் 17 எனக்கு என்றான். மிஸ்டர் எட்வர்ட், எண் 13 கொண்ட கேபினையும் மிஸ்டர் பகெட், எண் 28 கொண்ட கேபினையும் அவர்கள் விரும்பினால் எடுத்துக் கொள்ளலாம்; அல்லது எங்கிருக்கிறார்களோ அங்கேயே இருந்து கொள்ளலாம் - முடிவு, அவர்களுடையது.

என் கண்களிடம், அவனை, 'நீ தான்டா ஹீரோ' என்று அறிவிக்கச் சொன்ன நான், என்னுடைய புது பகுதிக்குள் என்னை நானே நுழைத்துக் கொண்டேன். இந்தப் புதுப்பிரவேசம், எனக்கு மிக அனுகூலமாய் அமைத்தது. கடல் அமைதியாயிருந்தது. சீதோஷ்ணத் திலும் கதகதப்பு கூட ஆரம்பித்தது. கடல் பிரயாணக் குமட்டல், ஒரு கடந்தகால நிகழ்வாகிப் போயிற்று!

படிகளேறி கப்பலின் மேல் தளத்திற்குப் போனேன். அங்கு இடம்பெற்றுக் கொண்டிருந்த பல்வேறு வகையான விளையாட்டுக் களில் என் பெயரைப் பதிந்துக் கொண்டேன். அங்கு டீ அளிக்கப்பட்டது. திருப்தியாய் குடித்தேன். பிறகு அங்கிருந்த இளம் வாலிபப் பயல்களோடு சேர்ந்து, இடம்பெற்றுக் கொண்டிருந்த ஏதோ ஒரு விளையாட்டினைப் பொழுதுபோக்குவதற்காக விளையாடினேன். அவர்களனைவருமே அசாதாரணமாய் என்னிடம் இனிமை காட்டினார்கள். 'வாழ்க்கை சந்தோஷமானது தான்... உற்சாகமானது தான்...' என்று அப்போது உணர்ந்தேன்.

உடனடியாய் அறைக்கு வரச் சொல்லும் அழைப்பு, ஆச்சரியமாய் அப்போது என்னைக் கேட்டு ஒலிக்க, நான் எனது புது ஜாகைக்கு விரைந்தேன். கப்பலின் ஒரு பெண் சிப்பந்தி எனக்காக அவதியாய் முகத்தை வைத்துக் கொண்டு நின்றுக் கொண்டிருந்தாள்.

''உங்கள் கேபின்ல தாங்க முடியாத வாடையடிக்குது, மிஸ். அது என்னனு என்னால ஊகிக்க முடியலே... உங்களால இந்த நாத்தத்துல தூங்க முடியுமா என்பது சந்தேகம்தான். 'ஸீ' பகுதியில சில அறைகளிருக்கு. அங்கே போயிடுங்க - இந்த ஒரு ராத்திரிக்கு மட்டும் தான்.''

வாடை, இவள் சொன்னது மாதிரி குடலைப் புரட்டித்தான் போட்டது மயக்கத்தை உண்டுபண்ணுமளவுக்கு. என் உடைகளை மாற்றிக் கொள்ளும் போது இங்கிருந்து கிளம்புவது பற்றி சிந்தித்து பதில் தருவதாய்ச் சொன்னேன் நான். பிறகு என் கழிவறை வரை நான் விரைந்தேன் வாடை தாளாது வெறுப்பாய் மூச்சுக் காற்றை உள்ளுக்கிழுத்துப் பிடித்தபடி.

என்ன வாடை இது? செத்த எலி? அந்த அளவுக்குத்தான் இருந்தது ஆனால் நிச்சயமாக இது வேறுபட்ட ஒன்று. இருந்தாலும் இது எனக்குத் தெரியும்! இது நான் ஏற்கனவே எங்கோ முகர்ந்துள்ள ஒரு வாடை தான். எங்கே. எங்கே? ஆஹ்... கிடைத்துவிட்டது! குடலைக் குமட்டிப் பிடுங்கி எடுத்து விடும் அளவுக்கான நாற்றம் கொண்ட ஒரு மருத்துவப் பசை - *அஸஃபோய்டிடா* என்பது இதன் பெயர். விஷம் போல எதையாவது வீரியமான ஒன்றைக் குடித்து விட்டவர்களை இதை முகரச் சொன்னால் போதும் உள்ளே போன அத்தனையும் முண்டி யடித்துக் கொண்டு வெளியே கொட்டிவிடும். போர்க்காலங்களில் பிழைப்பு நடத்த சிலபல மருத்துவமனைகளில் நான் பணிபுரிந்

திருக்கிறேன்... இதைப் போன்ற பல மயக்க மருந்துகளை அப்போது நானறிய நேர்ந்தது.

*அஸஃபோய்டிடா*தான் அது, ஆமாம். ஆனால் அது எப்படி...

சட்டென விஷயத்தை அறிந்துக் கொண்டவளாய் சோபாவுக்குள் புதைந்தேன் நான். யாரோ ஒருவர் *அஸஃபோய்டிடா*'வின் ஒரு வில்லலை என் அறையில் போட்டிருக்கிறார்கள். ஏன்? அப்போது நான் அறையை விட்டு விலகிப் போய் விடுவேன் என்றா? என்னை இங்கிருந்து வெளியே துரத்துவதில் ஏன் இத்தனை ஆர்வமாய் இருக்க வேண்டும்? இன்று மதியம் நடந்தக் காட்சியினை இப்போது வேறொரு கோணத்தில் நின்று பார்க்க விரும்பினேன். அனைவரையும் ஆர்வமாய் போட்டி போட்டுக் கொண்டு தவறாது தக்க வைத்துக் கொள்ள உந்தித் தள்ளுமளவுக்கு, என்ன இருக்கிறது இந்த கேபின் 17-ல்? ஏனைய இரு அறைகளும் இதைவிட அற்புதமானவை; ஏனந்த இரு ஆண்களும் அறை எண் பதினேழிலேயே ஒட்டிக் கொண்டிருக்கப் பிரியப் பட்டார்கள்?

பதினேழு.

எப்படி இந்த எண் எல்லோராலும் வேண்டப்பட்டுள்ளது! 17-ஆம் தேதி நான் கடல் பிரயாணத்தைத் துவங்கியது. இதே 17 தான் சட்டென நெஞ்சடைக்க மூச்சுத் திணறலோடு அப்படியே சிந்தனை யைத் தடுத்தேன். விரைவாக எனது பெட்டியின் பூட்டைத் திறந்த நான், சில உருட்டப்பட்ட தாள்களுக்குள் ஒளித்து வைக்கப்பட்டிருந்த என்னுடைய பொக்கிஷத் தாளை வெளியிலெடுத்துப் பார்த்தேன்.

17 1 22 - இதனை நான் ஒரு தேதியைக் குறிக்கும் குறியீடாக எடுத்துக் கொண்டுள்ளேன். கில்மார்டன் மாளிகைக் கரையிலிருந்துக் கிளம்ப வேண்டிய நாளாய்! இக்கணிப்பில், நான் தவறு என வைத்துக் கொள்வோம். இந்த ஒரு முடிவோடு இவ்வெண்களை மீண்டும் பரிசோதிக்கும் போது, 'ஒரு தேதியை எழுத முனைபவர்கள், மாதத்தையும் வருடத்தையும் கூடவே போட வேண்டியது அத்தியாவசியம் என்றா எண்ணுவார்கள்?' என்ற கேள்வி என்னுள் விளைந்தது. ஒருவேளை 17 என்பது, அறை எண் 17 என்பதைக் குறித்தால்? அப்போது அந்த 1? அது, 'நேரம் ஒன்று' என்பதைக் குறித்தால்? அப்போது 22, தேதி தான். நிமிர்ந்து நாள்காட்டியைப் பார்த்தேன்.

*நாளை 22!*

# அத்தியாயம் - 10

நான் அதிரடியாய் கிளர்ச்சியானேன். கடைசியாய் மிகச் சரியாக மோப்பம் பிடித்து விட்டேன் என்பதில் நிச்சயமானேன் நான். ஒரு விஷயம் துல்லியமாய்த் தெரிந்தது... நான் இந்தக் கேபினை விட்டு அகலக்கூடாது. அஸ்ஃபோய்டிடா நாற்றத்தை சகித்துக் கொண்டு தான் ஆக வேண்டும்.

என் முன்னாலுள்ள நிரூபணங்களை நான் அலசிப் பார்க்கலானேன். நாளை தான் 22 நள்ளிரவு ஒரு மணிக்கு... அல்லது, நண்பகல் 1 மணிக்கு... ஏதாவது நடக்கப் போகின்றது. நள்ளிரவு 1 மணியையே நான் பிடித்துக் கொண்டேன். இப்போது மணி இரவு 7. இன்னும் ஆறுமணி நேரத்துக்குப் பிறகு அது தெரிய வரும்.

மாலைப் பொழுதை எப்படி நான் கழித்தேன் என்றே தெரிய வில்லை. அந்த அளவுக்கு முற்றுப் பெறாத ஒன்றாக அமைந்திருந்தது, அது. வெகு சீக்கிரமாய் முன்னிரவிலேயே நான் கேபினுக்குத் திரும்பியிருந்தேன். இதற்கு, தலைக்குள் நீர் பிடித்திருப்பதால் ஏற்பட்டிருக்கும் தாளா தலை வலியே காரணம் என்று சிப்பந்திப் பெண்ணிடம் சொன்னேன். உடனே படுத்தாக வேண்டும் என்றும் வாடையெல்லாம் ஒரு பொருட்டே கிடையாது என்றும் சொல்லி விட்டேன். இத்தனைக்குப் பிறகும் அவள் விளங்காது நின்றுக் கொண்டிருப்பது போலவே தோன்றியது... ஆனால் நான் முடிவாயிருந்தேன்.

இப்படியாக சற்று முன்னதாகவே படுக்கைக்குப் போயிருந்த நான், ஆபத்துக்கு இருக்கட்டும் என்று மிகவும் கனமான, உடலைச் சுற்றி சுவர் போல அமையவல்ல ஓர் இரவு உடைக்குள் புகுந்திருந்தேன். காலில் செருப்போடே படுத்தேன். எது நடந்தாலும் சடுதியில் குதித்தெழுந்து எதிர்கொண்டு விடலாம் என்பது என் நினைப்பு.

அதுசரி... எது நடக்கும் என்பது என் நினைப்பு?! எனக்கே இது தெரியாது. மூளை முழுக்கப் பொருந்தி நிற்கும் விளங்காத கற்பனைகள்... இவற்றில் பல, மிக அசாத்தியமான நினைப்புகள்!

ஆனாலும் ஒரே ஒரு விஷயத்தில் மட்டும் நான் மாற்றிக் கொள்ள இயலாத முடிவிலிருந்தேன் *1 மணிக்கு, என்னவோ நடக்கப் போகின்றது.*

சகப்பிரயாணிகள், அவர் தம் படுக்கைகளுக்குத் திரும்பிக் கொண்டிருக்கும் ஓசைகளை, விட்டு விட்டுக் கேட்ட வண்ண மிருந்தேன். சம்பாஷணைகளின் துண்டுகள், புன்னகையோடு உதிர்ந்த 'குட்-நைட்'டுகள் ஆகியன, திறந்திருந்த ஜன்னல் வழியே மிதந்து வந்தன. பிறகு, அமைதி. ஏறத்தாழ எல்லா விளக்குகளும் அணைக்கப்பட்டன. வராண்டாவில் மட்டும் ஒன்றிருந்தது. அதனால் என் கேபினுக்குள் கொஞ்சமாய் விளக்கொளி இருந்தது. நீண்ட விசிலோசை ஊதப்படுவதைக் கேட்டேன். நள்ளிரவு! பிறகு தொடர்ந்த மணி நேரம் தான் வாழ்க்கையிலேயே நானறிந்த மிக நீண்ட மணிநேரமாய்த் தெரிந்தது. நேரத்தைத் தவறவிட்டு விடக்கூடாது என்பதற்காக அவ்வப்போது திருட்டுத்தனமாய் கடியாரத்தைப் பார்த்தபடியே இருந்தேன்.

எனது முடிவுகள் தவறாகப் போய் ஒருவேளை 1 மணிக்கு எதுவுமே நடக்காமல் ஆகிவிட்டால், என்னை நானே படு முட்டாளாக்கிக் கொண்டவளாகி... கையிருப்பில் இருந்த பணம் அத்தனையையும் நொண்டிக் குதிரையின் தலையில் கட்டிய தோல்வியில் போய் முடியும். இதை நினைக்கும்போதே என் இதயம் வலி கொண்டு துடித்தது.

கப்பல் மையத்திலிருக்கும் பெரிய கடியாரம்... ஒன்றடித்தது! ம்ம். ஒன்றும் நிகழவில்லை. காத்திருந்தேன். காத்திருக்கையில் ஓ... என்னது அது? தட்.... தட்...! ஓசையெழுப்பாது அடிகள் வைத்தபடி ஓட்டமாய் ஓடும் காலடிகளின் ஒலியினை நான் கேட்டேன். இதோ, இங்கே, வராண்டாவை ஒட்டி வராண்டாவிலேயே...

பிறகு, திடீரென்று, பூமி நோக்கிப் போடப்பட்ட அணுகுண்டாய் பேராசையோடு என் அறைக் கதவு தள்ளித் திறக்கப்பட, ஓர் ஆடவன், ஏறத்தாழ உள்ளே வந்து விழுந்தே விட்டான்.

''என்னைக் காப்பாற்று'' என்றான் அடித்தொண்டை உறுமலோடு. ''அவனுங்க என் பின்னாலேயே வந்துட்டானுங்க.''

என்ன ஏது என்று விசாரிக்கவோ விவாதிக்கவோ அது தருணம் கிடையாது. வெளியிலிருந்து நெருங்கிக் கொண்டிருந்த தடதடக்கும் ஷூ ஒலிகளை என்னால் கேட்க முடிந்தது. சில நொடிகளில் நான் இயங்கியே தீரவேண்டும். குதித்தெழுந்து விரைந்த நான், என்

அறைக்குள் நுழைந்திருந்த அந்நியனை, என் கேபினின் நட்டநடு பகுதியில், முகத்தோடு முகம் பார்த்தபடி நின்றேன்.

இதுபோன்ற கேபின்கள், ஆறடி மனிதனொருவன் மறைவாய் ஒளிந்துக் கொள்ளத்தக்க இடங்களையெல்லாம் கொண்டிருக்காது. கேபினில் தங்கும் பிரயாணிகள் அவர்களுடைய பொருட்களை வைத்துக் கொள்வதற்காக அங்கு வைக்கப்பட்டிருந்த டிரங்க் பெட்டியை, ஒரு கையில் இழுத்தேன் நான். இப்போது அதற்கும் சுவற்றுக்கும் இடையே இடைவெளி உருவானது. டிரங்க்ப் பெட்டியைத் திறந்து வைத்தேன். அதன் பின்பக்கத்து இருளடைந்த பகுதி தாராளமாய் ஒருத்தன் போய் ஒண்டி குனிந்து உட்கார்ந்து கொள்ள போதுமானதாய் ஆனது. அதேசமயம் கையலம்பும் வாஷ்பேஸினின் குழாயைத் திறந்துவிட்டேன். ஒரு துரித இயக்கம் தான்... என் அத்தனை கூந்தலும், குண்டான ஒரு முடிச்சாய் தலைக்கு மேலே நிலைநிறுத்தப்பட்டது. நான் இப்போது தோன்றும் தோற்றத்தைப் பொறுத்தமட்டில் ஒருபுறம் துளியும் அழகற்ற நிலையாய் இருந்தாலும், மறுபுறத்தில், இது, காட்சிக்கு வெகு பொருத்தமாய் அமைந்திட்ட கேமரா கோணமாய் அமைந்தது என்பது உண்மையே. ஒரு பெண்... அவளது கூந்தல் வழுக்கி விழுந்துவிடாத அளவுக்கு அதனை இறுக்கமாய் தலையின் உச்சியில் கூட்டி இறுக்கி... அவளது கழுத்தையும் தோளையும் முகத்தையும் நெற்றியையும் சோப்பினால் அப்பி அலம்பும் நிலையில்... ஓஹ், இப்படிக் குளியலறைப் பாணியில் நிற்கும் ஒருத்தியைப் போய், ஓடி வந்த ஒருத்தனுக்கு சற்றுமுன் தான் அடைக்கலம் கொடுத்தவளாய் யாரும் கருத முடியாது, இல்லையா!

கதவு ஒரு முறை பெரிதாய் தட்டப்பட்டது; இதற்கு பதிலாய் நான் உள்ளே வரும்படி ஆணை தருவதற்கு முன்பே அது தள்ளப்பட்டிருந்தது.

உள்ளே என்ன வந்து விழும் என்று என்னால் கணித்திருக்க முடியவில்லை. பயமுறுத்தும் தொனியில் கையில் துப்பாக்கியை ஏந்தியபடி, மிஸ்டர் பகெட் உள்ளே வந்து விழலாம் எனக் கொஞ்சமாய் நினைத்திருந்தேன்; அல்லது, கையில் நீளமான கத்தி போன்ற ஏதோ ஆபத்தான ஆயுதத்தோடு, எனது, அந்த தர்ம ஸ்தாபனத்தைச் சேர்ந்த ஊழியன் கூட வரலாம் என்ற சந்தேகமும் இருந்தது. ஆனால் சர்வ நிச்சயமாய், மிக மரியாதையாய் தோன்றிய ஒரு பெண் சிப்பந்தி, விசாரிக்கும் தொனியில் 1மணிக்கு வந்து உள்ளே நிற்பாள் என நான் துளியும் எதிர்பார்த்திருக்கவில்லை.

ஆனாலும் ஒரே ஒரு விஷயத்தில் மட்டும் நான் மாற்றிக் கொள்ள இயலாத முடிவிலிருந்தேன் *1 மணிக்கு, என்னவோ நடக்கப் போகின்றது.*

சகப்பிரயாணிகள், அவர் தம் படுக்கைகளுக்குத் திரும்பிக் கொண்டிருக்கும் ஓசைகளை, விட்டு விட்டுக் கேட்ட வண்ண மிருந்தேன். சம்பாஷணைகளின் துண்டுகள், புன்னகையோடு உதிர்ந்த 'குட்-நைட்'டுகள் ஆகியன, திறந்திருந்த ஜன்னல் வழியே மிதந்து வந்தன. பிறகு, அமைதி. ஏறத்தாழ எல்லா விளக்குகளும் அணைக்கப்பட்டன. வராண்டாவில் மட்டும் ஒன்றிருந்தது. அதனால் என் கேபினுக்குள் கொஞ்சமாய் விளக்கொளி இருந்தது. நீண்ட விசிலோசை ஊதப்படுவதைக் கேட்டேன். நள்ளிரவு! பிறகு தொடர்ந்த மணி நேரம் தான் வாழ்க்கையிலேயே நானறிந்த மிக நீண்ட மணிநேரமாய்த் தெரிந்தது. நேரத்தைத் தவறவிட்டு விடக்கூடாது என்பதற்காக அவ்வப்போது திருட்டுத்தனமாய் கடியாரத்தைப் பார்த்தபடியே இருந்தேன்.

எனது முடிவுகள் தவறாகப் போய் ஒருவேளை 1 மணிக்கு எதுவுமே நடக்காமல் ஆகிவிட்டால், என்னை நானே படு முட்டாளாக்கிக் கொண்டவளாகி... கையிருப்பில் இருந்த பணம் அத்தனையையும் நொண்டிக் குதிரையின் தலையில் கட்டிய தோல்வியில் போய் முடியும். இதை நினைக்கும்போதே என் இதயம் வலி கொண்டு துடித்தது.

கப்பல் மையத்திலிருக்கும் பெரிய கடியாரம்... ஒன்றடித்தது! ம்ம். ஒன்றும் நிகழவில்லை. காத்திருந்தேன். காத்திருக்கையில் ஓ... என்னது அது? தட்... தட்...! ஓசையெழுப்பாது அடிகள் வைத்தபடி ஓட்டமாய் ஓடும் காலடிகளின் ஒலியினை நான் கேட்டேன். இதோ, இங்கே, வராண்டாவை ஒட்டி வராண்டாவிலேயே...

பிறகு, திடீரென்று, பூமி நோக்கிப் போடப்பட்ட அணுகுண்டாய் பேராசையோடு என் அறைக் கதவு தள்ளித் திறக்கப்பட, ஓர் ஆடவன், ஏறத்தாழ உள்ளே வந்து விழுந்தே விட்டான்.

''என்னைக் காப்பாற்று'' என்றான் அடித்தொண்டை உறுமலோடு. ''அவனுங்க என் பின்னாலேயே வந்துட்டானுங்க.''

என்ன ஏது என்று விசாரிக்கவோ விவாதிக்கவோ அது தருணம் கிடையாது. வெளியிலிருந்து நெருங்கிக் கொண்டிருந்த தடதடக்கும் ஷூ ஒலிகளை என்னால் கேட்க முடிந்தது. சில நொடிகளில் நான் இயங்கியே தீரவேண்டும். குதித்தெழுந்து விரைந்த நான், என்

அறைக்குள் நுழைந்திருந்த அந்நியனை, என் கேபினின் நட்டநடு பகுதியில், முகத்தோடு முகம் பார்த்தபடி நின்றேன்.

இதுபோன்ற கேபின்கள், ஆறடி மனிதனொருவன் மறைவாய் ஒளிந்துக் கொள்ளத்தக்க இடங்களையெல்லாம் கொண்டிருக்காது. கேபினில் தங்கும் பிரயாணிகள் அவர்களுடைய பொருட்களை வைத்துக் கொள்வதற்காக அங்கு வைக்கப்பட்டிருந்த டிரங்க் பெட்டியை, ஒரு கையில் இழுத்தேன் நான். இப்போது அதற்கும் சுவற்றுக்கும் இடையே இடைவெளி உருவானது. டிரங்க்ப் பெட்டியைத் திறந்து வைத்தேன். அதன் பின்பக்கத்து இருளடைந்த பகுதி தாராளமாய் ஒருத்தன் போய் ஒண்டி குனிந்து உட்கார்ந்து கொள்ள போதுமானதாய் ஆனது. அதேசமயம் கையலம்பும் வாஷ்பேஸினின் குழாயைத் திறந்துவிட்டேன். ஒரு துரித இயக்கம் தான்... என் அத்தனை கூந்தலும், குண்டான ஒரு முடிச்சாய் தலைக்கு மேலே நிலைநிறுத்தப்பட்டது. நான் இப்போது தோன்றும் தோற்றத்தைப் பொறுத்தமட்டில் ஒருபுறம் துளியும் அழகற்ற நிலையாய் இருந்தாலும், மறுபுறத்தில், இது, காட்சிக்கு வெகு பொருத்தமாய் அமைந்திட்ட கேமரா கோணமாய் அமைந்தது என்பது உண்மையே. ஒரு பெண்... அவளது கூந்தல் வழுக்கி விழுந்துவிடாத அளவுக்கு அதனை இறுக்கமாய் தலையின் உச்சியில் கூட்டி இறுக்கி... அவளது கழுத்தையும் தோளையும் முகத்தையும் நெற்றியையும் சோப்பினால் அப்பி அலம்பும் நிலையில்... ஓஹ், இப்படிக் குளியலறைப் பாணியில் நிற்கும் ஒருத்தியைப் போய், ஓடி வந்த ஒருத்தனுக்கு சற்றுமுன் தான் அடைக்கலம் கொடுத்தவளாய் யாரும் கருத முடியாது, இல்லையா!

கதவு ஒரு முறை பெரிதாய் தட்டப்பட்டது; இதற்கு பதிலாய் நான் உள்ளே வரும்படி ஆணைதருவதற்கு முன்பே அது தள்ளப்பட்டிருந்தது.

உள்ளே என்ன வந்து விழும் என்று என்னால் கணித்திருக்க முடியவில்லை. பயமுறுத்தும் தொனியில் கையில் துப்பாக்கியை ஏந்தியபடி, மிஸ்டர் பகெட் உள்ளே வந்து விழலாம் எனக் கொஞ்சமாய் நினைத்திருந்தேன்; அல்லது, கையில் நீளமான கத்தி போன்ற ஏதோ ஆபத்தான ஆயுதத்தோடு, எனது, அந்த தர்ம ஸ்தாபனத்தைச் சேர்ந்த ஊழியன் கூட வரலாம் என்ற சந்தேகமும் இருந்தது. ஆனால் சர்வ நிச்சயமாய், மிக மரியாதையாய் தோன்றிய ஒரு பெண் சிப்பந்தி, விசாரிக்கும் தொனியில் 1மணிக்கு வந்து உள்ளே நிற்பாள் என நான் துளியும் எதிர்பார்த்திருக்கவில்லை.

''தொந்தரவுக்கு மன்னிக்கணும், மிஸ்'' என்றாள் அவள். ''நீங்க கூப்பிட்டதா நெனச்சேன்.''

''கிடையாது'' என்றேன் நான். ''நான் எங்கே கூப்பிட்டேன்?''

''தொந்தரவுக்கு மன்னிக்கணும், மிஸ்'' என்றாள் மறுபடியும்.

''போகட்டும்'' என்றேன் நான். ''தூக்கம் வரலே. தலை கனமாயிருக்கு. பச்சைத் தண்ணியில நல்லா முகம் கழுவிக்கிட்டா தோதா இருக்கும்னு பட்டுது.''

''எவனோ ஒருத்தன்...குடிச்சிருக்கான்... உள்ளே அலையறான்... அவன் ஏதாவது பொம்பிளைங்க கேபினுக்குள்ளே நுழைஞ்சு கலாட்டா பண்ணிடுவானோனு பயந்துக்கிட்டிருக்கோம்.''

''அடப்பாவமே!'' என்றேன் நான். ''இந்தப் பக்கம் அவன் வந்துட மாட்டானே...?!''

''ஓ, நோ. கவலை வேண்டாம். நாங்க இல்லே?! அப்படி எவனாவது வந்துட்டா, மணியடியுங்க. குட் நைட்.''

''குட் நைட்.''

கதவைத் திறந்து வராண்டா முழுவதும் எட்டிப் பார்த்தேன். திரும்பிப் போய்க் கொண்டிருந்த சிப்பந்திப் பெண்ணைத் தவிர வேறு யாரும் கிடையாது.

குடிகாரன்!ஆக, இது தான் நடந்த அத்தனைக்குமான விளக்கம். என்னுடைய வரலாற்றுச் சிறப்புமிக்க திறமைகள் அனைத்தும் விழலுக்கிறைத்த தண்ணீராயின. கேபின் ட்ரங்க் பெட்டியை இப்போது இன்னும் கொஞ்சம் விலக்கி இழுத்து, அமிலக் குரலில், ''உடனடியா வெளியே வா, ப்ளீஸ்'' என்றேன் நான்.

அங்கு பதில் இல்லை. இருண்டிருந்த மறைவிடத்தைக் குனிந்து எட்டிப் பார்த்தேன். தூங்கி விட்டவனைப் போலக் கிடந்தான் அவன். அவன் தோளில் கை பதித்துக் குலுக்கி விட்டேன். அவன் அசையவில்லை.

'குடி போதை' - வெறுப்பாய் நினைத்தேன் நான். 'இப்ப நான் என்ன பண்றது?'

அப்போது என் மூச்சைப் பிடித்து நிறுத்தும் ஒன்றினை நான் தரையில் பார்த்தேன்... சிறு சிறு சிகப்புப் பொட்டுக்கள்.

என் சத்து அத்தனையையும் கூட்டிப் போட்டு, அம்மனிதனை அறையின் நடு வரை இழுத்துப் போடுவதில் சிரமப்பட்டு வென்றேன் நான். அவனுடைய முகம் முழுவதும் தெரிந்த சுரத்தற்ற மரக்கட்டைத்

தன்மை அவன் மூர்ச்சையாகிப் போயிருப்பதை விளக்கியது. அவனது மயக்கத்துக்கான காரணத்தை நான் சுலபமாகவே கண்டுபிடித்து விட்டேன். அவனது இடப்பக்கத்துத் தோள் பட்டை இணைப்பில் ஆழமாய் குத்தப்பட்டிருந்தான் அவன்- கண்ணால் தைரியமாய் பார்க்க முடியாத அளவுக்கு ஆழமான காயம். அவன் அணிந்திருந்த கோட்டினை மெல்லக் கழற்றி விட்டு, காயத்தைக் கவனிக்கும் வேலையில் நான் இறங்கினேன்.

முகத்தில் அறையப்பட்ட சிலுசிலுவென்ற குளிர் நீரினால் உலுக்கப்பட்டவன், எழுந்து உட்கார்ந்துக் கொண்டான்.

''அப்படித்தான்... அப்படியே தான்... கம் ஆன்! எழுந்திருங்க!'' - நான் ஊக்கப்படுத்திச் சொன்னேன்.

தனது உடலை உடனடியாய் சுயக் கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வந்து விடும் துரிதமானவனாய் இருந்தான் அவன். உடனே எழுந்து நின்று விட்டவன், அப்படியே கொஞ்சமாய் தள்ளாடினான். ''நல்லது; மேற்கொண்டு எதையும் நீங்க எனக்கு செய்வதை நான் விரும்பலே.''

எதிரில் நிற்பவரை வீழ்த்தும் வகையில்... ஏறத்தாழ கோபக்கனலிலிருந்தது அவனது நடவடிக்கை. ஒரு சின்ன உதவிக்கே கூட சாதாரண மனிததனொருவன் உதிர்க்கவல்ல 'தேங்க்ஸ்...', அவனிடமிருந்து உதிரவேயில்லை!

''அது ஆழமான காயம். மருத்துவம் செய்ய என்னை நீங்க அனுமதிச்சு தான் ஆகணும்.''

''அப்படியெல்லாம் எதையும் நீங்க எனக்குப் பண்ணக் கூடாது.''

நான் ஏதோ அவனிடம் உதவி கேட்டு கெஞ்சிக் கொண்டிருப் பதைப் போல வார்த்தைகளைக் கடுமையாய் என் மீது வீசினான் அவன். அடங்கியே இருக்கப் பழக்கப்படாத என் பொறுமை, எகிறியது.

''நீ நடந்துக்கிற விதம், மிருகத்தனமாயிருக்கு'' என்றேன் நான் ஸ்திரமாய்.

''அப்படினா இங்கிருந்து உடனடியா விலகி உங்களுக்கு நான் விடுதலை தரேன்'' - கதவு நோக்கி நகர்ந்தான் அவன். ஆனால் அப்படிச் செய்யும்போதே சுருண்டான். சில ரத்தச் சொட்டுக்கள் சிந்தின. அவனே எதிர்பாராது இப்போது இயங்கிய நான், சற்றுப் போராடி அவனை சோபாவில் தள்ளினேன். ''முட்டாள் மாதிரி நடந்துக்காதே'' என்றேன் நான் மரியாதையற்று. ''கப்பல் முழுக்க ரத்தச் சொட்டுக்களை சிந்திக்கிட்டே போகவா நீ விரும்பறே? முட்டாள்!''

நான் சொல்வதில் உள்ள அர்த்தத்தைப் புரிந்துக் கொண்டவனாய் ஆன அவன், வாய் திறவாது அப்படியே அமர்ந்திருக்க, என்னால் முடிந்த அளவுக்கு சிறப்பாய் காயத்தைக் கட்டுப் போட்டு மூடினேன்.

''அப்படி!'' என்று என் கை வேலையைப் புகழ்ந்துக் கொண்ட நான், ''இப்போதைக்கு இது ரொம்ப உதவும்'' என்றேன். ''என்ன... இப்ப கோபமெல்லாம் தணிஞ்சாச்சா? இதெல்லாம் என்ன கூத்துனு என்கிட்டே சொல்ல மனமிருக்கா?''

''மன்னிக்கணும். இந்த சமயத்துல இயற்கையா உங்களுக்குள்ளே விளையும் இந்த ஆர்வக் கேள்விக்கு, என்னால பதில் தர முடியாது.''

''ஏன் அப்படி?'' என்றேன் நான் சற்று வெறுப்பான வேதனையாய்.

அசிங்கமாய் சிரித்தான். ''உனக்கு ஒரு விஷயம் ஒலிபரப்பாகணும்னா, பெண்ணிடம் சொல்லு. வேண்டாம்னா, வாயை இறுக்கமா மூடிட்டு இரு.''

''ஒரு ரகசியத்தை என்னுள் போட்டுப் பாதுகாக்க முடியும்னு-உங்களுக்குத் தோணலே?''

''தோணலே- எனக்குப் பொம்பளைங்களைத் தெரியும்.''

அவன் எழுந்து நின்று விட்டான்.

''என்னயிருந்தாலும்...'' என்று துவேஷத்தோடு துவங்கிய நான், ''இப்போ இங்கே நடந்த அத்தனை பற்றியும், விடிஞ்சதுமே ஒரு சிறப்பான ஒலிபரப்பை என்னால செய்ய முடியும்... இல்லையா?!'' என்றேன்.

''அதைத் தான் நீங்க முதல்ல பண்ணப் போறீங்க என்பதுல எனக்கு ரெண்டாவது கருத்து கிடையாது!''

''எத்தனை கொழுப்பு உனக்கு'' -மேலும் கோபமாகினேன் நான்.

ஒருவரை மற்றொருவர் பார்த்துக் கொண்டிருந்தோம். கசப்பாய் பிரிந்த இரு எதிரிகள் ஒருவர் மாற்றி ஒருவர் சுட்டெரிக்கும் வகையில் முறைத்துக் கொள்ளும் பார்வைகள். இப்போது தான் அவனுடைய முகத்தை நான் ஆழமாய் கவனித்தேன். ஒட்ட வெட்டப்பட்ட கிராப்பு...மெலிந்த தாடை... மாநிற முகவாயில் ஒரு மச்சம்...! அந்த விசித்திரமான சாம்பல் நிற விழிகள், என்னால் சரியாய் விளக்கிக் கூற இயலாத ஒருவித இரக்கமற்ற கள்ளத்தனத்தோடு என்னை ஊடுருவிக் கொண்டிருந்தன. ஆமாம்... இவனிடமிருந்து ஆபத்தும் அபாயமும் தெறிக்கின்றன தான்.

பொய்யான சிரிப்போடு, ''உன் உயிரை நான் காப்பாத்தினதுக்காக நீ இன்னும் ஒரு வார்த்தை நன்றி எனக்கு சொல்லலே!'' என்றேன்.

சரியாய் அவனை அடித்தேன் நான். வெளிப்படையாய் தெரியும்படி அவன் குறுகிப் போவதை நான் கவனித்தேன். ஆயினும், நான் செய்த இவ்வுதவிக்காக அவன் மிகக் கடமைப்பட்டிருக்கிறான் எனும் நிஜத்தை, அவன் அதீதமாய் வெறுக்கிறான் என்பதையும் நான் உள்ளூர விளங்கிக் கொண்டேன்.

''நீங்க என்னைக் காப்பாற்றியிருக்கும் நிலைமையே ஏற்பட்டிருக்க வேண்டாமே, கடவுளே!'' என்று வெடிப்பாய் குறிப்பிட்டான் அவன். ''ஒரு வழியா நான் செத்துத் தொலைஞ்சு, இதிலிருந்து முழு விடுதலை அடைஞ்சிருக்கக் கூடாதா?!''

''எனக்குக் கடன்பட்டுத்தான் இருக்கேனு இப்படி நீ ஒப்புக்கிறதுக்கு சந்தோஷப்படறேன். இந்தக் கடமையிலிருந்து நீ தப்ப முடியாது. உன் வாழ்க்கையையே நான் காப்பாத்திக் கொடுத்திருக்கேன்... அதுக்கு ஒரு மனப்பூர்வமான நன்றியை 'தேங்க் யூ'எனும் ஒரு வார்த்தை மூலமா நான் உன்கிட்டேயிருந்து எதிர்பார்க்கிறேன்.''

ஒருவரைப் பார்க்கும் பார்வையே, அவரைக் கொன்றுப் போடும் தகுதி வாய்ந்ததாய் இருந்தால், அப்போதே அவன் என்னைக் கொன்று விட விரும்பியிருப்பான் என்றே நினைக்கிறேன். தகிக்க தகிக்க அப்படி முறைத்தான். பின் அவனை அவனே தள்ளிக் கொள்ளும் அவசரத்தில் என்னைக் கடந்துப் போனான். கதவருகே போனதும் கழுத்தை மட்டும் சற்று திருப்பிக் கொண்டு தோள்களின் வழியே சொன்னான்: ''நான் உங்களுக்கு நன்றி சொல்ல மாட்டேன்- இப்பவும்... எப்பவும். ஆனா உங்களுக்குக் கடமைப்பட்டிருக்கும் நிலைமையை நான் ஒப்புக் கிறேன். என்றாவது ஒரு நாள் இந்தக் கடனை நான் அடைப்பேன்.''

ஓர் உள்ளங்கைக்குள் மற்றொன்றை விட்டுப் பிசைந்துக் கொண்டு, இதயத் துடிப்பு ரேஸ் குதிரைக் கணக்காய் துடிதுடித்து ஓடும்படி என்னை அப்படியே தவிக்க விட்டு விட்டு--- போய் விட்டான் அவன்.

# அத்தியாயம் - 11

அந்த இரவில் பிறகு வேறெந்த விதமான கிளர்ச்சியும் இடம்பெறவில்லை. காலைச் சிற்றுண்டியைக் கொண்டு வரச்சொல்லி படுக்கையிலேயே சாப்பிட்ட நான், வெகு நேரம் கழித்தே எழுந்தேன். வெளிப்புறப் பகுதிக்கு வந்த போது திருமதி ப்ளேர் என்னை அழைத்துக் கொண்டார்.

''குட் மார்னிங், நாடோடிப் பொண்ணே. வா... என் பக்கத்திலேயே உட்கார். நேத்து ராத்திரி சரியாவே தூங்காதது மாதிரி இருக்கு, உன்னை பார்த்தா.''

மரியாதை காட்டி அவர் பக்கத்திலேயே நான் அமரும் போது, ''என்னை ஏன் அப்படி கூப்பிட்டீங்க?'' என்றேன்.

''தப்பா எடுத்துக்கிட்டியா? என்னவோ தெரியலேம்மா... அந்த அடைமொழி உனக்குப் பொருந்துது. ஆரம்பத்திலிருந்து எனக்குள்ளே உன்னை நான் அப்படித்தான் கூப்பிட்டுக்கிட்டிருக்கேன். உனக்குள்ளேயே இருக்கும் அந்த நாடோடிப் பெண்களின் சலசலப்புத் தான், மற்ற யாரிடமிருந்ததும் உன்னைத் தனியா பிரிச்சு வேறுபடுத்திக் காட்டுது. இந்தக் கப்பல்ல இருப்பவர்களிலேயே- நீயும் கலோனல் ரேஸும் தான், உரையாடும் போது அறுஅறுனு அறுத்துக் கொல்லாம பேசக்கூடிய சிறப்பான துணைகள்னு என் மனசுக்குள்ளே நான் முடிவாவே இருக்கேன்.''

இதை, ''கோமாளித்தனம்'' என்றேன் நான். ''உங்களையும் நான் இதே போலத் தான் கணிச்சு வெச்சிருக்கேன் -ஆனா நிச்சயமா உசத்தியா! நீங்க... நீங்க... ஓஹ், நீங்க, அத்தனை பிரமாதமான ஒரு முழுமைப் பெண்.''

''பரவாயில்லே...'' என்று ஒப்புதலாய் தலையசைத்துக் கொண்ட திருமதி ப்ளேர், ''என்னை நீ ரொம்ப மோசமா கணிச்சுடலே...!'' என்றார். ''ஆங்... இப்ப உன்னைப் பற்றியும் கொஞ்சம் சொல்லேன், நாடோடிப் பொண்ணே! எதுக்காக நீ இப்போ தனியா தென் ஆப்பிரிக்கா போயிக்கிட்டிருக்கே?''

*தனது வாழ்க்கையையே, முழுக்க அர்ப்பணித்து அப்பா செய்த வேலைகளைப் பற்றி சொன்னேன்.*

*''ஆக, நீ, சார்ல்ஸ் பெட்டிங்ஃபெல்ட் மக? நீ சரக்கு இல்லாத வெட்டிப் பொண்ணு இல்லேனு அப்பவே நினைச்சேன்! சிதிலமடைஞ்ச ஏதாவது குன்றுக்குப் போய் அங்கே மண்டையோடு தேடப் போறியா?''*

*''செய்யலாம்'' என்றேன் நான் எச்சரிக்கையாய். ''இதைத் தவிர சில திட்டங்களும் எனக்கு இருக்கும்.''*

*''மர்மம் போல விளக்க முடியாதவளா தெரிஞ்சாலும்... குறும்புக்காரப் பொண்ணு நீ. இருந்தாலும் இன்னிக்குக் காலையிலேயே நீ அத்தனை அசதியா தெரியறே. நல்லா தூங்கலியா? படகு பிரயாணத்தின் போது என்னால அதிகம் முழிச்சுக்கிட்டு இருக்க முடியாது, ஆங்! 'பத்து மணி நேரம் தூங்குவார்கள், முட்டாள்கள்'- சொல்றாங்க. என்னால இருபது மணி நேரம் முடியும்!''*

*இப்போதும் கொட்டாவி விட்டார்!*

*''நேற்று நான் தவற விட்ட போட்டோ சுருளைத் திருப்பித் தர, நட்டநடு ராத்திரியில ஒருமுட்டாள் சிப்பந்தி வந்து என்னை எழுப்பினான். கப்பலுக்குள்ளேயே தான் விழுந்திருக்கு போல. நான் எழுந்திருக்கலே. அதனால அதை ஒரு நாடகப்பாணியில கேபின் உள்ளே போட்டான்! திறந்திருந்த ஒரு ஜன்னல் வழியா கையை விட்டு, அதை, சரியா என் நடு தொப்பையில் வந்து விழும்படி உதறினான். நொடி நேரம், என் தொப்புள்ள ஒரு குண்டு தான் விழுதுனே நினைச்சேன்!''*

*''அதோ... உங்க கலோனல்'' என்றேன் நான்- அந்த உயரமான பட்டாளத்தான் போன்ற உடல், அனைவரும் கூடும் இப்பிரதேசத்தில் தட்டுப்பட்டபோது.*

*''அவர் ஒண்ணும் என்னோட கலோனல் கிடையாது. விஷயம் தெரியுமா... அவர் உன்னை ரொம்பவும் பிரமிக்கிறார், நாடோடிப் பொண்ணே! அதனால, நீ இப்போ கிளம்பிடாதே.''*

*''எதையாவது போட்டு என் கூந்தலை இறுக்கி நான் இப்ப கட்டியாகணும்.''*

*இப்படிக் காரணம் சொல்லி விட்டு நான் உடனடியாய் நழுவி விட்டேன். ஏதோ ஒரு வகைக் காரணத்தினால், கலோனல் ரேஸைப்*

பார்த்தாலே எனக்குள் ஓர் அசௌகரியம் உண்டாகின்றது. என்னை வெட்கப்பட்டுக் கூச்சப்பட வைக்கும் ஓரிரு நபர்களில் இவரும் ஒருவர்.

நேராக எனது அறைக்குப் போன நான், முரண்டுப் பிடிக்கும் எனது கூந்தல் குடுமியை சாந்தப்படுத்திக் கட்ட ஏதாவது கிடைக்குமா என்று தேட ஆரம்பித்தேன். நான் எனது மேஜை டிராயரை முழுக்கத் திறந்திருக்கக் கூட மாட்டேன்...ஓஹ், யாரோ உள்ளே வந்து இதனுள்ளிருக்கும் அத்தனையையும் களைந்திருக்கிறார்கள்... கலைத்திருக்கிறார்கள் என்பது விளங்கியது. நான் ஓர் ஒழுங்கான... சீரான பெண்; என் பொருட்கள் அனைத்தும் உருப்படியான முறையில் சிதறிக் கிடக்காமல் வைக்கப்பட்டிருக்க வேண்டும்என நினைப்பவள் நான். அப்படியே செய்து, அவற்றை சுத்தமாய் வைத்திருப்பவளும் கூட. ஆனால், என் டிராயருக்குள், அனைத்தும் தலைக்குப்புற ஆக்கப்பட்டு சிதறியிருந்தன. ஏனைய மற்ற டிராயர்களையும் திறந்து பார்த்தேன். அவையும் இதே கதையே சொல்லின. எதைத் தேடியோ... யாரோ... அவசர அவசரமாகத் துளாவித் தோற்றுப் போயுள்ளது தெரிந்தது.

ஆழ்ந்த சிந்தனை மிகுந்த முகத்தோடு கட்டில் விளம்பில் உட்கார்ந்தேன் நான். யார் வந்து என் கேபினைத் தேடியுள்ளது? மேலும், எதை அவர்கள் குறி வைத்துத் தேடியிருக்கிறார்கள்? கிறுக்கலான எண்களும் எழுத்துக்களும் நிறைந்திருந்த அந்த அரைத்துண்டுச் சீட்டினையா? திருப்தியற்று மறுப்பாய் தலையசைத்துக் கொண்டேன் நான். நிச்சயமாக, அது, நடந்து முடிந்து விட்ட ஒரு பழங்கதை. எனில் வேறெதுவாகத் தானிருக்க முடியும்?

யோசிக்க முடிவு செய்தேன். நேற்றிவு நடந்த நிகழ்வுகள், வீரதீர சாகசங்கள் நிறைந்து கிளர்ச்சியூட்டாமல் போயிருந்தாலும், மர்மமாயுள்ள சமாச்சாரங்களைத் தெளிவிப்பதாய் எதையும் செய்து விடவில்லை. முன்னறிவிப்பு ஏதுமின்றி என் அறைக்குள் வெடிகுண்டு போல வந்து விழுந்த அந்த இளையவன் யார்? அவனை நான் இக்கப்பல் பிரயாணத்தில் முன்னர் எப்போதும் பார்க்கவேயில்லை உலாவும் இடங்களிலோ, சாப்பாட்டு கூட்டத்திலோ... எங்கும்! அவன் கப்பல் பணியாட்களில் ஒருத்தனா, அல்லது பிரயாணியேவா? யார் அவனைக் குத்தியுள்ளது? எதற்காக அவனை அப்படிக் குத்தியிருக்கிறார்கள்? மேலும் கடவுள் சாட்சியாகக் கேட்கிறேன்... எதற்காக கேபின் எண் 17 இவ்வளவு பிரதானமாய் அடிபடுகின்றது? இந்த அத்தனையுமே விடை தெரியா மர்மங்கள் தான்; கில்மார்டன் மாளிகையில், வெகு

விசித்திரமான நிகழ்வுகள் இடம்பெற்றுக் கொண்டிருக்கின்றன என்பதில் சந்தேகமில்லை.

நான், இனி எந்தெந்த நபர்கள் மீது ஒரு கண்ணைப் பதித்து, ஜாக்கிரதையாய் இருக்க வேண்டும் என்று விரல் விட்டு எண்ணினேன். நேற்று இரவு தடாலடியாய் வந்து என்னைப் பார்த்துச் சென்ற பார்வையாளனை, யாரென்று இந்தக் கப்பல் பிரயாணத்திலேயே நான் கண்டுபிடித்துத் தீருவேன் என்ற சத்தியத்தோடு அதை இப்போதைக்கு ஒதுக்கி வைத்து விட்டு, பின்வரும் மூன்று நபர்களை 'கவனிக்க வேண்டிய' முக்கிய நபர்களாக நான் குறித்துக் கொண்டேன்.

1. சர் ஆஸ்டஸ் பெட்லர். இவர் தான் மில் வீட்டின் சொந்தக்காரர்... இருந்தாலும் இக்கப்பலில் அவருடைய இருப்பு, ஓர் எதிர்பாராத சம்பவமே.

2. மிஸ்டர் பகெட். 'பேயறைந்துள்ள' காரியதரிசி. கேபின் 17 கொடுத்தே தீர வேண்டும் என்பதில் அவர் காட்டிய தீவிர விருப்பம் குறிப்பிடத் தகுந்தது. பி.கு: பகெட், சர் ஆஸ்டஸுடன் ரிவேரா வரை துணையாய் போனாரா எனக் கண்டுபிடி.

3. ரெவரிட். எட்வர்ட். கேபின் 17ன் மீது அவர் போட்ட பிடிவாதம் ஒன்று தான் இவருக்கு எதிராய் நிற்கிறது; ஆனால் இப்படி அடம் பிடிப்பது அவருடைய குணாதிசயமாய் இருக்கும் பட்சத்தில் பாதகமேதும் தோன்றவில்லை.பிடிவாதம்- ஓர் ஆச்சரிய சங்கதி.

எனினும், எட்வரிடிடம் நடத்தப்படும் ஒரு சின்ன உரையாடலால் தவறொன்றும் நேர்ந்து விடப்போவததில்லை என முடிவெடுத்தேன். அவசரமாய் முடிக்கற்றைகளைப் பிடித்துக் குடுமியொன்று போட்டு அதனை பெரிய அளவு கைக்குட்டையால் இறுக்கிக் கட்டிய நான், கப்பலின் மேல் தளத்து உலவும் பகுதிக்கு சென்றேன் ஒரு காரணத்தோடு. அப்போது அதிர்ஷ்டத்திலிருந்திருக்கிறேன்நான். நான் தேடிப் போனவர், அங்கிருந்த ஒரு தூணில் சாய்ந்தபடி, தேநீர் உறிஞ்சிக் கொண்டிருந்தார். அவர் வரை போனேன். அங்கு நின்றேன். என்னால் தர முடிந்த சிறந்த புன்னகையோடு சொன்னேன்: ''கேபின் 17 விஷயத்துல நீங்க என்னை மன்னிச்சிருப்பீங்கனு நினைக்கிறேன்.''

''ஒரு உண்மையான கிறிஸ்டியன், உள்ளே பகை வளர்க்கக் கூடாது என்பதைக் கடைபிடிப்பவன் நான்'' என்றார் எட்வர்ட் கறாராய். ''ஆனால், கப்பல் கண்காணிப்பாளன், எனக்குத் தான் அதுனு பிரத்யேகமா உறுதி சொல்லியிருந்தான்.''

''கப்பல் கண்காணிப்பாளர்கள், கால்ல சக்கரத்தைக் கட்டிக்கிட்டு உருளும் பணியாளர்கள்... இல்லையா?'' என்று பிடிப்பற்று சொன்னேன். ''அதனால் சில விஷயங்களை அவங்க மறந்துத் தான் போயிடறாங்க.''

இதற்கு எட்வர்ட் மறுபதில் தரவில்லை.

உரையாடலைத் தொடர்வதற்காக, ''தென் ஆப்பரிக்காவுக்கு இது உங்களுடைய முதல் பிரயாணமா?'' என்றேன்.

''தென் ஆப்பரிக்காவுக்கு- ஆமாம். ஆனா, கடந்த ரெண்டு வருஷமா, மனித மாமிசம் சாப்பிடும் பழங்குடியினருடன், கிழக்கு ஆப்பிரிக்காவில நான் பணியாற்றியிருக்கேன்.''

''என்ன சாசகசம்! எத்தனை த்ரில்! அவங்க கிட்டேயிருந்து, நிறைய தடவை நீங்க மயிரிழையிலே தப்பிச்சிருக்கணுமே?''

''தப்பிப்புகள்?''

''அதாவது--- உங்களைப் பதார்த்தமா அவங்க ஆக்கி விடுவதிலிருந்து!''

''புனிதமான தேடல்களைப் போய் ஒரு கனமற்ற பொழுதுபோக்கா நீங்க எடை போடக் கூடாது, மிஸ்.''

கொடுக்கால் கொட்டுவது போல், ''மனித மாமிசம் சாப்பிடுபவர்களைத் தேடிப் போவது ஒரு 'புனிதமான தேடுதல்' அப்படினு எனக்குத் தெரியாது'' என எதிர்த்தேன்.

இந்த வார்த்தைகள் என் உதடுகளை விட்டுப் பாய்ந்தவுடனேயே ஓர் எண்ணம் என்னுள் விளைந்தது. ஆப்பிரிக்காவின் உட்பிரதேசங்களில் திரு எட்வர்ட் கடந்த இரண்டு முழு வருடங்களையும் செலவழித்தவர் என்றால் அவரது தோலில் ஏன் எவ்வித கருமையும் காணோம்? எவ்வித சுருக்கமும் சிறு சிறு காயங்களும் கூட இல்லை? வழுவழுப்பும் மினுமினுப்பும் கொண்டு ஒரு சிறு குழந்தையின் செக்கச் சிவந்த தோலின் தரத்தில் அது எப்படி இருக்க முடியும்? இதில் நிச்சயமாய் நழுவி ஒளியும் கள்ளத்தனம் ஏதோ தெரியவில்லை? இருந்தாலும் அவருடைய குரலும் நடந்துக் கொள்ளும் விதமும் மிக மிக தன்னிச்சையாக செயற்கையற்றே இருக்கின்றன. சொல்லப் போனால் - ரொம்பவும் செயற்கைத்தனமற்று-ஒரு கிருத்துவ மதகுரு போல!

அப்பாவோடு 'சின்ன ஹாம்பஸ்லே' பகுதியில் நான் வசித்தபோது அறிந்திருந்த கிருத்துவ மதகுருக்களின் சிஷ்யர்களை எண்ணி

மனத்தினைப் பின்னால் செலுத்தினேன். ஒரு சிலரை நான் விரும்பியிருக்கிறேன், மற்ற சிலரை நான் விரும்பியது கிடையாது. ஆனால் அவர்களில் ஒருவருமே எட்வர்ட் போல இருந்தது கிடையாது. அவர்களெல்லாம் வாழும் மனிதர்கள் போல இவர், மனிதத்தையெல்லாம் கடந்த ஒரு போற்றத்தக்க நிலையில்!

கப்பல் தளத்தில் நின்றுக் கொண்டு இதைப் பற்றியெல்லாம் நான் விவாதித்துக் கொண்டிருந்த போது, ஆஸ்டஸ் பெட்லர் எங்களைக் கடந்து போய்க் கொண்டிருந்தார். சரியாக எட்வர்டையொட்டி ஆஸ்டஸ் கடக்கும் போது, நின்று, குனிந்து, கீழிருந்த ஒரு துண்டுச் சீட்டினை எடுத்து, அதனை எட்வர்டிடம் ஒப்படைத்தார் - 'எதையோ கீழே தவற விட்டிருக்கீங்க' என்ற அறிவிப்போடு.

அவர் பிறகு நிற்காமல் நடந்துப் போய் விட்டதால், இங்கு எட்வர்டுக்குள் இப்போது உடனடியாக உருவாகியிருந்த கலவரத்தை அவர் கவனித்திருக்கவில்லை. நான் கவனித்தேன். எதை அவர் கீழே போட்டிருந்தாரோ... அது இப்போது மீட்கப்பட்ட சேதி, எட்வர்டை அதிக அளவு கலவரத்துக்குள்ளாக்கியது. சகிக்க முடியாத அளவுக்கு நடுநடுங்கிப் போனார். அந்தத் துண்டுச் சீட்டினை ஒரு சிறு பந்தாய் கசக்கி உருட்டினார். எனக்குள் சந்தேகங்கள் நூறு மடங்காக பெருகின.

என் கண்களின் பிடிக்குள் அகப்பட்டவர், இதைக் கவனித்து விட்டு, படபடப்பாய் விளக்கம் தர முற்பட்டார்: ''ஒ- ஒ-ஒரு, துண்டு வரி - நான் எழுதிக் கொண்டிருந்த - க - க - கவிதையுடையது'' -உணர்ச்சியிழந்த புன்முறுவலோடு சொன்னார் அவர்.

''அப்படியா?'' என சாந்தமாய் நான் நுழைந்துக் கொண்டேன்.

ஒரு கவிதையின் துண்டு வரி! ம்ம்- தப்பிக்க வார்த்தைகளைத் தெரிந்தெடுப்பதில் லாயக்கற்றவர், எட்வர்ட்!

பிறகு உடனேயே ஏதோ ஒரு காரணத்தை முணுமுணுத்து விட்டுப் போய் விட்டார் அவர். ஓ... அந்தத் துண்டுச் சீட்டினைக் கண்டெடுத்தவராக, சர் ஆஸ்டஸ் பெட்லருக்குப் பதிலாக நான்... நான் ஏன் இருந்திருக்கக் கூடாது என ஏங்கினேன்... அப்படி ஏங்கினேன்! எனது சந்தேகப்பட்டியலிலிருந்து எட்வர்டை நிச்சயமாக விதிவிலக்காக்க முடியாது என்பது துல்லியமாயிற்று. அவரை, மூவரில் முதலாமவராகத் தூக்கி மேலே போட்டேன்.

சாப்பிட்டு முடித்த பிறகு காபிக்காக நான் எழுந்த போது, அங்கு, சர் ஆஸ்டஸ் பெட்லரும் திரு பகெட்டும், திருமதி ப்ளேர் மற்றும்

கலோனல் ரேஸ் ஆகியோரோடு உட்கார்ந்திருப்பதைக் கவனித்தேன். என்னைக் கவனித்த திருமதி ப்ளேர் புன்முறுவலோடு வரவேற்று அழைத்ததால் நானும் அவர்களோடு போய் இணைந்துக் கொண்டேன். இத்தாலி பற்றி எதுவோ பேசிக் கொண்டிருந்தார்கள்.

''ஆனா, இது, தவறான திசையைக் காட்டுது'' என்றார் மிஸஸ் ப்ளேர். ''அக்வா-கால்டா எனும் குடிநீர், நிச்சயமா குளிர் நீராத் தான் இருக்க முடியும்-சுடு நீரா அல்ல.''

''நீங்க லத்தீன் மொழியில பண்டிதர் கிடையாது, மிஸஸ்'' என்றார் ஆஸ்டஸ், புன்னகையோடு.

''இந்த ஆம்பிளைங்களுக்கு அவங்க தான் லத்தீனின் பிதாமகர்கள்னு நினைப்பு'' என்றார் திருமதி ப்ளேர். ''பழைய சர்ச்சுகளில் கல்வெட்டுகளிலுள்ள லத்தீன் வார்த்தைகளைக் கொஞ்சம் மொழி மாற்றம் செஞ்சுத் தரச் சொன்னா, ஒரு வார்த்தையைக் கூட ஆங்கிலத்துக்கு மாற்றித் தர முடியாது திண்டாடறதை நான் கவனிச்சிருக்கேன். முழிச்சு, தட்டுத் தடுமாறி எப்படியாவது இந்த வேலையிலிருந்து தப்பிச்சுடறாங்க.''

''சரி தான்'' என்றார் ரேஸ். ''எனக்கும் இப்படி நடந்ததுண்டு.''

''ஆனாலும், நான், இத்தாலியர்களை ரொம்ப விரும்பறேன்'' எனத் தொடரலானார் திருமதி ப்ளேர்: ''அவ்வளவு கீழ் பணிஞ்சு நடந்துப்பாங்க-நாமே குறுகிக் கூச்சப்பட்டுப் போற அளவுக்கு! ஏதாவது இடத்துக்குப் போக அவங்ககிட்டே வழி கேட்டுப் பாருங்க; 'நேரா போய், ரெண்டாவது வலதுல திரும்பி, அப்புறம் வர்ற மூணாவது இடதுல திரும்பி' என்றோ... இல்லே, இப்படி ஏதாவது நாம புரிஞ்சுக்கிற மாதிரி விளக்கியோ செய்யாம... அங்குலம் அங்குலமா எப்படிப் போகணும்னு அத்தனை விளாவாரியா விளக்குவாங்க; அத்தனையையும் புரிஞ்சுக்க முடியாம நீங்க முழிப்பீங்களா... அவ்ளோ தான், இது தாங்காம, மிகக் கருணையா உங்க கையைப் பிடிச்சு அழைச்சுக்கிட்டு, உங்க கூடவே அந்த இடம் வரைக்கும் வந்துடுவாங்க.''

''இது போல ஏதாவது அனுபவம் ஃப்ளாரன்ஸ்'ல உனக்கு நேர்ந்ததா, பகெட்?''-தனது காரியதரிசியை நோக்கி சிறு புன்முறுவலோடு திரும்பிக் கேட்டார் சர் ஆஸ்டஸ்.

ஏதோ காரணங்களுக்காக இக்கேள்வி பகெட்'டுக்கு அசௌகரியம் உண்டாக்கியது போலத் தோன்றியது. அவர் வார்த்தைகளில்

தடுமாறினார்... வீழ்த்தப்பட்டவரானார். ''ஓ- அப்படியே...தான் -ஓ, ஆமாமாம்-அப்படியே...தான் -ஆங், என்ன கேட்டீங்க ஸார்?!''

பிறகு முணுமுணுப்பாய் என்னவோ சொல்லியபடி எழுந்துக் கொண்டவர், மேஜையை விட்டே அகன்றார்.

''அப்படி உதவின யார் பெயரையோ தான் முணுமுணுத்திருக்கணும்'' என்று நம்பிக்கை தெரிவித்தார் திருமதி ப்ளேர். ''அவரைப் பார்த்தா - ஓ, நான் இப்படி ஒரு கருத்தை இப்ப சொல்லப் போவதற்கு மன்னிக்கணும், சர் ஆஸ்டஸ்-ஆனா அவரைப் பார்த்தா, என்னவோ யாரையோ இப்ப கொலை பண்ணப் போறவர் மாதிரி தெரியுது.''

''ஆமா. ரொம்ப ரொம்பச் சரி. இப்பனு இல்லே- எப்பவுமே! சட்ட திட்டங்களுக்குக் கட்டுப்பட்டு, மட்டு மரியாதையை அளவுக்கதிகமா காண்பித்து உழைக்கும் இது போன்ற ஜீவன்கள் இப்படித்தான்... எப்பவுமே அதிர்விலிருக்கும்.''

''அவர் உங்ககூட கொஞ்ச காலமா வேலைல இருக்கணும்னு நினைக்கிறேன், ஆங்?'' எனறார் கலோனல் ரேஸ்.

''ஆறு வருஷமா'' என்றார் சர் ஆஸ்டஸ் ஒரு நீண்டப் பெருமூச்சோடு.

''அவர் உங்களுக்கு ஒரு விலைமதிப்பற்ற உதவியா இருக்கணுமே'' என்றார் திருமதி ப்ளேர்.

''ஓ, விலைமதிப்பற்ற! ஆமாமாம்... ரொம்பவுமே!''- பகெட்டின் 'விலைமதிப்பற்ற' தன்மை, பரிதாபமான இவருக்குள் நிரந்தரமான அமைந்து விட்ட ரகசிய வலி என்பதை உணர்த்துவது போல, இப்போது இன்னும் மனமுடைந்துப் போனவராய்ச் சொன்னார் சர் ஆஸ்டஸ். பிறகு விறுவிறுப்பாய் பேச்சைத் தொடர்ந்தார்: ''ஆனா அவன் முகம், 'அப்படியேதும் தப்பு தண்டா உள்ள ஆளில்லை இவர்...' எனும் நம்பிக்கையை உங்களுக்கு அள்ளித் தரணுமே, மேடம்! கூடவே இருந்து கழுத்தறுக்கும் எந்த ஆளாலும் இப்படி இந்தப் பூனையும் பாலைக் குடிக்குமா எனும் வகையில் இருக்கவே முடியாது. என்னைப் பொறுத்த வரைக்கும், இந்தப் பகெட்டை மாதிரியே, வெளிப் பூச்சுக்கு இனிமையா தோன்றும் இன்னொரு கொலைகாரன் இருக்கானா'னு யோசிக்கும் போது, அந்த கிரிப்பன் இருக்கானில்லே - அவன் தான் உடனடியா என் கவனத்துக்கு வரான்...''

''ஏதோ ஒரு கப்பல் பிரயாணத்தின் போது அவன் பிடிபட்டான் இல்லே?'' முணுமுணுப்பாய் கேட்டார் திருமதி ப்ளேர்.

இப்போது, என்னவோ உடையும் ஒசை, சின்னதாய் பின்புறத்திலிருந்து வந்தது. நான் உடனே திரும்பினேன். எட்வர்ட் அவரது காபி கோப்பையைத் தவற விட்டிருந்தார்.

எங்களது கூட்டம் பிறகு சீக்கிரத்தில் கலைந்தது. திருமதி ப்ளேர் கிளம்பி தூங்குவதற்காக போனார். நான் உல்லாசமாய் இன்னும் கொஞ்ச நேரம் இருக்க, உலவும் பகுதிக்குப் போனேன். கலோனல் ரேஸ் என்னைத் தொடர்ந்தார்.

''நீங்க ஓர் ஏமாத்துப் பேர்வழி, மிஸ் பெட்டிங்ஃபெல்ட். நேற்று நடனத்தின் போது உங்களை நான் எல்லா இடத்திலும் தேடினேன்.''

''நான் சீக்கிரமே தூங்கப் போயிட்டேன்'' என விளக்கினேன் நான்.

''இன்னிக்கு ராத்திரியும் நேற்று போலவே தலைமறைவாயிடப் போறீங்களா? இல்லே, என் கூட ஆட வறீங்களா?''

''உங்களோட ஆடுவதில் நான் ரொம்ப மகிழ்ச்சியடைவேன்'' என்றேன் நான், வெட்கம் கூட!''ஆனா-திருமதி-ப்ளேர்---''

''ஓ, நம்ம நண்பர் திருமதி ப்ளேருக்கு, ஆடுவதிலெல்லாம் பிரியம் கிடையாது.''

''உங்களுக்கு இருக்கா?''

''உங்களோட ஆட!''

''ஓ!'' என்றேன் நான் சந்தோஷ நரம்பதிர.

எனக்குக் கலோனல் ரேஸ் பற்றி சிறு பயம் உண்டு. ஆயினும் நான் இப்போது மிகவும் மகிழ்ந்துக் கொண்டிருந்தேன். விஷய ஞானம்மிக்க வயசானப் பேராசிரியர்களிடம் அமர்ந்து, பாறையாய் மாறியிருக்கும் மண்டை ஓடுகளைப் பற்றிப் பேசி விவாதிப்பதை விட, இது, எத்தனையோ மேலான மனோஹரமான விஷயம்! கலோனல் ரேஸ், நான் எதிர்பார்த்துக் காத்துக் கிடந்த திடகாத்திரமான அதே சமயம் அமைதியான ஒரு ஹீரோவின் அச்சு அசலான பிரதி. நான் இவரைத் திருமணம் கூட செய்துக் கொள்ளலாம்! இன்னும் இது வரை இப்படி நான் கேட்கப்படவில்லை-உண்மை தான்-ஆனால், வயசுப் பெண்கள் ஒருத்திக்கு ஒருத்தி கேலியாய் சொல்லிக் கொள்வது போல-'தயாராய் இரு!' மேலும், எல்லாப் பெண்களுமே, எவ்வித விளக்கமும் தர இயலாமல், அவர்கள் சந்திக்கும் ஒவ்வொரு வசீகர ஆண் மகனையும் தன் கணவனாகி விடக் கூடாதா என்று தானே நினைத்துக் கொள்கிறார்கள்...?!

அன்று மாலை நான் அவருடன் பல முறை ஆடினேன். அவர் மிக நன்றாக ஆடினார். நடனம் முடிந்ததும், நான் படுக்கப் போகலாம் என

எண்ணிக் கொண்டிருக்கும் போது, அவர் கப்பலின் மேல் தளம் போய் ஒரு சிறு நடை நடக்கலாம் என ஆலோசித்தார். மேல் தளம் முழுவதையும் மூன்று முறை சுற்றி நடந்த நாங்கள், கடைசியாய் அங்கிருந்த இரண்டு நாற்காலிகளில் புதைந்தோம். கண்ணுக்கெட்டிய தூரம் வரை அங்கு வேறொருவர் இருக்கவில்லை. பைசா பெறாத விஷயங்களைப் பிடித்துக் கொண்டு நாங்களிருவரும் சற்று நேரம் பேசிக் கொண்டிருந்தோம்.

''நான் ஒரு தடவை உங்க அப்பாவை வந்து பார்த்திருக்கேன், மிஸ்... உங்களுக்கு இது தெரியுமா? அகழ்வாராய்வில் படு கெட்டியான விஷய ஞானம் கொண்ட இண்ட்ரஸ்டிங் மனுஷன்...அதே படிப்புல எனக்கும் அலாதி ஈர்ப்பு இருந்தது இன்னும் வசதியா போச்சு. என்னால முடிஞ்ச அளவுக்கு நானே கூட அந்த ஆய்வுகளை செஞ்சுப் பார்த்திருக்கேன். ஒரு சமயம்...ஃபாஸில் எனப்படும் பல கோடி ஆண்டுகளுக்கு முன்பு இறந்துப் போன உயிரினத்தின் மிச்ச எலும்புகள் உள்ள பகுதியில நான் ஆய்வு பண்ணிக்கிட்டிருந்த போது---''

எங்களுடைய உரையாடல் பிறகு மிகவும் தொழில்நுட்ப ரீதியாக மாறிப் போனது. கலோனல் ரேஸ் தன்னைப் பற்றி உயிரின ஆய்வில் உயர்வாய் சொல்லி கொண்டது ஒன்றும் தவறோ தற்பெருமையோ கிடையாது. இப்படிப்பில் நிறைய நிறைய விஷயங்களை அவர் தெரிந்து வைத்திருந்தார். அதே சமயம், அவர், இத்தனை விஷய ஞானம் உள்ள ஒருவன் செய்யவே வாய்ப்பில்லாத ஓரிரு தவறுகளை ஆங்காங்கே செய்தார்-இது எனக்கு அதிசயமாய் போயிற்று. ஞாபகத் தவறுதலா யிருக்கலாம் என நினைத்துக் கொண்டேன். பேசிக் கொண்டிருக்கும் போதே, ஓரிடத்தில், எவ்வித கலாச்சார முன்னேற்றமும் அற்ற காலகட்டத்தைப் போய், நாகரீக மனிதன் தோன்றி வளர்ச்சியடைந்த ஒரு காலகட்டத்துக்குப் பிறகு வந்த காலமாய் அடித்துப் பேசினார். இந்த முரண்பாடு, ஆய்வு செய்யும் அளவுக்கு விஷயம் தெரிந்த ஒருவர் செய்யக் கூடியதே அல்ல.

என் கேபினுக்கு நான் திரும்பியிருந்த போது மணி 12. இன்னும் விளங்காமலேயிருந்த அந்த முரண்பாடுகளைப் பற்றியே நான் சிந்தித்துக் கொண்டிருந்தேன். உரையாடலின் போது பீற்றிக் கொள்வதற்காக, தனக்குத் தெரிந்திருந்த ஓரிரு ஆய்வறிக்கைகளை வைத்துக் கொண்டு, தனக்கு எல்லாம் தெரிந்தது போல அவர் காட்டிக்

கொண்டிருந்திருப்பாரா? இந்த முடிவில் அர்த்தமில்லை என்று மறுப்பாய் தலையசைத்துக் கொண்டேன் நான்.

இப்படியே நான் மெல்ல தூக்கத்துக்குள் விழும் போது, என் மூளைக்குள் இன்னோர் எண்ணம் டாலடித்துக் கிளம்ப, தூக்கிவாரிப் போட்டு எழுந்து அமர்ந்தேன் நான். அவர், *எனக்குள் என்ன இருக்கிறது* என்பதைக் கிளறிப் பார்த்திருக்கிறாரா? நான் பேசிக் கொண்டிருந்த விஷயத்தில் எனக்கு நிஜமாகவே விஷய ஞானம் இருக்கிறதா என்று சோதித்துப் பார்க்க நடத்தப்பட்ட சிறு சிறு பரீட்சைகளா, அவர் காட்டிய அத்தடுமாற்றங்கள்?

இதையே இன்னொரு வகையில் சொல்ல வேண்டுமென்றால், நான், *போலிக் கலப்பற்ற ஓர் அசலான ஆனே பெட்டிங்ஃபெல்டாக இல்லை என்று என்னை சந்தேகப்பட்டிருக்கிறாரா?*

*அது ஏன்?*

# அத்தியாயம் - 12

(சர் ஆஸ்டஸ் பெட்லர் எம்.பி. டைரியிலிருந்து எடுத்தவை)

*கப்பல் பிரயாணத்தின் போதான வாழ்க்கையைப் பற்றி கொஞ்சம் சொல்லித்தான் ஆக வேண்டும். முதலில் அது அத்தனை அமைதி தருவது. அதிர்ஷ்டவசமாக என் நரைத்த முடி ஏற்படுத்தித் தரும் அனுகூலத்தால், ஒரு நிமிடம் கூட உட்கார விடாமல் ஓடி ஓடி விளையாட வேண்டிய பல பொழுதுபோக்கு விளையாட்டுக்களிலிருந்து நான் தவிர்க்கப்பட்டு விடுகிறேன். அப்பாடா!இப்படி உடம்பை வருத்திக் கொண்டு மாங்கு மாங்கென்று விளையாடுவதால் இதுகளுக்கு அப்படி என்ன தான் கேளிக்கை விளைந்து விடப் போகின்றது என்பது, இது போலவெல்லாம் விளையாட முடிந்த எனது சிறு பிராயத்திலிருந்தே விடை கிடைக்காது என்னுள் இருந்து வரும் ஒரு மர்மம். ஆனால், உலகத்தில் பல முட்டாள்கள் இருக்கத்தான் செய்கிறார்கள், 'பலவிதங்கள் கையாளப்படுகின்றன- ஆண்டவன் உலகத்தை ஆக்க', என்ற பொன்மொழியை வியந்தபடி, இத்தகையக் கூட்டத்திலிருந்து விலகியே இருந்து விடுவது தான் நலம்.*

*அதிர்ஷ்டவசமாக, குமட்டல், தலை சுற்றல் போன்ற சிக்கல்கள் அற்ற நான், ஓர் அற்புதமான கடல் பிரயாணி ஆகிறேன். பரிதாப பகெட், பாவம், அப்படி அல்ல. கடலைகளில் மெல்ல கப்பல் ஆடியபடி கிளம்ப ஆரம்பித்துமே பயல் கிலி கண்டு விடுகின்றான். காரியதரிசி என்று வந்துள்ள இரண்டாமவனும் 'கப்பல் சிக்கல்' உள்ளவனாகவே படுகின்றது. என்ன நடந்தாலும் பரவாயில்லை என்று இன்னமும் அவன் வெளியே தலைகாட்டாமலே இருக்கின்றான்! ஒரு வேளை 'கப்பல் சிக்கலாக' இல்லாமல், வகிக்கும் பதவியின் ரகசியம் காக்கும் உயர்தர நிபுணத்துவமாயிருக்குமோ! ஒரு பெரிய விடுதலை இதில் என்னவென்றால், அவனால் எனக்கு எவ்விதத் தொந்தரவுகளும் விளைவதில்லை என்பது தான்.*

*ஆக மொத்தத்தில் கப்பல் பிரயாணிகள் அனைவரும் ஒரு சரியான சொறிக் கூட்டம்-ரெண்டு பேரைத் தவிர. என்னுடன் பிரிட்ஜ் சீட்டாட்டம்*

*ஆடிய ஒருவர் மற்றும் பதவிசாகத் தோன்றும் திருமதி ப்ளேர். நகைச்சுவை உணர்வு படைத்தவர் என்ற பரிசினை வெல்லக் கூடிய ஒரு சில பெண்மணிகளில் இவரும் ஒருவர். அவருடன் பேசுவதை நான் அத்தனைக் கொண்டாடுகிறேன். இதனை நான் மேலும் பன்மடங்குக் கொண்டாடுவேன்-மிஸஸை அட்டை போல் ஒட்டிக் கொண்டே திரியும் அந்த நீளக் கால் ஊமையன் மட்டும் அவரோடு கூடவே எப்போதும் இருக்கா விட்டால்...! இந்தக் கலோனல் ரேஸ், மிஸஸ் ப்ளேரை ஈர்த்து வைத்திருக்கிறான் என்று என்னால் சொல்ல முடியாது. அவனைப் பொறுத்தமட்டில் ரேஸ், அழகன் தான்... ஆனால் சாக்கடை நீரைப் போல அப்படியொரு மந்தம். இளம் பெண்களும் நாவல் எழுதும் எழுத்தாளர்களும், அவர்களுக்குப் பிடித்தவர்களாக வர்ணிக்கும், வாய் பேசாத ஆனால் ஆஜானுபாகுவான் வகை இவன்.*

*மதிராவை விட்டு கப்பல் கிளம்பியதுமே பகெட்டுக்கு இருளடிக்க ஆரம்பித்து விட்டது. பேசாமல் படுத்துத் தொலைய வேண்டியது தானே; மாட்டான். உடம்பு முடியா விட்டாலும், கிணற்றுக்குள் இருந்துப் பேசுபவனைப் போல 'மொண மொண'வென்று அடுத்து செய்ய வேண்டிய வேலைகளைப் பற்றிப் பிதற்ற ஆரம்பித்து விட்டான். கப்பல் பிரயாணத்தின் போது எந்தப் பேய் பிடித்தவன் உட்கார்ந்து 'வேலை' செய்யப் போகின்றான்? ஆனால் இவன் பண்ணுவான். என் பதிப்பகத்தாருக்கு 'நினைவலைகள்' என்ற தலைப்பில், வரும் கோடைக் காலத்திற்குள் புத்தகம் ஒன்றினை எழுதித் தந்து விடுவதாய் சொல்லியிருப்பதென்னவோ உண்மை தான்... அதனால் என்ன? அனுபவ நினைவலைகள் பற்றியெல்லாம் என்னைப் போன்ற பழுத்த அனுபவஸ்தர்கள் எத்தனை தான் எழுதினாலும், வாங்கிப் படிப்பார் யார்? வேலையற்ற சில கிழங்கள். மேலும் என் நினைவலைகளில் அப்படி என்ன கிழிந்து விடப் போகின்றது? ம்ம். புகழ் பெற்றவர்கள் என்று பரவலாகக் கருதப்படும் சிலரை நான் என் வாழ்நாட்களில் கடந்து வந்திருக்கிறேன். பகெட்டின் துணை கொண்டு அவர்களைப் பற்றி ருசியற்ற சில குட்டிக் கதைகளை உருவாக்கி வைத்திருக்கிறேன். இந்தப் புத்தகம் எழுதும் வேலையில் உள்ள நிஜப்பிரச்சினையே- பகெட்டின் பொய்க் கலப்பற்ற உண்மை எழுத்து தான். நான் பார்த்திருக்க வேண்டிய ஆனால் அதற்கு வாய்ப்பற்றுப் போய் விட்ட மிகப் பிரபலமானவர்களைப் பற்றி, புத்தக விற்பனை கருதி, குட்டிக் கதைகளை உருவாக்கி சேர்க்க விட மாட்டான். எழுத்தில் பொய்யே கூடாதாம்!*

*இத்தனைக்கும் மேலே அவனிடம் கனிவு காட்ட நான் முயற்சித்தேன்!*

*''நீ இன்னும் நொறுங்கிப் போய் தான் தெரியறேப்பா!''-சரளமாய் குறிப்பிட்டேன் நான். ''சூரியன் ஜம்முனு மேலே படும்படி இருக்கையை இழுத்துப் போட்டுக்கிட்டு அமைதியா உட்கார்ந்துக் கொள்வது தான், உனக்கு இப்போதைய அத்தியாவசியத் தேவை. நோ- மேற்கொண்டு ஒரு வார்த்தை கூடாது. பண்ண வேண்டிய பாக்கி வேலை, அது காத்திருக்கட்டும்.''*

*இனி இதுபற்றித் தொடர முடியாமல் அவனுக்கு ஆகி விட்டாலும், அவனை அரித்துக் கொண்டிருக்கும் அடுத்த பிரச்சினை என்ன என்பது எனக்குத் தெரியும்... ஒரு புது கேபின்!''உங்க அறையில வேலை பண்ணவே முடியலே, சர் ஆஸ்டஸ். அதுல முழுக்க முழுக்க ட்ரங்கு பெட்டிகள்.''*

*நான் எந்த வேலையும் பண்ண வேண்டாம் என்று இங்கே கதறிக் கொண்டிருக்க அவனுக்கு அதற்கு வசதியாய் ஓர் அறை இல்லையே என்ற தாவாந்திரம்! பகெட் சொல்வதை வைத்து, நேயர்கள், அப் பெட்டிகள் என்னவோ அங்கே இருக்கவே கூடாத அசௌகரியங்கள் என்று நினைத்துக் கொள்ள வேண்டாம்.*

*கப்பல் பிரயாணத்தின் போது அடிக்கடி உடை மாற்றிக் கொள்ள வேண்டிய தேவைகள் எழும்... அதற்கு வசதியாக துணிகள் வைக்கப் பட்டுள்ள பெட்டிகள் அவை என்று, அவன் அறிந்திராத விஷயத்தை சற்று நீளமாக நான் விளக்கினேன். இப்படி நான் விளக்க முனையும் போதெல்லாம் அவன் வெளிறிப் போய் சிரித்து என் முயற்சியையே கேலிக் கூத்தாய் ஆக்குவதை, இப்போதும் செய்தான். பிறகு கையில் அவன் வைத்திருந்த பிரச்சினையை விடாது எடுத்துக் கொண்டான்.*

*''எலிப் பொறி போன்ற என் கேபினுக்குள்ளே என்னால வேலை செய்ய முடியாது, சர்!''*

*உள்ளதுக்குள்ளேயே பிரமாதமான அறை தான், எம் பி-யின் காரியதரிசி எனும் முறையில் இவனுக்குத் தரப்படும் -அதைத் தான் எலிப்பொறி என்கிறது இந்த பிரகஸ்பதி.*

*''அப்படினா உன் அறையில கூடுதலா இருக்கிற எதையாச்சும் கொண்டு வந்து என் கேபின்லே போடேன், பகெட்''-ஜாடையாய் சொன்னேன் நான். ஆனால் எப்போதும் அலறிப் புடைத்துக் கொண்டிருக்கும் பகெட் போன்ற ஆட்களிடம் ஜாடை பேச்சு மிக ஆபத்தானது என்பது எனக்குத் தெரியாமல் போயிற்று. அணையும் என்று நான் எதிர்பார்த்து சொன்னேன்... ஆனால் உடனடியாய் அவன் முகம் பிரகாசமானது.*

*''அப்படியா! அப்படினா அந்த ட்ரங்க் பெட்டிகள் மற்றும் டைப் அடிக்கும் மிஷின்... இந்த ரெண்டுங்க கிட்டேயிருந்தும் எனக்கு சுதந்திரம் கிடைச்சா---''*

*ட்ரங்க் பெட்டிகள், தாராளமாக பல கிலோ எடைகள் இருக்கும். அதை ஓரிடத்திலிருந்து இன்னோர் இடத்துக்குத் தூக்கச் சொன்னால் கடுப்பாகி விடுவார்கள் போர்ட்டர்கள். அப்படிப்பட்ட விஷயத்தை என் தலையில் போட துடிக்குது, இது! அதிலிருக்கும் துணிமணிகள் இத்யாதிகள் என் சொத்து என்பது பகெட் எண்ணம். ஆனால் எனக்கோ, இப்படிப்பட்ட இக்கட்டான விஷயங்களிலிருந்து என்னைக் காப்பாற்றுவது தான் ஒரு காரியதரிசியின் முக்கியமான வேலை என்பது எண்ணம்!*

*இப்படி என்னை மடக்கிக் போட்டு ஜெயித்தது அவன் தான். நான் அவசரமாக, ''நாம இன்னொரு கேபின் கேட்டு வாங்கிப்போம்'' என்று விட்டேன்.*

*இந்த ஏற்பாடு படு சுலபமான ஒன்று. மேற்கொண்டு எவ்வித சிக்கல்களும் இதில் விளைந்திருக்கக் கூடாது. ஆனால் பகெட்டிடம் முடியுமா? இதிலும் சிக்கல் செய்தான். ச்சே.*

*இஞ்சித் தின்ன குரங்குப் போல முகத்தை வைத்துக் கொண்டு மறுநாள் காலையிலேயே என் உயிர் வாங்க வந்து நின்றான் பகெட்.*

*''நாம வேலை பார்க்க, 17 ஆம் எண் கேபிளை வெச்சுக்கலாம்னு நீங்க சொன்னீங்க... நினைவிருக்கா?''*

*''அதுக்கென்ன இப்பவே, இந்தக் காலையிலே, பகெட்? திஸ் ஈஸ் டூ மச்! என்ன... கொண்டு போன பெட்டிங்க எல்லாம் ரூம் நிலைக்கதவிலேயே மாட்டிக்கிச்சா?''*

*''எல்லாம் கேபின் கதவும் ஒரே அளவாத் தானிருக்கு'' என்று முக்கியத்துவம் தந்து பதிலளித்தான் பகெட். ''ஆனா, சர் ஆஸ்டஸ், நான் சொல்றேன், ப்ளீஸ் கேளுங்க. அந்த கேபின்ல என்னவோ விசித்திரமான மர்மமிருக்கு.''*

*பேய்க் கதைகள் படித்தது இப்போது என் நினைவுக்குள் எட்டிப் பார்க்க,''அங்கே பேயிருக்குனு நீ சொன்னா'' என்று கடுப்பாய் கத்தி விட்டு, ''விட்டுத் தொலை பரவாயில்லை. நாம அங்கே போறதில்லே, சரியா? எந்த டைப் மிஷினையும் பேய் வந்து புடிச்சதா சரித்திர மில்லே!'' என முடித்தேன்.*

*பேய் பிசாசு போன்ற எதுவுமில்லை என்ற இவன், அது தனக்குக் கிடைக்காததால் 'விசித்திரமானதாய்' சொல்லியிருக்கிறான். அலங்கரிக் கப்பட்ட ஒரு நெடுங்கதையை இதற்கு சொன்னான். உண்மையாய்*

பார்க்கப் போனால், இவனும், எட்வர்ட் எனும் கிருஸ்துவரும், பெட்டிங்ஃபெல்ட் எனும் இளையவளும், அந்த ஒரு கேபினுக்காக ஒருத்தருக்கொருத்தர் அடித்துக் கொள்ளுமளவுக்குப் போயிருக் கிறார்கள். இதில் இளைய பெண் தான் வெற்றி பெற்றுள்ளாள் என்பதை நான் வேறு சொல்லத் தேவையில்லை. இதனால் வெந்துக் கிடந்தான் பகெட்.

''13ம் 28ம் பிரமாதமான கேபின்கள். ஆனா அந்த ரெண்டு ஜென்மங்களும் அவற்றை ஒத்துக்க மாட்டாங்க.''

''ஓஹோ...'' என்று ஒரு கொட்டாவியைச் சொடுக்கிக் கொண்டே, ''இங்கே மட்டும் என்ன வாழுதாம்?'' என்றேன் நான்.

கேலிப் பொருளாய் என்னைப் பார்த்தான் அவன். ''என்னிடம் கேபின் 17தான் பிடிக்க வேண்டும் அப்படினு நீங்க தான் கட்டாயமா சொன்னீங்க.''

சொன்னதை அப்படியே சொல்லும் கிளப்பிள்ளைத் தனமிருந்தது பகெட்டிடம்.

கிண்டலைத் தூண்டும் விதமாய், ''என்னருமை நண்பனே'' என நாடகத்தனமாய் விளித்த நான், ''எண் 17னு சொன்னேன். அதுக்கென்னப்பா இப்போ! அந்த அறை காலியாயிருப்பதை அறிந்ததால சொன்னேன். அதுக்காக உயிரைக் கொடுத்து வாங்கிட்டு வரவா சொன்னேன்? 13 அல்லது 28... எதுவாயிருந்தாலும் நமக்கு உதவியா இருந்திருக்குமே'' என்றேன்.

காயப்பட்டு விட்டவனாய் தோன்றினான் அவன். ''அதுக்கும் மேலேயும் விஷயங்க அங்கே இருக்கு'' என்றுவிடாது பிடித்த படியிருந்தான் பகெட். ''மிஸ் பெட்டிங்ஃபெல்ட் அந்த கேபின்ல இடம் பிடிச்சாங்க. ஆனா இன்னிக்குக் காலையில எட்வர்ட் அதிலிருந்து பதுங்கிப் பதுங்கி வெளியே வருவதை நான் பார்த்தேன்.''

இப்போது அவனை நான் மிகக் கடுமையாய் பார்த்தேன். ''மறுபடியும் இப்போ உண்மையாவே சொல்றேன், பகெட்...திஸ் ஈஸ் டூ மச். அந்த எட்வர்ட்-அவர் ஒரு சேவை நிறுவனம் சார்ந்தவர்... மதகுரு வகை. பார்த்தா விஷம் நிறைந்த விஷமக்காரனா தெரிஞ்சாலும்- அவருக்கும், கவர்ச்சிகரமா இப்படியும் அப்படியும் சுற்றிக்கிட்டிருக்கும் இந்தக் குழந்தை பெட்டிங்ஃபெல்ட்'க்கும் இடையிலே ஏதாவது கசமுசானு பிரச்சினையை நீ எழுப்பினே...மவனே, வேணாம். அதுல ஒரு வார்த்தையை நான் நம்பறதாயில்லே'' என்று அடிதடியாய் பேசினேன். ''ஆனே பெட்டிங்ஃபெல்ட் அதியற்புதமான ஒரு பொண்ணு-யாருக்கும் சுலபத்தல வாய்க்காத அந்தக் கொக்குக் கால்களுடன்! இந்தக் கப்பல்ல இருக்கிற பொம்பிளைக்

*கூட்டத்துலேயே, ஊஃப்...சுண்டியிழுக்கிற நெட்டைக் கால்கள் அவளுக்கு மட்டும் தானிருக்கு.''*

*ஆனே பெட்டிங்ஃபெல்ட்'டின் கால்களுக்கு நான் தரும் முக்கியத்துவத்தைப் பகெட் ருசிக்கவில்லை. நான் இப்படி நினைப்பது மிக அற்பம் என்பது அவன் எண்ணம். வெறுப்பானான். வெறுப்பாகும் பகெட் எனக்கு வேண்டப்பட்டவன் ஆகையால் அதனை இன்னும் ஏற்றி விடும் தொனியில் தொடர்ந்தேன்: ''அவகூட உனக்கு அறிமுகம் இருப்பதால், நாளைக்கு ராத்திரி நம்மளோட அவ சாப்பிட வராளானு. கேளு நாளைக்கு மாறுவேடப் போட்டியிருக்கு. கப்பல்ல. ஆங்... நீ கீழ்ப்பகுதியில இருக்கிற துணிக்கடைகளுக்குப் போய் எனக்குப் பொருந்தற மாதிரி மாறுவேடத்துக்கு ஏதாவது வாங்கி வா.''*

*பயந்துப் போய் விட்ட குரலில், ''நீங்களா மாறுவேடத்துல போய் அங்கே நிற்கப் போவது?'' என்றான்.*

*நான் வகிக்கும் பதவிக்கு இது பொருந்தவே பொருந்தாத ஒன்று என்பது அவனுடைய கருத்தாய் பிரதிபலித்தது. அதிர்ந்து வலி கொண்டவனானான் அவன். இப்படி எல்லாவற்றுக்குமா ஒருத்தன் காயமாவான்?! மாறுவேட அரிதாரம் பூசிக் கொண்டு போய் நின்று ஆடுவ தெல்லாம், எனக்குத் துளியும் ஒத்து வராத விருப்பமற்ற சங்கதிகள்... ஆனால், இந்த பகெட்டுக்கு நான் சொன்ன இந்தத் திட்டம் வெறுப்பையும் மன இறுக்கத்தையும் உண்டு பண்ணித் தருகின்றதா- அப்போது, செய்!*

*''என்ன சொல்ல வரே?'' என்றேன் நான். '' நான் மாறுவேட ஒப்பனை போட்டுக்கத் தான் போறேன்'' என்றேன். ''நீயும்!''*

*பகெட் நடுநடுங்கி விட்டான்.*

*''ஆகவே கீழே துணிக்கடைகளுக்குப் போய் இது பற்றி முடிவு பண்ணு'' என்று முடித்தேன் நான்.*

*கண்களால் என் உடம்பை அளவெடுத்தபடி, ''அங்கே பெரிய சைஸெல்லாம் இருக்காதுனு நினைக்கிறேன்'' என்றான் பரிதாபமாய்.*

*இதைக் காதுகளில் போட்டுக் கொள்ளாதவனாய், ''ராத்திரி சாப்பாட்டுக்கு ஆறு பேர் உட்காருகிற ஒரு டேபிளை ரிஸர்வ் பண்ணிடு'' என்றேன் நான். ''கேப்டனை அழைப்போம்'' என்ற நான், பிறகு ஆனே என்று சொல்லாமல் பகெட்டின் படபடப்பு மீட்க முடியாது பெருகும்படியாய், ''அந்த அற்புதமான கொக்குக் கால்கள் கொண்ட பொண்ணு'' என்றேன்! ''அப்புறம், மிஸஸ் ப்ளேர்---''*

''கலோனல் ரேஸ் இல்லாம ப்ளேரை மட்டும் நீங்க கூப்பிட முடியாது'' என இடை புகுந்து விளக்கினான் பகெட். ''அவர் இவங்களை சாப்பாட்டுக்குக் கூப்பிட்டிருக்கார்-எனக்குத் தெரியும்.''

பகெட்டுக்கு எப்போதுமே எல்லாமும் தெரிகின்றன!

நான் வெளிப்படையாய் வெறுப்பானேன். ''எவன், அவன், ரேஸ்?''

சற்று முன் நான் சொன்னது போலவே, பகெட்டுக்கு எப்போதுமே எல்லாமும் தெரிகின்றன-அல்லது தெரிந்திருப்பது போல் நினைப்பு. மர்மமாய் முழித்தான்.

''சொல்லேன்...''

''அவனை, ரகசிய சேவைகளில் ஈடுபடுபவன் அப்படினு சொல்றாங்க, சர் ஆஸ்டஸ். எதையும் எதிர்ப்பானாம். ஆனாலும் எனக்கு சரிவர முழுக்கத் தெரியலே''- இப்படிச் சொல்லி விட்டு என்னருகே வந்து குனிந்து கொஞ்சமும் தேவையே அற்று இப்போது குரலை வேறு தாழ்த்திக் கொண்டவன், சொன்னான்: ''என்னைக் கேட்டீங்கன்னா... இந்தப் பிரயாண சமாச்சாரம் சம்பந்தப்பட்ட எல்லாமுமே விளங்கா ரகசியமாத் தானிருக்கு, சர்! நாம கிளம்பறதுக்கு முன்னாடி எனக்கு ஏற்பட்ட நிலைமையை கொஞ்சம் சிந்திச்சுப் பாருங்க---''

''நிறுத்து நிறுத்து'' என்று தாளவே தாளாது கடுமையாய் இடைமறித்தேன் நான். ''உன்னைக் கண்ட்ரோல் பண்ண என்னால முடியலேப்பா! அது பித்தம் சம்பந்தப்பட்ட ரோதனை. உனக்கு ஏற்கெனவே பித்த மயக்கம் உண்டு.''

பகெட் கொஞ்சமாய் பயந்து பின்வாங்கினான். ''வழக்கமா வருவது போன்ற பித்த மயக்கமா தெரியலே இது. இந்தத் தடவை---''

''புண்ணியமா போகும்ப்பா'' என அழாதக் குறையாய் சொன்ன நான், ''அது சம்பந்தமான விளக்கங்களுக்குப் போகாதே, பகெட்'' என்றேன். ''அதையெல்லாம் நான் கேட்க விரும்பலே.''

''சரி, சர் ஆஸ்டஸ். ஆனா நான் வேணும்னே விஷம் வைக்கப்பட்டுள்ளேன் என்பது தான் என் நம்பிக்கை.''

''அடப்பாவி'' என்றேன் நான். ''நீ ரேபர்ன் கிட்டே பேசினியா?''

இதற்கு அவன் மறுப்பு தெரிவிக்கவில்லை. ''என்னவாயிருந்தா என்ன சர் ஆஸ்டஸ். அவன் அப்படித்தான் நினைக்கிறான்-மேலும் இதைப் பற்றியெல்லாம் தெரிஞ்சுக்கும் திறமை அவனுக்கு இருக்கலாம்.''

''அது சரி...எங்கே அந்தப் பய?''-கேட்டேன் நான். ''கப்பல்ல ஏறினதிலிருந்து என் கண்ல அவன் ஆப்பிடலே.''

''உடம்புக்கு சரியில்லேனு சொல்லிக்கிட்டு அவனோட கேபினுக் குள்ளேயே கிடக்கான்,சர் ஆஸ்டஸ்'' என்ற பகெட்டின் குரல் மறுபடியும் அமுங்கியது. ''ஆனா அது சும்மா என்பது என் கணிப்பு. அப்பத்தானே தொந்தரவு ஏதுமில்லாம கண்காணிச்சுக்கிட்டே இருக்க முடியும்.''

''கண்காணிப்பா?''

''உங்க பாதுகாப்பை, சர் ஆஸ்டஸ். உங்க மேலே யாராவது தாக்க வந்தா...?!''

''உனக்கு என்னல்லாம் நினைப்புங்க வருது, பகெட்'' என்றேன் நான். ''உன்னைப் போலவே உன் கற்பனைகளும் இஷ்டத்துக்கு ஓடுது. நான் மட்டும் நீயாயிருந்தேன்னு வெச்சுக்கோ... மாறுவேடப் போட்டிக்கு தலையற்ற ஒரு முண்டமா போவேன், தெரியுமா! சோகமே உருவான உன் முகரையின் அழகுக்கு அது அவ்வளவு பொருந்தி நிற்கும்!''

இது, அவனை அப்படியே வாயடைத்துப் போட்டது- இப்போதைக்கு. நான் கிளம்பி வெளியே போனேன். மதகுரு பாதிரியார் போன்ற வேலையிலிருக்கும் எட்வர்டுடன் ஆழ்ந்துப் பேசிக் கொண்டிருந்தாள் மிஸ் பெட்டிங்ஃபெல்ட். பெண்கள் எப்போதுமே பாதிரியார்களை வட்டமடித்து விடுகிறார்கள்.

என் போன்ற பதவி வகிப்பவர்கள் பலர் கூடியிருக்கும் பகுதியில் குனிந்து பொறுக்குவதெல்லாம் செய்ய விரும்புவதில்லை என்றாலும், பாதிரி போன்ற அவரின் காலடியில் விழுந்துக் கிடந்த ஒரு துண்டுச் சீட்டினை நான் குனிந்து எடுக்கத் தான் செய்தேன். இந்த உதவிக்கு ஒரு வார்த்தை நன்றி கூட அவரிடமிருந்து எனக்குக் கிடைக்கவில்லை. கையில் கிடைத்து விட்ட துருதுருப்பில் அதில் என்ன தான் எழுதியிருக்கிறது என்பதைப் பார்ப்பதை என்னால் தவிர்க்க இயலவில்லை. அதில் ஒரே ஒரு வாக்கியம் தானிருந்தது.

'தனியொரு ஆளாய் விளையாடிப் பார்க்க நினைக்காதே... அப்படிச் செய்தால் அது மிக மோசமாய் உனக்கு முடியும்.'

அது சரி... ஒரு பாதிரி போன்றவருக்கு வர வேண்டிய குறிப்புத் தானிது! ஆமாம்... யாரிந்த எட்வர்ட் என்பது எனக்கு ஆச்சரியமாயுள்ளது! பால் போல காருண்யம் மிகுந்து தோன்றுகிறான். ஆனால் தோற்றங்கள் நம்மை மோசம் செய்துவிட வல்லவை. வேறு வழியில்லை... அவரைப் பற்றி பகெட்டிடம் தான் விசாரிக்க வேண்டும். பகெட்டுக்கு எப்போதும் எல்லாமும் தெரிந்து விடுகின்றன.

திருமதி ப்ளேருக்குப் பக்கத்திலிருந்த சாய்வு நாற்காலியில், அவர் ரேஸுடன் செய்துக் கொண்டிருந்த வம்படிப்பை நிறுத்தி விட்டு என் பக்கமாய் திரும்பிக் கொள்ளும்படி, மெதுவாய் சாய்ந்து அமர்ந்துக்

கொண்டேன். அப்போது பாதிரிமார்கள் போன்ற பணியாற்றும் இந்த 'பாஸ்டர்கள்' எல்லாம் தற்காலங்களில் எப்படிப்பட்டவர்கள் என்றே விளங்குவதில்லை என கருத்து சொன்னேன்.

பிறகு மாறுவேட விளையாட்டு நடக்கவுள்ள இரவில் என்னுடன் சேர்ந்து சாப்பாட்டில் பங்கெடுத்துக் கொள்ளுமாறு அவரை நான் கேட்டுக் கொண்டேன். எப்படியோ ஒரு வழியில், ரேஸும் இந்த அழைப்பில் உட்படுத்தப்பட்டு விட்டார்.

மதியச் சாப்பாடு முடிந்ததும், பெட்டிங்ஃபெல்ட் பொண்ணும், ஒரு கோப்பை தேநீரோடு வந்து எங்களுடன் சேர்ந்துக் கொண்டாள். அவள் கால்கள் தான்-கால்கள். கப்பலிலேயே அதீத வசீகரம் கொண்டவை அவை தான். அவளையும் நான் இரவுச் சாப்பாட்டில் கலந்துக் கொண்டு மகிழ்ச்சியூட்டும்படிக் கேட்டுக் கொள்ளத்தான் போகிறேன்.

பகெட் பயல்,ஃப்ளாரன்ஸில் அப்படி என்னவெல்லாம் பண்ணிக் கொண்டிருந்தான் என்பதை முழுக்கவும் தெரிந்துக் கொள்வதில் நான் மிக மிக ஆவலாயிருந்தேன்; அதனை இந்த இரவு விருந்தின் போது கேட்டு விட வேண்டும். இத்தாலி என்று எப்போது குறிப்பிட்டாலும் போதும்-துகள் துக்ள்களாக ஆகி விடுகின்றான். அவன் எந்த அளவுக்குத் தீவிரமாய் மரியாதை தந்து தன்னுடைய எஜமானனுக்கு பணியாற்று வான் என்பது மட்டும் அனுபவபூர்வமாக எனக்குத் தெரியாமல் இருந்திருந்தால்--- அவனுடைய ரகசியம் பொதிந்த 'முக லட்சணத்துக்கு', அவனை நிச்சயமாய் நான் ஏதோ ஒரு சரிப்பட்டு வராத தப்பான விஷயத்தோடு தொடர்புள்ளவனாகவே கருதியிருப்பேன்...

பகெட்-ஒரு ரகசிய குற்றத்தோடு! சூப்பர்!

# அத்தியாயம் - 13

(சர் ஆஸ்டஸ் பெட்லர் எம்.பி டைரியிலிருந்து எடுத்தவை)

*ஆர்வத்தைக் கிண்டி விடும், மாலைப்பொழுதாய் அமைந்தது அது.*

*கப்பலிலிருந்த ஒரு சில துணிக்கடைகளியிலிருந்து மாறுவேடத் துக்காக எனக்குப் பொருந்திய ஒரே ஓர் உடை-'டெட்டி பேர்' உடையாகும். கூதலடிக்கும் இனிய இங்கிலாந்தின் குளிர்கால இரவுப் பொழுதில் சில இளைய பெண்களோடு சேர்ந்து களித்தாட நான் கரடி போல வேடமிட்டு வந்தாலும் எனக்குப் பரவாயில்லை தான்! ஒரு கரடியாகவே நான் மாறிப் போய் வெளுத்துக் கட்டி விட்டேன் என்று புகழ்ந்துரைத்து எனக்கு முதல் பரிசினை அறிவித்தார்கள்.*

*திருமதி ப்ளேர் வேஷமிட மறுத்து விட்டார். இந்த விஷயத்தில் அப்படியே பகெட்டோடு ஒத்துப் போனார் அவர். கலோனல் ரேஸைச் சொல்ல வேண்டுமா... திருமதி ப்ளேரின் முடிவை அடியொற்றித் தொடர்ந்து விட்டார். மிஸ் ஆனே, ஒரு நாடாடிப் பெண் போன்ற உடையலங்காரத்தை அவளுக்குப் பொருந்துமாறு பிரத்யேகமாய் தெரிந்தெடுத்தணிந்து, அசாதாரண அழகோடு மிளிர்ந்தாள். தலை உடைக்கிற வலி என்று சொன்ன பகெட் நடனத்தில் பங்கேற்க வரவில்லை. அவனுக்கு மாற்றாக, திருத்தமாய் தெரிந்த ஒரு குள்ள இளைஞனை [ரீவ்ஸ்] என் கூடயிருக்குமாறு நான் அழைத்துக் கொண்டேன். தென் ஆப்பிரிக்க உழைப்பாளி கழகத்தின் தொண்டன் அவன். அவனை விட்டு விடாமல் ஆட்டம் முழுக்க வைத்துக் கொள்ளத் தான் போகிறேன்- உழைப்பாளர்கட்சியைச் சேர்ந்த அவன், -தென் ஆப்பரிக்க இன மத கலவரப் பிரச்சினைகள் பற்றி எனக்குத் தேவைப்படும் சமாச்சாரங்களையும் தகவல்களையும் அவன் தவறாது தந்து உதவிக் கொண்டிருப்பதால்! கீச்ணஞீ என்றழைக்கப்படும் தென் ஆப்பிரிக்க நிலப்பிரச்சினை அக்கப்போர் குறித்து நான் அதிகம் தெரிந்துக் கொள்ள விரும்புகிறேன்.*

*நடனமாடுவதென்பது ஒரு கஷ்டமான வேலை. நான் இரண்டு முறை ஆனே பெட்டிங்ஃபெல்ட்'டுடன் ஆடினேன்... அவற்றை விரும்பிவதாக*

அவள் காட்டிக் கொள்ள வேண்டியதாயிற்று. ஒரு முறை திருமதி ப்ளேருடன் சேர்ந்து ஆடினேன்... அவரிடம் எவ்வித ஆட்சேபணைகளும் எழவில்லை. இவர்கள் தவிரவும், அழகான அமைப்பால் என்னை நிறுத்திய பல இளம் பெண்களை என் நடனத்துக்கு இரையாக்கிக் கொண்டேன்!

பிறகு சாப்பிட எல்லோரும் கீழிறங்கிப் போனோம். அவரவர் களுக்கு வேண்டிய பதார்த்தங்களை வெயிட்டரிடம் சொல்லிக் கொண்டோம். இது, இறுகியேக் கிடந்த கலோனல் ரேஸின் உதடு இறுக்கத்தைத் தளர்த்த வழி செய்துத் தருவதாயும் அமைந்தது. வாயடைத்தே கிடப்பதிலிருந்து சற்று இளகி மனுஷன் மெல்லப் பேசுவதில் இறங்கினான். சற்று நேரம் இந்த மாற்றம் என்னை வியக்க வைத்தது. பிறகு, இவ்விருந்தில் அனைவரையும் ஈர்க்கும் உயிர்ப்பாய் தற்போது மாறியிருப்பது, நானல்ல... திரு ரேஸ் தான் என்பது உறைத்தது! தினசரி நடப்பவற்றை ஒரு டைரியில் குறிப்பெடுத்து வைப்பது மிக நல்லது என சற்று நீளமான விளக்கங்கள் தந்து என்னிடம் தெரிவித்தார், அவர். ''வெளிப்படையா நீங்க சொல்ல விரும்பாத... ஆனா இன்றைய நாட்டு நடப்புகள்ல உங்களுக்குள்ள தனிப்பட்ட கருத்துக்ளைப் பதிந்து வைக்க இது ரொம்ப உதவும். ''நம் மனசுக்கடி யிலிருக்கும் முடிவான ஆசைகளையும் கருத்துக்களையும் பதிவது-அத்தனை சுகானுபவம்.''

''யாருக்கு? நமக்கா? இல்லே, ஒரு மனோ நல நிபுணருக்கா?''

இப்போது, ''உங்க வாழ்க்கை பல ருசிகரமான சம்பவங்களால நிறைஞ்சிருக்கணுமே, கலோனல் ரேஸ்'' என்றாள் ஆனே, அவரை தனது அகண்ட விழிகளால் ஆர்வமாய் முறைத்தபடி.

இப்படித் தான் செய்து விடுகிறார்கள், இந்தப் பெண்கள்!கதை சொல்லும்படி வேண்டி- அதை ஆசையுடன் கேட்பது போல காட்டி-பிறகு பாராட்டுவது போல நெருங்கி-ஊஃப்...!

இந்தப் பெண்ணும் ரேஸை அவளுடைய பாதைக்குக் கொண்டு வந்தே விட்டாள். அவர் சிங்கக் கதைகளைச் சொல்ல ஆரம்பித்தார். பெருமளவில் சிங்கங்களைச் சுட்டுள்ள ஓர் ஆள், நிச்சயமாய் அவனைச் சுற்றியுள்ள ஏனைய ஆடவர்களை விட, மானாவாரியாய் அவிழ்த்து விட நிறைய சாகசங்கள் கொண்டவனாகின்றான். நானும் ஒரு சிங்கக் கதையை எடுத்து விட வேண்டிய தருணமிது என்பதை உணர்தேன் நான். செம வீரமான ஒரு நெடுங்கதை.

''இது...'' என்று துவங்கிய நான்,''நான் கேட்ட பரபரப்பான கதை ஒண்ணை நினைவுபடுத்துது'' என்றேன். தொடரலானேன்:'' என் நண்பன் ஒருவன், கிழக்கு ஆப்பரிக்கால ஏதோ ஒரு பகுதிக்கு வேட்டையாடும்

படலத்துக்காகப் புறப்பட்டுப் போயிருந்தான். ஒரு நாள் ராத்திரி என்னவோ காரணத்துக்காக கூடாரத்தைத் திறந்துக்கிட்டு வெளியே வந்துள்ள அவன், கீழ் ஸ்தாயியில ஒலித்த உறுமலைக் கேட்டுட்டு நடுங்கிப் போயிருக்கான். உடனடியாய் திரும்பிப் பார்த்த அவன், அங்கே, காலைப் பிராண்டிக்கிட்டுப் பாயத் தயாரா நின்ன ஒரு சிங்கத்தைப் பார்த்திருக்கான். கையோட நீளத் துப்பாக்கியை அவன் இப்ப எடுத்து வரலே. இதை மனசுக்குள்ளே நினைச்சபடியே, உடனடியா குனிந்து அவன் உட்கார்ந்து விட, அவனோட வலப்பக்கமா தலையை ஒட்டிப் பாஞ்சிருக்கு சிங்கம். இரையை விட்டு விட்டதால வெறுப்பான அந்த மிருகம், கர்ண கொடூரமா ஓர் உறுமலை வெளியிட்டுட்டு, இன்னொரு தடவை ஸ்பிரிங்காகத் தாவ தயாராகியிருக்கு. மறுபடியும் அவன் மின்னல் வேகத்துல கீழே படுத்து விட... அது வல'ப்பக்கமா குறி தவறி பாய்ந்து போய் விழுந்திருக்கு. இது மூணாவது முறை இடம்பெறும்போது கூடாரத்தின் கதவு பக்கத்துல அவன் இருந்ததாலே துள்ளிக் குதுச்சு உள்ளே ஓடிய அவன், நீளத் துப்பாக்கியைக் கையகப்படுத்தியிருக்கான். மறுபடியும் வெளியே, கையில துப்பாக்கியோட அவன் வந்தப்போ, சிங்கம் காணாமப் போயிடுச்சு. இது அவனைப் புரியாப் புதிரா ஆக்கியிருக்கு.

''கூடாரத்துக்குப் பின்னாடி இருந்த சிறு மறைவிடத்தை உடனே போய் அவன் பார்த்திருக்கான். அங்கே, அந்த சிங்கம், சின்னச் சின்னத் துள்ளல்களைப் பயிற்சி பண்ணிக்கிட்டு இருந்திருக்கு.''

இக்கதை, செமத்தியான கைத்தட்டல்களுடன் வரவேற்கப்பட்டது. நான் கொஞ்சமாய் திராட்சைப் பழச்சாற்றினைக் குடித்துக் கொண்டேன்.

''இன்னொரு சமயத்துல,'' என்ற குறிப்போடு தொடர்ந்த நான், ''என்னுடைய இதே நண்பன்...''' என பேசலானேன்: ''இவனுக்கு இன்னொரு விசித்திரமான அனுபவம் நடந்திருக்கு. அரவமற்ற ஒரு கிராமம் வழியா, கோவேறுக் கழுதை வண்டியில் போய்க்கிட்டு இருந்திருக்கான். வெயில் தலைக்கேறுவதற்கு முன்னாடியே போக வேண்டிய இடத்தைப் போய் சேர்ந்துடணும்னு நினைச்ச அவன் இருட்டுலேயே பிரயாணத்தைத் துவங்க சொல்லியிருக்கான். இதுக்குக் கோவேறு கழுதைங்க ஒத்துழைப்பதுல பிரச்சினை இந்திருக்கு. கும்மிருட்டு-அதனால. கடைசியாய் எப்படியோ அதைக் கிளப்பியிருக்காங்க. ஆனா வழக்கத்துக்கு மாறா காற்றா பறந்திருக்கு வண்டி. சூரிய வெளிச்சம் கொஞ்சங்கொஞ்சமா படர ஆரம்பிச்சதும் தான் வேகத்துக்கான விஷயம் என்னனு விளங்கியிருக்கு. இருட்டுல, கோவேறுக் கழுதைக்குப் பதிலா, பிடிச்சு வெச்சிருந்த ஒரு சிங்கக் குட்டியைப் பிடிச்சு வண்டியில கட்டியிருக்கானுங்க.''

*இதுவும் விமரிசையாக ரசிக்கப்பட்டது. டேபிள் மீது மடமடவென பாராட்டுக் குத்தல்கள் விழுந்தன. ஆனால் இக்கதைகளுக்கான முக்கிய பாராட்டு என்னுடைய உழைப்பாளிக் கழக நண்பனிடமிருந்து இன்னும் வந்தபாடாயில்லை... அவன் வெளிறிய அதே நிலையிலும் மிகவும் சிந்தனையோடுமிருந்தான்.*

*''ஓ, கடவுளே!'' என்றவன், ''யாரப்படி மாற்றினது?'' என்றான்.*

*திருமதி ப்ளேர் இப்போது,'' நான் ருடேஸியாவுக்குப் போகணும்'' என்றார். ''அதுவும் நீங்க இப்போ சொன்ன விஷயங்களையெல்லாம் வெச்சுப் பார்க்கும் போது, மிஸ்டர் ரேஸ், இந்த ஆசை எனக்கு உச்சத்துக்குப் போகுது. ஆனா ஐந்து நாட்கள் ட்ரெயின்ல போயாகணும்...கஷ்டம்.''*

*அவரைக் கவரும் வகையில்,''நீங்க என்னோட என் கார்லேயே வரலாம்''என்றேன் நான்.*

*''ஓ,சர் ஆஸ்டஸ்! எத்தனை நல்லவரா இருக்கீங்க, நீங்க! நிஜமாத்தான் சொல்றீங்களா?''*

*''சத்தியமா!''- மேலும் ஒரு கோப்பை திராட்சை பழச்சாற்றினை அருந்தினேன்.*

*''இன்னும் ஒரு வாரம் போகணும்... அப்புறமா, வாவ், நாம தென் ஆப்பிரிக்காவில் இருப்போம்'' என்று பெருமூச்செறிந்து விட்டு சொன்னார் மிஸஸ் ப்ளேர்.*

*''ஓ, தென் ஆப்பிரிக்கா'' என்று உணர்ச்சிபூர்வமாய் குறிப்பிட்ட நான், சமீபத்தில், பட்டாளத்தார்களுக்கு நான் அளித்த ஒரு பேச்சின் போது நடந்த சில சம்பவங்களைக் குறிப்பிட ஆரம்பித்தேன். ''உலகுக்கு தென் ஆப்பிரிக்கா உணர்த்துவது, எதை? எதை, எதை? அந்நாட்டின் பழங்கள், பண்ணைகள், கம்பளிகள், மீன்கள், தங்கங்கள், வைரச் சுரங்கங்கள்---''*

*இப்போது 'வைரம்' என்று நான் சொன்ன வார்த்தை ஏதோ ஒரு வசிய வார்த்தை போல பாவிக்கப்பட்டு, திருமதி ப்ளேரிடமிருந்து ஓர் இடைச்செருகல் வந்தது.*

*''வைரங்கள்!'' என்றார் திருமதி ப்ளேர், மிகப் பரவசமாய்.*

*''வைரங்கள்!'' என்றாள் ஆனே, மூச்சடைத்து.*

*அவர்களிருவரும் கலோனல் ரேஸைப் பார்த்து சொன்னார்கள்: ''நீங்க கிம்பர்லி போயிருப்பீங்கனு நினைக்கிறேன்.''*

*நானும் கூட வைரக் கிடங்கான கிம்பர்லி பிரதேசத்துக்குப் போனவன் தான், இருந்தாலும், இதை சட்டென சரியான நேரத்தில் குறிப்பிட்டு விட நான் தவறி விட்டேன். முந்திக் கொண்ட ரேஸை நோக்கிக் கேள்விகள்*

பெருகும் நீரோட்டமாய் பாய்ந்தன. சுரங்கங்கள் எப்படியிருக்கும்? அப்பகுதி ஜனங்கள் காவலுக்காக சுரங்கத்தைச் சுற்றிலும் நிற்க வைத்திருக்கும் சேதி என்ன உண்மையா? இப்படிப் பல.

ரேஸ், இக்கேள்விகளுக்கு சளைக்காது ஆதார பதில்கள் அளித்து, அவருக்கு இந்தப் பிரிவிலிருக்கும் விஷய ஞானத்தை வெளிக் காட்டினார். அவ்வூர் மலைவாழ் மக்களை வேலைக்கு அமர்த்துவது, வைரம் தேடும் முறை, டீ-பீர் வைர வகைக்குத் தரப்பட்ட பல்வகை பாதுகாப்புகள்...

''அப்பப்பா... அப்படினா வைரங்களைத் திருடுவதென்பது சாமானியமா முடியாத ஒண்ணு போல தோணுதே?''-ஏதோ அங்கு இந்த எக்ஸ்பிரஸ் வேலையை முடிக்கவே போய்க் கொண்டிருப்பது போல நம்பிக்கையற்ற தொனி அதீதமாய் தெறிக்கச் சொன்னார் திருமதி ப்ளேர்.

''பண்ண முடியாத எதுவும் உலகத்துல கிடையாது, மிஸஸ். களவுகள் ஆங்காங்கே நடந்துக் கொண்டு தானிருக்கின்றன.''

''இருக்கலாம், கலோனல். ஆனா, இது போல, மிகப் பெரிய, பாதுகாப்பு நிறைந்த விஷயங்கள்ல?''

''ஒரு தடவை நடந்திருக்கு. அதுவும் சமீபத்துல. சொல்லப் போனா, ஜஸ்ட்...போர் துவங்குவதற்கு முன்னாடி. உங்களுக்கு அந்தக் கேஸ் நினைவிருக்கணும், பெட்லர். அப்போ நீங்க தென் ஆப்பரிக்காவில தானே இருந்தீங்க?''

நான் ஒப்புதலாய் தலையசைத்தேன்.

''எங்களுக்கு சொல்லுங்க''- அவசர அவசரமாய் எகிறினாள் ஆனே. ''ஓ, எங்களுக்கு சொல்லுங்களேன்!''

ரேஸ் புன்னகைத்தார்.

''அப்பசரி. உங்களுக்கு அந்தக் கதை உண்டு. நீங்க எல்லோருமே, சர் லாரன்ஸ் எட்ஸ்லே எனும், தென் ஆப்பிரிக்க சுரங்க சக்கரவர்த்தியைப் பற்றிக் கேள்விப்பட்டிருப்பீங்கனு நினைக்கிறேன். அவர் நடத்தினவை தங்கச் சுரங்கங்கள் தான்... ஆனா நம்ம விஷயத்துக்குள்ளே அவர், அவரோட மகன் மூலமா நுழையறார். போர் ஆரம்பிப்பதற்கு முன்னாடி, காட்டுத் தீயா பரவியிருந்த ஒரு புரளியை நீங்க அத்தனை சுலபமா மறந்திருக்க மாட்டீங்கனு நினைக்கிறேன். பிரிட்டனின் கயானா காடுகளில், பாறை செறிந்த பகுதிகளின் தரையிலே எங்கேயோ, புதிய பெருமதிப்புமிக்க கிம்பர்லி வகைகள் புதைத்து மறைத்து வைக்கப்பட்டிருப்பதாய் வந்த புரளி அது. இதைக் குறி வெச்சு உளவு தேடிக்கிட்டுப் போன ரெண்டு தென் அமெரிக்க ஆய்வாளர்கள்- இப்படித்தான் அவர்களை சொன்னாங்க

-அந்தப் பகுதியிலிருந்து திரும்புபோது, சுத்திகரிக்கப்படாத வைரங்களை கை நிறைய எடுத்துக்கிட்டு வந்திருக்காங்க. அவற்றில் சில நல்ல பெரிய அளவா கூட இருந்திருக்கு. சின்ன அளவினாலான வைரங்கள் அப்பகுதியின் நதிக்கரைகள்ல முன்னமேயே கண்டுபிடிக்கப் பட்டிருந்தாலும், அள்ள அள்ளக் குறையாத கரிக் குன்றுகளை இந்நதிக்கரைகளில் பார்த்த முதல் இரு நபர்கள், இவங்க ரெண்டு பேரும் தான் -ஜான் எட்ஸ்லே மற்றும் அவன் நண்பன் லூகாஸ். ஆஹ்... அந்த வைரங்கள் எல்லா நிறங்களிலும் இருந்தன- பிங்க், நீலம், மஞ்சள், பச்சை, கறுப்பு மற்றும் துல்லிய சுத்த வெள்ளை. ஜானும் லூகாஸும் கிம்பர்லி வந்திருக்காங்க. அவங்க கையிலிருந்த வைரங்களைப் பரிசோதனைக்காகத் தரனும். இதே சமயத்துல தான்- டீ-பீர் பகுதியிலிருந்து குடைந்தெடுக்கப்படும் டீ-பீர் வைரங்கள் திருடப்பட்டு விட்டதாய்-ஒரு பரபரப்பான சேதி எங்கெங்கும் பரவியிருந்தது. வைரங்கள் இங்கிலாந்துக்கு அனுப்பப்படும் போது அவையத்தனையையும் சிறு சிறு பாக்கெட்டுகளாக ஆக்கிடுவாங்க. எல்லா பாக்கெட்டுகளும் ஒரு பெரிய பீரோவில அடைக்கப்பட்டு பார்ஸலாகும். இந்த பீரோவுக்கு ரெண்டு பூட்டுகள் உண்டு. ஒரு சாவி ஒருத்தன் கிட்டேயும் மறு சாவி ரெண்டாவது ஆள் கிட்டேயும் இருக்கும். அந்த ஆளுங்க யார் யார்னு மூணாவதா இன்னொருத்தனுக்குத் தெரியும். இந்த அத்தனை ஏற்பாடுகள் ஒட்டு மொத்தமா பாங்க் கிட்டே ஒப்படைக்கப்பட, இறுதியாய் எல்லாத்தையும் இங்கிலாந்துக்கு அனுப்பும் வேலையை பாங்க்கே எடுத்துக்கும்.

''அந்த ஒவ்வொரு பாக்கெட்டும், ஏறக்குறைய, ஒரு லட்சம் பவுண்டுகளுக்கு ஒப்பானவை!

''இந்தத் தருணத்துல, பாங்க் அதிகாரிகளுக்கு, பாக்கெட்டுகளை 'ஸீல்' வைத்துள்ள விதத்துல ஏதோ வித்தியாசமா பட்டிருக்கு. அப்படி தோன்றியவை பிரிக்கப்படுது... உள்ளே-சற்றே பெரிய சர்க்கரைக் கற்கள்!

''குறிப்பிட்டு, குறி வெச்சு, அவங்க சந்தேகம் எப்படி ஜான் மேல குவிந்ததுனு எனக்குத் தெரியலே. கேம்ப்ரிட்ஜ்ல படிக்கும் போது மிகவும் மிருகத்தனமா நடந்துக்கிட்டவன் இவன் என்பதும்... ரெண்டு மூணு முறை பெரிய கடன் தொல்லையில இவனோட அப்பா மாட்டித் தவிச்சவர் என்பதும்... அந்த சமயத்துல முக்கிய குறிப்புகளாத் தரப்பட்டிருக்கு. இந்தத் தகவல்களையெல்லாம் வெச்சு, குடும்பமே வில்லங்கம் நிறைஞ்சதுனு முடிவு பண்ணி, ஜான் கைது செய்யப்பட்டான். அவன் இருப்புல டீ-பீர் வைரங்களின் கொஞ்சப் பகுதி கண்டெடுக்கப்பட்டிருக்கு.

''இது தான் அந்த சிக்கலான கதையின் சாறு.

''இத்தனையிருந்தும் வழக்கு கோர்ட் படியேறலே என்பது தான் விசித்திரம். சர் லாரன்ஸ், தொலைந்துப் போன வைரங்களுக்கு இணையான தொகையைக் கட்டினார். எந்த வகையில இந்தக் களவானது அரங்கேற்றப்பட்டது என்பது கடைசி வரை தெரியாமலே போயிடுச்சு. ஆனா தன் மகன் ஒரு திருடன் எனும் நிருபணம் அப்பாவின் மனசை உடைச்சுப் போட்டுடுச்சு. துரிதமா அவருக்கு வாத நோய் வந்தது. ஜானைப் பொறுத்தவரை, அவனுடைய விதி, ஒரு வகையில அவனுக்குக் கருணையாகவே இருந்துடுச்சு. போருக்குப் போக வேண்டிய ஆளா அவன் அறிவிக்கப்பட்டான்... போருக்குக் போனான்... துணிச்சலா அங்கே போரிட்டான்... கடைசியில், வீர மரணம் அடைந்தவன் என்ற பட்டத்தின் மூலமாக அவன் பெயரில் இருந்தக் கறையைத் துடைத்தெறிந்தான். ஆமாம்... போர்ல அவன் இறந்துட்டான். சர் லாரன்ஸே கூட போன மாதம் மூணாவது முறையாக வாதம் தாக்கிய போது, காலமாயிட்டார். எதிர்பாராத அவரது மரணத்துக்குப் பிறகு, அவரோட அபரிமிதமற்ற சொத்துக்களனைத் தும், அவர் துளியும் அறிந்திராத ஆனால் அவருடைய பிள்ளை ஸ்தானத்துக்கு வரும் ஒரு தூரத்து சொந்தத்தின் கைகளுக்கு மாறிடுச்சு.''

கலோனல் இங்கு சற்று நிறுத்திக் கொண்டார். ஆச்சரியப் பீறிடல்களும் பல கேள்விகளும் பொங்கின. எதுவோவொன்று மிஸ் பெட்டிங்ஃபெல்ட்'டின் கவனத்தைக் கவர இருக்கையிலிருந்தபடியே திரும்பினாள் அவள். அப்போது அவள் கொடுத்த சிறு மூச்சிழுப்பு விக்கிலினால் நானும் கூட திரும்பிப் பார்த்தேன்.

என் புது காரியதரிசி ரேபர்ன் நுழைவாயிலில் நின்றுக் கொண்டி ருந்தான். அவனது முரட்டுத் தோலுக்கு உள்ளே, பேய் ஒன்றினைப் பார்த்து விட்ட ஒருவனின் கிலி அவன் முகமெங்கும் மேவிக் கிடந்தது. ரேஸின் கதை அவனை வெகுவாக பாதித்திருப்பதை வெளிப்படையாகப் பார்க்க முடிந்தது.

எங்களது துளைக்கும் பார்வையை சட்டென கவனித்து விட்ட அவன், எதிர்பாராமல் திரும்பிக் காற்றோடு மறைந்து போனான்.

''அது யார்னு உங்களுக்குத் தெரியுமா?'' எனத் தொடர்பற்று திடுமெனக் கேட்டாள் ஆனே.

''அது என்னோட இன்னொரு செகரட்டரி'' என்றேன் நான். ''மிஸ்டர் ரேபர்ன். மண்ணுக்குள் விதை போல இத்தனை நாளா கேபின்லேயே கிடந்தான்.''

*அவள் தட்டிலிருந்த ரொட்டித் துண்டோடு அவளுடைய கைகள் தன்னிச்சையாய் விளையாடின. ''உங்க காரியதரிசியா அவர் ரொம்ப நாளா இருக்காரா?''*

*''ரொம்ப நாள்னு சொல்ல முடியாது''என்றேன் நான் எச்சரிக்கையாய்.*

*ஆனால் ஒரு பெண்ணிடம் எச்சரிக்கை மட்டும் கூடாது. எத்தனைக்கெத்தனை நீங்கள் மூடி மறைக்கிறீர்களோ, அத்தனையளவு அவள் முன்னுக்கு வந்து மல்லுக்கு நிற்பாள். ஆனேவும்.*

*''எத்தனை நாள்?''-வெட்டிப் போட்டதைப் போல கேள்வி.*

*''வெல்-அதா...வது...நான் கடல்ல கிளம்பறதுக்கு முன்னாடி தான் அவனை சேர்த்துக்கிட்டேன். என் ஒரு பழைய நண்பர் சிபாரிசு செஞ்சார்.''*

*பிறகு அவள் எதுவும் சொல்லவில்லை, ஆனால், ஒரு நீண்ட மவுனத்துக்குள் நுழைத்துக் கொண்டாள். ரேஸ் பக்கமாய் திரும்பிக் கொண்ட நான், அவர் சொன்ன கதையில் நானும் ஈடுபாடோடு இருந்தேன் என்பதைக் காட்ட இப்போது ஏதாவது கேட்டு விட வேண்டும் என்ற போக்கில், ''சர் லாரன்ஸின் பிள்ளை ஸ்தானத்துக்கு வந்த அந்த தூரத்து சொந்தம், யார் ரேஸ்?'' என்றேன்.*

*''ஆமாமாம்...அதை நான் சொல்லணும்'' என்று அழகான புன்முறுவலோடு முன் வந்த அவர் சொன்னார்:*

*''நான் தான்!''*

# அத்தியாயம் - 14

## (ஆனே'யின் பதிவு தொடர்கின்றது)

மாறுவேடப் போட்டி நடைபெற்ற இரவில் தான், யாராவது ஒருவரை நம்பி அவர் துணையோடு இயங்க வேண்டிய தருணம் வந்து விட்டது என்ற முடிவுக்கு நான் வந்தேன். இது வரை நான் தனியாகவே விளையாடி விட்டேன்...அதுவும் உல்லாசமாக தானிருந்தது. இப்போது திடுமென அத்தனையும் மாறி விட்டன. நானெடுக்கும் முடிவுகளையே கூட நான் நம்ப மறுக்கும்படி ஆயிற்று. மேலும், முதன்முறையாக, ஒரு தனிமையுணர்வும் ஒதுக்கப்பட்ட கிலியும் என்னை இறுகப்பிடித்துக் கொண்டன.

படுக்கையின் நுனியில், இன்னமும் அவிழ்க்காத நாடோடி உடையுடனேயே அமர்ந்துக் கொண்ட நான், நிலைமையைச் சிந்திக்க ஆரம்பித்தேன். யார் துணையை நாடுவது? முதலில் கலோனல் ரேஸை எடுத்துக் கொண்டேன். அவர் என்னை நேசிப்பது போல உள்ளது. ஆகவே அவர் கனிவாகவே நடந்துக் கொள்வார்- நிச்சயமாய். அவர் முட்டாள் கிடையாது- நல்ல புத்திசாலி. இருந்தாலும், மறுபடியும் இதையே நான் எண்ணிப் பார்த்த போது, அல்லாடினேன். அவர் தன்னுடைய ஆளுமையை நிலைநிறுத்த விரும்பும் குணாதிசயம் கொண்டவர். முழு சமாச்சாரத்தையுமே என் கையிலிருந்து அவர் பிடுங்கிக் கொண்டு விடலாம். இது, என்னுடைய மர்மம்! விட்டுத் தருவதாவது! தவிரவும், மேலும் பல, நானே இன்னும் முழுவதுமாய் ஒப்புக் கொள்ளாத காரணங்களும் இருக்கின்றன... அவற்றையும் சேர்த்து, கலோனல் ரேஸைச் சார்ந்திருக்க நினைப்பது சிறந்த ஆலோசனையாகாது என்ற முடிவுக்கு நான் வந்தேன்.

பிறகு நான் மிஸஸ் ப்ளேரை எண்ணிப் பார்த்தேன். அவரும் கூட என்னிடம் கனிவாகவே உள்ளார். இதற்காக அவரே சிறந்தவர் என்ற தீர்த்துப் போன முடிவினை உடனே நானெடுத்து விடவில்லை.

அவரின் கனிவானது முதல் சந்திப்பு நடந்த க்ஷணத்தில் தோன்றிய ஒரு பிரமையாகக் கூட இருக்கலாம். வாழ்க்கையின் சாதாரண பரபரப்புகள் அனைத்தையும் ஏறத்தாழ சந்தித்து அனுபவித்து முடித்து விட்ட பெண் அவர். ஏன் இப்போது அவருக்கு நான் ஒரு புது அசாதாரண பரபரப்பினை உண்டு பண்ணி சப்ளை செய்யக் கூடாது?! எனக்கு அவரை மிகப் பிடிக்கின்றது; சுளுவாய் அனைத்தையும் அவர் கருதும் விதம் பிடிக்கின்றது; உணர்ச்சிபூர்வமான அணுகுமுறை இல்லாதது பிடிக்கின்றது; எவ்விதமாயும் தன்னை முன்னிலை படுத்திக் கொள்ள விரும்பாத குணம் மிகப் பிடிக்கின்றது.

என் மனம் முடிவெடுத்தது; அவரை உடனே போய் பார்த்து விடுவது எனும் முடிவு அது. இன்னும் அவர் படுத்திருக்க மாட்டார்.

எழுந்துக் கிளம்ப நின்றபோது தான் அவருடைய கேபின் எண் என்ன என்று எனக்குத் தெரியாது என்பதே உறைத்தது. என் தோழி... அது தான் அந்த இரவு நேரத்து சிப்பந்தி... அவளுக்கு இது தெரிந்திருக்கும்.

நான் அழைப்பு மணிய்ெ ஒலித்தேன். சற்று நேரம் போனது. அதற்கு பிறகு மணிக்கு விடையாய் ஓர் ஆடவன் வந்து நின்றான். அவன் எனக்குத் தேவைப்பட்ட தகவலைத் தந்துவினான். திருமதி ப்ளேரின் கேபின் எண் 71. உடனடியாய் வர முடியாமல் போனதற்காக மன்னிப்புக் கேட்டுக் கொண்ட அவன், இங்கிருக்கும் அனைத்து கேபின்களையும் கவனிக்க வேண்டிய தேவையுள்ளது என்பதை விளக்கினான்.

''அப்படியா? அப்போ அந்தப் பெண் சிப்பந்தியை அனுப்பியிருப்பது தானே?'' என்றேன் நான்.

''அவங்க எல்லாருக்கும் டியூட்டி பத்து மணி வரை தான், மிஸ். கிளம்பிடுவாங்க.''

''இல்லையில்லை...நான் சொல்றது இரவு டியூட்டி பார்த்தவளை.''

''ராத்திரியிலே பெண்கள் இருக்கக் கூடாது என்பது விதி, மிஸ்.''

''ஆனா -ஆனா-அன்னிக்கு ராத்திரி ஒரு பெண் சிப்பந்தி வந்தா...? ஒரு பெண் சிப்பந்தி வந்தா... ஒரு மணியையொட்டி!''

''அப்படி ஒரு நல்ல கனவு கண்டிருப்பீங்க, மிஸ். பத்துக்குப் பிறகு ஒரே ஒரு பெண் பணியாள் கூட பணியில இருக்க மாட்டாங்க... இருக்கக் கூடாது, மிஸ்.''

சொல்லி விட்டு அவன் போய் விட, இத்தகவலால், உறைந்து விட்ட ஒரு சிலையென வடிக்கப்பட்டிருந்தேன் நான். 22-ஆம் தேதியன்று

இரவு என்னுடைய கேபினுக்கு வந்திருந்த அந்த சிப்பந்திப் பெண், பின் யார்? தந்திரமும் அமிலத்தனமும் நிறைந்த அந்த என் எதிரியை இப்போது நான் நினைத்துப் பார்க்கும் போது, என்னுடைய முகம் வெளிறி ரத்தமற்றுப் போனது. என்னுடைய கேபினை விட்டு நழுவி திருமதி ப்ளேரைத் தேடினேன். அவரது அறைக் கதவைத் தட்டினேன்.

''யாரது?''-உள்ளிருந்து கேட்டது, அவருடைய குரல்.

''நான் - ஆனே பெட்டிங்ஃபெல்ட்.''

''வாடீ, வா, நாடோடிப் பொண்ணே!''

நான் நுழைந்தேன். ஏகமான துணிகள் எங்கெங்கும் சிதறிக் கிடந்தன. திருமதி ப்ளேர் நான் பிரமித்துப் போகும் அளவுக்கு ஒரு பட்டு வகை நைட்டியில் புகுந்திருந்தார். தங்க நிறமும் கறுப்பும் நீலமும் செறிந்து பார்க்கப் பார்க்கப் பிரமாதத்தை இறைத்தது அது.

''மிஸஸ் ப்ளேர்'' என அவர் எதிர்பார்க்காத அளவுக்கு நுழைந்த உடனேயே அழைத்த நான், ''நான் என் வாழ்க்கைக் கதை முழுக்க உங்ககிட்டே சொல்ல விரும்பறேன். நேரம் ரொம்ப ஆகியிருந்தாலும்-உங்களுக்கு சிரமமில்லேனா, உங்களுக்கு இடையூறா இல்லேனா!''

''துளி கிடையாது. நல்லா தூங்குவேனே ஒழிய படுக்கப் போவதுனாலே எனக்கு ஒத்துக்காது'' என்றார், அவருக்கே உரிய பிரகாசமான புன்னகையை முகத்துக்குப் போர்த்தியபடி. ''அதிலும் உன் வாழ்க்கைக் கதையைக் கேட்க எனக்கு நிச்சயமா ஆர்வமிருக்கும்-இருக்கு! நீ ஒர் அசாதாரண படைப்பு, என் துறுதுறு நாடோடிப் பொண்ணே! தன்னாட வாழ்க்கை சரிதத்தை சொல்றேன் பேர்வழினு சொல்லிக்கிட்டு, நடு ராத்திரி ஒரு மணிக்கு வந்து என் ரூம் கதவை உன்னைத் தவிர வேற யாரும் தட்ட மாட்டாங்க. நீ நம்பிக்கையா வந்திருக்கே. தவிர, கிட்டத்தட்ட ஒரு வாரமா நீ என்னோட ஆர்வத்தைக் கிண்டி விட்டுக்கிட்டே ஆனா உன்னைப் பற்றி சொல்லாமலே இருந்திருக்கே. இப்படி கிண்டி விட்டுத் திண்டாடும் பழக்கமெல்லாம் எனக்குப் புதுசு, ஆங்! இப்படி சோபாவில உட்கார்... உட்கார்ந்து உன் மனபாரத்தை அவிழ்த்துப் போடு.''

நான் அவரிடம் முழுக்கதையையும் சொன்னேன். அனைத்து விவரங்கள் பற்றியும் நான் கவனமாக சொல்ல வேண்டி இருந்ததால் முடிக்க சற்று நேரம் ஆகியது. நான் சொல்லி முடித்ததும் அவர் ஒரு நீண்ட பெருமூச்சினைச் செலவழித்தார். ஆனால் கேட்டு முடித்ததும் அவர் என்ன சொல்வார் என நான் நினைத்திருந்தேனோ அதை அவர் சொல்லவில்லை. மாறாக அவர் என்னைப் பார்த்தார்... சின்னதாய்

சிரித்தார்... சொன்னார்: ''நீ ஓர் அசாதாரணப் பிறவினு உனக்குத் தெரியுமா, ஆனே? உனக்குக் குமட்டலும் மயக்க வாந்தியும் வந்ததுண்டா?''

''குமட்டல்? வாந்தி மயக்கம்?''- புதிராய் கேட்டேன் நான்.

''ஆமாம். குமட்டல், வாந்தி, மயக்கம், வெறுப்பு, இருப்புக் கொள்ளாமை! கையில பணமேயில்லாம நீ தன்னந்தனியா கிளம்பி யிருக்கே. அறிமுகமில்லாத ஒரு நாட்டுல, இருந்த பணமெல்லாம் செலவழிஞ்சு கையில தம்புடி இல்லாம இறங்கும் போது உன் நிலைமை எப்படியிருக்கும்னு நீ நினைக்கவேயில்லையா?''

''அப்படி ஒரு நிலைமை வர வரைக்கும் அதைப் போட்டுக் குழம்பிக்கிட்டிருக்கிறதுல பிரயோஜனம் என்ன விளைஞ்சுடப் போகுது? இன்னும் என்கிட்டே நிறையவே இருக்கு. மிஸஸ் ஃப்ளெம்மிங் தந்த 25 பவுண்ட் துளி செலவாகாம இருக்கு. இன்னிக்கு லாட்டரி விளையாட்டுல 15 பவுண்ட் ஜெயிச்சிருக்கேன். என்கிட்டே எக்கச்சக்கமா பணமிருக்கு. நாற்பது பவுண்டுகள்!''

''இது, எக்கச்சக்க பணமா! கடவுளே!''- முணுமுணுத்தார் மிஸஸ் ப்ளேர். ''என்னால இப்படியெல்லாம் முடியவே முடியாது ஆனே. இலக்கில்லாம கொஞ்சம் சில்லறைப் பவுண்டுகளைப் பாக்கெட்டுல போட்டுக்கிட்டு, எங்கே போறேன் என்ன பண்ணப் போறேன் போன்ற எதுவுமே விளங்காம என்னால கிளம்பியிருக்கவே முடியாது.''

''ஆனா அது தான் வாழ்க்கையின் உல்லாசமே'' என்று முழு குரலெடுத்து சொன்னேன் நான். ''சாகசம் என்பதன் முழு அற்புத அர்த்தத்தையும் இப்படிக் கிளம்புவது தான் விளக்கும்!''

என்னை அவர் பார்த்தார். ஓரிரு முறை ஒப்புதலாய் தலையசைத்துக் கொண்ட அவர் பின் புன்னகைத்தார். ''லக்கி ஆனே! உன்னைப் போல குணம் கொண்ட மக்கள் இந்த உலகத்துல நிறைய பேர் கிடையாது.''

''அதை விடுங்க'' என்று பொறுமையிழந்து சொன்ன நான், ''இந்த அத்தனையையும் சேர்த்து வெச்சு நீங்க என்ன நினைக்கிறீங்க, திருமதி ப்ளேர்?'' எனக் கேட்டேன்.

''என் வாழ்க்கையில, நான் கதைகள்ல கூட கேட்டறியாத அதியற்புத த்ரில்லர் இதுனு முதல்ல சொல்வேன். இப்ப, தொடக்கமா ஒரு வேண்டுகோள்...நீ என்னை மிஸஸ் ப்ளேர்னு கூப்பிடுவதை நிறுத்திடு. ஸூஸேனி என்பது எல்லாத்தையும் விட சிறந்ததா இருக்கும். இதுக்கு சம்மதமா?''

''ம். பிடிச்சிருக்கு. 'ஸூஸேனி'.''

''நல்ல பொண்ணு. இப்ப விஷயத்துக்குள்ளே இறங்கலாம். சர் ஆஸ்டஸ் பெட்லரோட செகரட்டரிக்குள்ளே-அந்த உம்மணாம்முஞ்சி பகெட் கிடையாது... அடுத்தவன்-அவனுக்குள்ளே, அந்த இரவு ஓடி வந்த காயப்பட்டவனைப் பார்த்ததாய் நீ சொல்றே.''

நான் ஒப்புதலாய் தலையசைத்தேன்.

''இது, இந்த கேஸூக்குள்ளே சர் ஆஸ்டஸை நுழைச்சு ரெண்டு க்ளூக்களைக் கொடுக்குது. அந்தப் பொம்பிளை சர் ஆஸ்டஸோட வீட்டுல கொலைப் பண்ணப்பட்டிருக்கா; மேலும், அவரோட செக்ரட்டரி தான், அந்த அகாலமான ஒரு மணிக்கு குத்து வாங்கிக்கிட்டு ஓடி வாரான். இதை வெச்சுக்கிட்டு நான் சர் ஆஸ்டஸைச் சந்தேகிக் கலே... ஆனா இந்த ரெண்டுமே எதிர்பாராம நடந்த தனித்தனி சம்பவங்களா இருந்துட முடியாது, இல்லையா? அவருக்கே கூட தெரியுமா ரெண்டுத்துக்கும் எங்கேயோ எப்படியோ இணைப்பு இருக்கு.''

இப்படிச் சொன்னவர் அவரே தொடர்ந்தார்:''அப்போ சந்தேகத்தைக் கிளம்பும் அந்த இரவு சிப்பந்தி பிஸின்ஸ் தொங்குதே...! அவ யாரை மாதிரி இருந்தா?''

''நான் அவளைக் கவனிக்கவே இல்லே. துடிதுடிச்சுப் போய் ஆணியறைஞ்சா மாதிரியான நிலைமையில சர்வமும் ஒடுங்கிப் போயிருந்தேன் நான். அப்ப போய் திடீர்னு ஒரு கப்பல் சிப்பந்தி ஓடி வந்து நட்ட நடுவுல நின்னது, விளக்க முடியாத உச்சக்கட்டமா தெரிஞ்சுது எனக்கு. ஆனாலும்-ஆமாம், ஆமாம்- அவ முகம் எனக்கு ரொம்பவும் பரீட்சியப்பட்டதா தான் தோணிச்சு. விளக்கத் தெரியலே-ஆனா, ஆமாம். கப்பல்ல எங்கேயாவது அவளைப் பார்த்திருக்கணும்... அதனால தான் இப்படி தோணுது.''

''அவ முகம் உனக்குப் பரீச்சயப்பட்டது மாதிரி இருந்திருக்கு'' என்ற ஸூஸேனி, ''அது நிச்சயமா ஓர் ஆண் கிடையாதே?'' என்றார்.

''அவ ரொம்ப ஒசரம் தான்'' -நான் ஏற்றுக் கொண்டேன்.

''ஹூம். சர் ஆஸ்டஸா இருக்க முடியாது. ம்ம். பகெட்டும் கிடையாது. வெயிட் வெயிட்.''

ஒரு தாளை எடுத்துக் கொண்டவர் ஜூர வேகம் கண்டவர் போல விறுவிறுவென்ற விசையோடு அதில் வரைய ஆரம்பித்தார். அதில்

முடிவாகியிருந்ததைத் தலையை ஒரு பக்கமாய் சாய்த்து வைத்துப் பார்த்து பரிசோதித்தார்.

''ரெவரிட். எட்வர்டோட ஒத்துப் போகும் அதிகபட்ச ஒற்றுமையிருக்கு. இப்ப மற்ற ஒற்றுமைகளின் அங்கீகாரத்துக்காக'' என்றவர், அந்தத் தாளை என்னிடம் தந்தார். ''அது தான் உன் இரவு சிப்பந்தியா?''

''ஓ, ஆமாம்'' -அலறி விட்டேன் நான்.''ஸஃபேஸனி... வாவ்... எத்தனை புத்திசாலி நீங்க!''

மிருதுவான கை அமர்த்தலால் இந்தப் பாராட்டினை ஒதுக்கி விட்டார் அவர். ''இந்த எட்வர்ட் படைப்பைப் பற்றி எனக்குள்ளே எப்பவுமே சந்தேக்மிருந்தது. அன்னிக்கு கிரிப்பன் பற்றி நாம பேச ஆரம்பிச்ச போது கையிலிருந்த காபிக் கோப்பையைக் கீழே தவற விட்டுட்டு இந்த ஆளு எப்படி வெளிறிப் போனானு நினைவிருக்கு இல்லே, உனக்கு?''

''மேலும் கேபின் 17 தான் வேணும்னு அத்தனை அடம் வேற பிடிச்சான்!''

''ஆமாம். இந்த எல்லாமே இது வரைக்கும் அம்சமா பொருந்தி நிக்குது. ஆனா- இவையெல்லாம் உணர்த்துவது என்னத்தை? கேபின் 17-ல் அந்த நட்டநடு ராத்திரி ஒரு மணிக்கு, உண்மையா நடந்திருக்க வேண்டியது தான் என்ன? அது- செகரட்டரியை அந்த நேரத்துல வந்து கூரான ஒர் ஆயுதத்தால குத்துற வேலையா இருக்க முடியாது. இதைப் போய் ஒரு ஸ்பெஷல் நாள்ல- ஸ்பெஷல் நேரத்துல- ஸ்பெஷல் இடத்துல நடத்த திட்டமிட காரணமே கிடையாது. நோ. அது -ஏதோ ஒரு வகையான சந்திப்பு! அதுக்காக அவர் வந்துக்கிட்டிருந்த போது தான் அவனுங்களால குத்தப்பட்டிருக்கார். அப்போ யாரோட சந்திப்பு நடந்திருக்கணும்? நிச்சயமா உன் கூட கிடையாது. எட்வர்ட் கூட இருந்திருக்கலாம்''என்றவர் பிறகு, ''இல்லேனா அது பகெட் கூட நடந்திருக்கலாம்'' என்றார்.

கடைசியாய் அவர் ஆலோசித்ததை, ''இது சரியா படலே'' என மறுத்தேன் நான். ''அவங்க ரெண்டு பேரும் எப்ப வேணும்னாலும் ஒருத்தரையொருத்தர் பார்த்துக்கலாமே!''

இரண்டு பேரும் இப்போது மவுனமாக ஓரிரு நிமிடங்கள் உட்கார்ந்திருந்தோம். பின் ஸஃபேஸனி வேறொரு வழியில் பிரச்சினை

பற்றி பேச ஆரம்பித்தார். ''அந்தக் கேபின்ல ஏதாவது மறைச்சு வெச்சிருக்க வாய்ப்பிருக்கா?''

''இது ரொம்ப சாத்தியமான ஒண்ணா தெரியுது'' என்றேன் நான். ''அடுத்த நாள் காலையிலே என் அத்தனை சாமான்களும் கலைச்சு வீசப்பட்டிருந்ததை இது விளக்குது. ஆனா அங்கே எதுவும் ஒளிச்செல்லாம் வைக்கப்படலே. எனக்கு நிச்சயமா தெரியும்.''

''முன் ராத்திரி, அந்த இளைய மனிதன், உன் டேபிள் டிராயர்ல எதையாவது நழுவ விட்டுட்டுப் போயிருப்பானா?''

நான் மறுத்துத் தலையசைத்தேன். ''அப்படி ஏதாவதும்னா நான் அதைப் பார்த்திருக்கணும்.''

''அவங்க தேடி அலைஞ்சது, ஒரு வேளை உன்னோட அந்த விலைமதிப்பற்றத் தாளா இருக்குமா?''

''இருக்கலாம், ஆனா அப்படி நினைப்பது புத்திசாலித்தனமா படலே. அதுல வெறும் நேரமும் தேதியும் தானிருந்தன. களேபரம் நடந்த ராத்திரியில, இவையிரண்டுமே, காலங்கடந்து விட்டிருந்தன.''

''ஆமாமாம்'' என ஸஃஸேனி ஒப்புதலாய்த் தலையசைத்தார். ''ம்ம். அது, அந்தத் தாள் கிடையாது. இருந்தாலும், அது உங்கிட்டே இருக்கா? அதை நான் ஒரு முறை பார்க்க விரும்பறேன்.''

அந்தத் தாளை என் ஆபரணம் போல தூக்கிக் காட்டக் கூடவே கொண்டு வந்திருந்தேன். அதை அவரிடம் கொடுத்தேன். சின்னச் சின்ன சன்னமான உறுமல்களோடு அதை அவர் பரீட்சித்தார்.

''17க்கு அப்புறமா ஒரு புள்ளியிருக்கு. அப்போ ஏன் 1-க்குப் பிறகு ஒரு புள்ளி இல்லே?''

''ஓர் இடைவெளியிருக்கு''- நான் சுட்டிக் காட்டினேன்.

''ஆமாம். ஓர் இடைவெளியிருக்கு. ஆனாலும்---''

திடுமென்று எழுந்துக் கொண்டவர், விளக்குக்கு எத்தனை அருகாமையில் பிடிக்க முடியுமோ அப்படி அந்தத் தாளைப் பிடித்துத் துளையிடும் பார்வையை அதன் மேல் பதித்தார். அமுக்கப்பட்ட வெற்றிக் கிளர்ச்சி அவருடைய நடவடிக்கையில் இருந்தது.

''ஆனே, அது புள்ளி கிடையாது. அது பேப்பர்லியே இருக்கிற சின்ன பிளவு -புள்ளி அளவு விரிசல்- ஓட்டை! கறுப்பு ஓட்டை. பார், தெரியுதா? ஆக இதை நீ வெறுமனே விட்டுட்டு இடைவெளிகளின் வழியே போகணும்- ஜஸ்ட், இடைவெளிகள்!''

நான் எழுந்து அவருக்கு இணையாய் நின்று கொண்டிருந்தேன். இப்போதைய புதுக் கோணத்தில் அந்த எண்களை நான் படித்தேன்: ''1 71 22.''

''கவனி, கவனி'' என்றார் ஸ®ஸேனி. ''இதுவும் அது போலவே தான், ஆனா, அப்படி அல்ல. 1, இதிலும் ஒரு மணி தான். 22 ம் அப்படியே தான். ஆனா அது கேபின் 71...! என் கேபின், ஆனே!''

எங்களுடைய புதுக்கண்டுபிடிப்பில் முழு திருப்தி கொண்டவர் களாகவும், ஏதோ இந்த முழு மர்மத்தையுமே முடித்து மூட்டை கட்டி விட்டவர்களாகவும், அங்கு ஒருத்தரை ஒருத்தர் கண்ணகலப் பார்த்துக் கொண்டு இருவரும் நின்றோம். பிறகு பூமிக்குள் ஒரு குலுக்கலோடு வந்து விழுந்தேன் நான்.

''ஆனா, ஸ®ஸேனி, 22 அன்று 1 மணிக்கு இங்கே ஒண்ணுமே நடக்கலியே'' என்றேன்.

அவரது முகமும் வாடிப் போனது. ''இல்லை. ஒண்ணும் நடக்கலே.''

இந்த சிந்தனையின் போது இன்னோர் எண்ணம் எனக்குள் உதித்தது. ''இது உங்களுக்கு ஒரிஜினலா ஒதுக்கப்பட்ட கேபினே கிடையாது இல்லையா, ஸ®ஸேனி...?!''

''கிடையாது. கப்பல் கண்காணிப்பாளன் தான் என்னை இங்கே மாற்றித் தந்தான்.''

''ஆங்...! அப்படினா, ஒரு வேளை இது வேற யாரோ ஒருத்தருக்கு முன்பதிவு பண்ணப்பட்டிருக்குமோனு எனக்கு இப்போ தோணுது...! யாரோ...! இங்கே தங்கி பிரயாணிச்சிருக்கணும்... ஆனா அப்படி முடியாம போயிட்ட யாரோ...! அது யார்னு எப்படியும் தேடிக் கண்டுபிடிச்சுடலாம்னு நினைக்கிறேன்.''

''தேட வேண்டிய அவசியம் இல்லே, நாடாடிப் பொண்ணே!'' என கத்தி விட்டார் ஸ®ஸேனி. ''எனக்குத் தெரியும்! கண்காணிப்பாளன் அதைப்பற்றி என்கிட்டே சொல்லிக்கிட்டிருந்தான். கேபின், திருமதி க்ரே என்பவருக்காக முன்பதிவு பண்ணப்பட்டிருக்கு. ஆனா, மிஸஸ் க்ரே என்பது, நாட்டியத் தாரகை நதீனாவுக்கு இருக்கிற ஒரு புனைபெயர். இவ ஒரு மாபிரபல ரஷ்ய நடனத் தாரகை, தெரியுமா உனக்கு. லண்டனுக்கு வந்து இவ நிகழ்ச்சிகள் பண்ணினது கிடையாது-ஆனா பாரீஸ் மக்கள், ஓஹ், இவ மேல பைத்தியமா கிடக்காங்க; போர்க்

காலத்துல அங்கே வானத்தை முட்டும் வெற்றி பெற்றவ, இவ. சரியான கெட்ட மூட்டை, கேள்விப்பட்டிருக்கேன். ஆனாலும் கவர்ந்து வீழ்த்தும் காந்தம். நதீனா தங்கியிருக்க வேண்டிய இந்தக் கேபினை எனக்கு ஒழிச்சுத் தரும்போது, தன் மனம் கவர்ந்த நாட்டிய மங்கை கப்பல்ல வராம போயிட்டாளேனு அழாத குறையா நெஞ்சு விம்ம வருந்தினான், கண்காணிப்பாளன். பிறகு கலோனல் ரேஸ் இவளைப் பற்றி கதை கதையா சொன்னார். பாரீஸ்ல இவளைப் பற்றி விளக்க முடியாத சந்தேகக் கதைகள் உலவிக்கிட்டே இருந்திருக்கு... பிற நாடுகளின் ரகசியங்களை அறியும் ஒற்றனா கூட இவள் பயன்படுத்தப் பட்டுள்ளதா சேதி உலவிக்கிட்டே இருந்திருக்கு... ஆனா எதையும் நிரூபிக்கத்தான் முடியலே. இந்த விஷயத்தைக் கவனிக்கனு மாத்திரமே, கலோனல் ரேஸ் ஸ்பெஷலா அங்கே போயிருப்பாரோனு கூட எனக்குத் தோணுது; ஏன்னா, இது சம்பந்தமா, எனக்கு செம இண்ட்ரஸ்ட்டிங்கான பல விஷயங்களை அவரால சொல்ல முடியுது. நல்லா திட்டமிட்டு இயங்கும் ஒரு கூட்டமே அங்கேயிருந்திருக்கு. ஒருத்தனும் ஜெர்மன் கிடையாது. சொல்லப் போனா 'கலோனல்' அப்படினு அறியப்படும் அந்தக் கூட்டத்தின் தலைவனே கூட ஓர் ஆங்கிலேயன் தான்னு நினைக்கிறாங்க! அவனை அடையாளம் காணும்படியான ஒரே ஒரு துப்பு கூட யாருக்கும் கிடைக்கலே. ஆனா, அவன், சர்வதேச அளவுல திருட்டு கும்பல்களை வடிவமைச்சு அவற்றை அற்புதமா கட்டுப்படுத்தி நடத்தி வந்திருக்கான் என்பதுல துளி சந்தேகம் வேண்டாம். கொள்ளைகள், ஒற்றன் வேலை, கொலைகள்...எல்லாத்தையும் அவன் கையிலெடுத்திருக்கான். ஒவ்வொரு வஞ்சகத் திட்டத்திலும், இவன் தப்பிச்சுட்டு, அந்த வலைக்குள் தண்டனைக்காக விழ ஒரு பலிகடாவை எப்படியாவது அவன் உருவாக்கி தந்திருக்கான். கொடூரமான புத்திசாலியாயிருந் திருக்கணும்-அவன். இந்தப் பொம்பிளை அந்தக் கூட்டத்தின் ஒரு பிரதிநிதினு சொல்லிக்கிறாங்களே ஒழிய, மேற்கொண்டு கையும் களவுமா பிடிக்க சட்டத்தால ஓரடி கூட எடுத்து வைக்க முடியலே. ஆமாம், ஆனே, நாம் மிகச் சரியா நகர்ந்துக்கிட்டிருக்கோம்! நதீனா தான் இந்தக் கேஸ்ல கலந்திருக்கிற பொண்ணு- ஆமாம். 22 ஆம் தேதி காலையில, இந்தக் கேபின்ல, இவளோட தான் சந்திப்பே நடந்திருக்கணும்.ஆனா நடக்கலே. அவ எங்கே? ஏன் அவள் கடல் பிரயாணத்துல வரலே?''

ஓர் ஒளி என்னுள் ஒளிர்ந்தது. ''அவ இதுல பிரயாணிக்கத் தான் திட்டமிட்டிருந்திருக்கா'' என்றேன் நான் மெதுவாய்.

''அப்ப ஏன் பண்ணலே?''

''ஏன்னா அப்போ அவ செத்துட்டா. ஸ்லேஸனி... நதீனா தான் மார்லோ வீட்டுல வெச்சுக் கொல்லப்பட்ட பொண்ணு.''

என் மனது, காலியாக இருந்த மில் வீட்டின் ஒன்றுமற்ற அந்த அறையை இப்போது நினைத்துப் பார்த்து அசை போட, அங்கு நான் அனுபவித்த அதே 'சூழல்'- கெடுதல் நிறைந்த அபாயத்தோடு... பழி தீர்க்கும் வஞ்சத்தோடு சூழ்ந்திருந்த அதே சூழல்-என்னை மறுபடியும் பிடித்தது. இப்படிப் போன நினைப்பினூடே, கீழே விழுந்த பென்சிலும் அப்போது கண்டுபிடிக்கப்பட்ட பிலிம் ரோலும் கூட என் நினைவிலாடின. 'பிலிம் ரோல்'-இது என்னுடைய படபடப்பைத் தூண்டியது. சமீபத்தில் எப்போது நான் போட்டோ சுருள் பற்றிக் கேள்விப்பட்டேன்? அதைப் போய் ஏன் இப்போது திருமதி ப்ளேருடன் பொருத்திப் பார்க்க வேண்டியுள்ளது?

திடீரென நான் மிஸஸ் வரை எகிறிப் பாய்ந்தோடி, என் களிப்புத் தாளாமல் அவரைப் பிடித்து அப்படி உலுக்கினேன். ''பிலிம்கள்! சுருள்! திறந்திருந்த ஜன்னல் வழியா உங்ககிட்ட ஒப்படைக்கப்பட்ட பிலிம்கள்! ஆஹ்... இதுக்குத் தான் அந்த சந்திப்பு...?! இது நடந்தது 22 ஆம் தேதி தானே..?''

''நான் கீழே நழுவ விட்ட பிலிம் ரோலா?''

''அதே தான் இதுனு உங்களுக்கு எப்படி தெரியும்? ஒரு வேளை அது திருப்பிக் கிடைச்சிருந்தாலும், நேரடியா கையில கொண்டு வந்து தராம, திருட்டுத்தனமான ஒரு ரகசிய வழியில கொண்டு வந்து யார் போடுவாங்க? ஒரு பைத்தியக்காரன் தான் அப்படி பண்ணுவான். ஆக, அதுல இருப்பது ஒரு சேதி-யெஸ்! அந்தச் சின்னக் குப்பிக்குள்ளிருந்து பிலிம்கள் உருவப்பட்டு... அந்த இடத்துல வேற என்னவோ வைக்கப்பட்டு...! அது இன்னும் உங்கிட்டே இருக்கா?''

''அதை நான் உபயோகப்படுத்தினேனா? ம்ம்... பண்ணலே. இதோ, இது தான் அது. ஆமாம்... பெட்டியின் இதே மூலையில் அன்னிக்கு நான் விட்டேற்றித்தனமா உருட்டி விட்டேன்.''

அதை அவர் என் கைகளுக்கு மாற்றி விட்டார்.

அது, ஒரு சுருளில் உள்ள பிலிம்கள் சுருட்டி அடைத்து வைக்கப் படும் ஒரு சின்ன பிலிம் உருளை. அதை, நடுங்கும் விரல்களோடு, இதயப்படபடப்பு எகிற வாங்கினேன். பிலிம் இருந்தால் இருக்க வேண்டிய கனத்தை விட அதிகமான கனத்தில் அது இருந்ததை சுலபமாய் கவனிக்க முடிந்தது.

நடுநடுங்கும் விரல்களை இயக்கி, உருளையைக் காற்றுப் புகா ஒரு பெட்டியாக ஆக்கியிருந்த 'டேப்'பினைப் பிய்த்தெறிந்தேன். மூடியைத் திறந்தேன். மங்கலான நிறத்திலானக் கண்ணாடிக் கற்கள், அதனுள் ளிருந்து மளமளவென வழுக்கி உருண்டு படுக்கை முழுவதும் பரவின.
''கண்ணாடித் துண்டுகள்'' என்றேன் நான், அவநம்பிக்கை தெறிக்க.

''கண்ணாடிகளா?''- அப்படி அலறினார் ஸஹ்ஸேனி.

அவரது அலறல் குரலில் இருந்த ஆச்சரிய அதிசயம் என்னைக் கிளர்ந்தெழச் செய்தது.

''கண்ணாடிகளா? இல்லை, ஆனே, கண்ணாடிகள் கிடையாது. வைரங்கள்!''

## அத்தியாயம் - 15

**வை**ரங்கள்!

படுக்கையில் சிந்திக் கிடந்த பளபள துகள்களை ஆச்சரியம் தாளாது நான் வெறித்தபடியிருந்தேன். ஒரு துண்டைக் கையிலெடுத்தேன். அதன் கனத்தினை ஒரு பொருட்டாகக் கொள்ளாமல் பார்த்தால், அது ஓர் உடைந்தக் கண்ணாடித் துண்டாகத் தான் கொள்ளப்படும்.

''நிச்சயமா தான் சொல்றீங்களா, ஸூஸேனி?''

''ஓ, யெஸ், டியர். சந்தேகத்தைத் தீர்த்துக் கொள்வதற்காக வைரங்களை நான் பலப்பல முறை அருகில் வெச்சுப் பார்த்திருக்கேன். அவை தான் அழகு ஆனே; மேலும், அவற்றில் சில, தனித்தன்மை மிக்க பொக்கிஷங்கள் என்பதையும் நான் சொல்லணும். ஒவ்வொண்ணுக்குப் பின்னாடியும் ஒரு சரித்திரம் இருக்கு, ஆமாம்.''

''இன்னிக்கு ராத்திரி நாம கேட்ட வரலாறு போல''-சட்டென்று உணர்வுபூர்வமாய் சொல்லி விட்டேன் நான்.

''என்ன சொல்றே---''

''கலோனல் ரேஸின் கதை. அது எதிர்பாராம வந்த கதையா இருக்கவே முடியாது. அதை அவர் ஒரு காரணத்துக்காகத் தான் சொல்லியிருக்கார்.''

''அப்படி செல்லும் போது அது ஏற்படுத்தக் கூடிய விளைவுகளைப் பார்க்க, ஆங்?''

நான் ஒப்புதலாய்த் தலையசைத்தேன்.

''சர் ஆஸ்டஸ் மேல அது ஏற்படுத்தும் விளைவு?''

''ஆமாம்.''

ஆனால் நான் இப்படிச் சொல்லிக் கொண்டிருக்கும் போதே ஒரு சந்தேகம் என்னைக் கடந்து போனது. இப்பரீட்சைக்கு உட்படுத்தப் பட்டது, சர் ஆஸ்டஸா அல்லது என்னில் விளைவினைக் கூர்ந்து கவனிப்பதற்காக அது சொல்லப்பட்டதா? முந்தைய நாள் இரவில் என்னோடு அவர் பேசியதிலிருந்து, 'அவர், எனக்குள் என்ன இருக்கிறது

என்பதைக் கிளறிப் பார்த்திருக்கிறாரா?' என்று ஏற்பட்ட ஒரு பதிவு இப்போது நினைவுக்கு வந்தது. என்னவோ காரணத்திற்காக ஒரு சந்தேகப் பிராணியாக உலவுகிறார், ரேஸ். அவர் எங்கேயிருந்து வருகிறார்? இந்த விவகாரத்தில் அவருக்கு தொடர்பேற்படுத்தும் சாத்தியக் கூறு யாது?

''யாரிந்தக் கலோனல் ரேஸ்?''-கேட்டேன் நான்.

''ஆங், இது கேள்வி'', என்றார் ஸுஸேனி. '' இதுக்கு விடையை அவரே இன்னிக்கு ராத்திரி சொல்லக் கேட்டோமே... சர் லாரன்ஸ் எட்ஸ்லேயோட 'தூரத்துச் சொந்தம்'. இந்தப் பிரயாணத்துக்கு முன்னாடி வரைக்கும், நானே கூட அவரை சந்திச்சது கிடையாது. ஆப்பிரிக்காவுக்கு அடிக்கடி பிரயாணம் போய் வருபவர். அவர் ஏதோ ரகசிய சேவை செய்யறார் எனும் பொதுவான கருத்து தான் பிரசித்தமா தெரியுது. இது உண்மையா பொய்யா-ம்ம், எனக்குத் தெரியாது. அது நிச்சயமா ஒரு மர்மப் படைப்புடீ.''

''சர் லாரன்ஸ் எட்ஸ்லேயோட வாரிசா, இவருக்கு ஏகப்பட்ட சொத்து வந்து சேர்ந்திருக்கணும் இல்லையா?''

''ஏய் ஆனே... அந்தாளு மிதந்துக்கிட்டிருக்கணும்- பணத்துல! உனக்கு அவர் அற்புதமான பொருத்தமா இருப்பார், தெரியுமா?''

''நீங்களும் இதே கப்பல்ல வருவதால் என்னால அவரோட அதிக நேரம் சேர்ந்து கழிக்க முடியலே'' என்றேன் நான் வாய் விட்டுச் சிரித்தபடி. ''ஓ, இந்தக் கலியாணமான பெண்கள்!''

''எங்களுக்கும் ஈர்ப்பு இருக்கும்டீ, நாடோடிப் பொண்ணே'' என்று அழகாய் மறுபதிலடித்தார் ஸுஸேனி. ''ஆனா, அத்தனை பேருக்கும், நான் க்ளாரன்ஸ் மேல எத்தனை பைத்தியமா இருக்கேன் என்பது தெரியும்,ஓ கே! க்ளாரன்ஸ்-என் புருஷன். மனப்பூர்வமா இருக்கிற பொண்டாட்டிகிட்டே காட்டும் அன்பு தான்- அற்புதம் மேலும் பாதுகாப்பு''.

''உங்களைப் போன்ற பிரமாதமான ஒருத்தரை மணந்துக் கொண்டிருப்பது க்ளாரன்ஸுக்கு ரொம்பப் பெருமையா இருக்கணும்.''

''ஆனா எனக்கு?! ஊஃப்... நான் தானே வாழறதுக்குள்ளே தேய்ந்து துரும்பாப் போறேன்! அயல்நாடு அலுவலகம் வரை போக வேண்டியிருக்குனு சாக்கு சொல்லிட்டு திடீர் திடீர்னு ஓடிடும், அது. அங்கே, போய், மூக்குக் கண்ணாடியை எடுத்து மாட்டிப்பார்.

அவருக்குனு நல்லா வசதியா சாஞ்சுக்கிறா மாதிரி ஒரு சேர் உண்டு. அதுல வாட்டமா சாஞ்சு உட்கார்ந்துக்கிட்டு... *தூங்கிடுவார்!* அவருக்கு ரேஸ் பற்றி என்னவெல்லாம் தெரியுமோ அவை பற்றியெல்லாம் நமக்கு சொல்லச் சொல்லி ஒரு தந்தி அனுப்பலாம். எனக்குத் தந்தி அனுப்புவது பிடிக்கும்; அதை விட, தந்தினாலே க்ளாரன்ஸுக்கு விறுவிறுனு வெறுப்பு வந்துடும்... அது எனக்கு இன்னும் பிடிக்கும்! 'இந்தத் தகவல், ஒரு லெட்டர் போட்டிருந்தா கூடத்தான் கிடைச்சிருக்கும்' அப்படினு சொல்வார். ரேஸ் குறித்த தகவல் கேட்டு இப்ப அவருக்குத் தந்தி அனுப்பியும் என்ன பிரயோஜனம் வந்துடப் போகுது? அவர் ஏதாவது உருப்படியான தகவல் தந்து உதவுவாரா என்பது சந்தேகம் தான். எல்லா விஷயத்திலும் அவர் பயந்துப் போகும் அளவுக்கு கவனமானவர்... உஷாரானவர்! நான், நேரெதிர்! இது தான் அவரோட நீண்ட நாட்கள் வாழ்வதையே சிக்கலாக்கிடுது. விடு... நாம உன்னோட ஜோடிப் பொருத்தம் வேலையைப் பார்ப்பம். கலோனல் ரேஸ் உன் மேல் எக்கச்சக்கமா ஈர்க்கப்பட்டிருக்கார், ஆனே. உன்னோட அந்த வஞ்சகம் நிறைந்த கண்களால ஓரிரு கண் ஜாடைகளை அள்ளி வீசு... போதும், சம்பந்தம் முடிஞ்சுடும்! இது போல பிரயாணங்கள்ல பல காதல் இறுதியாகுது.''

''கலியாணம் பண்ணிக்க நான் விரும்பலே.''

''விருப்பமில்லே?'' எனக் கேட்டார் ஸுஸேனி. ''ஏன் கூடாது? நான் கலியாணமான பெண்ணா இருக்கத் தான் விரும்பறேன் - அது க்ளாரன்ஸா இருந்தாலும் கூட!''

யோசனையற்றுப் பேசிக்கொண்டே போகும் ஸுஸேனியின் போக்கினை ஒதுக்கினேன். ''இப்போதைக்கு நான் என்ன தெரிஞ்சுக்க விரும்பறேன்னா'' என்று முடிவாய் சொன்ன நான், ''கலோனல் ரேஸ் இந்த சமாச்சாரத்துக்குள்ளே நுழைய என்னத் தேவையிருக்கு? அவர் இதுல எங்கேயோ இருக்கார்'' என்றேன்.

''அவர் அந்தக் கதையை சொன்னது, வெறும் உரையாடலுக்காகத் தானிருக்கும்னு உனக்குப் படலியா?''

''இல்லை. எனக்கு அப்படிப் படவேயில்லே'' என்றான் நான் இறுதியாய். ''நம் எல்லாரையும் அவர் நெருக்கமா கண்காணிச்சுக் கிட்டிருந்தார். நினைவிருக்கா... 'சில வைரங்கள் மீட்கப்பட்டன- எல்லாம் கிடையாது.' ஒருவேளை இதெல்லாம் தான் அந்த மீட்கப்படாதவையா இருக்கும். இல்லேனா, ஒரு வேளை...''

''ஒரு வேளை- என்ன?''

நான் நேரடியாய் இதற்கு பதில் தரவில்லை. ''அந்த இன்னொரு இளைஞனுக்கு என்ன ஆச்சுனு எனக்குத் தெரிஞ்சாகணும். ஜான் எட்ஸ்லே இல்லே- ஆனா- அந்த இன்னொருவன்- அவன் பேர் என்ன?- ஆங், லூகாஸ்!''

''எப்படியோ... இந்த விஷயத்துலக் கொஞ்சமா வெளிச்சம் பட ஆரம்பிக்குது. இந்த அத்தனை பேரும் துரத்திக்கிட்டிருக்கும் பொருள்-*வைரம்*. இந்த வைரங்களைத் தன்னகப்படுத்திக் கொள்வதற்காகத் தான், 'ப்ரௌன் சூட்டில் வந்த மனிதன்', நதீனாவைக் கொன்னிருக்கான்.''

''அவன் அவளைக் கொல்லலை''-கறாராய் சொன்னேன் நான்.

''ம்ம், அவன் தான் அவளைக் கொன்னிருக்கான். வேற யார் தான் அப்படி செஞ்சிருக்க முடியும்?''

''எனக்குத் தெரியாது. ஆனா அவன் கொல்லலேனு எனக்கு நிச்சயமாத் தெரியும்.''

''அவ உள்ளே நுழைஞ்சு மூணு நிமிஷத்துக்குப் பிறகு இவன் அந்த வீட்டுக்குள்ளே நுழைஞ்சுட்டு, ஒரு வெள்ளைத் தாள் போல வெளிறிப் போய் வரான்.''

''ஏன்னா, இவன், அவளை அங்கே பிணமாப் பார்த்திருக்கான்.''

''ஆனா வேற ஒரு நாதியும் உள்ளே போகலையே.''

''அப்போ கொலைகாரன் முன் கூட்டியே வீட்டுக்குள்ளே இருந்திருக்கான்... இல்லே எப்படியோ ஒரு வழியில அவன் உள்ளே வந்திருக்கான். முன் பகுதி வழியா சமையக்காரி கண்ல படாமத்தான் அவன் உள்ளே வரணும் என்பது சட்டம் கிடையாதே... சுவரேறிக் குதிச்சும் அவன் உள்ளே நுழைஞ்சிக்கலாம்.''

ஸூஸேனி என்னைக் கூர்மையாய்க் கவனித்தார்.

''ப்ரௌன் - சூட்டில் - வந்தவன்'' - கிசுகிசுத்துக் கொண்டார் அவர். ''யாரவன்? புரியலே. அவன், ரயிலடியில பார்த்த டாக்டரை மாதிரியே அச்சு அசலா இருக்கான். அவனுடைய ஒப்பனைகளையெல்லாம் சடுதியில் கழட்டிப் போட்டுட்டு, அந்தப் பொண்ணை மார்லோ வரை பின்தொடர்ந்துப் போக அவனுக்கு அவகாசமிருந்திருக்கும். அவளும் கார்ட்டனும் தான் அங்கே சந்திச்சிருக்கணும்; அந்த ஒரே வீட்டைப் பார்க்கறதுக்காக ரெண்டு பேர் கிட்டேயும் தரகன் கொடுத்த சீட்டு இருந்திருக்கு. அவங்க மில் வீட்டுல சந்திச்சுக்கிட்டது எதிர்பார்க்காம

ஒரு விபத்து போல நடந்த மாதிரி தெரியணும் என்பதற்காக இப்படியொரு விசாலமான முன்னெச்சரிக்கை நடவடிக்கையைக் கையாண்டிருக்காங்கனா, அவங்க ரெண்டு பேரும் பின்தொடரப் படலாம் எனும் சந்தேகம் அவங்களுக்கு இருந்திருக்கு. இப்படி யிருந்தாலும், நிழலா கார்ட்டனைத் தொடர்வது 'ப்ரௌன் சூட்டில் வந்த மனிதன்' தான்னு அவருக்கே கூட தெரியாது. ஆனா அவன் தான்னு அடையாளம் தெரிஞ்ச கணத்துல கார்ட்டன் அடைஞ்ச அதிர்ச்சியிருக்கு பாரு... அது அத்தனை பலமானதா அமைஞ்சு, தான் என்ன பண்ணிக்கிட்டு இருக்கோம் எனும் பிரக்ஞையே இல்லாம அவரைப் பின்னால போக வெச்சு, தண்டவாளத்துல தள்ளியிருக்கு. இதெல்லாம் ஸ்படிக சுத்தமா விளங்குது, இல்லையா, ஆனே?''

நான் மறுபதில் கொடுக்கவில்லை.

''ஆமாம் விஷயம் இப்படித்தான் போகுது. சடலத்தின் உடலி லிருந்து அவன் தான் தாளை உருவி எடுத்திருக்கான்... ஸ்தலத்திலிருந்து கழன்று விடணும் எனும் அவசரத்துல அதைத் தவற விட்டிருக்கான். அப்புறம் அந்தப் பொண்ணை மார்லோ வரைக்கும் பின்தொடர்ந்துப் போயிருக்கான். அவன் அங்கேயிருந்து கிளம்பிட்ட பிறகு... அதாவது, அவளைக் கொன்னுட்டுக் கிளம்பிட்ட பிறகு... அவன் என்னப் பண்ணியிருப்பான்? சரி, சரி, முறைக்காதே. உன் பாஷையிலேயே சொல்றேன்...அவ கொல்லப்பட்டுக் கிடப்பதைப் பார்த்து வெளியேறிய அவன், பிறகு என்ன செஞ்சிருப்பான்? எங்கே போனான் அவன்?''

இன்னமும் நான் ஒன்றும் சொல்லவில்லை.

''இப்போ எனக்கு ஒரு வியப்பு வருது'' என முணுமுணுத்தார் ஸூஸேனி. ''ஒரு வேளை சர் ஆஸ்டஸ் பெட்லரை ஒத்துக்க வெச்சு அவருடைய காரியதரிசியா கப்பல்ல பிரயாணிக்க ஏற்பாடு பண்ணியிருப்பானா? இங்கிலாந்துலிருந்து தப்பிச்சுட இது ஒரு பிரத்யேக தனிப்பட்ட வழியா அமைஞ்சிருக்கும். ஆனா எப்படி அவன் சர் ஆஸ்டஸைக் கட்டங்கட்டி மடக்கியிருப்பான்? அப்படினா அவனுக்கு சர் ஆஸ்டஸ் மேல ஆதிக்கம் இருந்திருக்கணும் போல இருக்கு.''

என்னையும் அறியாத, ''இல்லேனா, பகெட் மேல'' என்றேன் நான்.

''உனக்கு பகெட்டைக் கண்டால பிடிக்கிறதில்லே, ஆனே. எல்லாத் தகுதியும் நிறைந்து கடுமையாக உழைக்கும் ஒரு சேவகன் அப்படினு

பகெட்டைத் தூக்கி வெச்சு சொல்றார், சர் ஆஸ்டஸ் பெட்லர். அப்படியே கூட அவர் நிஜ வாழ்க்கையிலும் இருக்கலாம், எந்த விதக் குற்றங்களும் இல்லாம. திசை திருப்பாம என் வேதவாக்கைக் கேளு. ரேபர்ன் தான் 'ப்ரௌன் சூட்டில் வந்தவன்'. அவன், கீழே போட்ட தாளைப் படிச்சிருக்கான். அதிலிருந்தப் புள்ளியை, உன்னைப் போலவே தப்பா புரிஞ்சுக்கிட்டிருக்கும் அவன், 17 ஆம் தேதி, ராத்திரி ஒரு மணிக்கு, கேபின் 17க்கு வர முயற்சிக்கிறான். அந்தக் கேபினை ஏற்கெனவே பகெட் மூலமா அடைய மாபெரும் முயற்சி பண்ணித் தோற்றவன் அவன் என்பது நினைவிருக்கட்டும். அங்கே வரும் வழியில தான் யாரோ அவனைக் கத்தியில குத்தியிருக்கணும்---''

''யார்?'' - சொல்லியும் கேளாது, நான் இடையில் புகுந்தேன்.

''ரெவரிட். எட்வர்ட். ஆமாம். ரொம்ப நல்லாவே பொருந்துது. உன் பத்திரிகை ஆசிரியர் நாஸ்பிக்கு 'ப்ரௌன் சூட்டில் வந்தவன்' யார்னு கண்டுபிடிச்சாச்சனு தந்தியொண்ணு அனுப்பு. கூரையைப் பிச்சுக்கிட்டு உனக்குக் கொட்டும்.''

''பற்பல விஷயங்களை நீங்க கவனிக்காம விட்டிருக்கீங்க.''

''என்னென்ன விஷயங்கள்? ரேபர்ன் முகத்திலிருக்கும் பெரிய வெட்டுக் காயம்? எனக்கும் தெரியும். ஆனா தழும்புகளை மிகச் சுலபமா மூடி மறைச்சுடலாம். அவற்றை உருவாக்குவதும் பிடுங்கி எறிவதும் படு ஈஸி! அவன் தான் அதே உயரத்திலும், கனத்திலு மிருப்பவன். ஆமாம்... ஸ்காட்லாண்டு இன்ஸ்பெக்டரை நீ என்ன தலைனு சொல்லிப் பொடிப் பொடியாக்கினே?''

நான் திக்கினேன். ஸூஸேனி, அதிகம் படித்துள்ள, செமத்தியான விஷய ஞானம் உள்ள பெண்மணி. ஆனால் அகழ்வாராய்ச்சிகள் பற்றிய தொழில்நுட்ப வார்த்தைகளிலெல்லாம். அவர் விமரிசையாய் இருக்கக் கூடாது என்று வேண்டிய நான், ''டோலிசோ-செஃபாலிக்'' என்றேன், மிக மெதுவாய் வாய்க்குள்ளேயே.

ஸூஸேனி உடனடியாய் சந்தேகங்கொண்டவராய் தோன்றினார். ''இதுவா அது?''

''ஆமாம். நீளமான தலைக்கு இப்படி பெயர். தெரியுமா? தலையின் அகலம், நீளத்தை விட முக்கால் பங்கு கம்மியா இருக்கும்; ஆக, தலை நீஈஈஈளமாத் தெரியும். பார்த்தா, கீழே குவிந்து மேலே விரிந்துக்கிட்டே போகும் கூம்பு மாதிரியே இருக்கும், தலை'' தாராளமாய் விளக்கினேன் நான்.

சிறு இடைவேளை இப்போது விளைந்தது. நான் நிம்மதிப் பெருமூச்சு விட ஆரம்பிக்க, சட்டென ஸூஸேனி கேட்டார்: ''இதுக்கு எதிர்ப்பதம் என்ன?''

''என்ன கேட்கிறீங்க-எதிர்ப்பதம்னா?''

''இதுக்கு நேரெதிர் இருந்தாகணும், இல்லையா? நீளம், அகலத்தை விட முக்கால் பங்கு கம்மியா இருக்கும் தலை; தலை அகலம்ம்மா தெரியும். இந்தத் தலையை என்ன சொல்லிக் கூப்பிடுவீங்க?''

எனக்குத் தெரியாதே! முழித்துக் காலங்கடத்த ஏற்றவரல்ல ஸூஸேனி. ஏமாற்றத் தகுந்நதவரல்லர், இவர். விருப்பமற்று, ''ப்ராசி-செஃபாலிக்'' என்று வாய்க்குள்ளேயே முணுமுணுத்தேன் நான்.

''இது, இது. இதைத்தான் நீ சொன்னதா எனக்கு நினைவு.''

''நானா சொன்னேன்? அப்ப நாக்குத் தவறியிருக்கும். நான் அப்போ சொல்ல நினைச்சது, டோலிசோ-செஃபாலிக் தான்'' என்றேன்.

ஸூஸேனி என்னுள் எதையோ தேடும் பார்வையை வீசினார். சில நிமிடங்கள் முடிந்ததும் சிரித்தார். ''நீ ரொம்ப அழகா பொய் சொல்றே, நாடோடிப் பொண்ணே! ஆனா, வேண்டாம்! என்ன இதெல்லாம்? எதுக்காக இத்தனை பொய்? என்னத்தை மறைக்கிறே? நீ இப்போ சொன்னால்... வீணாகும் நேரமும் நம்ம சக்தியும் மிச்சமாகும்.''

''சொல்றதுக்கெல்லாம் ஒண்ணுமே கிடையாது'' -மறுபடியும் நான் விருப்பமற்றுப் பேசினேன்.

''அங்கே உன்கிட்டே சொல்ல எதுவுமே, இல்லை?'' கண்ணியமாய் கேட்டார் அவர்.

அப்போது மெதுவாகச் சொன்னேன்: ''யெஸ்... உங்ககிட்டே சொல்லித் தான் ஆக வேண்டியிருக்கு.'' பின், தொடர்ந்தேன்: ''இதுக்கு நான் வெட்கப்படலே. உங்க வாழ்க்கையில அதுவா நுழைஞ்சு தானா அரங்கேறி விடும் ஒண்ணுக்காக நீங்க வெட்கப்பட முடியாது. அப்படித்தான் அவன் நுழைஞ்சான் என் வாழ்க்கையில. தூ'னு வெறுக்கும்படியா நடந்துக்கிட்டான் அவன்- மூர்க்கத்தனம்; கூடவே நன்றிகெட்ட குணம். சங்கிலி போட்டுக் கட்டப்பட்ட ஒரு நாய் போல, அல்லது படு மோசமா நடத்தப்பட்ட ஒரு மிருகம் போலனு சொல்லலாம்... அது யாரை எப்ப வேணும்னாலும் குதறலாம். அது தான் அவன் கடுகடுப்பா, உறுமிக்கிட்டு! என்ன கண்றாவி காரணத்துக்காக அவனைப் பொத்திப் பொத்திக் காக்க விரும்பறேனேன்னு எனக்கேத் தெரியலே, ஸூஸேனி -ஆனா அதைத்

தான் செய்யறேன்! தீவிரமா... பைத்தியக்காரத்தனமா... கண்மூடித் தனமா... அட...க்க... முடி...யாம... இஷ்டப்படறேன்! ஜஸ்ட்... கண நேரம் அவனைப் பார்த்த அந்த நேரம், என் வாழ்க்கையையே தலைகீழா புரட்டிப் போட்டுடுச்சு ஸுலேஸனி, குப்புறத் திருப்பிப் போட்டுடுச்சு! நான் - அவனைக் *காதலிக்கிறேன்.* யெஸ்! எனக்கு அவன் வேணும். அவனைத் தேடித் தேடி ஆப்பிரிக்கா முழுக்க நான் கால் தேய நடக்கப் போறேன்... விடப் போறதில்லே. பிடிப்பேன். பிடிச்சு, அவனுக்கும் என்னைப் பிடிக்க வைப்பேன்! அவனுக்காக நான் உழைப்பேன், அவனுக்கு அடிமையா கிடப்பேன், அவனுக்காக திருட்டுத் தொழிலைச் செய்யணும்னாலும் செய்வேன், பிச்சை எடுக்கணும்னாலும் சம்மதிப்பேன்! இவ்ளோ தான்- இப்ப உங்களுக்குப் புரிஞ்சிருக்கணும்.''

ஸுலேஸனி நீண்ட நேரம் என்னைப் பார்த்துக் கொண்டிருந்தார். ''அடப்பாவி, நாடோடிப் பொண்ணே!'' என்றார் இறுதியாய். ''பார்த்த நேரத்திலேயே... அதே நொடியிலே, இந்த அளவுக்கு மனசைப் பறி கொடுத்துப் பித்துப் பிடிச்சுப் போன ஒருத்தியை நான் இது வரைக்கும் பார்த்தில்லே, தாயே! கண்கள் நோக்கிய அந்தக் கணத்திலிருந்து இப்படிப் பிசாசா காதல் கொள்ள, என்னால ஆகாதும்மா! ஆனா, உனக்காக நான் இரக்கப்படும் இதே சமயத்துல, உன் மேல எனக்கு அப்படிப் பொறாமையும் வருது! ஒருத்தரை மனசார ஏத்துக்கிட்டு ஜாக்கிரதையா பாதுகாக்க நினைக்கும் பக்குவம் கூட-ஒரு வரம் தானே! பல பெண்களால அது முடியாதுடீ! என்னால- முடியவே முடியாது! ஆக திருமிகு நாஸ்பிக்குத் தந்தி அனுப்பும் சமாச்சாரத்துக்கே இடமில்லே...ம்?!''

நான் மறுத்துத் தலையசைத்தேன்.

''இன்னும் நீ அவன் குற்றமற்றவன் அப்படினு தான் நம்பறே, ம்?''

''அதே சமயத்துல, குற்றமற்ற வெகுளிகளும் தூக்கில் ஏற்றப்படும் அவலம் இங்கே உண்டு என்பதையும் நம்பறேன்.''

''ஹும்! யெஸ்! ஆனா, என் ஆனே... உன்னாலே உண்மைகளை நேருக்கு நேரா சந்திக்க முடியும். அதை இப்பவே செய்யக் கூடாதா! நீ சொன்ன இத்தனையையும் மீறி--- அவனே அந்தப் பெண்ணைக் கொலை பண்ணியிருக்கலாம், இல்லையா?''

''இல்லை'' என்றேன் நான், சற்று உரக்க. ''அவன் பண்ணலே.''

''இது - காதல்!''

''இல்லை, அப்படி கிடையாது. அவளைக் கொன்றுப் போடணும் எனும் ஒரே வெறியோட, அவன், அந்தப் பொம்பிளையைக் பின் தொடர்ந்துக்கிட்டுப் போயிருக்கலாம். அவனே கூட கொன்னிருக் கலாம்; ஆனா, அவன் தான் கொன்னிருப்பான் எனும் பட்சத்துலே, அவன், அதுக்காக ஒரு கயிறை எடுத்து அவ கழுத்தைச் சுத்தி நெறிச்சிருக்கவே மாட்டான். அவன் கொன்னிருந்தா, அவ கழுத்தை நெறிக்க அவனோட பலமும் ஆண்மையும் கொண்ட வெறும் கைகளே போதும்!''

ஸூபேஸனி சற்று நடுங்கி அடங்கினார். பின் அவருடைய கண்கள் குறும்பாய் பாராட்டும் தினுசில் குறுகின. ''ஹூம்... அந்த இளைஞன் ஏன் உன்னை இந்த அளவுக்கு ஈர்த்திருக்கான்னு இப்பத் தான் எனக்குக் கொஞ்சங்கொஞ்சமா விளங்குது, ஆனே!''

# அத்தியாயம் - 16

கலோனல் ரேஸைச் சுற்றி மடக்க ஒரு வாய்ப்பு, மறுநாள் காலையில் எனக்கு அமைந்தது. காசு கட்டி ஆடும் ஒரு சூதாட்ட விளையாட்டு அப்போது தான் அங்கு முடிவடைந்திருக்க, கப்பலின் திறந்த தளத்தில் மேலும் கீழுமாய் அவர் நடந்துக்கொண்டிருந்தார்.

''இன்னிக்குக் காலைப்பொழுது எப்படிப் போச்சு, நாடோடிப் பொண்ணே!'' என்றார் கலோனல். ''கரை எப்ப வரும்னு துடிச்சுக் கிட்டிருக்கீங்களா?''

மறுப்பாய் தலையசைத்தேன் நான். ''இப்ப கடல் ரொம்ப அனுசரணையா இருப்பதாலே, இனி இங்கேயே காலங்காலமா தங்கிடலாமானு கூட தோணுது.''

''என்னே ஓர் ஊக்கம்!''

''சுகந்தமா அமைஞ்சிருக்கும் இன்னிக்குக் காலைப்பொழுது அப்படி சொல்ல வைக்குதா, ம்?''

இருவருமாய் கப்பல் விளம்பின் கைப்பிடியில் சாய்ந்துக் கொண்டோம். ஸ்படிக அமைதி. எண்ணெய் கொட்டப்பட்டுள்ளதோ என்று சந்தேகங்கொள்ள வைத்தது கடலின் ஆரவாரமற்ற மேற்பரப்பு. பரந்துக் கிடந்த சமுத்திரம் நெடுகிலும், நீலம், வெளிர் பச்சை, ஊதா, கருஞ்சிகப்பு என பல நிறங்களின் ஒட்டு வேலைகள் தெரிந்தன. அலைகளுக்கு மேலே அவ்வப்போது தெரிந்து மறைந்த தங்கநிற மின்னல்கள், தவ்வித் தாவிய மீனைச் சுட்டிக் காட்டின. காற்று ஈரப்பசை மிகுந்தும் கதகதப்பாயும் இருக்க... அதன் வாசம், வாசனைத் திரவியங்களால் மணம் கூட்டிக் கொண்ட பெண்ணின் வாசத்தில் இருந்தது.

''நேத்து ராத்திரி நீங்க எல்லாருக்கும் சொன்ன கதை, ஓர் அசத்தலான ஸ்டோரி'' என்று அமைதியை உடைத்தேன் நான்.

''எந்தக் கதை?''

''வைரங்கள் பற்றி சொன்னது.''

''பெண்களுக்கு எப்போதுமே வைரத்தின் மீது ஒரு தனி ஈர்ப்பிருக்கு.''

''ஆமாம்- அது அப்படித்தான். அது சரி... அந்த இன்னோர் இளைஞனின் கதி என்ன ஆச்சு? அவங்கள்ல ரெண்டு பேர் இருந்ததா நீங்க சொன்னீங்க.''

''லூகாஸ்? சம்பந்தப்பட்ட ரெண்டு பேரும் இல்லாம இவன் ஒருத்தனுக்கு மட்டும் தண்டனை தர சட்டத்தால முடியலே. ஆக, அவனும் விடுதலை அடைஞ்சுட்டான்.''

''ஓ... அப்புறம் கடைசியில அவனுக்கு என்ன ஆச்சு? யாருக்காவது அது தெரியுமா?''

கடலைத் தாண்டி எங்கோ தெரிந்த அடிவானத்தை நேர்க்கோடாய் பார்த்தார் கலோனல் ரேஸ். எவ்வித உணர்வையும் படிக்கயியலாத அளவுக்கு முகமூடி போடப்பட்டதாய் ஆனது அவருடைய முகம்; ஆனால் என்னுடைய கேள்விகளை அவர் விரும்பவில்லை என்ற ஊகம் என்னுள் இருந்தது. இருந்தாலும் உடனடியாக தயாராய் பதில் பேசினார் அவர்.

''போர்ல சேர்ந்தான். அங்கேயே துணிச்சலா பணியாற்றினான். காயப்பட்டு பிறகு காணாமப் போயிட்டதா சேதி இருக்கு - அதனால கொல்லப்பட்டு விட்டதாகவும் நம்பப்படுது.''

இந்த பதில், நான் எதைத் தேடிக் கொண்டு கேட்டேனோ அத்தகவலைத் தந்து விட்டது. மேற்கொண்டு நான் எதையும் கேட்கவில்லை. ஆனால், இது வரை எப்போதும் தோன்றா அளவுக்கு, 'இந்தக் கலோனலுக்கு வேறென்னென்ன விஷயங்கள் தெரிந்திருக்கும்?' என்றொரு கேள்வி எனக்குள் விளைந்தது. இந்த அத்தனையிலும் ரேஸின் பாத்திரம், விடை தெரியா பெரும் புதிராகவே இருக்கின்றது.

இன்னொரு வேலையையும் நான் செய்தேன். இரவு சிப்பந்தியைச் சந்தித்துப் பேசியதே அது. சில்லறைகளைக் காட்டி நான் தந்த ஊக்கத்தினால் அவனை உடனடியாகவே பேச வைத்து விட முடிந்தது.

அவனிடமிருந்த அத்தனை விஷயங்களையும் நான் கறந்தெடுத்தேன்... கொஞ்சங்கொஞ்சமாக. கேப் டவுனிலிருந்து இங்கிலாந்து உள்ளே வந்தக் கடல் பிரயாணத்தின் போது, இவனிடம், அதில் பிரயாணம் செய்த ஒரு பிரயாணி, ஒரு முழு போட்டோ சுருள் கொண்ட குட்டி உருளையைத் தந்திருக்கிறான்; அதே கப்பல் இங்கிலாந்திலிருந்து திரும்பும் பிரயாணத்தின் போது, அதனை, கேபின் 71-க்குள், 22ஆம் தேதி நள்ளிரவு ஒரு மணிக்கு ஜன்னல் வழியே போட்டு விட வேண்டும்

என்பது அவன் இட்டிருந்த கட்டளை. ஒரு பெண் அந்தக் கேபினுக்குள் இருப்பாள் என்றும்... இதை சரியாய் செய்து விட வேண்டும் என்பதும் ஒரு பந்தயமாகக் கருதப்பட்டுள்ளது. இந்த விஷயத்தில் பந்தயத் தொகையாக சிப்பந்திக்குப் பெரும் தொகை பேசப்பட்டுள்ளதை அறிய முடிந்தது. வரப் போகும் பெண்ணின் பெயர் என்ன என்பது சொல்லப்படவில்லை. கண்காணிப்பாளனிடம் கேபின் மாற்ற வேண்டும் என்று வேண்டிக் கொண்டு அதன்படி கேபின் 71க்குள் மிஸஸ் ப்ளேர் போய் குடியேறியதால், சிப்பந்திக்கு, 'ஒரு பெண் அந்தக் கேபினுக்குள் இருப்பாள்' என்பதில் எவ்வித சந்தேகமும் எழவில்லை. இந்த விவகாரம் முழுவதையும் ஏற்பாடு செய்து தந்தவனின் பெயர் கார்ட்டன். ரயிலடியில் மின் தண்டவாளத்தில் இறந்தவனின் அங்க அடையாளங்களோடு இவனுடைய அடையாளங்களும் மாற்றமின்றி ஒத்துப் போயின.

ஆக, எப்படியோ, ஒரு மர்ம முடிச்சு அவிழ்ந்துப் போனது; வைரங்கள் தான் நடந்துள்ள அத்தனைக்குமான ஒரே காரணம்!

கில்மார்டனில் இருந்த கடைசி நாட்கள் விரைவாய் ஓடிப் போயின. கேப் டவுன் துறைமுகத்தை நெருங்க நெருங்க என் எதிர்காலம் எப்படிப் போகும் என்பதைக் கவனம் கொடுத்து சிந்திக்கலானேன். நான் கண்காணிக்க வேண்டிய நபர்கள் எக்கச்சக்கமாக அல்லவா இருக்கின்றார்கள்! ரெவரிட். எட்வர்ட், சர் ஆஸ்டஸ், மேலும் அவரது காரியதரிசி - ஓ, அப்புறம் இந்தக் கலோனல்! இப்போது நான் என்ன செய்வது? இயற்கையாய், எட்வர்ட் தான் முதல் ஆளாய் என் கவனத்துக்குள் வந்தவர்! இதில், சந்தேகப்பட்டியலிலிருந்து, வேண்டாவெறுப்பாய், சர் ஆஸ்டஸையும் திரு பகெட்டையும் நான் ஒதுக்கி வைக்கப் பிரியமில்லாமலே முடிவெடுத்த போது தான், எதிர்பாராது நடந்த ஓர் உரையாடல் புதுச் சந்தேகங்களை என்னுள் தூண்டுவித்தது.

ஃப்ளாரன்ஸ் எனும் ஊர்ப் பெயரைச் சொன்னாலே விளக்க முடியாத உணர்ச்சிக் கொந்தளிப்பில் விழும் பகெட்டின் படபடப்பினை நான் மறந்திருந்தேன். கடல் பிரயாணத்தின் கடைசி நாள் மாலையில் நாங்கள் அனைவரும் கப்பலின் மேல் தளத்தில் கூடி உட்கார்ந்திருந்தோம். அப்போது, சர் ஆஸ்டஸ், குற்றங்குறை ஏதும் காண முடியாத ஒரு சிறு கேள்வியை, உரையாடலின் போது அவருடைய காரியதரிசியைப் பார்த்துக் கேட்டார். மிகச் சரியாக எது சம்பந்தமாய் அக்கேள்வி உருவானது என்பது நினைவிலில்லை...

இத்தாலியில் நேரத்துக்கு ஓடாத ரயில்கள் பற்றிய ஒரு கேள்வி அது... ஆனால், அப்போதே, உடனடியாகவே, நான் ஏற்கெனவே பகெட்டிடம் கவனித்திருந்த அதே இருப்புக் கொள்ளாமையை அவர் படபடவென வெளிப்படுத்தினார். அப்போது, அங்கு ஒலிபெருக்கியில் வழிந்துக் கொண்டிருந்த மெல்லிய இசைக்கு ஏற்ப சற்று நேரம் ஆட திருமதி ப்ளேரை, சர் ஆஸ்டஸ் அழைத்துச் சென்று விட, காரியதரிசிக்கு அடுத்து காலியான இருக்கைக்கு, சட்டென்று விரைவாக ஓடினேன் நான். உட்கார்ந்துக் கொண்டேன். இப்போது நான் விடுவதாயில்லை; இந்த சமாச்சாரத்தின் ஆணி வேர் வரை போய் பார்த்து விடுவது என்ற முடிவிலிருந்தேன்.

''இத்தாலியை ஒரு தடவையாவது போய்ப் பார்த்துடணும்னு வெறியா இருக்கேன்'' என்றேன். ''அதிலும் குறிப்பா, ஃப்ளாரன்ஸுக்கு! ஆங், நீங்க அங்கே ரொம்ப நாள் தங்கி ஊர் சுத்தலையா, மிஸ்டர் பகெட்?''

''ஓ, செய்யாமலா! செஞ்சேன், மிஸ் ஆனே பெட்டிங்ஃபெல்ட். தப்பா நினைக்கலேனா... சர் ஆஸ்டஸுக்கு வந்த கடிதங்கள்ல பதில் எழுத வேண்டிய சில---''

அவருடைய மணிக்கட்டினைப் பிடித்து என் கட்டுக்குள் கொண்டு வந்துக் கொண்டேன் நான். ''நீங்க -இப்போ- எழுந்து -ஓடக் கூடாது!'' என்று நிறுத்தி நிதானமாய் சற்று அதட்டலாய்ச் சொன்னேன் நான். ''பேச்சுத் துணைக்குக் கூட ஓர் ஆள் இல்லாத இங்கே, என்னை நீங்க தனியா விட்டுட்டுப் போவதை, நிச்சயமா சர் ஆஸ்டஸ் விரும்ப மாட்டார். அப்புறம், ஓ பகெட்... உங்களுக்குள்ளே ஏதோ ஒரு ரகசிய குற்றவுணர்வு இருப்பதா நான் நம்பறேன்.''

இதைக் கேட்கும் போதும் அவரது கையை நான் பிடித்தபடியே இருந்ததால், அப்போது அவருக்குள் உடனே உருவான நடுக்கத்தை என்னால் உணர முடிந்தது.

''அப்படியெல்லாம் எதுவும் கிடையாது, மிஸ் ஆனே பெட்டிங் ஃபெல்ட், அப்படியெல்லாம் எதுவுமே கிடையாது'' என்று அக்கறையாய் சொன்னார் அவர். ''அங்கேயிருந்ததைப் பற்றியெல்லாம் இப்ப உங்க கிட்டே சொல்லிப் பகிர்ந்துக் கொள்வதில் எனக்கு அலாதி ஆசை தான்... ஆனா, சர் ஆஸ்டஸுக்கு வந்த சில தந்திகள்...''

''ஓ, பகெட், எத்தனை உப்பு சப்பில்லாத காரணத்தைச் சொல்லி ஓடப் பார்க்கிறீங்க. நான் சர் ஆஸ்டஸ் கிட்டே சொல்லிக்கிறேன்---''

இதற்கு மேல் என்னால் பேச்சைத் தொடர முடியவில்லை. மற்றுமொரு முறை குதித்தான் மனுஷன். அவருடைய நரம்புகள் அறுந்து விடும் அளவுக்கு நடுங்கிக் கொண்டிருந்தன. ''உங்களுக்கு இப்ப என்ன தெரிஞ்சாகணும்?''

தன் கொள்கையை விட்டுக் கொடுத்து இறங்கி வந்த பகெட்டைக் கண்டு உள்ளூர சிரித்துக் கொண்டேன். ''எல்லாத்தையும்!''

இதற்கு பகெட் மயங்கும் அளவுக்கு வெளிறிப் போக, தொடர்ந்து நான் பேசிய ஒரு வரி தான் அவருக்கு மறுபடியும் உயிரை மீட்டுத் தந்தது. ''எல்லாத்தையும் தெரிஞ்சுக்க விரும்பறேன், யெஸ்! இத்தாலிய ஓவியங்கள்... இத்தாலிய மரங்கள்... இத்தாலிய மக்கள்--- நகரம்---''

இந்தக் கற்பனைகளுக்குள் என்னையே இழந்து விட்ட நிலையில் அப்படியே கிடந்த நான், ''உங்களுக்கு இத்தாலிய மொழி தெரியும்னு நினைக்கிறேன்?'' என மீண்டேன்.

''ம்ம். ஒரு வார்த்தை தெரியாது. ஆனா, இருந்தாலும், போர்ட்டர்கள்... கடை ஆட்கள்... ஓட்டல் பசங்கள்... இவங்க கூடல்லாம் எனக்கு நோ ப்ராப்ளம்.''

''அப்படியா!'' என அவசர ஆர்வமாய் பதில் தந்த நான், ''ஆங்... சொல்லுங்க... உங்களுக்குப் பிடித்த ஓவியம்? ம்? எது?'' எனக் கேட்டேன்.

''அது... வந்து... வந்து... மடோனா! அ... அ... அப்புறம்... ரேஃபெல்!''

''பழைமை பொதித்த அற்புத ஃப்ளாரன்ஸ்'' நான் என்னை மறந்து உணர்ச்சிபூர்வமாய் சொன்னேன். ''ஆஹ்...எத்தனை ருசிகரமான ஆறுகள்! ஆர்னோ, ட்யூமோ. தெரியுமா, உங்களுக்கு, ட்யூமோ?''

''ஆமாம், ஆமாம்.''

''இன்னொரு மனோஹரமான ஆறு உண்டுயில்லே?'' எனும் கேள்வியின் மூலம் அச்சுறுத்தினேன்! ''ஆர்னோவை விட அதி அழகு!''

''அப்படியே தான், அப்படியே தான்.''

நான் போட்ட பொறி ஏற்படுத்தித் தந்துள்ள வெற்றிக் களிப்பினால் மேற்கொண்டு சென்றேன். ஆனால் அதிகம் பேச வேண்டியத் தேவையில்லாது, தன்னை சீக்கிரத்திலேயே என் கைகளுக்குள் ஒப்படைத்து விட்டார் பகெட். தனது வாழ்நாளில் ஒரு முறை கூட பகெட் ஃப்ளாரன்ஸ் போனது கிடையாது! அவர் பேசியதில் இது மிக நன்றாகவே விளங்கியது.

அப்படியானால், ஃப்ளாரன்ஸ் போகாத இவர், போன இடம் தான் எது? இங்கிலாந்திலேயே எங்காவது போனாரா? மில் வீடு மர்மம் அரங்கேறிக் கொண்டிருந்த போது, ஒரு வேளை, இவரே அங்கே இருந்திருப்பாரா? தைரியமாய் அடியெடுத்து வைப்பதைத் தவிர வேறு வழியில்லை என ஆனேன்.

''இதுல விசித்திரமான விஷயம் என்ன'னா...'' என்ற நான், ''உங்களை வேற எங்கேயோ நான் பார்த்திருக்கேன் அப்படினே தோணுது. ஏன்? தெரியலே. ஆனா இதுல நான் தப்பா கூட இருக்கலாம்; இங்கே நான் இருந்த சமயத்துல தான் நீங்க ஃப்ளாரன்ஸ் போயிருந்தீங்களே...?! இருந்தாலும் பகெட்---'' என இழுத்தேன்.

அவரை வெளிப்படையாகவே இப்போது படித்தேன். சுடப்பட்டு விட்ட அவதி கண்களில் இருந்தது. உலர்ந்து விட்ட உதடுகளின் மீது நாக்கினை ஓட்டினார்.

''எங்கே - அ... அ... அதாவது... - எங்கே---''

''எங்கே என்னைப் பார்த்தீங்க, ஆங்?'' என்று அவர் முடிக்க வேண்டிய கேள்வியை நான் முடித்துக் கொடுத்தேன். அதற்கான பதிலாக, ''மார்லோவில்'' என்றேன்!''மார்லோ தெரியும் இல்லே, உங்களுக்கு? சே, என்ன ஒரு முட்டாள் நான்! உங்களுக்குத் தெரியாமலா?! சர் ஆஸ்டஸுக்குத் தான் அங்கே ஒரு வீடு இருக்கே?!''

ஆனால் இந்த சமயத்துக்குத் துளியும் ஒத்து வராத எதையோ உச்சரித்த எனது 'இரை' உடனே எழுந்து ஓடியே விட்டது.

அந்த இரவில், பூரிப்பான கிளர்ச்சியோடு நான் ஸுஸேனியின் அறைக்குள் நுழைந்தேன். ''கவனிச்சீங்களா, ஸுஸேனி'' என்று கதையைச் சொல்லி முடித்தவுடன் கெஞ்சாத குறையாக சொன்ன நான், ''கொலை நடந்த சமயத்துல அவர் இங்கிலாந்துல அதுவும் மார்லோவில தான் இருந்திருக்கார். இப்பவாவது குற்றமுள்ள, அந்த, 'ப்ரௌன் சூட்டில் வந்தவன்' யார்னு உங்களுக்குப் புரிஞ்சுதா?'' என்றேன்.

கண்களைச் சிமிட்டியபடி, ''ஒரு விஷயம் மட்டும் எனக்குத் தெளிவாத் தெரியும்'' என்றார் ஸுஸேனி, நான் சற்றும் எதிர்பாராத விதமாய்!

''என்னது அது?''

''இந்த அசிங்கமான பகெட்டை விட அந்த 'ப்ரௌன் சூட்டில் வந்தவன்' அற்புத அழகானவன் என்பது! இல்லே ஆனே, கோவிச்சுக் காதே. சும்மா கேலி சொன்னேன். உட்கார். ஜோக்கைத் தள்ளி

வெப்போம்...நீ ஒரு முக்கியமான கண்டுபிடிப்பை செஞ்சிருக்கே. இது வரைக்கும் பகெட் உள்ளூர்லே இருந்துக்கிட்டே வேற எங்கேயோ இருந்த மாதிரி கானல் சூழலை உண்டு பண்றார்னு தான் ஊகம் பண்ணிக்கிட்டிருக்கோம். ஆனா ஊகம் தேவையில்லேனு இப்போ நிரூபணமாயிருக்கு.''

''சரியா சொன்னீங்க. இனி அவர் மேல ஒரு கண்ணை நாம பதிச்சேயிருக்கணும்.''

ஒருவித கிலேசம் தொனிக்க, ''பகெட் மேலேனு மட்டும் இல்லே... எல்லார் மேலயும்'' என்றவர், ''ஆங்...'' என்று பேச்சை மற்றொரு விஷயத்துக்கு மாற்றினார். ''ஒரு விஷயத்தை உன்கிட்டே பேசியே ஆகணும்னு இருக்கேன். அது -பணம். என்ன பண்ணப் போறே? நீ தனியொரு ஆளா சுதந்திரமா நிக்கக் கூடிய புத்திசாலிப் பொண்ணு என்பதுல எனக்குப் பெருமை தான், ஆனா, ஏன் இந்த விஷயத்தை நீ ஒத்தைக் குதிரையா சமாளிக்கணும்? ரெட்டைக் குதிரை வண்டியா ஆக்கிட்டா? இனி நாம பங்குதாரர்கள்-இந்த சமாச்சாரத்துல! நான் உன்னை விரும்புவதற்காகவோ அல்லது நீ ஒரு தோழி கூட இல்லாத தனியாள் எனும் இரக்கத்தாலோ உனக்கு நான் ஒரு தம்புடி தரப் போவதில்லே. எனக்குத் தேவை-த்ரில்... கிளர்ச்சி...சாகசம்...அதுக்கு சம்பளம் தர நான் தயார்! எத்தனை செலவானாலும் பரவாயில்லே... இந்த சமாச்சாரத்துக்குள்ளே இனி மேற்கொண்டு நாம ரெண்டு பேரும் ஒண்ணாவே போகப் போறோம். ஆரம்பமா... நீ நேரா என் கூட மவுண்ட் நெல்ஸன் ஓட்டலுக்கு வரப்போறே. அங்கே இனி நாம செய்ய வேண்டிய நகர்த்தல்களைத் திட்டமிடுவோம்.''

அவருடைய இந்த முடிவினை விவாதித்தோம். கடைசியில் நான் ஒத்துக் கொண்டேன். ஆனாலும் எனக்கு இது பிடிக்கவில்லை. சொந்தமாக தனியாகவே நான் கேஸைக் கையாள விரும்பினேன்.

''விஷயம் முடிஞ்சது'' என்று முடித்து வைத்த ஸ்ஸேனி, எழுந்து நின்றுக் கொண்டு நீட்டி முழக்கி ஒரு கொட்டாவியை வெளியிட்டார். ''பேசிப் பேசிக் களைப்பாயிட்டேன், ஆனே. பரவாயில்லே...! இப்ப பார் மேலேயெல்லாம் நாம் கண்களைத் தீவிரமா பதிக்கணும்னு அலசிடுவோம். திரு எட்வர்ட், டர்பன் வரைக்கும் போறார். கேப் டவுனிலிருக்கும் மவுண்ட் நெல்ஸன் ஓட்டலுக்கு நேரா போகும் ஆஸ்டஸ் பிறகு அங்கிருந்து ருடேஸியா கிளம்பிறார். அவரோட சொந்தக் கார்ல போகப் போறார் போலிருக்கு...நேற்று நாலாவது கோப்பை திராட்சைசாறு கொஞ்சம் அதிகமா உள்ள இறங்கினவுடனே,

அந்தக் கார்ல நானும் அவரோட வரலாம்னு அழைப்பு கொடுத்தார்! உண்மையாவே அப்படி சொன்னார்னு நான் ஒப்புக்க மாட்டேன்... பேச்சு வாக்குல தான் சொல்லியிருக்கணும். போதை! ஆனா நான் கூட வந்தே தீர்வேன்று அடம்பிடிச்சா, விட்டுக் கொடுத்துடுவார்.''

''நல்லது'' என நான் அங்கீகரித்தேன். ''நீங்க சர் ஆஸ்டஸ் மற்றும் திரு பகெட் ஆகியோரைக் கண்காணியுங்க. நான் எட்வர்டைக் கவனிச்சுக்கறேன். அப்போ கலோனல் ரேஸ்?''

ஸுஸேனி என்னை சந்தேகம் தொனிக்க விந்தையாய் கவனித்தார். ''ஆனே, அவரைப் போய்... நீ... சந்தேகப்பட்டியல்ல---''

''வெப்பேன்! நான் எல்லாரையும் சந்தேகப்படறேன். அதிலும் இதுல சம்பந்தமே இல்லாதவர் அப்படினு தோணுபவர் மீது, இன்னும் தீவிரமா!''

புர்ர்ர்ரென்று ஒசையெழுப்பினார் ஸுஸேனி.

ஸுஸேனி, அவருடைய திறமையை எத்தனை அருமையாகக் கையாள முடியுமோ அவ்வாறு கையாண்டு முன்னேற வேண்டும் என்ற கடைசி வார்த்தைகளோடு, நாங்கள் கிளம்பினோம்.

உடனடியாய் போய் படுத்துத் தூங்க முடியாத அளவுக்கு பரபரப்பிலிருந்தேன் நான். இது தான் கப்பல் பிரயாணத்தில் என் கடைசி இரவு. நாளை விடியற்காலையிலேயே நாங்கள் கடற்கரை இறங்கியிருப்போம்.

எனவே, படுக்காமல்,கடலின் மேல் தளப்பார்வையாளர் பகுதிக்கு நழுவிப் போனேன். காற்று, புத்தம்புதிதாகவும் குளிர்ச்சியாகவுமிருந்தது. சற்று கிளர்ந்திருந்த அலைகளால், கப்பல் சன்னமாய் எகிறிக் கொண்டிருந்தது. தளம் முழுவதும் கும்மிருட்டாகவும் வெறிச்சோடியும் கிடந்தது. அது, நள்ளிரவைக் கடந்த நேரம்.

ஓயாமல் பளபளக்கும் அலைகளின் விளம்புகளில் என்னையிழந்து பார்த்துக் கொண்டேயிருந்தேன். அதோ...எங்களுக்கு முன்னால் விரிந்துக் கிடக்கின்றது, ஆப்பிரிக்கா. அதனைக் குறி வைத்து, மையிருட்டைக் கிழித்துக் கொண்டு நாங்கள் பிரயாணப்பட்டுக் கொண்டிருக்கிறோம். ஒருவரும் அருகிலில்லை. அற்புதமான உலகை நான் தனியாய் ரசித்துக் கொண்டிருப்பதை மிக அனுபவித்தேன். கிடைக்கற்கரிய அமைதியில் சுற்றப்பட்டு, காலநேரத்தையெல்லாம் கவனத்தில் கொள்ளாது இயற்கையெனும் மாயையில் கரைந்துப் போய், அஃறிணை போல் நின்றுக் கொண்டிருந்தேன் நான்.

அப்போது, திடுமென, மிக அருகில் ஓர் ஆபத்து நெருங்கி விட்டது எனும் உள்ளுணர்வின் அலறலை நான் கேட்டேன். நான் எந்த

ஒலியையும் கேட்டிருக்கவில்லை; ஆனால் தானாய் உந்தித் தள்ளப்பட்டு சுழற்சியாய்த் திரும்பினேன். மெதுவாக ஓசையின்றி நகர்ந்துக் கொண்டிருந்த ஒரு நிழலுருவம் என் பின்பக்கத்திலிருந்து சட்டென்று எழுந்தது. நான் மெல்லமாய் திரும்பிய நொடியில் அது தள்ளி வெகுண்டது. இதற்கு நான் உருவாக்கியிருக்கவல்ல பயக்கதறலை, அதன் ஒரு கை என் தொண்டையை இறுக்கி அடக்கியது. தப்பிக்க வேறு வழியேயின்றி அதனுடன் போராட்டத்தில் இறங்கினேன் நான். ஆனால் அதில் ஜெயிக்க வாய்ப்பில்லாமலே போனது. உடையும் தொண்டையின் திணறலால் ஒலி கம்மிய சில இருமல்களைத் திசையறியாதுஉதிர்த்த நான், ஒரு பெண்மைக்கே உரிய வகையில், இருகைகளையும் சடுதியில் தூக்கி அதன் முகத்தைத் தோராயமாய் பிடித்து அழுத்திக் கீறினேன். கத்திக் கூப்பாடு போடுவதிலிருந்து என்னைத் தடுத்து விட வேண்டும் என்ற இயக்கத்திலிருந்ததால், என்னுடைய இத்தகைய தாக்குதலை எதிர்கொள்ள அந்த நிழலுருவத்துக்கு வசதி இல்லாமல் ஆனது. நான் கவனித்து விடாமல் ரகசியமாய் வந்து என்னை நெருங்க முடிந்திருந்தால், கப்பலிலிருந்து, அலையும் அலைகளுக்குள்என்னை மிகச் சுலபமாய் அதனால் தள்ளியிருக்க முடியும். மீதி பண்ண வேண்டியவைகளைத் திமிங்கிலங்கள் பார்த்துக் கொண்டிருக்கும்.

இயன்ற வரை போராடிக் கொண்டிருந்த என் பலம் மெல்ல தளர்வதை உணர்ந்தேன். இதே போலவே என் எதிரியும் நிலை குலைவதைக் கவனித்தேன். பிறகு துரிதமாய், துளி கூட ஓசையின்றி அடிகளெடுத்து வைத்து, மற்றொரு நிழலுருவமும் எங்களை நெருங்கியிருந்தது. இது, தனது முஷ்டியின் பலம் மிகுந்த ஒரே ஒரு குத்தால், முதல் உருவத்தை நெடுஞ்சாண்கிடையாக பூமியில் விழச் செய்தது. விடுவிக்கப்பட்ட அம்பாய், இங்குமங்கும்தள்ளாடித் தடுமாறிய நான், ஒரு நாற்காலியைக் கைத்தாங்கலாய்ப் பிடித்துக் கொண்டு துவண்டு நின்றேன்.

என்னைக் காப்பாற்றியவன் சீக்கிரமாய் திரும்பி, ''ஆஹ்...! அடிபட்டிருக்கு, உங்களுக்கு!'' என்றான்.

ஒலித்தக் குரலில் கொடூரமான மிருகத்தனம் இருந்தது-என்னை மறைந்திருந்து தாக்கிய அந்த மனிதனின் மீதான கடுங்கோபத்தால்! இப்படி அவன் பேசுவதற்கு முன்னமேயே அவன் யாரென்று நான் அடையாளம் கண்டு விட்டேன். அது, என்னவன்-வெட்டுத் தழும்பு கொண்ட மனிதன்.

கீழே கிடந்தவன் பக்கமாய் இப்போது ஆவேசமாய் திரும்பியவனை, ''அவனை மறுபடியும் அடக்கப் போறியா?'' என மூச்சிரைக்கக் கேட்டேன் நான்.

''அதுக்குத் தேவையேயில்லை''என்றான் இறுக்கமாய். ''நொறுங்கிப் போயிட்டான். எந்த நாய் இதுனு பார்ப்பம்.''

துடிக்கும் இதயத்தோடு நான் அதன் பக்கமாய் நெருங்கிப் போனேன். உடனேயே, என்னைத் தாக்க வந்தவனது உடல் எட்வர்டின் உடம்பை விடப் பெரியதாய் இருப்பதைக் கவனித்து விட்டேன். எட்வர்ட், தளர்ந்துத் தொங்கிப் போயுள்ள ஒரு படைப்பு. ஒருவரை வீழ்த்த, கத்திக் குத்து வேண்டுமானால் அவர் நடத்தக் கூடுமே தவிர, வெறும் கையால் சாய்த்து விடுமளவுக்கு அவருக்குத் தெம்பு கிடையாது.

ரேபர்ன் ஒரு தீக்குச்சியைக் கொளுத்தினான். அந்த ஒளியில் நாங்களிருவருமே ஒரு சிறு அலறலைப் பீறிட்டோம். அந்த நிழலுருவம், பகெட்.

இக்கண்டுபிடிப்பால் ஒன்றுமே விளங்காது பேந்தப் பேந்த நின்றான் ரேபர்ன். ''பகெட்'' என முணுமுணுத்தான் அவன்.''மை காட்... பகெட்.

எனக்குள் சின்னதாய் பெருமை கூடியது.''ஆச்சரியப்பட்டா மாதிரி தெரியுது...?!''

''ஆமாம்'' என்றான் கனமாய். ''இவனை நான் துளியும் சந்தேகப் பட்டதே இல்லை---''. இப்படிச் சொல்லி விட்டு சட்டென்று ஒரு வட்டமிடித்து என்னை நெருங்கினான். ''அப்ப நீங்க? உங்களுக்கு சந்தேகமே கிடையாது? நோ? அவர் உங்களைத் தாக்க வந்ததுமே அது யார்னு நீங்க கணிச்சுட்ட மாதிரியிருக்கு...?''

''ம்ம். அப்படி கிடையாது. அப்போ எனக்குத் தெரியாது. ஆனா, இதுல, எனக்குப் பெரும் ஆச்சரியம் ஒண்ணும் கிடையாது.''

என்னைச் சந்தேகமாய்ப் பார்த்தான் அவன். ''இந்த சமாச்சாரத் துக்குள்ளே உங்களுக்கு என்ன வேலைனு எனக்குத் தெரியலே. எதுக்காக இதுல நீங்க இறங்கினீங்க? இப்போ உங்களுக்கு என்ன வெல்லாம் தெரியும்?''

நான் புன்னகைத்தேன். ''நிறைய நிறைய தெரியும், மிஸ்டர்-மிஸ்டர்-ஆங், மிஸ்டர் லூகாஸ்!''

என் கை மணிக்கட்டைத் திருகி விடுவது போல பிடித்தான். அவனையுமறியாமல் திடீரென இயங்கிய அவனது இவ்வியக்கம், கையில் வலியுண்டாக்கி என்னை அதிர வைத்தது.

''எங்கேயிருந்து அந்தப் பெயரைத் திருடினே?''-கறகறப்பாய் உறுமினான் அவன்.

''அது உன்னுடைய பெயர். அப்படித்தானே?''-கண்களைக் கொட்டிக் கொட்டி இனிமைக் கட்டளையாய்க் கேட்டேன். ''இல்லே, இந்தப் பேருக்கு பதிலா---'ப்ரௌன் சூட்டில் வந்தவன்' எனும் பேரே தேவலைனு நினைக்கிறியா?!''

இது அவனைத் துணுக்குற வைத்தது. பிடித்த பிடியை அப்படியே முழுவதுமாக விட்டு விட்டு ஓரிரு சிறு அடிகள் எடுத்து வைத்துப் பின்னுக்குப் போனான். ''பார்த்துப் பார்த்து...தண்டவாளத்துல விழுந்துடப் போறீங்க!'' என்றேன் நான், மீண்டும் கண்களைக் கொட்டிக் கொட்டி.

''நீ பெண்ணா....பிசாசா?''-மூச்சடைத்துப் போயிருந்த அவன் தான் கேட்டான்.

''ஒரு தோழி''-அவன் பின்னுக்குச் சென்ற அதே எண்ணிக்கையில் அடிகளை முன் வைத்து நான் நெருங்கியிருந்தேன். ''ஒரு முறை நான் உனக்கு எனது உதவியைத் தந்தேன்-மறுபடியும் தருகிறேன். வாங்கிப்பியா?''

இதற்குத் தீவிரமான கோபத்தோடு படு பயங்கரமாய் அவன் தந்த பதில் என்னை ஒரு மூலைக்குத் தூக்கிப் போட்டது.

''ஒரு மண்ணும் வேண்டாம். நான் உன்னோட மட்டுமில்லை... எந்தப் பொண்ணோட முதுகிலும் சவாரி செய்ய விரும்பலே. நான் உன்னை அப்படி வெறுக்கிறேன்.''

வழக்கம்போல் எனது பொறுமை கழலத் துவங்கியது. ''எத்தனை வலுவான எனது வட்டத்துக்குள் நீ சிக்கியிருக்கேனு, ம்...பாவம், உனக்கு இன்னும் விளங்கலேனு நினைக்கிறேன்'' என்றேன். ''ஒரே ஒரு வார்த்தை...உன்னைப் பற்றி... நான் சொன்னா...ஏய், அது போதும்---''

''சொல்லிக்கோங்க...''-சீறினான் அவன். பிறகு பரபரவென்று என்னிடம் வந்து பேசினான்: ''இப்படியெல்லாம் கணக்குப் போட்டுப் பேசும்போது, டியர் லேடி, இந்த நிமிஷத்துல நீங்களும் என்னோட வலைக்குள் செமத்தியா சிக்கியிருப்பது உங்களுக்குத் தெரியவே இல்லியா? ஒரே திருகு...கோழி கழுத்தைத் திருகிற மாதிரி உங்களை

நெறிச்சுத் தீர்த்துடலாம்...''-துரித இயக்கமாய் தன் வார்த்தையை செயல்படுத்தவும் செய்தான் அவன்! அவனுடைய இரு கரங்களும் என் கழுத்தில் பதிந்து, துளியும் அழுத்தி விடாமல் நெறித்துக் காட்டுவதை உணர்ந்தேன் நான். ''இதே போல-ஆனா,அழுத்தி! அப்புறம்...இதோ இங்கே மயக்கத்துல விழுந்துக் கிடக்கும் நம்முடைய நண்பரைப் போல உங்களை ஆக்கி-ஆனா, உன் விஷயத்துல முழு ஸக்ஸஸோட ஜெயித்து-உங்களைத் தூக்கிக் கடலோட கடலா திமிங்கிலங்களுக்கு இரையாக்கிடலாம்! என்ன சொல்றீங்க, இதுக்கு? தயாரா?!''

நான் எதுவும் சொல்லவில்லை. சிரித்து விட்டேன். இருந்தாலும் ஆபத்து இவன் ரூபத்தில் அருகிலேயே இருப்பது எனக்கும் தெரியும் தான். அந்தக் கணத்தில் அவன் என்னை அத்தனை வெறுத்துக் கொண்டிருந்தான். தெரிந்தும், அந்த ஆபத்தை நான்-காதலித்தேன். என் கழுத்தில் அழுத்தி விடாமல் மேவிப் பரவிய அந்த முரட்டு ஆண் கைகளை நான் காதலித்து ஏங்கினேன்... ஏங்கிக் காதலித்தேன். அக்கணத்தை வேறு எக்கணத்தோடும் ஒப்பிட்டுப் பார்க்கயியலாத சொர்க்கக் கணமாய் ஆக்கிக் கொண்டேன்!

சிறு வில்லத்தனமான புன்னகையோடு கைகளை எடுத்துக் கொண்டான்.

''உங்க பேர் என்ன?''-தொடர்பின்றிக் கேட்டான் அவன்.

''ஆனே பெட்டிங்ஃபெல்ட்.''

''உங்களை எதுவுமே பயமுறுத்தலையா, ஆனே பெட்டிங்ஃபெல்ட்?''

''ஓ, யெஸ்'' என்றேன் நான்-நர்ன் அனுபவித்திராத சாந்தத்தை ஏதோ அப்போது தான் அனுபவித்துக் கொண்டிருப்பதைப் போல காட்டிக் கொண்டு! ''உண்டு. குளவி, வினை நிறைந்த வஞ்சகப் பெண்கள்,வாட்டசாட்டமான இளைய வாலிபர்கள், கரப்பான பூச்சி, இப்படி... ... ...''

அதே சிறு வில்லத்தனமான புன்னகை. பிறகு மயங்கிக் கிடந்த பகெட்டின் உடலை தன்னுடைய காலால் ஒரு முறை புரட்டிப் போட்டான். ''இந்த மூட்டையை நாம் என்னப் பண்றது? காதும் காதும் வெச்சா மாதிரி, கடல்ல தூக்கிப் போட்டுடலாமா?''-அக்கறையின்றி கேட்டான்.

''நீ விரும்பினால்!''-அவனுக்கு சமமான தைரியத்தோடு நான்.

''உங்களுடைய மனப்பூர்வமான ரத்த வெறிக்கு என் வந்தனங்கள், மிஸ் ஆனே! ஆனா, இந்த முறை. வசதிப்படும்போது இவனா எழுந்திருக்கட்டும் என்று விட்டு விடுவோம், ஆங்! லக்'கான ஆசாமி; அடியெல்லாம் ரொம்பப் படலே.''

''ரெண்டாவது கொலை வேணாம்னு பதுங்கிறீங்களோ?!'' -இனிமையான குரலில் சொன்னேன்.

''ரெண்டாவது கொலையா?''

''மார்லோ வீட்டுப் பெண்''-இப்படிச் சொன்ன என் வார்த்தைகள் அவனுக்குள் உண்டாக்கும் தாக்கத்தைக் கூர்மையாய் கவனித்தபடி, ஞாபகப்படுத்தினேன் நான்.

காண சகிக்காத சிந்தனை மிகும் பாவனை, அவனது முகத்தில் படர்ந்தது. நானிருப்பதையே அப்போது மறந்து விட்டவனைப் போல ஆனான். சிந்தனை.

''நானே அவளைக் கொன்னிருக்கணும்''-சொன்னான். ''சில சமயங்கள்ல, அவளை அப்படியே, அப்படியே, அணு அணுவா நொறுக்கிக் கொன்னுப் போட - - -''

உணர்ச்சிப் போராட்டப் புயல்... இறந்து விட்டப் பெண்ணைப் பற்றி பகையும் விரோதமும் குரோதமும் கலந்தக் கொந்தளிப்பு, என்னுள் பரவி என்னையே முழுகடித்தது. இப்போது அவள் மட்டும் என் முன்னால் நின்றுக் கொண்டிருந்தாளேயானால், நொடிப்பொழுதில் நானே கூட அவளைக் கொன்று விடலாம்! ஆஹ்... அவளை இவன் காதலித்திருக்க வேண்டும்... நிச்சயமாய்... விடாது...வெறியாய்... அவளே உலகமாய் காதலித்திருக்க வேண்டும்--- இப்படி உணர்ந்துத் துடிக்க!

என்னை மறுபடியும் கட்டுக்குள் கொண்டு வந்த நான், சராசரியான குரலெடுத்துப் பேசினேன்:'' பேச வேண்டிய அனைத்தையும் நாம பேசி முடிச்சாச்சுனு நினைக்கிறேன்-குட் நைட் தவிர.''

''குட் நைட் அண்ட் குட் பை, மிஸ் ஆனே பெட்டிங்ஃபெல்ட்.''

''சந்திப்போம்.''

இந்த வார்த்தை அவனுக்குப் பிடிக்கவில்லை. மறுபடியும் நெருங்கி வந்து நின்றான். ''அதை ஏன் சொன்னே? சந்திப்போம்-ஏன் சொன்னே?''

''ஏன்னா நாம மறுபடியும் சந்திப்போம் எனும் எண்ணம் எனக்குள் இருக்கு-அதனால.''

''அப்படி நடக்கவே நடக்காம நான் பார்த்துக்கிட்டேன்'னா-இனி நம்ம சந்திப்பே இடம் பெற முடியாம ஆயிடும்!''

எத்தனை அழுத்திச் சொல்ல முடியுமோ அப்படி அவன் சொன்னாலும் அது என்னை பாதிக்கவில்லை. மாறாக, ரகசியமாய் என்னுள் மேவிய திருப்தியின் ஆக்கிரமிப்பால் என்னை நானே அணைத்துக் கொண்டு நின்றேன். ''எதெப்படியோ...'' என ஆழ்ந்து குறிப்பிட்ட நான், ''-நாம சந்திப்போம்னே எனக்குத் தோணுது'' என்றேன்.

''ஏன்?''

இப்படிச் என்னைச் சொல்ல உள்ளுக்குள் தூண்டிய உணர்வினை வார்த்தையில் கொட்டத் தெரியாது மறுப்பாய் தலையசைத்தேன் நான்.

''உங்களை நான் மறுபடியும் சந்திக்கவே விரும்பலே'' என்றான் அவன்-திடீரென்று, எரிமலை வெடிப்பாய்.

இது, ஒருவரைப் பார்த்துப் பிரயோகிப்பதற்கு ஏற்றதற்ற, மிகவும் கடுமையான மனிதாபிமானமற்ற வாக்கியம். ஆயினும் நான் சின்னதாய் ஒரு சிரிப்பினைச் சிந்தி விட்டு இருட்டுக்குள் விழுந்துக் கரைந்தேன்.

பதில் சொல்லாது கிளம்பிய என்னைக் கோபத்தில் கவ்வ அவனிடம் ஓர் உந்துதல் உருவானதை நான் கேட்டேன்... பிறகு அதை நடைமுறை படுத்தாமல் நின்று விட்டான். மேற்தளத்தை விட்டு அகன்றுக் கொண்டிருந்த என்னை அவன் பற்கள் நறநறக்க சொன்ன ஒரு வார்த்தை தொடர்ந்து வந்தடைந்தது. அது, 'பிசாசு' என நினைக்கிறேன்!

# அத்தியாயம் -17

*(சர் ஆஸ்டஸ் பெட்லர் எம்.பி. டைரியிலிருந்து எடுத்தவை)*

*மவுண்ட் நெல்ஸன் ஒட்டல், கேப் டவுன்.*

*கில்மார்டனிலிருந்து இறங்கியது மாபெரும் உபகாரமாய்த் தெரிந்தது. கப்பலில் இருந்த அனைத்து நேரமும் ஏதோ சதி வலை என்னை சுற்றிப் பின்னப்படும் உணர்விலேயே கிடந்தேன் நான். இந்தக் குழப்பத்துக்கு மகுடம் வைத்தாற்போல் நேற்றிரவு இந்த பகெட் பயல் குடித்துக் கொட்டமிடித்து என் பிராணனை வாங்க வேண்டுமா என்ன! என்ன வேண்டுமானாலும் இட்டு நிரப்பி நடந்ததை விளக்கி விடலாம்... ஆனால் போன மானம் போனது தானே! கண்கள் இரண்டும் செக்கச் சிவக்க கனன்று செருகிக் கிடக்க, அரிசி மூட்டை போல ஒரு மனிதன் எதிர்பாராத சமயத்தில் மேலே வந்து விழும்போது சந்தேகிக்காது வேறென்ன தான் நினைக்க முடியும்?!*

*இப்படியெல்லாம் எதுவுமே கிடையாது என்றும், மர்மமான முறையில் நடந்த ஒரு சம்பவம் தான் தன்னை கண்டபடி நடக்கத் தூண்டியதாகவும் பகெட் கதையளக்கலாம். 'அகண்டு திறந்துக் கண்காணித்துக் கொண்டேயிருக்கும் அவனது கரு விழிகள், என்னை எந்த எதிரியும் தாக்கி விடக் கூடாது எனும் பாதுகாப்புக் கருதியே...' என்பது அவனுடைய கருத்து. அவன் சொன்ன கதை அசாதாரண குழப்பம் மிகுந்திருந்தது; கோணல் மாணலாய் ஒழுங்கின்றி சென்றது. அதன் தலை எது வால் எது என்று இன்னும் நான் அறியேன்.*

*யாரோ ஒரு மனுஷன் சந்தேகத்துக்கிடமாக உலவிக் கொண்டிருந் தானாம்- இது அப்படியே பகெட் சொன்னது. எங்கேயோ படித்த ஒரு மர்ம நாவலிலிருந்து இவ்வாக்கியத்தை தெரிந்தெடுத்திருக் கிறான். ஒரு மனுஷன் சந்தேகத்துக்கிடமாக நடந்துக் கொள்கிறான் என்றால் என்ன அர்த்தம் என்பது அவனுக்கே கூட தெரியாது. இதை அவனிடமே நான் தெரிவித்து விட்டேன்.*

*''பதுங்கி மறைந்து கள்ளத்தனமாய் நழுவிக்கிட்டிருந்தான்... அதுவும் நட்டநடு ராத்திரியிலே, சர் ஆஸ்டஸ்.''*

''அது சரி... அந்த சமயத்துல நீ ஏன் அங்கே இருந்தே? சமத்துப் பகெட்டா படுக்கையில தூங்காம நீயும் ஏன் அலைஞ்சுக் கிட்டிருந்தே?''-எரிச்சல் மிகுந்து அதிகாரமாய் கேட்டேன் நான்.

''பதில் அனுப்ப வேண்டிய தந்திகளைத் தயார் பண்ணிக்கிட்டிருந் தேன், சர் ஆஸ்டஸ். பண்ண வேண்டிய வேலைகளை டைரியில் குறிச்சுக்கிட்டுமிருந்தேன்.''

''இதெல்லாம் ரூமுக்கு உள்ளே. எவனோ பதுங்கிப் போனதோ ரூமுக்கு வெளியே.''

''படுக்கப் போறதுக்கு முன்னாடி ஒரு தடவை வெளியிலே பார்த்துட்டு வந்தடலாம்னு தோணிச்சு, சர் ஆஸ்டஸ். வராண்டாவுல உங்க கேபின்லிருந்து தான் அவன் வந்துக்கிட்டிருந்தான். அவன் நடந்துக்கிட்ட விதத்திலிருந்து, உடனேயே, அவனுக்குள்ளே ஏதோ தப்பு தண்டா இருக்குனு நான் புரிஞ்சுக்கிட்டேன். பதுங்கிப் பதுங்கி மேல்தளத்துக்கான படிகளேறினான். நான் பின்தொடர்ந்தேன்.''

''டியர் பகெட்...'', என பொறுமையாகவே ஆரம்பித்தேன். ''நீ பேசறதுல துளி அர்த்தம் எனக்குத் தென்படலே. காலடி ஓசை கேட்க வேண்டாம்னு கருதி அவன் ஏன் மெதுவா போயிருக்கக் கூடாது? மேல்தளத்துல, வெட்ட வெளியில, வானத்தைப் பார்த்துக்கிட்டே கூட பலர் படுத்துத் தூங்குவாங்க, தெரியுமா - நானே பார்த்திருக்கேன். அப்பல்லாம், வசதியில்லாம இப்படிக் கிடக்கணுமானு நான் நினைப்பதுண்டு! எல்லாம் ஒரு ஜாலிக்காகத் தான். அவங்களுக்கு இடையூறு வேணாம்னு நினைச்சிருக்கலாம். இல்லையா?! காலைல அஞ்சு மணிக்கு, கப்பல் சிப்பந்திங்க மாடியைக் கழுவுவானுங்க. அப்போ படுத்துக் கிடப்பவனுங்களையும் சேர்த்துக் கழுவித் தள்ளும்போது தான், அப்படித் தூங்கிக் கிடப்பதையே அவனுங்கப் புரிஞ்சுப்பாங்க.''

இவ்வாறாய் பகெட்டின் ஐடியாவை முழுசுமாய் மூடினேன்.

அவன் பொறுமையே இழக்கவில்லை. ''கொஞ்சம் கவனியுங்க, சர் ஆஸ்டஸ்'' என்றான்! ''அவன் உங்க கேபினைச் சுற்றித் தான்... அவன் நுழையத் தேவையேயில்லாத அந்தப் பகுதியில தான்... பதுங்கிப் பதுங்கிப் பிராண்டிக்கிட்டிருந்தான் என்பதுல எனக்கு மாற்றுக் கருத்து கிடையாது. அந்த வராண்டா பகுதியில இருக்கும் ரெண்டே ரெண்டு கேபின்கள் - உங்களுது ஒண்ணு; கலோனல் ரேஸ்து இன்னொண்ணு.''

இவனால் இப்போது விளையும் டென்ஷன் அடங்க ஒரு சிகரெட்டைப் பற்ற வைத்துக் கொண்டே ''உன்னோட துணையில்லாம ரேஸால தன்னைப் பாதுகாத்துக்க முடியும், பகெட்'' என்றேன். அப்புறமாய் கூடுதலாய்த் தோன்றியது போல சொன்னேன்: ''என்னாலயும் அப்படி முடியும்!''

*வழக்கமாய் ஒரு ரகசியத்தை வெளியே கொட்டுவதற்கு முன்னால் அவன் செய்வது மாதிரியே என்னருகில் மிக நெருங்கி வந்து நின்று குண்டு குண்டாய் மூச்சு விட்டான். ''ஒண்ணு தெரியுமா, சர் ஆஸ்டஸ்... முதல்ல இருக்குமோனு நினைச்சேன் - இப்போ சர்வ நிச்சயமா தெரிஞ்சிடுச்சு - அது, ரேபர்ன்.''*

*''ரேபர்ன்?''*

*''ஆமாம், சர் ஆஸ்டஸ்.''*

*''நட்டநடு ராத்திரியில என்னை வந்து எழுப்புமளவுக்கு அவனுக்கு தைரியம் பத்தவே பத்தாது, பகெட்'' மறுப்பாய் தலையசைத்தேன் நான்.*

*''நிச்சயமா அத்தனை உரிமையை அவன் எடுத்துக்க மாட்டான். ஆனா - - -''*

*''பகெட், பகெட், ப்ளீஸ். என்னால முடியலே. ஒண்ணு மாத்தி ஒண்ணு போட்டுக்கிட்டே இருக்கே நீ!''*

*நான் அலறிக் கொண்டு வெறுப்பாய் சொன்னது, என் முகத்தருகிலேயே அவனிருந்தாலும் அவனைச் சென்று அடையவேயில்லை. ''ஆனா--- அவன், கலோனல் ரேஸைப் போய் சந்திக்க போனான்னு நினைக்கிறேன். ஒரு ரகசிய சந்திப்பு - சில கட்டளைகளுக்கு.''*

*''ஓ! என்னாச்சு உனக்கு?'' - அவனருகிலிருந்து விலகி சற்று சாய்ந்தபடி குறிப்பிட்டேன் நான். ''உனக்கு எதுக்கு இப்போ இப்படி மூச்சு வாங்குது? அதை முதல்ல பிடி! உன் ஐடியாவெல்லாம் குப்பை. நடு ராத்திரியில எதுக்காக அவங்க ரெண்டு பேரும் ரகசிய சந்திப்பு பண்ணனும்? ஒருத்தருக்கொருத்தர் ஏதாவது பேசனும்னா, அதை, சாதாரணமா ஒருத்தர் செய்யற வகையில, ஒரு கப் டீ சாப்பிட்டுக்கிட்டே டைனிங் ஹால்ல செஞ்சிடுவாங்களே?!''*

*இதில் பகெட் கடுகத்தனையும் திருப்தி அடையவில்லை என்பதை நான் கண்டேன். ''என்னவோ நேற்று ராத்திரி இடம்பெற்றிருக்கு, சர் ஆஸ்டஸ்'' - கெஞ்சினான். ''இல்லேனா நான் மயக்கம் போட்டு விழற அளவுக்கு அவன் எதுக்காக என்னை அடிச்சிருக்கணும்?''*

*அப்படித்தான் என்பதில், சந்தேகம் துளியும் அற்று திருப்திகரமான வனாய் தெரிந்தான் பகெட். அவன் சொன்ன முழு கதையில் குழப்பமேயில்லாமல் அவன் பேசிய ஒரே பகுதி, இது தான்!''விந்தையான ஆச்சரியமாய் இருக்கு- இந்த எல்லாமும்!'' என்றவன், ''முதல்ல இதுக்கு பதில் சொல்லுங்க, சர் ஆஸ்டஸ்'' என்று கேட்டான்: ''ரேபர்ன் எங்கே?''*

*கரையிறங்கியதிலிருந்து அவனைக் காணவேயில்லை என்பது நிஜம். எங்களுடன் ஓட்டல் வரை அவன் வரவில்லை. பகெட்டின் மீதான பயம் என்ற*

*விடையை இதற்கான காரணமாய் என்னால் ஏற்றுக் கொள்ள முடிய வில்லை.*

*மொத்தத்தில் இந்த முழு சமாச்சாரமும் எரிச்சலுண்டாக்குகின்றது. என்னுடைய ஒரு செகரட்டரி காற்றோடு காற்றாய் கரைந்தே விட்டான். அடுத்தவனோ நினைத்தாலே நடுங்க வைக்கும் குழப்பவாதியாக உலா வருகிறான். இந்த நிலையில் இவனை என்னோடு எங்கும் நான் அழைத்துப் போக முடியாது. செகரட்டரியாக இப்படி ஒரு கிறுக்கனா என்று ஆப்பிரிக்க கேப் டவுன் நகரமே என்னைக் கண்டு சிரிக்கும். அன்று மதியம் கழிந்து மிலிட்டரி ஆட்களுக்கு நான் ஓர் உரை நிகழ்த்த வேண்டியிருந்தது; ஆனால், அதற்கு, ஓஹ், இந்தப் பகெட்டை மட்டும் நான் கூட்டிப் போகப் போவதில்லை. திகைக்க அடிக்கும் இவனும் இவனுடைய கேலிக்கூத்தான ஐடியாக்களும்.*

*பொறுமையத்தனையும் இழந்துப் போயிருந்தேன் நான். சாப்பிட முடியாத பதார்த்தங்களை சகிக்க முடியாத ஓரிடத்தில் சாப்பிட நேர்ந்தது. கரடு முரடாய் தோல் கொண்டிருந்த டச்சுப் பெண்கள், ஒரு ஊசிப் போயிருந்த மீன் உணவினை எனக்குக் கொண்டு வர அரை மணி ஆக்கினார்கள்.*

பிறகு.

*மிக மிக முக்கியமான சமாச்சாரங்கள் நடந்தேறின. மில்ரே தந்திருந்த ஒட்டப்பட்ட சீல் வைத்த உறையினைச் சுமந்துக் கொண்டு என்னுடனான சந்திப்பிற்கு பிரதம மந்திரி ஒதுக்கித் தந்திருந்த நேரத்தில் நான் அவரது மாளிகைக்குப் போயிருந்தேன். உறைத் திறக்கப்பட்டு அதிலிருந்த எதுவும் உருவி எடுக்கப்பட்டு விட்டதாய் தோன்றவில்லை...ஆனால் உள்ளே யிருந்தது ஒரு வெற்று வெள்ளைத் தாள்!*

*அப்போது என் நிலைமை அத்தனை தர்மசங்கடமாகிப் போனது. வெறும் வெற்றுத்தாளைக் கொண்டு போய் முன் பதிவு தந்திருந்த பிரதம மந்திரியுடம் ஒரு எம் பி நீட்டினால், அதற்கு பெயர் பைத்தியம் தானே! நான் நினைத்தே பார்க்க முடியாத ஒரு தர்மசங்கடத்துக்குள் இப்படி என்னைக் கட்டித் தூக்கிப் போட அந்தக் கிழ மில்ரே எத்தனை நாட்கள் திட்டமிட்டுக் காத்துக் கிடந்தானோ?*

*குழம்பிப் போயிருந்த என்னிடம் பகெட் வந்தான். அவன் எதுவும் பேச ஆரம்பிப்பதற்கு முன்னாலேயே என் குழப்பம் காரணமின்றி வெகுவாய் கூடியது!*

''சர் ஆஸ்டஸ்...'' என்று ரகசியக் குரலில் அழைத்தவன், ''மில்ரே கூட நீங்க சாலையில நடந்துக்கிட்டே பேசிய ஓரிரு வாக்கியங்களை இந்த ரேபர்ன் கேட்டிருக்கான்னு வெச்சுக்குவோம்...சரியா! ரேபர்ன், இந்த உரை... ரெண்டையும் சேர்த்து வைச்சு சிந்திச்சுப் பாருங்க. இந்த சமாச்சாரத்துல மில்ரேயிடமிருந்து உங்களுக்கு எழுத்து பூர்வமா ஒரு தகவல் கூட கிடையாது. அவனா வந்தான்...நீங்க ஏத்துக்கிட்டீங்க.''

''அப்போ...''என மெதுவாய் ஆரம்பித்த நான், ''ரேபர்ன் வஞ்சகமா ஏமாத்திட்டான்னு சொல்ல வரீயா?'' என்று கேட்டேன்.

பகெட் இப்போது அப்படித் தான் பேசியிருக்கிறான். ரேபர்னுக்கு எதிராக, எதிர்த்துப் பேச முடியாத அளவுக்கு ஒரு வழக்கினையே ஜோடித்து விட்டான் இவன். அதில் என்னால் வேறெதுவும் செய்ய முடியவில்லை. தானாக வலியப் போய் தன்னை முட்டாளாக்கும்படி ஒப்படைத்து விட்ட ஒருவன், அதை ஏற்றுக் கொண்டு தம்பட்டம் அடிக்க ஒப்புக் கொள்வானா?!

பகெட், எனக்கு இப்படி ஆகி விட்டதற்காக உள்ளூர கோபமாய் கனன்றுக் கொண்டிருந்தாலும், அடுத்து இயங்கத் துரிதயாகத் தானிருந்தான். அவன் வழியில் நினைத்ததைச் செயலாக்கவும் ஆரம்பித்தான். போலீஸ் நிலையத்துக்கு முதலில் போனான்...அப்புறம் நிறைய தந்திகளை அனுப்பி வைத்தான்...பிறகு ஆங்கில மற்றும் டச்சு அதிகாரிகள் சிலரை மந்தையாய் கூட்டி வந்து என் செலவில் விஸ்கியும் சோடாவும் அள்ளித் தந்தான்.

மில்ரேயின் பதிலை அன்று மாலை கிடைக்கப் பெற்றோம். அவருக்கு, காணாமல் போய் விட்ட எனது புது செகரட்டரி பற்றி எதுவுமே தெரியாது! நடந்து முடிந்த இந்தக் கூத்தின் விளைவாக ஒரேயொரு தீர்க்கமான முடிவினைத் தான் என்னால் எடுக்க முடிந்தது. அதை ''எப்படியிருந்தாலும், பகெட்...''என்று அவனை அழைத்து அப்படியே சொல்லியும் விட்டேன்:''உனக்கு யாரும் விஷம் வைக்கலே! உனக்கு வழக்கமா வரும் பித்த மயக்கம் தான் அது.''

அவன் அதிர்ச்சியடைவதைக் கவனித்தேன். இக்குழப்பத்தில், இது மட்டும் தான் நான் ஜெயித்தது!

பிறகு.

பகெட் தன்னிலை இழக்காது இருந்தான். அவனது மூளை, 'ஐடியா ஐடியா' என்று சர்வ சாதாரணமாய் சஞ்சரித்துக் கொண்டேயிருந்தது. இப்போது அவன், அந்த ரேபர்ன், 'ப்ரௌன் சூட்டில் வந்தவன்' என்பதைத் தவிர வேறு

கிடையாது என்று தீர்க்கமான முடிவுக்குப் போயிருப்பான். பகெட் சரி தான் என்றே நானும் சொல்லியாக வேண்டும்.

அவன் எப்பவும் கரெக்ட் தானே. ஆனால் இப்படி வளர்ந்துக் கொண்டு போகும் இப்பிரச்சினை சந்தோஷத்தைக் குலைத்து, வெறுப்பை ஏற்றியது. எத்தனைக்கெத்தனை சீக்கிரமாய் நான் ருடேஸியாவுக்குப் பறக்கிறேனோ அத்தனை நல்லது எனக்கு! பகெட் என்னுடன் கூட வரப் போவதில்லை என்பதை நான் அவனிடம் தெளிவாய் விளக்கி விட்டேன்.

''என்னருமை பகெட்...''-சொன்னேன் நான். ''இங்கே, நான் எங்கே உன்னை நிறுத்திட்டுப் போறேனோ நீ அங்கேயே நிக்க வேண்டியது தான். ரேபர்னை அடையாளம் காட்ட நீ எப்போது வேண்டுமானாலும் அழைக்கப்படலாம் -அதனால. மேலும், ஓர் ஆங்கிலேய எம் பீயான எனக்குனு சில கௌரவங்களும் மதிப்புகளும் இருக்கு. சமீபத்துல குடிச்சுட்டு கலாட்டா பண்ணின ஒருத்தனை செகரட்டரியாகக் கூட்டிப் போவது, நான் வகிக்கும் பதவிக்கு சரி கிடையாது.''

பகெட் இது கேட்டு அதிர்ச்சியானான். இது அவனுக்கு வலி ஏற்படுத்தியது. ஆனாலும், ''உங்களுக்கு வரும் கடிதங்கள் தந்திகளுக்கு யார் பதில் அனுப்புவாங்க, சர் ஆஸ்டஸ்?'' என்றான். ''நீங்க பேச வேண்டிய உரைகளை யார் தயார் செய்வாங்க?''

''அதெல்லாம் நான் பார்த்துப்பேன்'' என்றேன் நான் காற்றில்.

''உங்களுடைய ப்ரைவேட் காரை, நாளை காலை பதினொரு மணி ட்ரெயின்ல ஏற்றி அனுப்ப வேண்டியிருக்கு''-விடாமல் தொடர்ந்தான் பகெட். ''இதுக்குத் தேவையான அத்தனை ஏற்பாடுகளையும் நான் செஞ்சாச்சு. திருமதி ப்ளேர் அவங்க கூட ஒத்தாசைக்கு வேலைக்காரி யாரையாவது கூட்டி வராங்களா?''

''மிஸஸ் ப்ளேர்?''-என் மூச்சடைக்கக் கேட்டேன்.

''கூட வரலாம்னு நீங்க இடம் ஒதுக்கித் தந்துள்ளதா சொல்றாங்க அவங்க.''

ஆமாம்...நான் அப்படித் தான் செய்தேன்...அதை இப்போது நினைக்க ஆரம்பித்தேன் நான். மாறுவேடப் போட்டி நடந்த ராத்திரியன்று என் கூட வந்தால் தான் ஆச்சு என்று நான் அவரைக் கெஞ்சியிருக்கிறேன். ஆனால் அதை அப்படியே அவர் செய்வார் என நினைக்கவில்லை. அவர் வேண்டுமானால் பூரிக்கலாம்...ஆனால், ருடேஸியா வரை போய் வர அவருடைய துணை எனக்குத் தேவையா என்று எனக்கே விளங்கவில்லை. இந்தப் பொம்பிளைங்களைக் கூடக் கூட்டிப் போனால், அத்தனை தூரம் நாம்

*கவனித்தாக வேண்டும். அவர்கள், ஒருசில சமயங்களில், நம்முடைய நகர்த்தல்களுக்கு ஒரு பெரும் இடையூறாக அமைந்து விடுவார்கள்.*

*''வேற யாரையாவது இப்படிக் கூப்பிட்டேனா, நான்?''- படபடப்பாய் கேட்டேன் நான். நொடிப் பொழுது புளகாங்கிதத்தில் இப்படியெல்லாம் செய்து விடுகிறோம்.*

*''கலோனல் ரேஸையும் அப்போ முழு மனசா நீங்க அழைத்ததாக மிஸஸ் ப்ளெர் சொல்றாங்க.''*

*நான் உறுமினேன்.*

*''ரேஸைப் போய் கூட வாய்யானு நான் கூப்பிட்டிருக்கேன்'னா... நான் நிறைய குடிச்சிருக்கணும்! சொல்லப் போனா, ரொம்ப நிறைய! இதுலேந்தாவது புரிஞ்சுக்கோ பகெட்...மறுபடியும் போய் அள்ளி அள்ளிக் குடிச்சு வைக்காதே.''*

*''உங்களுக்கே தெரியும் சர் ஆஸ்டஸ் நான் ஒரு மதுபான விரோதி.''*

*''எப்படியோ போ. வேற யாரையும் என் கூட வரும்படி கூப்பிடலே, இல்லையா பகெட்?''*

*''எனக்குத் தெரிஞ்சு...கிடையாது, சர் ஆஸ்டஸ்.''*

*ஒரு நிம்மதிப் பெருமூச்சினை நான் விடுவித்தேன். ''மிஸ் பெட்டிங்ஃபெல்ட் வேற இருக்கா'' என்றேன் நான், சிந்தனையோடு. ''ருடேஸியா போய் எலும்பு தேட விரும்பறா என்பது என் ஊகம். தாற்காலிகமா அவளுக்கு ஒரு செகரட்டரி வேலையை உண்டுபண்ணித் தரலாமானு பார்க்கிறேன். தட்டச்சு பண்ணத் தெரியும் அவளுக்கு- சொல்லியிருக்கா.''*

*இந்தக் கருத்தை பகெட் குரோதமாய் மறுத்தான். அவனுக்கு ஆனே பெட்டிங்ஃபெல்ட் என்றாலே ஒத்துக் கொள்வதில்லை. அந்த இரவுக்குப் பிறகு... அவளைப் பற்றிப் பேசி விட்டாலே, கட்டுக்கடங்கா உணர்ச்சிப் போராட்டத்துக்கு உள்ளாகி விடுகின்றான் பகெட். இப்போதெல்லாம் விளங்காத ஒரு மர்ம மனிதனாகவே பகெட் மாறி வருகின்றான்.*

*அவனை மறுபடியும் வெறுப்பேற்ற வேண்டும் என்பதற்காகவே மீண்டும் அப்பெண்ணைப் பற்றி வேறு கோணத்தில் பேசினேன். ''அவளுக்குத் தான் என்ன அழகான கால்கள், ஆங்?''!*

# அத்தியாயம் - 18

(ஆனே'யின் பதிவு தொடர்கின்றது)

*முதன் முதலாக என் பார்வைக்கு அகப்பட்ட 'டேபிள்' மலையை, நான் உயிர் வாழும் வரை என்னால் மறக்க முடியாது என்பேன். விடிகாலைக்கு சற்று முன்பே வெவெடக்கும் குளிரில் எழுந்துவிட்ட நான் உடனடியாக் கிளம்பி கப்பலின் மேல் தளத்துக்குப் போனேன். அங்கிருந்து இன்னும் உச்சிப்பகுதி வரை ஏறிப் போய் நின்றேன் கப்பலின் இப்பகுதிக்கு ஒரு பிரயாணி போவது குற்றம் என்பது தெரிந்திருந்தும்! தனிமை ஏகாந்தத்தை அனுபவித்தே தீரவேண்டும் என்ற தவிப்பால் இப்படிச் செய்துவிட துணிந்தேன். கடற்கரைக்குள் நாங்கள் அப்போது தான் நுழைய ஆரம்பித்திருந்தோம். 'டேபிள்' மலையையே அபகரித்துவிடும் திட்டத்தோடு அதனை ஒரு பெரும் மேகக் கூட்டம் மோகம் கொண்டு போர்த்தியிருந்தது. மலையின் சாய்ந்திறங்குகிற அடிவாரத்தில், கடலை ஒட்டியப் பிரதேசம் நெடுகிலும், காலைக் கதிரவனின் கிரணங்களில் பட்டுத் தகதகத்தபடி கட்டுண்டு இன்னும் உறக்கத்தில் கிடந்தது, டவுன்.*

*என் மூச்சு நின்றுப் போனது! அளப்பற்கரிய அழகினைக் காணும் போது உடலெங்கும் பரவும் விளக்கவொண்ணா இன்ப வலி என் ஒவ்வொரு மயிர்க்காலிலும் பரவியது. எப்படி விளக்குவது என்று எனக்கு சரிவர தெரியவில்லை. ஆனால் நான் 'சின்ன ஹாம்லே'யை விட்டுக் கிளம்பிய நாள் முதல் எதற்காக ஏங்கி ஏங்கி தவித்துக் கொண்டிருந்தேனோ, அதனை நான் கண்டுபிடித்தே விட்டேன் என்று, ஒரு சில கணங்கள் பார்த்ததற்குள்ளாகவே நான் புரிந்துக் கொண்டு விட்டேன். புதிதாக ஒன்று... இதுவரை இப்படிக் கனவில் கூட கண்டிராத ஒன்று... வலி கொண்டு என்னுள் பசித்துக் கொண்டிருக்கும் இளமைக் கொண்டாட்டத்துக்குப் புசிக்க என வாய்த்திடும் ஒன்று...! அது - இது!*

துல்லிய அமைதியுடன்... கில்மார்டன், கரையை நெருங்கி நெருங்கிப் போய்க் கொண்டிருந்தது. காண்பவையனைத்தும் இன்னும் எனக்குக் கனவு போலவே இருந்தன. ஆனால் கனவு காணும் எல்லாரையும் போல, நான் இதைக் கையப்படுத்தாமல் விட்டு விடப் போவதில்லை! ம்... நான் ஒரு பைத்தியக்கார மனிதக் கூட்டம்... எதையும் விட்டுவிடப் பிரியப்படுதில்லை!

'இது தான் தென் ஆப்பிரிக்கா' - நான் எனக்குள் இயந்திரத்தனமாய் சொல்லிக் கொண்டேயிருந்தேன். ''தென் ஆப்பிரிக்கா. தென் ஆப்பிரிக்கா.'' மிக மகிழ்ந்துப் போனேன்: 'பார்... நீ உலகத்தைப் பார்க்கிறாய் - ஆனந்த சொர்க்கபுரியான ஓர் உலகத்தை. இதுதான் முழு உலகமுமே. அதை நீ பார்க்கிறாய். தனியாய், ஆனந்தமாய். இப்படி உனக்குக் கூட நடக்கின்றது, ஆனே பெட்டிங்ஃபெல்ட். சந்தோஷப் படு.''

நான் மட்டும் தான் இந்த உச்சாணிக் கொம்பில் வந்து நின்று கொண்டு உலகையே கைக்குள் அடக்கியுள்ளதாய் நினைத்திருந்தேன். விரைவாய் நெருங்கிக் கொண்டிருந்த நகரத்துக்குள் என்னை நான் இழந்திருந்த போதிலும், அங்கே, இன்னோர் உருவமும் வந்து வளைந்து குனிந்து சுவரில் முஷ்டிப் பதித்து நிற்பதை இப்போது உணர்ந்தேன். அவனோ நானோ ஒருவரை மற்றவர் பார்த்துக் கொள்வதற்கு முன்னமேயே வந்து நின்றுக் கொண்டிருப்பது யார் என்று நான் விளங்கிக் கொண்டேன். சாந்தமான காலைப் பொழுதின் சூரியோதயம் பரப்பிய அமைதியில், நேற்றிரவு நடந்த அனைத்து அமளி துமளியும் நிஜமற்ற நாடகக் காட்சியாய் ஆகிப் போயின. அவன் என்னைப் பற்றி என்ன நினைத்திருப்பான்? நான் சொன்ன வார்த்தைகளை இப்போது நினைத்துப் பார்க்கும் போதே நான் உள்ளுக்குள் சூடானேன். அவை நான் மனமொப்பி சொன்னவை அல்ல - அல்லது அப்படித்தானா?

தலையைத் திருப்பவே கூடாது என்ற முடிவோடு எதிரே தெரிந்த 'டேபிள்' மலையையே நான் கவனித்தபடியிருந்தேன். இங்கு தனிமையில் அமைதியாய் நிற்க வேண்டும் என்ற தீர்மானத்தோடு ரேபர்ன் வந்திருக்கும் பட்சத்தில், நானும் இங்கிருப்பதைத் தேவையற்று விளம்பரப்படுத்தி அவனுக்குத் தொந்தரவு இழைக்க விரும்பவில்லை.

ஆனால் என்னை ஆச்சரியத்தில் தூக்கிப் போடும்படி, எனக்குப் பின்னால் நெருங்கும் சில காலடி ஓசைகளும், பிறகு, இனிமையாகவும்

சாதாரணமாகவும் தவழ்ந்த அவனுடைய குரலும் கேட்டன: ''மிஸ், பெட்டிங்ஃபெல்ட்!''

''ஆங்...!'' - திரும்பினேன்.

''உங்ககிட்டே மன்னிப்புக் கேட்க விரும்பறேன். நேற்றிரவு, நாகரீகமற்ற ஒரு சுத்தப் பட்டிக்காட்டானா நான் நடந்துக்கிட்டேன்.''

''அது... அது... அது ஒரு விளக்க முடியாத இரவு'' - அவசரமாய் பேசினேன் நான்.

இது ஒன்றும் பெரிதாய் புரிந்துவிடக் கூடிய பதில் கிடையாது. ஆனால், இப்படி ஒரு பதிலை மட்டுமே என்னால் அப்போது நினைக்க முடிந்தது.

''நீங்க என்னை மன்னிப்பீங்களா?''

ஒரு வார்த்தையைக் கூட இதற்கு பதிலாய் தராமல், நான் என் கையை சற்றே விலக்கி வைத்துக் கொண்டேன். அவன் அதனை எடுத்துக் கொண்டான்.

''நான் வேற ஒரு சமாச்சாரத்தையும் உங்ககிட்டே சொல்ல வேண்டியிருக்கு'' அவனுடைய அழுத்தம், ஆழமாகியது. ''மிஸ் பெட்டிங்ஃபெல்ட் உங்களுக்கு விஷயம் தெரியாது. நீங்க மிக ஆபத்தான ஒரு விஷயத்துல சிக்கியிருக்கீங்க.''

''அப்படித்தான் எனக்கும் படுது.''

''இல்லை. உங்களுக்கு தெளிவா எதுவும் தெரியாது. தெரிஞ்சுக்கவும் சாத்தியக்கூறு கிடையாது. உங்களை நான் எச்சரிக்க விரும்பறேன். இந்த அத்தனை சமாச்சாரத்தையும் தூக்கிக் குப்பையில போட்டுடுங்க. உங்களுடைய ஆர்வக் கோளாறு, மற்றவங்களுடைய பிஸினஸுக்குள்ளே தேவையில்லாம தலையிட்டு அவங்களுக்குத் தொந்தரவு ஏற்படுத்த வழி விடாதீங்க. நோ, மறுபடியும் கோபப்படாதீங்க, ப்ளீஸ். உங்களுக்கு எதிரா எந்த மாதிரியான பிரளய ஆபத்து வரும்னு உங்களுக்கு எந்த ஊகமும் கிடையாது. யெஸ். எந்த சக்திக்குக் கட்டுப்பட்டும் இந்தக் கூட்டம் மசியாது. ஆங்! ஈவிரக்கமற்ற காட்டுமிராண்டிகள், இவர்கள். உங்களை ஏற்கனவே ஆபத்துக் கவ்வ ஆரம்பிச்சாச்சு - நேற்றைய இரவு களேபரத்தைக் கொஞ்சம் நினைச்சுப் பாருங்க. உங்களுக்கு என்னவோ தெரிஞ்சிருக்கும் என்பது அவனுங்களுடைய நினைப்பு. அப்படி அவனுங்க நினைப்பது தப்புனு நிரூபிப்பது ஒன்றுதான் உங்க கையிலே இப்போதைக்கு இருக்கும் ஒரே ஒரு வாய்ப்பு. அதனால், ஜாக்கிரதை, ஜாக்கிரதை; உங்களை நெருங்கும் ஆபத்தை வீழ்த்த நீங்க எந்த நேரமும் தயாராயிருங்க.

இத்தனையையும் மீறி நீங்க அவனுங்க கையில இரையா விழுந்துவிடும் ஒரு நிலை உருவாயிட்டா பெரிய புத்திசாலி மாதிரி காட்டிக்க முனையாம, ஜஸ்ட்... முழு உண்மையையும் சொல்லிடுங்க. அது ஒண்ணுதான் உங்களைக் காக்கும்.''

''நீங்க ரொம்ப பயமுறுத்திறீங்க, மிஸ்டர் ரேபர்ன்'' - உண்மையாக நான் உணர்ந்ததை சொன்னேன். ''என்னை இப்படி தேடி வந்து எச்சரிக்கை தர உங்களுக்கு என்ன தேவையிருக்கு?''

சில நிமிடங்களுக்கு பதில் தராமலிருந்த அவன், பின்னர் தணிந்த குரலில் சொன்னான்: ''ஒருவேளை இது தான் உங்களுக்கு நான் செய்யும் கடைசி உபகாரமாயிருக்கும்.'' பிறகு சிறு இடைவேளை. பின் சொன்னான்: ''கடற்கரை போய் இறங்கிட்டா எனக்கு எவ்வித பாதகமும் நேராது - ஆனா நான் கடற்கரையை அடைய மாட்டேன்.''

''ஏன் அப்படி?'' - அலறினேன் நான்.

''ஏன்னா... இந்தக் கப்பல் பிரயாணிகள்ல, நான் தான் அந்த ப்ரௌன் சூட்டில் வந்தவன் எனும் சேதியைத் தெரிஞ்சு வெச்சிருப்பது, நீங்க ஒருத்தர் மட்டும் கிடையாது என்பது என் பயக்கணிப்பு.''

''அப்போ... நான் இந்த ரகசியத்தைக் கொண்டு போய் வேற யார்கிட்டேயாவது சொல்லிட்டேன்னு...'' விறுவிறுவென்று கோபமானேன் நான்.

அப்படிக் கிடையவே கிடையாது என்பதை சிறு புன்னகை மூலம் தெரிவித்தான் அவன். ''நான் உங்களை சந்தேகப்படலே, மிஸ். ஆனா, இதே கப்பல்ல, இந்த அத்தனை சமாச்சாரத்தையும் ஆரம்பத்திலிருந்து தெரிஞ்சு வெச்சிருக்கும் ஓர் ஆள் இருக்கான். அத்தனையையும் சொல்லிடத்தான் அவன் துடிச்சுக்கிட்டிருந்தான்... ம்ம், என் இருப்பினால அது அவனால முடியலே. இருந்தாலும், அவன் இனியும், எப்போதும், அதுபற்றிப் பேசப் போவதே கிடையாது என்பது என்னுடைய விளையாட்டான ஓர் எதிர்பார்ப்பு.''

''ஏனப்படி?''

''ஏன்னா, ஒரு பிரச்சினையைத் தன்னந்தனியே கையாண்டு தானே முடிக்கணும் என்று விரும்பும் வகை, அவன். அதனால!'' பின் தொடர்ந்தான்: ''கரையிறங்கியதும் போலீஸ் என்னைப் பிடிக்கும். அப்புறம் அவனுக்கு எவ்வித உதவியும் அற்றவனாவேன் நான். ஒருவகை விடுதலை, இது. பார்ப்பம்... எல்லாம் ஒரு மணி நேரத்துல தெரிஞ்சுடப் போகுது.''

முகமூடிச் சிரிப்புச் சிரித்தான். பிறகு, ''எதெப்படியோ... கரையிறங்கிட்டா, அவ்ளோ தான். மேற்கொண்டு நாம சந்திக்கவே முடியாதுனு நினைக்கிறேன்.''

''எனக்கும் அப்படித்தான் தோணுது'' - நானும் மெதுவாய் ஒப்புக் கொண்டேன்.

''எனவே - குட் பை.''

''குட் பை.''

என் கையை இறுக்கமாய் பற்றினான். சில கணங்கள் அவனுடைய விளக்கு போன்ற கண்கள் ஆர்வமாகி என்னுள் பிரகாசமாய் ஊடுருவுவதைக் கவனித்தேன். பிறகு அப்படியே திரும்பினான். என்னை விட்டு விட்டான். கப்பலின் மேற்தளம் முழுவதும் அவன் விட்டுச் சென்ற காலடி ஓசைகள் ஒலித்தன... எதிரொலித்தன. அவற்றை எப்போதும் நான் கேட்டுக் கொண்டே வாழப் பிரியப் பட்டேன். காலடி ஓசைகள் என் வாழ்க்கையைத் தன்னந்தனியே விட்டு விட்டுப் பிரிகின்றன.

அடுத்த இரு மணி நேரங்களை நான் கிஞ்சித்தும் ரசிக்கவில்லை. துறைமுகத்தை விட்டு, அங்கு அதிகாரிகள் என் உயிரை வாங்கி மேற்கொண்ட அனைத்து சம்பிரதாயப் பரிசோதனைகளையும் முடித்து வெளியே வந்து நின்றதும் தான், சுயமாய் மூச்சுக் காற்றினை சுவாசிக்க ஆரம்பித்தேன். எவ்விதமான கைதும், நடைபெறவில்லை. அந்த நாள், எனக்கான சொர்க்கபுரி நாளாக நான் உணர்ந்தேன். பசி வயிறைத் துளைத்தது. ஸுஸேனியோடு இணைந்து கொண்ட நான், இரவுப் பொழுதை அவரோடு ஓட்டலில் கழித்தேன். ஒரு டாக்ஸியை அமர்த்திக் கொண்டு ஓட்டல் மவுண்ட் நெல்ஸனுக்குப் போனோம்.

அங்கு எல்லாமே சொர்க்க இன்பத்தை அள்ளித் தந்தன. சூரியன், காற்று, மலர்கள்! 'சின்ன ஹாம்லேயின்', எப்போதும் மழை கொட்டும் ஜனவரி மாதத்தையும் தரையெல்லாம் களி மண்ணாய் ஆகி காலை வாரி வழுக்கிவிடும் அந்த மழைக் காலத்தையும் இப்போது நினைத்துக் கொண்ட நான், அப்படி எந்தத் தொந்தரவும் இல்லாமல் கண் முன்னே விரிந்துள்ள சொர்க்கபுரியை, வாரி அணைத்துக் கொள்வது போல என்னை நானே அணைத்துக் கொண்டேன். ஸுஸேனி என் அளவுக்கு புல்லரிக்கவில்லை. இந்தப் பிரதேசத்தில் பலமுறை அவர் பயணித்திருக்க வேண்டும். மேலும் அதிக உணர்ச்சிவசப்படக் கூடிய ஆளில்லை, அவர். ஒரு வட்டம் போல சுழித்துக் கொண்டு திரும்பிய

மலைப் பாதையைக் கண்டதும், நான் எழுப்பிய பூரிப்பு எக்காளத்துக்கு, கடுமையாய் என்னைக் கண்டித்து அடக்கினார் அவர்!

சிற்றுண்டிச் சாப்பிட்டு முடித்ததும் மிகவும் அடங்கிக் காணப்பட்டார் ஸுஸேனி. 'டேபிள்' வளைகுடாவைக் கண்ணாரக் கண்டு ரசிக்கும்படி அமைந்திருந்த ஓர் அறையை எனக்கு அளித்தார்கள். அது, ஸுஸேனியின் அடுத்த அறையாய் அமைந்தது. நான் அகண்டுக் கிடந்த கடல் ராணியை ரசித்துக் கொண்டிருக்க, ஸுஸேனி முகத்தில் தடவிக் கொள்ள ஏதோ ஒரு க்ரீமைத் தேடிக் கொண்டிருந்தார். அது கிடைத்து ஆர்வமாய் அதனை முகத்தில் தடவ ஆரம்பித்த போது நான் பேசுபவற்றைக் கேட்கும் மனோநிலைக்கு மாறியிருந்தார்.

''சர் ஆஸ்டஸைப் பார்த்தீர்களா?'' கேட்டேன் நான். ''காலைச் சிற்றுண்டி சாப்பிட நாம உள்ளே நுழைந்த போது அவர் அங்கிருந்து வெளியேறிக்கிட்டிருந்தார். அவருக்கு நாறிப்போன மீனோ அல்லது அப்படி எதுவோ சப்ளை பண்ணியிருக்காங்க போலிருக்கு. கத்திக் கிட்டிருந்தார். வெயிட்டரைக் கூப்பிட்டு, ஒரு பிடி அள்ளித் தரையில எறிஞ்சு, 'எத்தனை கெட்டியா கல்லு போல இருக்குப் பாரு'னு விளக்கிட்டிருந்தார்.''

ஸுஸேனி புன்னகைத்தார். ''என்னை மாதிரியே, காலங் கார்த்தால சீக்கிரமா எழுந்திருப்பது சர் ஆஸ்டஸுக்குப் பிடிக்கலே. அதான்... வெறுப்பாயிடறார். ஆனா, ஆனே, பகெட்டைப் பார்த்தியா? நான் அந்தாளுக்குப் பின்னாடியே வராண்டாவிலே விரைந்தேன். அவன் கண்ணு அப்படி திருதிருனு இருந்தது. அவர் அப்படி என்ன பண்ணிக்கிட்டு இருந்திருப்பார்?''

''என்னைப் பிடிச்சு எப்படி கப்பலிலிருந்து கீழே தள்ளுவதுனு!''

திருப்தியற்றுப் போன ஸுஸேனியின் முகம், நான் அப்படி சொன்னதற்கான விவரம் வேண்டுமென்று வற்புறுத்தினார். அதனைக் கொடுத்தேன் நான்.

''ஒண்ணொண்ணா சேர்ந்து எல்லாமே மர்மமா ஆயிடுதுப்பா'' என்று அழுதே விட்டார் அவர். ''சர் ஆஸ்டஸ் கூட ஜாலியா நான் கிளம்பப் போவதாகவும்... நீ, அந்த ரெவ.எட்வர்ட் கூட குஷியா கொண்டாடப் போவதாகவும் கனவு கண்டு வெச்சிருந்தேன். இதுல எதுவுமே முடியாது போல! சர் ஆஸ்டஸ் கூட போகும்போது இந்த பகெட் என்னை வண்டியிலிருந்து பிடிச்சுத் தள்ளித் தொலையாம இருக்கணும்!''

நான் புன்னகைத்தபடி அவரது கிண்டல் பேச்சுக்கு வலுசேர்த்தேன்: ''அப்படி ஏதாவது நடந்தா உடனடியா நான் உங்க புருஷன் க்ளாரன்ஸுக்கு தந்தி அனுப்பிடறேன்...!''

''அட, இப்ப தான் நினைவு வருது... ஒரு தந்தி காகிதம் கொடு. என்னனு அனுப்பலாம்?' ஒரு திரில்லிங் மர்மத்துக்குள்ளே நான் செமத்தியா மாட்டிக்கிட்டிருக்கேன். உடனடியா ஆயிரம் பவுண்டுகள் அனுப்பவும். உங்கள் அன்புள்ள ஸுஸேனி.' எப்படியிருக்கு?''

நான் அந்த தந்திக் காகிதத்தைப் பெற்றுக் கொண்டு, ''நான் செமத்தியா' மற்றும் 'உங்கள் அன்புள்ள' ஆகிய வார்த்தைகளை எடுத்து விட்டாலும் அதே சேதி தான் தெரியும் என்று விளக்கினேன். ஆனால் ஸுஸேனியோ சிக்கன விஷயத்தில் துளியும் கவனம் செலுத்தாத ஒருவராய்த் தோன்றினார். வார்த்தைகளைக் குறைத்து தந்திக் கட்டணத்தை மட்டுப்படுத்த நான் சொன்ன ஆலோசனையைத் தூக்கி ஓரம் வைத்துவிட்டு இன்னும் மூன்று வார்த்தைகளைச் சேர்த்தார்: 'தன்னந்தனியா அப்படி மகிழ்ந்துக்கிட்டிருக்கேன்.'

ஸுஸேனியை அழைத்துப் போக வந்த அவருடைய நண்பர்களுடன் மதிய உணவினை அமைத்துக் கொண்டார் அவர். நான் வசதியாக தனியாக விடப்பட்டேன். ஓட்டல் தோட்டங்கள் வழியாக கீழிறங்கி நடந்த நான், தெருவில் குறுக்காய் ஓடிய ட்ராம் ரயில் தண்டவாளங்களைத் தாண்டி, மரங்கள் சூழ இருந்த சிறு சாலைகள் வழியே சில்லென்று குதூகலமாய் நடந்து, கடைசியாய் பிரதான சாலையை அடைந்தேன். அக்கம்பக்கத்தில் இருந்தவற்றையெல்லாம் கண்களால் அள்ளிப்பருகி பிரமித்து மகிழ்ந்தபடி சூரிய ஒளியின் ஸ்பரிஸத்தை மிக ருசித்த நான், அங்கு மலர்களையும் கனிகளையும் விற்றுக் கொண்டிருந்த கறுப்புப் பெண்ணைப் பார்த்து புன்னகை செய்தேன். ஐஸ் கிரீம் சோடா கிடைக்கும் இடத்தைக் கேட்டறிந்த நான், ஆறு நாணயங்கள் மதிப்பு கொண்ட பீச் பழக் கூடை ஒன்றினை வாங்கிக் கொண்டு ஓட்டல் திரும்பினேன்.

என் சந்தோஷத்துக்கும், ஆச்சரியத்துக்கும் தீனி போடும் வகையில் எனக்காக ஒரு துண்டுக் கடுதாசி காத்திருப்பதைக் கவனித்தேன். அருங்காட்சியக கண்காணிப்பாளனிடமிருந்து வந்திருந்தது அது. பேராசிரியர் பெட்டிங்ஃபெல்ட்'டின் மகள் என்று என்னை அறிவித்துக் கொண்டு கில்மார்டனில் பிரயாணித்த நான், இங்கு வந்து இறங்கியிருப்பதைக் கேள்விப்பட்டிருக்கிறான் அவன். என்னுடைய அப்பாவைக் கொஞ்சமாய் அறிந்திருக்கும் அவன் அவர் மீது

அதிகமாய் மதிப்பும் மரியாதையும் கொண்டிருக்கிறான். 'முஸின்-பெர்க்' எனுமிடத்திலிருக்கும் அவர்களுடைய வீட்டிற்கு நான் போய், அவர்களுடன் தேநீர் விருந்தில் கலந்து கொண்டால் அவனுடைய மனைவி மிக மகிழ்வாள் என்று அதில் குறிப்பிட்டிருந்தான் அவன். அங்கு போய் எப்படி சேருவது என்பது பற்றியும் அதில் குறிப்புகள் தந்திருந்தான்.

பரிதாபமாய் இறந்து விட்ட அப்பா, உயர்ந்த இடத்தில் வைக்கப்பட்டு இன்னும் மரியாதை செலுத்தப்படுவதை அறியும் போது மிகவும் பெருமையாக இருந்தது. கேப் டவுனிலிருந்து நான் வெளியேறும் வரை, அருங்காட்சியகம் உட்பட எங்கு போய் சுற்றினாலும் நான் ஒரு பத்திரமான பாதுகாவலனோடு செல்வது தான் சிறந்தது என என் உள் மனசு உணர்த்தினாலும், பரவாயில்லை என துணிந்தேன்.

எனக்கு மிகவும் பொருந்தும் தொப்பியையும், சுருக்கங்கள் இல்லாத வெள்ளைப் பட்டினால் ஆக்கப்பட்டிருந்த ஆடம்பரமான மேலங்கியையும் அணிந்துக் கொண்டு, மதிய உணவு சாப்பிட்டு முடித்த சற்று நேரத்துக்கெல்லாம் நான் கிளம்பியிருந்தேன். விரைவு ரயிலில் ஏறிய நான், 'முஸின்-பெர்க்' பகுதிக்கு அரைமணி நேரத்தில் போய்ச் சேர்ந்திருந்தேன். அலுங்காத குலுங்காத இன்பப் பிரயாணம் அது. மெல்ல மெல்ல 'டேபிள்' மலையைச் சுற்றி இறுக்கியபடி ரயில் நகர அப்போது சில அபூர்வமான அழகு மலர்களைப் பார்க்க முடிந்தது. பூகோளத்தில் ஞானம் மிகக் கம்மியான எனக்கு கேட் டவுன் ஒரு வளைகுடா எனும் தகவல் இல்லாததால், ரயில் மலையைச் சுற்றிவிட்டு மறுபடியும் கடற்கரையோரமாய் அடங்கியபோது ஆச்சரியத்தின் உச்சிக்குப் போனேன். வந்து கலந்து கொள் என்று நம் ஆர்வத்தைத் தூண்டும் சில கடல் குளியல்கள் அப்போது அங்கு இடம்பெற்றுக் கொண்டிருந்தன. காலில் வளைந்த சிறு பலகைகளைக் கட்டிக் கொண்ட உல்லாசிகள் கடலலையின் நுனியில் விசுவிசுக்கென்று வழுக்கி விளையாடிக் கொண்டிருந்தனர். தேநீர் விருந்துக்குப் போக அது உகந்த நேரமாய் படவில்லை... மிக சீக்கிரமே வந்திருந்தேன். குளியல் பகுதிக்கு நான் போனதும் நானும் காலில் பலகையைக் கட்டிக் கொண்டு வழுக்கலாம் என்று அவர்கள் கொடுத்த உற்சாகத்துக்கு, ''யெஸ், ப்ளீஸ்'' என்றேன். அலைகளின் முகட்டில் வழுக்குவதைப் பார்க்கும்போது, அது, அத்தனை சுலபமாய்த் தெரிந்தது. ஆனால் நிஜத்தில் அப்படி கிடையாது. இனியொருமுறை ''யெஸ் ப்ளீஸ்''

சொல்ல மாட்டேன்! முடியாமல் போனதால் நடுக்கடலில் கோபங் கொண்டேன். கால் பலகைப் பலமுறை திரும்பித் திரும்பி உயிரெடுத்தது. ஆனால் தோற்க மனம் வரவில்லை. எனவே எத்தனை சீக்கிரம் முடிகிறதோ அத்தனை சீக்கிரமாய் கரையேறி விட்டு சற்று நேரம் கழித்து மறுபடியும் முயற்சிக்க விரும்பினேன். தோல்வி கூடாது. எப்படியோ என்ன காரணத்தாலோ... அடுத்த முறை சற்றே சரியாகவே வழுக்கினேன். சிலர் கைகள் கூட தட்டினார்கள். மகிழ்ச்சி பொங்க கரையேறினேன். 'அலை வழுக்கல்' இப்படிப்பட்டதுதான். வெறி பொங்க திட்டித் தீர்ப்பீர்கள்... அல்லது, உலகையே உள்ளங்கைகளுக்குள் வென்று விட்டது போன்று முட்டாள் தனமான சந்தோஷம் கொள்வீர்கள்.

சிறு சிறு பிரயத்தனங்களுக்குப் பிறகு 'முஸின்-பெர்க்' வீட்டினை நானடைந்தேன். மலைக்கு எதிர்ப்புறத்தில், அங்கிருந்த ஏனைய குடில்கள் மற்றும் வீடுகளிலிருந்தும் மிகத் தனிமைப்படுத்தப்பட்ட வீடாய் இருந்தது அது. அழைப்பு மணியை அடித்தேன்... இன்முகம் கொண்ட ஒரு பையன் பதிலாய் வந்து நின்றான்.

''திருமதி ரஃபீன்?'' - விசாரித்தேன்.

வீட்டுக்குள்ளே என்னை அனுமதித்து முன்னால் வழி காட்டியபடி போன அவன் அங்கிருந்த அறையொன்றின் கதவினைத் திறந்து விட்டான். அதனுள்ளே நான் நுழைய வேண்டியது மட்டும்தான் பாக்கியிருந்தது... தயங்கினேன். திடீர் அவநம்பிக்கையை உணர்ந்தேன். நுழைவாயிலுக்குள் அடிகள் வைத்து நான் நுழைந்தது தான் தாமதம்... எனக்குப் பின்னால் கறாராய் கதவு அடைக்கப்பட்டது.

அங்கிருந்த டேபிளுக்குப் பின்னால் சாய்வு நாற்காலியில் அமர்ந்திருந்த மனிதன், எழுந்து, கைகளிரண்டையும் அகல விரித்தபடி என்னை நோக்கி வந்தான். ''உங்களைக் கிளப்பி, இங்கே சந்திக்க வருமாறு செய்து விட்டதில் வெற்றியடைஞ்சிருக்கோம், மிஸ் ஆனே பெட்டிங்ஃபெல்ட். அவ்ளோ சந்தோஷமாயிருக்கு'' என்றான் அவன்.

அவன் மிக உயரமான மனிதன். நிச்சயம் டச்சுக்காரன்தான். நெருப்பாய் தகிக்கும் ஆரஞ்சு நிற தாடி. அருங்காட்சியக கண்காளிப்பாளனைப் போல துளியும் இல்லை அவன். உடனே, மின்னல் அடிக்கும் நொடிக்குள், அதியற்புத முட்டாளாக நான் இயங்கி விட்டிருப்பதை அறிந்து கொண்டேன்.

எதிரியின் கைகளில் - வாகாக நான்!

# அத்தியாயம் - 19

இது, பமீலாவின் சாகசங்கள் தொடரின் மூன்றாவது பாகத்தினை வலுக்கட்டாயமாக எனக்குள் நினைவூட்டியது. ஆறு பவுண்டு டிக்கெட் வாங்கிக் கொண்டு, கையோடு ரெண்டு மில்க் சாக்லெட்டுகளையும் அள்ளிக் கொண்டு, அதில் நடக்கும் அத்தனை வில்லத்தன இடையூறுகளும் எனக்கும் ஏன் நடக்கக் கூடாது என நான் எத்தனை தடவை ஏங்கியிருப்பேன்! அவையனைத்தும் பழி வாங்கும் ஆவேசத்துடன் நிகழ்பவை. அடி, உதை, குத்து, எகிறல், துப்பாக்கிச் சூடு! இவையெல்லாம் திரையில் வெகு அற்புதம் தான் அடுத்து பாகம் 4 வரும்... அதில் சுபமாய் அனைத்தும் தீரும்... என்று வசதியாய் தெரியும். ஆனால் நிஜ வாழ்க்கையில் அடுத்து ஒரு பாகம் என்று ஏதுமில்லாமல் அத்தனையும் இதே அத்தியாயத்துடன் கூட சுபமாகி விடலாம்.

சந்தேகமில்லாமல், தப்பிப்பற்ற இடத்தில் இருக்கிறேன் நான். காலையில் ரேபர்ன் சொன்ன அத்தனையும் இப்போது தவிர்க்க யியலாத கசப்பான உண்மையாக தனித்துத் தெரிந்தன. உண்மையை சொல்லிவிடு அவன் சொன்னான். சரி... அப்படியே அவன் சொன்னது மாதிரியே நானும் செய்யலாம். ஆனால் அது எனக்கு உதவுமா? ஒரு கேள்வி... நான் சொல்வது முதலில் நம்பப்படுமா? நாப்தலின் உருண்டைகள் வாடை வீசிய ஒரு துண்டுக் காகிதத்தைப் பக்கபலமாகக் கொண்டு இப்படி ஒரு பைத்தியக்கார அகழ் வாராய்ச்சியை நான் துவங்கினேன் என்பதை, இவர்கள் சாத்தியம் என்ற அளவுக்காவது நம்புவார்களா? எனக்கே இது கோமாளித் தனத்தின் உச்சமாய்த் தோன்றியது! பயம் முதுகுத் தண்டில் பாயும் இந்த அபாயத் தனிமைக் கணத்தில், இப்படி ஒரு தனி ஆவர்த்தனத்தை மூளையற்று ஆடிக் கொண்டிருப்பதை நினைத்து, என்னை நானே படுமுட்டாளாய் அங்கீகரித்தேன். தன்னந்தனிமையின் ஏகாந்தத்தை அள்ளியள்ளிக் கொடுத்த 'சின்ன ஹாம்ஸ்லே'யின் நினைவு, இப்போது எனக்குள் ஒப்பீடாய் எழுந்து ஏக்கத்தைத் துளிர்வித்தது.

நான் மேலே விவரிக்க எடுத்துக் கொண்ட அவகாசத்தை விட மிகக் கம்மியான பொழுதில், இந்த அனைத்து சிந்தனைகளும் என்னைக் கடந்துப் போயின. ஓரிரு அடிகள் பின்னால் எடுத்து வைத்து கதவின் தாழ்ப்பாள் கைகளில் தட்டுப்படுகின்றதா என பார்ப்பதே, என்னுடைய உள்ளுணர்வின் முதல் ஆணையாய் ஆனது. இதற்கு என்னைக் கடத்தி வந்தவன் கேலியாய் பல்லிளித்தான்.

''நீ இப்ப இங்கே வந்திருக்கே... இங்கேயே தான் இனி தங்கப் போறே...! நோ, தப்பிப்பு!'' முகத்தில் அறைந்தன அவனுடைய முடிவான வார்த்தைகள்.

என்னால் எத்தனை முடியுமோ அந்த அளவுக்குத் துணிகரமாய் விஷயத்தைச் சந்திக்க முடிவெடுத்தேன். ''கேப் டவுன் அருங்காட்சியகத்தின் கண்காணிப்பாளனால் தேநீர் விருந்துக்காக நான் அழைக்கப்பட்டுள்ளேன். ஒரு வேளை தவறுதலா நான் வந்திருந்தா...''

''தவறா? ஹாஹ்ஹா... ஓ. யெஸ்! பெருந்தவறு'' - கரடுமுரடாய் சிரித்தான் அவன்.

''என்னை இங்கே தங்க வைக்க உங்களுக்கு என்ன உரிமையிருக்கு? நான் போலீஸுக்கு சொல்ல வேண்டி வரும்...''

''வவ், வவ், வவ் குட்டி நாய் போல, ஆங்!'' கடகடவென சிரித்தான். பிறகு ஒரு நாற்காலியில் உட்கார்ந்தான்.

''நீ ஒரு ஆபத்தான மூளை குழம்பிய ப்ளாட்பாரம்'' பயமின்றி விமர்சித்தேன்.

''அப்படியா?''

''என் நண்பர்கள் அத்தனை பேருக்கும் நான் எங்கே கிளம்பி வந்திருக்கேன் எனும் தகவல் அட்சர சுத்தமாத் தெரியும் என்பதை உனக்கு சொல்லிக்க விரும்பறேன். இன்னிக்கு சாயந்திரத்துக்குள்ளே நான் வீடு திரும்பலேனா, என்னைத் தேடி உடனடியா இங்கே வருவாங்க. உன் குழம்பின பைத்தியக்கார மூளைக்கு இதுபுரியுதா?''

''ஆக, நீ எங்கே இருக்கே என்பது உன் நண்பர்களுக்குத் தெரியும்? யாரவங்க?''

இப்படி ஒரு சேலஞ்ச் என் முன் வீசப்பட்டதும் மின்னலென கணக்குப் போட்டேன். சர் ஆஸ்டஸைச் சொல்லி விடலாமா? அவர் ஒரு பிரபலஸ்தர் ஆகையால் அவரது பெயருக்கு சற்று கனமிருக்கும். ஆனால் இவர்களுக்கு உண்மையிலேயே பகெட்டுடன் தொடர்பிருக்குமேயானால், பருப்பு வேகாது. சர் ஆஸ்டஸை இப்போதைக்குத் தெரிய வேண்டாம்.

''ஒருத்தரை சொல்றேன்...'' என்ற நான், ''மிஸஸ் ப்ளேர்'' என்றேன் அலட்டிக் கொள்ளாது. ''எனது தோழி... இவரோட தான் நான் தங்கியிருக்கேன்.''

நெருப்பென சிகப்புச் கேசமிருந்த தலையை மெல்லமாய் மறுத்து ஆட்டிக் கொண்டே, ''ம்ம்... அவருக்குத் தெரியாதுனு நினைக்கிறேன்'' என்றான் அவன். ''இன்று காலை பதினோரு மணியிலிருந்து நீ அவரைப் பார்க்கலை. உன்னை இங்கே வரச்சொல்லிக் கட்டளை யிட்டக் கடிதத்தை மதியம் லஞ்சுக்குப் பிறகு தான் நீயே பார்க்கிறே!''

அவனுடைய இவ்வார்த்தைகள் நான் எந்த அளவுக்கு நெருக்கமாய் பின்தொடரப்பட்டிருக்கிறேன் என்பதை எனக்கு உணர்த்தின. ஆனால் இச்சூழலைக் கடும் சண்டையிட்டாவது ஜெயிக்காமல் நான் விடப்போவதில்லை.

''நீ படு புத்திசாலி'' என்றேன் நான். ''இருந்தாலும் வருஷங்களுக்கு முன்னாடி ஓர் உபகரணம் கண்டுபிடிச்சிருக்காங்களே... டெலிபோன் அப்படினு... அது உனக்குத் தெரியாதா? லஞ்ச்சுக்குப் பிறகு நான் ஓய்வெடுத்துக்கிட்டிருந்த போது அதுல என்னை மிஸஸ் ப்ளேர் கூப்பிட்டாங்க. அப்போ அவங்க கிட்டே சொன்னேன், நான் மதியம் கிளம்பி எங்கே போகப் போறேன்னு.''

எதிர்பாரா பெரு மகிழ்ச்சியை எனக்குள் உண்டுபண்ணும் விதமாக, அவனது முகத்தில் ஓர் இருப்புக் கொள்ளாமைப் போர்வையாய் படர்வதை நான் கவனித்தேன். ஸூஸேனிக்கும் எனக்கும் தொலைபேசி தொடர்பிருந்திருக்கலாம் எனும் சாத்தியக் கூறை அவன் கவனிக்காது விட்டிருப்பது தெரிந்தது.

''போதும், போதும்'' என்றான் அவன், கோபமாய் எழுந்தபடி. அப்படியே நின்று கொண்டிருந்தான்.

இப்போதும் தைரியமாய் இருப்பதாய் காட்டிக் கொண்டு, ''என்னை வெச்சுக்கிட்டு நீ என்னப் பண்ணப் போறே?'' என்றேன் நான்.

''உன்னைத் தேடிக்கிட்டு உன் நண்பர்கள் இங்கே வந்தா, நீ எந்தவிதமான ஆபத்தையும் எங்களுக்கு ஏற்படுத்திடாம இருக்கும் படியா ----- உன்னைக் கொண்டு போய் தனியா வைப்பது.''

ஒருகணம் அவனுடைய வார்த்தைகள் என் ரத்தத்தை உறைய வைத்தன. ஆயினும், பிறகு அவன் சொன்ன வார்த்தைகள் உறைந்த ரத்தத்தை மீண்டும் ஓடவிட்டன.

''நீ பதில் சொல்லத் தேவையான சில கேள்விகள் நாளை உனக்குத் தரப்படும். அதுக்கு நீ பதில் சொன்ன பிறகு தான் உன்னை வெச்சுக்கிட்டு என்னப் பண்ணுவது என்பதே முடிவாகும். ஆங்... அப்புறம், இளையவளே! உன்னைப் போன்ற மூளையற்ற இளைய முட்டாள்களைப் பேசச் செய்ய எங்களுக்கு ஒரு வழி இல்லே... ஒரு நூறு வழிகள் தெரியும்.''

ஓ... ஆபத்தில் ஓர் அதிர்ஷ்டம்... நாளை வரை அவகாசம் உள்ளது. இந்த ஆள், தலைவனிடமிருந்து வரும் கட்டளையை அடியொற்றி நடத்தித் தரும் ஒரு வீணாய் போன சேவகன்... அவ்வளவே. எனில், அந்தத் தலைவன், ஏதாவது ஒரு சாத்தியக் கூற்றின் படி, பகெட்டாய் இருக்குமா?

அவன் அழைத்தான். இரண்டு பையன்கள் வந்தனர். நான் மாடிக்குக் கொண்டு போகப்பட்டேன். நான் எத்தனை முயன்று முண்டியடித்தும் இயலாது போய் விட, கால்களும் கைகளும் கட்டப்பட்டு, வாயில் துணி திணித்து அடைக்கப்பட்டேன். என்னை எடுத்துக் கொண்டு போய் போட்ட அறை, மொட்டை மாடியையொட்டி ஒரு சேந்தி போலயிருந்த, பழைய சாமான்களை அடைக்குமிடம். அது அழுக்காகயிருந்தது. அங்கு ஒருவரும் வந்து போவதில்லை என்பது இதிலிருந்து தெரிந்தது. அந்த டச்சு மனிதன் வணங்கி எனக்கு கேலி மரியாதை காட்டி, வெளியேறிய அவனுக்குப் பின்னால் கதவினை அறைந்து மூடி விட்டுப் போனான்.

எவ்வித உதவியற்றும் ஆனேன் நான். என்னால் இயன்றவரை திரும்பியும் திருகியும் பார்த்தேன். என் கட்டுகளை மிகக் குறைந்தபட்சம் கூட என்னால் தளர்த்திக் கொள்ள முடியவில்லை. வாயிலிருந்த துணி கத்திக் கதறுவதிலிருந்து என்னைத் தடுத்தது. எப்படியோ, எந்தக் காரணத்துக்காகவோ, யாராவது இந்த வீட்டுக்குள் வந்தாலும் கூட, கத்தி சத்தம் போட்டு என்னால் உதவி நாட முடியாது. கீழே பெரிய கதவு ஒன்று மூடி அடைக்கப்படும் ஓசை கேட்டது. டச்சு மனிதன் வெளியேறுவதற்கான அறிகுறி.

எதுவுமே செய்ய இயலாமல் கிடக்கும் போது பைத்தியம் பிடித்து விடுகின்றது. கட்டப்பட்டிருந்த கயிறுகளை முறுக்கிப் பார்த்தேன்... ஆனால் போடப்பட்டிருந்த முடிச்சுகள் இளகவில்லை. கடைசியில் தோற்றுப் போனேன் நான்... தூங்கியிருக்க வேண்டும் அல்லது மயக்கத்துக்குள் விழுந்திருக்க வேண்டும். விழித்த போது உடலெங்கும்

வலியோடு துடித்தேன். அப்போது மையிருட்டு எங்கெங்கும் பரவியிருக்க, நள்ளிரவு உச்சத்தில் இருப்பதை உணர முடிந்தது. நிலா, வானின் மையத்தில் குளிர்ந்து கொண்டு, பனி மேகங்களைக் குடைந்து கீழே ஒளி பரப்பியது. வாயடைத்திருந்த துணி, எனது மூச்சினை பாதி முடக்கியிருக்க, இனி தாள முடியாது என்ற அளவுக்குப் போயிருந்தது உடலின் கடும் வலி.

இந்தக் கட்டத்தில் தான், அறையின் மூலையில் கிடந்த ஒரு கண்ணாடித் துண்டின் மீது என்னுடைய கண்கள் படிந்து நின்றன. நிலவின் ஒரு பிரம்மாண்டமான ஒளிக்கதிர் சரியாக அதன்மீது இறங்கி உண்டாக்கிக் கொண்டிருந்த மினுமினுப்பு என் கண்களைக் கூசி கவனத்தைக் கவர்ந்தது. அதைக் கவனித்துக் கொண்டிருந்த போதே ஆர்வமாய் ஓர் எண்ணம் என்னுள் ஒளிர்ந்தது.

என் கைகளும் கால்களும் உபயோகமற்றுக் கிடந்தாலும், என்னால் சர்வ நிச்சயமாக உருள முடியும்! மெதுவாகவும் இலக்கின்றிப் போகும்படியும் நகரத் துவங்கினேன். நினைத்தது போல் இது சுலபமாய் அமையவில்லை. அங்குலம் அங்குலமாய் உயிர்ப் பிடுங்கும் வலி நிறைந்ததாய் இது இருந்தது ஒரு பக்கம்... என் முகத்தைக் கைகளால் பாதுகாத்துக் கொள்ளும் வசதியில்லாததால், சரியாய்ப் பார்த்து, குறிப்பிட்ட திசையில் உருள்வது அளவற்ற சிரமமாய் போனது மறுபக்கம். துடித்தேன்!

உருள்கையில், எந்தத் திசையில் போக வேண்டுமோ அதை விடுத்து ஏனைய அனைத்து திசைகளிலும் கட்டுப்பாடின்றி இழுக்கப்பட்டேன் நான். இப்பயணத்தின் இறுதியில் ஒரு வழியாய் என் இலக்குக்கு அருகாமையிலிருந்தேன். அது கிட்டத்தட்ட எனது முடிச்சுகளில் பட்டேவிட்டது.

இது நடந்தும் கூட நான் வெற்றி பெற்றுவிட முடியவில்லை. என் கட்டுகளைத் தொடர்ச்சியாய் கீறி முழுவதுமாய் அறுக்கும்படியான ஒரு கோணத்தில் அந்தக் கண்ணாடித் துண்டினை சுவரில் சாய்த்து நிலைநிறுத்த, முடிவற்ற அவகாசம் ஆயிற்று. பொறுமையை சோதித்து 'எப்படியோ போகட்டும்...' என்று நெஞ்சுடைய வைக்கும் வேலையாய் ஆயிற்று இது, ஆனாலும், ஒரு கட்டத்தில், என் மணிக்கட்டுகளைக் கட்டியிருந்தக் கட்டினை அறுக்கும் இலக்கில் நான் வெற்றி பெற்றேன். பிறகு அனைத்தும் சற்று நேர வேலையே! விடுதலை பெற்ற மணிக்கட்டினை நன்கு திருகி சூடேற்றி ரத்த

ஓட்டத்தை நிலைநிறுத்தியானதும், வாய் முழுக்க ரொம்பிக் கிடந்த துணியினை உருவி எடுத்தேன். அப்போது இழுத்து விட்ட ஓரிரு முழுமூச்சு, விட்டுப் போயிருந்த சக்தியனைத்தையும் மீட்டுத் தந்தன.

சீக்கிரத்திலேயே நான் என் உடலைத் திருகியிருந்தக் கடைசி கட்டினையும் அவிழ்த்து விட்டாலும் சொந்தக்காலில் எழுந்து ஸ்திரமாய் நிற்க சற்று நேரம் பிடித்தது. கடைசியாய் நெட்டைக் குத்தலாய் எழுந்து நின்ற நான் கைகளையும் கால்களையும் முன்னும்பின்னும் ஆட்டியாட்டி ரத்த ஓட்டத்தை சராசரியாக்கிக் கொண்டேன். இப்படியெல்லாம் பண்ணுவதை விட அப்போது மிக அத்தியாவசியமாய் நான் தேடியது - உணவு.

மீண்டும் வந்துள்ள என் உடல் சக்தியின் நம்பகத்தன்மைக்காக கால் மணி நேரம் போல காத்திருந்தேன். அப்போது சராசரியாகியிருந்தேன்! பிறகு கதவு வரை ஓசையெழுப்பாது பூனை நடை நடந்து போனேன். நான் எதிர்பார்த்தது போலவே, அது பூட்டப்படவில்லை. வெறுமனே அடைக்கப்பட்டு மட்டுமே இருந்தது. அதைத் திறந்து சர்வ ஜாக்கிரதையாய் வெளிப்பட்டேன்.

அனைத்தும் ஓவியமாயிருந்தன. அசைவில்லை. ஒரு ஜன்னல் வழியாக உள்ளே வழிந்துக் கொண்டிருந்த வெண்ணிலாவின் ஒளியில், அசுத்தமாய் தரை விரிப்பற்றுக் கிடந்த படிக்கட்டுகள் தெரிந்தன. கவனமாய் அதில் இறங்கினேன். இன்னும் எவ்வித ஓசையும் கேட்கவில்லை. ஆனால், கீழ்த்தளம் அடைந்து அதில் முதல் அடியை வைத்ததும், முணுமுணுப்பான சில குரல்கள் என்னை வந்தடைந்தன. உறைந்துப் போய் அப்படியே சில கணங்கள் நின்றேன். நேரம், நள்ளிரவைக் கடந்த பொழுது என்பதை, சுவர்க்கடியாரம் பறை சாற்றியது.

இனியும், மேற்கொண்டு நான் முன்னேறினால் விளையவல்ல அத்தனை ஆபத்துக்களையும் நான் அறிந்தேயிருந்தாலும் எனது ஆர்வக் கிளர்ச்சிக் கட்டுங்கடங்காததாய் இருந்தது. அனைத்து வகையான முன்னெச்சரிக்கைகளையும் கையாண்டபடி உள்ளே நடப்பதைக் கண்டறிய முடிவெடுத்தேன். சில அடிகள் நடந்து சதுர வரவேற் பறையின் மையத்தில் நின்றேன். காவக்காரப் பையன் வாசல் நிலைக்கதவின் அருகாமையில் அமர்ந்திருந்தான். அவன் என்னைக் கவனிக்கவில்லை. இருந்தாலும், அவன் விட்ட நீண்ட நீண்ட மூச்சுக் காற்றிலிருந்து அவன் ஆழ்ந்த உறக்கத்தில் இருப்பதை நான் உடனேயே தெரிந்துக் கொண்டேன்.

அப்படியே பின்வாங்கி விடுவதா, அல்லது முன்னேறுவதா? நான் இங்கு வந்தபோது கூட்டிச் சென்று விடப்பட்ட அறையிலிருந்து தான் குரல்கள் வந்துக் கொண்டிருந்தன. ஒரு குரல் டச்சு மனிதனுடையது. இன்னொரு குரலை உடனடியாக என்னால் அடையாளங்காண முடியவில்லை. ஆனாலும், நான் அறிந்த ஒன்று போலவே இருந்தது.

பேசப்படும் அனைத்து உரையாடல்களையும் என்னால் இயன்றவரை கேட்க வேண்டியது எனது கடமை என்று ஆனேன். காவக்காரப் பையன் எழுந்து விட்டால், அப்போது உருவாகும் நிலைமையை எதிர்கொண்டு தான் தீரவேண்டும். அரவமற்று வரவேற்பறையைக் கடந்துப் போன நான், குரலோசை வந்த அறைக் கதவினருகே சற்று வளைந்து நின்றேன். ஓரிரு நொடிகள் என்னால் ஒன்றும் கேட்க முடியவில்லை. அருகில் வந்து விட்டதால் குரல்களின் ஒலி பெரிதாகியிருந்தாலும் அவர்கள் என்ன பேசுகிறார்கள் என்பதை என்னால் பிரித்தறிய முடியவில்லை.

இப்போது காதினை சற்று மூடிக் கொண்டு கண்களைத் தீட்டிக் கொண்டேன். சாவித் துவாரம் வழியாகப் பார்த்தேன். நான் ஊகித்திருந்தது போலவே ஒருநபர் டச்சுக்காரனே. துவாரம் வழியாகத் தெரிந்த எல்லைக்குள் அகப்படாது அமர்ந்திருந்தான் மற்றவன்.

அப்போது, திடுமென, ஒரு கோப்பைச் சாறினை எடுத்துக் கொள்வதற்காக எழுந்தான் அவன். கறுப்பு அலங்காரத் துணியால் ஆக்கப்பட்டிருந்த அவனுடைய பின்பகுதி இப்போது பார்வைக்குள் அகப்பட்டது. ஓஹ் அவன் திரும்புவதற்குள்ளாகவே யாரென்பது என்பது எனக்குப் புரிந்து விட்டது.

ரெவரிட். எட்வர்ட்!

இப்போது என்னால் உரையாடலின் வாசகங்களைப் பிடிக்க முடிந்தது.

''என்னயிருந்தாலும், இது ஆபத்தானது, ஆமாம். அவளுடைய நண்பர்கள் பின்னாடியே தேடிக்கிட்டு வராங்கனு வெச்சுக்குவோம்...''

பேசியது, அந்தப் 'பெரிய' மனிதன். எட்வர்ட் அவனுக்குப் பதிலளித்தார். காரியதரிசிக்கு உரிய அடக்கமான குரல் அத்தனை களையும் விட்டிருந்தார் அவர். யாருடைய குரலென்று நான் அடையாளங்காணாததில் ஒன்றும் ஆச்சரியம் கிடையாது.

''எல்லாம் புளுகு. இவ எங்கே கிளம்பியிருக்கானு ஒரு நாதிக்குத் தெரியாது.''

''அவநம்பிக்கையோட சொல்றாப்பா.''

''அப்படியெதுவும் கிடையாதுங்கறேன். நம்புங்க. நான் எல்லா சாத்தியக்கூறுகளையும் கவனத்துல வெச்சுக்கிட்டுத் தான் செஞ்சேன். நாம பயப்பட இதுல எதுவும் கிடையாது. மேலும், எப்படியிருந்தாலும் இது நம்ம 'கலோனலுடைய' கட்டளை. இதுக்கு எதிரா நீங்கப் போகப் பிரியப்பட மாட்டீங்கனு நினைக்கிறேன்.''

இதற்கு, அவனது மொழியிலேயே டச்சுக்காரன் எதையோ வேகவேகமாய் பீறிட்டான். அவசர மறுப்பாய் இருக்க வேண்டும்.

பிறகு, ''ஒரு வழியா கழுத்தைப் பிடிச்சு அவளைத் தள்ளிவிட வேண்டியது தானே?'' கோபமாய் கேட்டான். ''ரொம்ப சிம்பிளா முடியும். படகு தயாரா இருக்கு. கடல், 'ஆ..'னு பசியோடக் காத்திருக்கு.''

''இதுவும் சரிதான்'' சிந்தனையாய் சொன்னார் எட்வர்ட். ''அடுத்து நான் பண்ண வேண்டியது இதுதான். அவ, ரொம்பத் தெரிஞ்சு வெச்சிருக்கா. இது நிச்சயம். ஆனா, இப்படியொரு முடிவையெடுத்து நாம நடைமுறைபடுத்திட முடியாது; 'கலோனல்', தன்னந்தனி ஆளாக இயங்கி, அடுத்துப் பண்ண வேண்டியதைப் பற்றிய முடிவினை அவர் மட்டும் தான் எடுக்கணும்னு நினைக்கும் தலைவர்'' - இப்படி அவர் சொன்ன வார்த்தைகளே எதையோ அவருள் நினைவூட்டி அவரை எரிச்சலாக்கியது. ''ஏதோ ஒரு சேதியை அவர் இந்தப் பொண்ணிட மிருந்து எதிர்பார்க்கிறார்.''

'சேதியை' என்று சொல்வதற்கு முன்னால் சற்று நிறுத்தினார் எட்வர்ட்... அந்த இடைவெளியை நுணுக்கமாய் உணர்ந்து விடுவதில் கவனமாயிருந்தான் டச்சுக்காரன். கேட்டான்: ''சேதியா?''

''ம். அதுபோல ஏதோ.''

''வைரங்கள்'' - நான் எனக்குள் சொல்லிக் கொண்டேன்.

''ம், இப்போ'' என்ற எட்வர்ட், ''அந்தப் பட்டியலை என்கிட்டே கொடு'' என்றார்.

பிறகு நெடுநேரம் அவர்களது உரையாடல் எனக்கு ஏதும் விளங்காத ஒன்றாகவே போய்க் கொண்டிருந்தது. அதிக அளவினாலான காய்கறிகள் குறித்த வியாபாரம் பற்றியதாய்த் தோன்றியது. தேதிகள் சொல்லப்பட்டன... விலைகள் மற்றும் நானறியா பல இடங்களின் பெயர்கள். இவை குறித்த சரிபார்த்தல்கள். அவர்களுக்குள் பேச்சு முடிய, அரை மணி நேரம் வரை ஆகியது.

''நல்லது'' என்று எட்வர்ட் சொல்ல, அப்போது நாற்காலியைப் பின்னுக்கு நகர்த்தும் ஓசை எழுந்தது.'' 'கலோனல்' கிட்டே காட்ட இதையெல்லாம் நான் என் கையோட கொண்டு போறேன்.''

''நீங்க எப்ப கிளம்பப் போறீங்க?''

''நாளை காலை பத்து மணிக்குக் கிளம்பினா சரியாயிருக்கும்.''

''கிளம்பறதுக்கு முன்னால அந்தப் பொண்ணைப் பார்க்க விரும்பறீங்களா?''

''கிடையாது. 'கலோனல்' வரும் வரை ஒருத்தரும் அவளைப் பார்க்கக் கூடாது என்பது ஸ்ட்ரிக்ட் கட்டளை. அவ சரியா தானே இருக்கா?''

''ராத்திரி சாப்பிட வரும்போது ஒரு பார்வை பார்த்துட்டுத் தான் வந்தேன். தூங்கிக்கிட்டிருந்தானு நினைக்கிறேன். ஆங்... அவளுக்கு சாப்பாடு?''

''ஒருவேளை பட்டினி உயிரைப் பிடுங்கிடாது. நாளைக்கு 'கலோனல்' இங்கே வராரு. பசியோடக் கிடந்தானா கேட்கிற கேள்விக்கு தடபுடலா பதில் சொல்வா. அதுவரை வேற யாரும் அவகிட்டே போகாம இருப்பது நல்லது. இறுக்கமா தானே அவ கட்டப்பட்டிருக்கா?''

டச்சுக்காரன் இக்கேள்விக்கு சிரித்தான். ''என்னை என்னனு நினைக்கிறீங்க?''

இப்போது இருவரும் சிரித்தார்கள். மூச்சுக் காட்டாமல், நானும் அப்படியே! அவர்கள் அறையை விட்டு வெளியே வரப் போவது போல சாம்பாஷணை நின்று போய்விட, ஓர் அவசர பின்வாங்கலை நடத்தினேன். படிக்கட்டுகள் ஏறி நான் முதல் தளமடைவதற்கும், கீழே அவர்கள் அறைக்கதவினைத் திறந்துக் கொண்டு வெளியேறுவதற்கும் மிகச் சரியாய் பொருந்தியது. காவக்காரப் பையன் ஒரு குலுங்குக் குலுங்கி விழித்துக் கொண்டான். ஓசையெழுப்பாது அந்த ஒட்டடை அறைக்குள் புகுந்துக் கொண்ட நான், என்னைச் சுற்றிக் கட்டுக்களை இறுக்குவது போல அமைத்துக் கொண்டு, ஒரு வேளை அவர்கள் திரும்பி வந்து எட்டிப் பார்த்தாலும் சந்தேகம் வராமல் இருக்கட்டும் என்பதற்காகத் தரையிலும் படுத்துக் கொண்டேன்.

ஆனால் அவர்கள் அப்படியேதும் செய்துவிடவில்லை. ஒருமணி நேரம் கடக்க விட்டேன். மீண்டும் படிகளிறங்கினேன். ஆனால் காவக்காரப் பையன் கதவருகில் கொட்டக் கொட்ட விழித்தபடி

பாடலொன்றினை முணுமுணுத்துக் கொண்டிருந்தான். வீட்டை விட்டு முதல் வேலையாய் வெளியேறி விட வேண்டும் என்பதில் நான் துடிதுடிப்பாயிருந்தேன், ஆயினும், அதை எப்படி நடைமுறைப்படுத்தி ஜெயிப்பது என எனக்குப் படவில்லை.

முடிவில், மறுபடியும் நான் அடைத்து வைக்கப்பட்டிருந்த சேந்தி அறைக்கே திரும்பும் படி ஆகிப் போனது. இரவு முழுக்கத் தூங்காமல் பையன் விழித்திருக்கப் போவது முடிவாயிற்று. விடிகாலைத் தயாரிப்புகளுக்கான ஓசைகளைக் கேட்டபடி அங்கேயே கிடந்தேன் நான். இருந்த ஆடவர்கள் காலைச் சிற்றுண்டியை வரவேற்பறையில் எடுத்துக் கொண்டனர்... அவர்களது குரல்கள் பிரித்தறிந்து புரிந்துக் கொள்ளும் வகையில் படிகள் தாண்டி மேலே என்னிடம் வந்தன. எனது நம்பிக்கை முழுக்கவும் தளர்வதை உணர்ந்தேன். இந்த வீட்டை விட்டு எந்த மாய மந்திரத்தை செய்து நான் வெளியேறப் போகிறேன்?

பொறுமையாய் இரு என்று எனக்கு நானே ஆறுதல் சொல்லிக் கொண்டேன். அவசரமாய் செய்து விடும் செயல் கிடைத்த வெற்றி அத்தனையையும் சிதைத்து விடக்கூடும். காலை சிற்றுண்டி முடிந்ததும் ரெவ.எட்வர்ட் கிளம்புவது கேட்டது. எனக்கு முழு நிம்மதி தரும் வகையில் அவருடன் டச்சுக்காரனும் கிளம்பிப் போனான்.

படபடப்பாய் காத்திருந்தேன். சிற்றுண்டி சாமான்கள் அத்தனையும் சுத்தம் செய்யப்படுவதும், காலைப் பொழுதுக்கான வீட்டு வேலைகள் அடங்கும் ஓசையும் கேட்டன. பலதரப்பட்ட வேலைகளும் ஒரு வழியாய் முடிந்துப் போனது விளங்கியது. எனது சிறையிலிருந்து மற்றுமொருமுறை நான் வெளிப்பட்டேன். படுஜாக்கிரதையுடன் படிகளிறங்கினேன். வரவேற்பறை காலியாயிருந்தது. மின்னலென அதனைக் குறுக்காய் கடந்த நான் நிலைக்கதவின் தாழ்ப்பாளை அகற்ற..! வெளியே சூரிய ஒளியில் இறங்கியிருந்தேன். பேய்ப் பிடித்தவளைப் போல தோட்டத்துப் பாதைகளில் வெறியாய் ஓடி... வீட்டை விட்டு முழுக்க வெளியேறினேன்.

நடைபாதையில் விழுந்ததும் எனது சராசரி நடையைப் பின்பற்றினேன். ஆர்வமாய் மக்கள் என்னைக் கூர்ந்து கவனித்தனர். இது ஏன் என்பதில் எனக்கு ஆச்சரியம் எழவில்லை. அழுக்கேறிய மாடியறைத் தரையில் நான் உருண்டு புரண்டதில், என்னுடைய முகமும் உடலும் உடையும் பிசுக்காகி அழுக்கேறியிருக்க வேண்டும். விரைவாக அருகிலிருந்த ஒரு கார் ரிப்பேர் செய்யும் கடையை அடைந்தேன்.

உள்ளே நுழைந்தேன். ''என் வாகனத்துக்கு விபத்து நேர்ந்து விட்டது'' என்றேன். ''கேப்டவுனுக்கு என்னைக் கொண்டு போய் விட ஒரு கார் வேண்டும். உடனடியா டர்டன் போகும் படகினை நான் பிடித்தாக வேண்டியுள்ளது.''

இந்த வேண்டுகோளுக்கு அதிகம் காத்திருக்க வேண்டிய தேவை எழவில்லை. பத்து நிமிடங்கள் கழித்து நான் கேப்டவுன் நோக்கி சீறிப் பாய்ந்துக் கொண்டிருந்தேன். படகில் எட்வர்ட் ஏறி விட்டாரா என்பது எனக்குத் தெரிய வேண்டும். அப்படியே ஆகிவிட்டால், அதே படகில் நானும் பயணிக்க வேண்டுமா தேவையில்லையா என்பதை என்னால் தீர்மானிக்க முடியவில்லை. ஆனால் இறுதியாய் போவது என்று முடிவு செய்தேன். 'முஸின்-பெர்க்' வீட்டில் அவரை நான் கவனித்து விட்டது எட்வர்டுக்குத் தெரிந்திருக்காது. சந்தேகத்துக்கிடமின்றி என்னைப் பிடிக்க மேலும் பொறிகளை அவர் திட்டமிடலாம்... ஆனால் நான் முன்கூட்டியே எச்சரிக்கப்பட்டு விட்டேன்! அவர் தான் நான் தேடி பின்தொடர்ந்துக் கொண்டிருக்கும் நபர்... 'கலோனலின்' சார்பாக வைரங்களை விரட்டிக் கொண்டு ஓடிக் கொண்டிருக்கும் நபர்.

ஓ, கடவுளே! இதென்ன என் திட்டங்களுக்கு விளைந்துள்ள முட்டுக்கட்டை! நான் துறைமுகத்தின் முகப்பில் வந்து கால்பதித்த அதேகணத்தில், கடலுக்குள் முழுவதுமாய் தன்னைப் பதித்துக் கொண்டிருந்தது, கில்மார்டன் மாளிகை. அதில் எட்வர்ட் பிரயாணமாகிறாரா இல்லையா என்பதைத் தெரிந்து கொள்ள எந்த வழியும் எனக்குத் தென்படவில்லை.

# அத்தியாயம் - 20

ஓட்டலுக்கு விரைந்தேன். வரவேற்புப் பகுதியில் எனக்கு அறிமுகமாகியிருந்த எவரும் இல்லை. படிகளில் ஓடிய நான் ஸௌஸேனியின் அறைக் கதவினை அறைந்தேன். இந்த அவசரத்துக்கு 'மெதுவா மெதுவா!' என இருமுறை ஏலம் விட்ட அவரது குரல், பின், ''உள்ளே வரலாம்'' என்றது! நுழைவது யாரென்று பார்த்த கணத்தில், அவர், ஓடோடி வந்து ஏறத்தாழ என் கழுத்தில் விழுந்தே விட்டார். கழுத்தைச் சுற்றிக் கரவளையமிட்டு, ''ஆனே, டியர், எங்கே போய் தொலைஞ்சே? உனக்கு என்ன ஆயிடுச்சோன்னு யோசிச்சு, மண்டையே தூள் தூளா உடைஞ்சுப் போகுமளவுக்குத் துடிச்சிக்கிட்டி ருக்கேன். எங்கே போனே? என்ன செஞ்சே?''

''சாகசங்கள்!' என பதில் தந்தேன். ''பமீலாவின் சாகசங்கள் - பாகம் IV...!''

அவரிடம் முழு கதையையும் நான் ஒப்பித்தேன். நான் முடித்த போது நீண்டப் பெருமூச்சுக்கு வழி செய்துக்கொண்டார். ''உனக்குனு எதுக்கு தான் இப்படிப்பட்ட சங்கடங்கள் நடந்துக்கிட்டே இருக்கோ?'' என வருத்தம் தோய்ந்து குறிப்பிட்டார். ''என்னை யாராவது வந்து வாயைப் பொத்தி, கை காலைக் கட்டியிருந்தாக் கூட இத்தனைக் கவலைப்பட மாட்டேன், நான்.''

''ஓ... அதெல்லாம் உங்களால தாங்க முடியாது'' தீர்மானமாய் சொன்னேன் நான். ஸௌஸேனிக்கு சாகசங்கள் பிடிக்கும். ஆனால், அதே சமயம், வசதியற்ற அசௌகரியங்கள் பிடிக்காது.

''ஆமாம்... இனிமே மேற்கொண்டு நாம ரெண்டு பேரும் என்ன பண்ணப் போறோம்?''

''சரியா சொல்லத் தெரியலே'' என்றேன் நான், சிறு சிந்தனை யோடு. ''நீங்க ருடேஸியா போயாகணும்.. பகெட்டின் மீது கண் பதிக்க.''

''அப்ப நீ?''

சரியாய், இது தான் எனது சிக்கலே! கில்மார்டனில் ஏறி ரெவ. எட்வர்ட் பிரயாணித்துள்ளாரா, இல்லையா? டர்பனுக்குப் போகப் போவதாய் அவருக்கிருந்த திட்டத்தையா செயல்படுத்துகிறார்? 'முஸின் - பெர்க்'கிலிருந்து அவர் புறப்பட்ட நேரம் இவ்விரு கேள்வி களையும் ஊர்ஜிதம் செய்வதாய் அமைகின்றது. அப்படியானால் நான் டர்பனுக்கு ரயிலில் பிரயாணத்தைத் தொடங்கலாம். படகு அங்கு போய் சேர்வதற்கு முன்னரே என்னால் போய் சேர்ந்துவிட முடியுமா என்பதில் எனக்கு இப்போது சந்தேகம் கிளம்பியது. அடைத்து வைக்கப் பட்டிருந்த வீட்டிலிருந்து நான் தப்பித்து விட்ட சேதி அவருக்குத் தந்தி மூலம் தெரியப்படுத்தப்பட்டு விட்டாலோ.. மேலும், நானும் அவர் பின்னோடேயே டர்பனுக்குக் கிளம்பி விட்ட சேதியும் கூடுதலாய் தெரிவிக்கப்பட்டு விட்டாலோ... அவ்வளவுதான், வழியிலேயே எலிஸபெத் துறைமுகத்திலோ அல்லது கிழக்கு லண்டனிலோ இறங்கிக் கொண்டு அப்படியே முழுவதுமாக அவர் மறைந்தே போய் விடலாம்.

இது ஒரு சிக்கலான சமாச்சாரம்தான்.

''முதல்ல, டர்பனுக்கு இருக்கும் ரயில் சேவை பற்றி விசாரிப் போம்'' என்றேன் நான்.

''வரவேற்பரை பகுதிக்குப் போய் ஒரு டீ குடிச்சுக்கிட்டே விசாரிப்போம்'' என்றார் ஸுஸேனி.

முன் இரவு 8.15 மணிக்கு டர்பன் ரயில் கிளம்பிச் சென்றிருக் கிறதாம். வரவேற்பில் தகவல் தந்தார்கள். அப்போதைக்கு முடிவினைத் தள்ளி வைத்தநான், சற்றே காலந்தாழ்த்திய 'காலை டீ'யினை ஸுஸேனியுடன் குடித்தேன்.

''உன்னால மறுபடியும் சரியா எட்வர்டை அடையாளம் காண முடியும்னு நினைக்கிறியா?''

''? ? ?''

''அதாவது அவர் வேறு ஏதாவது மாறுவேடத்துல எதிர்ப் பட்டார்னா?''

கவலையாய் மறுத்துத் தலையசைத்தேன் நான். ''ஒரு பெண் சிப்பந்தியா வந்தார்... அதை என்னால கண்டே பிடிக்க முடியலியே. நீங்க வரைஞ்சுக் காட்டலேனா, ம்ம் அது எனக்கு ஜென்மத்துக்குத் தெரிய வந்திருக்காது.''

சிந்தனையாய், ''அந்த மனுஷன் ஒரு கை தேர்ந்த நடிகன்ப்பா. என்கிட்டேயிருந்து எடுத்துக்கோ'' என்றார் ஸுஸேஸி, தீர்மானமாய்.

''அவருடைய அரிதார வேலைகள் - ஒப்புயர்வற்றவை. கப்பலிலிருந்து ஒரு கப்பல் அதிகாரியா கூட அவர் இறங்கி வரலாம்... நீ 'பெப்பெப்பெ'னு கோட்டை விட்டாலும் ஆச்சரியப்படுவதற் கில்லை.''

''எப்பவும் கலாட்டாதான், நீங்க'' - சொன்னேன் நான்.

இந்தக் கணத்தில் கலோனல் ரேஸ் அந்தப் பக்கமாய் தோன்றி எங்களுடன் வந்து இணைந்துக் கொண்டார்.

''சர் ஆஸ்டஸ் என்ன பண்ணிக்கிட்டிருக்கார்?'' கேட்டது, ஸுஸேனி. ''இன்னிக்கு முழுக்க நான் அவரைப் பார்க்கலே.''

விவரிக்க முடியாத ஓர் உணர்வு கலோனல் ரேஸின் முகத்தில் மேவியது. ''ஒரு சின்ன தொந்தரவு அவருக்கு.. அதை அவராலேயே ஆற்றிக்க முடியலே... அதுதான், அவரை, இன்னிக்கு முழுக்க தனியா பிரிச்சு வெச்சிருக்கு.''

''அதைப் பற்றி சொல்லுங்க.''

''என்னைக் கதாசிரியராகவே மாற்றிடாதீங்க.''

''அது இல்லேனா, வேற ஏதாவது! ஞாபகம் வரலேனா, எங்களுக் காக சட்டுனு ஏதாவது உற்பத்தி பண்ணியாவதும் சொல்லுங்க!''

சிரித்துக் கொண்டார் அவர்.

''சரி! அப்போ இந்தக் கேள்விக்கு பதில் சொல்லுங்க! 'ப்ரௌன் சூட்டில் வந்தவன்' நம்முடன், நாம வந்தக் கப்பலிலேயே பயணம் பண்ணியிருக்கான்.. இதுக்கு என்ன சொல்றீங்க?''

''என்னது?''

என் முகத்தின் வண்ணம் கணப் பொழுது வெளிறிப் போய் பிறகு அதுவாக மீண்டும் கூடிக் கொண்டது புரிந்தது. அதிர்ஷ்டவசமாக கலோனல் ரேஸ் என்னைப் பார்த்துக் கொண்டிருக்கவில்லை.

''இது ஒரு நிஜம் - நானும் நம்பறேன். ஒவ்வொரு துறைமுகத்திலும் அவனுக்காகக் காவலர்கள் காத்திருந்திருக்காங்க. ஆனா, அவன், சர் பெட்லருக்கு அல்வா கொடுத்து அவரோட செகரட்டரியாகவே பிரயாணிச்சிருக்கான்!'

''பகெட்?''

''ஓ... பகெட் இல்லை. அந்த இன்னொருத்தன். ரேபர்ன் அப்படினு சொல்லிக்கிட்டவன்.''

''அவனைக் கைது பண்ணியாச்சா?'' ஸுஸேனி கேட்டார். டேபிளுக்குக் கீழே என் கையைப் பிடித்து தைரியமாயிரு என்பது

போல் பிசைந்தார். நான் மூச்சடைத்துப் போய் விடைக்காகக் காத்திருந்தேன்.

''காற்றுக்குள் அவன் கரைந்து மறைந்து விட்டதாய் சேதி.''

''பாவம், சர் ஆஸ்டஸ் இந்த விஷயத்தை எப்படி எடுத்துக்கிட்டார்?''

''விதிவசம், அவரை இப்படி ஒரு மகத்தான தலைகுனிவுக்கு உள்ளாக்கியிருக்குனு எடுத்துக்கிட்டார்.''

இது விஷயமா சர் ஆஸ்டஸ் உணர்ந்திருப்பதை அவர் வாயாலேயே கேட்டறியும் வாய்ப்பு அன்று மதிய முடிவுக்குள்ளாகவே அமைந்தது. லஞ்ச் முடித்துக் குட்டித் தூக்கம் போட்டுக் கொண்டிருந்த எங்களைக் கையில் ஒரு சிறு குறிப்போடு ஓட்டல் பையன் வந்து எழுப்பினான். அன்பான உபசரிப்போடு, மாலை தேநீர் அருந்தும் போது எங்களை உடன் சேர்த்துக் கொள்ளுமாறு அழைத்திருந்தார் சர் ஆஸ்டஸ்.

பரிதாபத்திற்குரிய அந்த மனுஷன் கவலைக்கிடமான மனோ நிலையில் கிடந்தார். ஸௌஸேனியின் கருணை மிகுந்த 'சூச்சூ'க்களால் உசுப்பேற்றப்பட்டு தன்னுடைய கிலேசங்கள் அத்தனையையும் அவர் கொட்டினார். (இந்த சூச்சூ மூலம் அடுத்தவரைக் கைக்குள் போட்டுக் கொள்வதை ஸௌஸேனி மிகச் சிறப்பாகவே செய்கிறார்!)

''முதல் சங்கதி: முகம் முகவரி எதுவும் தெரியாத ஓர் அந்நியப் பொம்பிளை, என் வீட்டைத் தேடி வந்து, என்னைப் பித்துப் பிடிச்சு அலைய வைப்பதற்காகவே, அங்கே செத்தது. ஏன் என் வீட்டுல இப்படி? கிரேட் பிரிட்டனின் மற்ற எல்லாப் பாழடைஞ்ச பகுதிகளும் கண்ல படாம என்னுடைய மில் வீடுதான் பட்டுதா, அவளுக்கு? என் வீட்டுல வந்து தன்னைத் தானே கொன்னுக்க அந்தப் பொம்பிளைக்கு நான் அப்படி என்னதான் பாவம் செஞ்சேன்?''

அவருக்கே வசதியான இன்னொரு 'சூச்சூ'வினை ஸௌஸேனி வெளியிட, இன்னும் தீவிரமான குரலெடுத்துக் கவலைகளைக் கொட்டுவதில் இறங்கினார், எம்.பி!

''இது போதாதுனு, அவளைக் கொன்னுப் போட்ட அந்த ஆசாமிக்கு அத்தனை திமிர் இருந்திருக்கு. உலகத்துல எவனுக்கும் இருக்காத அத்தனை கொழுப்பு இருந்திருக்கு அவனுக்கு! என்னோட செகரட்டரியாகவே என் கூட பிரயாணிச்சு இந்த சிக்கலை இன்னும் சிடுக்காக்கியிருக்கான் அந்த ராஸ்கல்! கவனிச்சுக்கோங்க. என் செகரட்ரியா! ஓஹ்..! இந்த செக்ரட்டரிங்களால நான் வெந்துப்

போய்ட்டேன் - இனி ஒரு செகரட்டரி எனக்கு வேணாம். ஒண்ணு, அவனுங்க ரகசிய கொலைகாரனுங்க; இல்லேனா, குடிகாரப் பயலுங்க! பகெட்டுடைய சிவந்த விழிகளைப் பார்த்தீங்களா? இப்படியொரு செகரட்டரியை வெச்சுக்கிட்டு, நான் என்னத்தை மாரடிக்கிறது? இந்த காரியதரிசிங்க கூட போதும் போதும்னு ஆயிடுச்சு... இனிமே அடுத்து ஒரு செகரட்ரினா, அது பொண்ணா தான் இருக்கணும்! அற்புதமான ஒரு பெண்.. நீரோட்டமான ஆடும் விழிகளோடு... நான் மனசொடிஞ்சு தளரும் போது என் கையை இறுக்கமாக பிடிச்சு ஆதரவு தர! நீங்க என்ன நினைக்கிறீங்க, மிஸ் ஆனே? அந்தப் பொண்ணா நீங்களே ஏன் வந்துடக் கூடாது?''

''எத்தனை தடவை நான் உங்க கையை இறுக்கமா பிடிக்க வேண்டியிருக்கும்?'' - கலீர் என சிரித்தபடி கேட்டேன் நான்.

''நாள் முழுக்க'' என்றார் சர் ஆஸ்டஸ் கம்பீரமாய்.

''இந்த வகையிலே போனா டைப் பண்ண எனக்கு அவகாசமே இல்லாம போயிடும்'' - சிரிப்புக் குலையாமல் ஞாபகப்படுத்தினேன் நான்.

''அதனால பிரச்சினை கிடையாது. ஒரு வேலைக்கு நூறு வேலைகளை சிருஷ்டிப்பதெல்லாம் பகெட் ஐடியா. வேலை வேலைனே என்னை அவன் சாகடிக்கப் போறான், பாருங்க! கேப் டவுன்லேயே அவனை இறக்கி விட்டுடலாம்னு நினைக்கிறேன்!''

''அவர் அங்கேயே தங்கிடப் போறாரா?''

''ஆமாம். ரேபர்ன் பற்றி துப்புத் துலங்குவதில் தனியாளா புகுந்து விளையாடப் போறானாம்! இப்படித் தனியா சுற்றுவது ஒண்ணு தான் பகெட்டுக்கு மிகச் சரியா பொருந்துது. யோசிச்சு யோசிச்சு சதியாலோசனை செய்வதை அவன் பூஜிக்கிறான். எப்படியோ ஒழியட்டும் அவன். ஆனா நான் என்னுடைய அறிவிப்புல ஸ்திரமாயிருக்கேன். நீ வரியா என்னோட? உன்னை ரொம்ப எனக்குப் பிடிச்சிருக்கு. அதனால ஒருமை தான் இனிமே! இங்கிருக்கும் மிஸஸ் ப்ளேர் உன்னோட பாதுகாவலர். அடிக்கடி நீ இவர்கிட்டே வந்து தங்கி விடுப்பு எடுத்துக்கலாம்- நேரா கிளம்பிப் போய் பள்ளந்தோண்டி எலும்பு தேடலாம் - அனைத்துக்கும் நான் அனுமதிக்கிறேன்.''

''இதுக்கெல்லாம் ரொம்ப நன்றி,சர் ஆஸ்டஸ்'' என்றேன் நான், எச்சரிக்கையாய். ''ஆனா, நான் இன்னிக்கு ராத்திரியே டர்பன் கிளம்ப வேண்டியிருப்பதும் நிஜமே.''

''வீணா பிடிவாதம் பிடிக்காதே. ருடேஸியா போறோம். அங்கே நிறைய சிங்கங்கள் உண்டு. உனக்கும் சிங்கங்கள் பிடிக்குது. பெண்களுக்கு சிங்கம்னா போதும்.''

''அதுங்களும், பின்பக்கத்துல, குதிச்சு குதிச்சு, சின்னச் சின்னத் துள்ளல்களைப் பயிற்சி பண்ணுமா?'' - கலகலவென சிரித்தபடி நான் கேட்டேன். ''இருந்தாலும், ரொம்ப நன்றி சார். நான் டர்பனுக்குப் போயே ஆகணும்.''

என்னை உற்றுப் பார்த்தார் ஆஸ்டஸ். ஆழமாய் நெடு மூச்சு விட்டார். பிறகு பக்கவாட்டிலிருந்த அறையின் கதவைத் திறந்தார். பகெட்டை அழைத்தார். ''நீ உன்னோட மதியத் தூக்கத்தை முடிச்சிருந்தா, ஒரு மாற்றத்துக்காக, எனக்காக சின்ன வேலை பண்ணணும்ப்பா'' என்றார்.

பகெட் முன்னால் வந்து நின்றான். எங்களிருவருக்கும் வணக்கங்கள் தெரிவித்தான். அப்போது என்னை மட்டும் சில நொடிகள் நீண்டு கவனித்தான். பிறகு உணர்ச்சியற்ற குரலில் முதலாளிக்கு பதிலளித்தான்: ''மதியம் முழுக்க அந்தக் குறிப்பை டைப் பண்ணிக்கிட்டிருந்தேன், ஸார்.''

''எந்தக் குறிப்பும் இப்பவேணாம். நேரா கிளம்பி கமிஷனர் ஆபீஸுக்குப் போ... இல்லேனா விவசாய அமைச்சர் கிட்டே போ... இல்லேனா சுரங்கத் தலைமை அதிகாரி அலுவலகத்துக்குப் போ.. இல்லேனா இப்படிப்பட்ட ஏதாவது ஓர் அரசு அலுவலகத்துக்குப் போ..! போய், ருடேஸியா வரைக்கும் என் கூட வர, ஒரு பெண் காரியதரிசியை உடனடியா அனுப்பச் சொல்லு. அவளுக்குத் தளதளனு மிதக்கும் விழிகளிருக்கணும். அடிக்கடி ஆதரவா கைகளைப் பிடிப்பதில் ஆட்சேபணை இருக்கக் கூடாது.''

''சரி, சரி ஆஸ்டஸ். தட்டச்சு சுருக்கெழுத்து எல்லாம் தெரிந்த ஒரு திறமையான பொண்ணைக் கேட்கிறேன்.''

''பகெட், ஒரு பொறாமைப் பய'' - காரியதரிசி கிளம்பிப் போன பிறகு குறிப்பிட்டார் சர் ஆஸ்டஸ். ''என்னை வெறுப்பேற்றி சாகடிக்கணும்னே மரக்கட்டை போல முகம் கொண்ட ஒரு காரியதரிசியைப் பிடிச்சுக்கிட்டு, வருவான், பாருங்க. ஓஹ், அவளுக்குக் கொக்கு போல அழகு கால்கள் இருக்கணும் இதை சொல்ல நான் மறந்துட்டேன்.''

இப்போது ஸூஸேனியின் கைகளை கிளர்ச்சி மிகுந்து பற்றிய நான், அப்படியே அவரைத் தரதரவென்று இழுத்துக் கொண்டு அவருடைய அறைக்கு விரைந்தேன். ''கவனியுங்க, ஸூஸேனி'' என ஆரம்பித்தேன்: ''நாம அடுத்தக்கட்ட திட்டங்களைப் போடணும் அதுவும் ரொம்ப விரைவா. பகெட் இங்கேயே தங்கிடப் போறாராம், கேட்டீங்க இல்லே?''

''ஆமாம். அப்படினா, இந்தப் புது திருப்பம், என்னை ருடேஸியா வரைக்கும் போக அனுமதிக்காதுனு நினைக்கிறேன். ப்ச். வெறுப்பாகுதுப்பா. எனக்கு ருடேஸியா போயாகணும். ச்சே... பண்ணின பாவம்.''

''தொய்ந்துப் போகாதீங்க மேடம்'' - சொன்னேன் நான். ''நீங்க போகத்தான் போறீங்க, பாருங்க. யாருக்கும் கொஞ்சமும் சந்தேகம் வந்துடாதபடி, கடைசி நிமிஷத்துல நீங்க எப்படி பிராயணத்தைத் தவிர்ப்பதுனு நான் யோசிச்சிக்கிட்டிருக்கேன். மேலும், பிரயாணத்தைத் தொடங்கும் அந்த நொடியில கூட, 'சரி.. கூட வந்துட்டுப் போ'னு, பகெட்டை, சர் ஆஸ்டஸ் அழைச்சுக்கலாம். இதையும் நாம் நினைவில் வெச்சுக்கணும். அப்போ எப்படி மறுபடியும் நீங்க பிரயாணத்துல சேர்ந்துக்க முடியும்? ஆகவே, பொறுமை, பொறுமை! அவசரம் கூடாது.''

''நீ சொல்றா மாதிரி நடந்ததுனா, அது, எனக்கு ரொம்பவும் அவமானமா போயிடும்'' - சின்னதாய் குமுறுயபடி சொன்னார் அவர். ''இதிலிருந்து தப்பிக்க - அந்தப் பகெட்பய மேல... வ்வே!.. வெறித் தனமா ஒரு புது ஈர்ப்பு ஏற்பட்டு விட்ட மாதிரி நான் காட்டிக்கணும்.''

''இதுல இன்னொரு விஷயம்.. மீதி ரெண்டு பேர் மீதிருந்தும் நாம நம் பார்வைகளை முழுசா விலக்கிடவும் கூடாது.''

'ஓ, ஆனே, நீ கலோனல் ரேஸையும் சர் ஆஸ்டஸையும் சந்தேகிக்க முடியாது.''

''நான் எல்லாரையும் சந்தேகிக்கிறேன்'' என்றேன் நான், இருளடைந்து.''உங்களுக்கு மர்ம நாவல்கள் படிக்கும் வழக்கமிருந்தா, ஸூஸேனி, உங்களுக்கே நல்லா தெரிஞ்சிருக்கும் - நாம எதிர்பாராத மனுஷன் தான் கடைசியில வில்லனாகவே இருப்பான். பற்பல கொலைக் குற்றவாளிகள், கலகலனு உலா வரும் கொழுத்த ஆளுங்களாத் தானிருப்பாங்க - *சர் ஆஸ்டஸ் போல!*''

''ஆனா கலோனல் ரேஸ் கொழுத்த குண்டு கிடையாது - சொல்லப் போனா, அது, கலகலப்பும் கிடையாது.''

''சில வில்லனுங்க அப்படி'' என்றும் நான் விளக்கினேன். ''ரெண்டு பேரையும் முதலிடத்துல வெச்சு நான் சந்தேகப்படறேன்னு சொல்ல வரலே, ஆனா, அதே சமயம், அந்தப் பொண்ணுக் கொலை செய்யப்பட்டிருப்பது, சர் ஆஸ்டஸின் வீட்டில் - - -''

''அம்மாடி, அம்மாடி, மறுபடியும் புனருத்தாரணம் வேண்டாம்மா... என்னால தாங்காது. ஆளை விட்டுடு. நான் அவனை விடாது கவனிக்கிறேன் போதுமா? அவன் கொழுகொழுனு குண்டானாலோ இல்லே மரணக்களை போய் கலகலனு மாறினாலோ, உனக்கு உடனடியா தந்தி அனுப்பி தெரிவிச்சுடறேன். 'மனுஷன் மளமளனு குண்டாறான்! உடனே கிளம்பி வரவும்!'

''உண்மையா சொல்றேன், ஸு ஸேனி'' என இந்த ஹாஸ்யத்துக்கு அலறியே விட்ட நான், ''இந்த முழு சமாச்சாரத்தையும் நீங்க ரொம்ப விளையாட்டா எடுத்துக்கிட்டு இருக்கீங்க'' என்றேன், புன்முறுவலோடு.

''அது எனக்கே கூட தெரியும்டீ'' கோபப்படாமல் சொன்னார் அவர். ''அப்படி தானே இருக்கு எல்லாமும். எல்லாம் நீ பண்ணியிருக்கிற தப்பு, ஆனே. 'நாம ஏதாவது சாகசம் செஞ்சுதான் பார்ப்போமே'னுநீ அடிக்கடி சொல்வதைக் கேட்டுக் கேட்டு நானும் அப்படியே ஊறிப் போயிட்டேன். நாம பண்றதெல்லாம் வாஸ்தவமான விஷயங்களா எனக்குத் தோணவே இல்லை. ஆமாம், டியர்... சர்வதேசக் குற்றவாளிகளைத் துரத்திக்கிட்டு நான் ஆப்பிரிக்காவில் சுற்றிக்கிட்டிருப்பது மட்டும் எம் புருஷன் க்ளாரன்ஸுக்குத் தெரிய வந்தா - ஓஹ், வலிப்பு வந்துடும் அவருக்கு.''

''இதைப் பற்றி ஏன் நீங்க அவருக்கு ஒரு கடிதம் போட்டுடக் கூடாது?''

ஸுஸேனியின் கலகல எனும் ஹாஸ்யத் தன்மை, தந்தி பற்றிப் பேச்சு போனாலே வீழ்ந்து விடுகின்றது. கிண்டலாய் நான் மேற்குறிப்பிட்டதை நேரடியாக எடுத்துக் கொண்டார் அவர்.

''பண்ணனும். அப்போ அந்தக் கடிதமோ தந்தியோ ரொம்ப நீளமானதா அமையும்!'' இந்நினைப்பால் அவரது விழிகள் பிரகாசம் கண்டன. ''ஆனா, அப்படி செய்யாம இருப்பதே உசிதமா படுது. எவ்வித ஆபத்துக்களும் அற்ற ஆச்சரிய விளையாட்டுகளில் மனைவி நுழைந்தால் அதில் மூக்கை நுழைத்து பயமுறுத்துவதே கணவன்களின் வேலை!''

''ஓகே'' என்று நிலைமையை முடித்துப் பேசிய நான், ''நீங்க சார் ஆஸ்டஸ் மற்றும் கலோனல் ரேஸ் ஆகியோர் மீது கண்களைப் பதிப்பதைத் தொடருவீங்க - - -''

''சர் ஆஸ்டஸை விடு. ஆனா எப்படி கலோனல் ரேஸைச் சந்தேகக் கண் கொண்டு பார்ப்பது? என்னால முடியாதுனே நினைக்கிறேன். ஏன்? ஏன்னா, அவர் ரகசியத் துறை எதிலோ பணியாற்றுபவர். நான் அவரைக் காதும் காதும் வெச்ச மாதிரி கண்காணிப்பதை அவர் தெரிஞ்சுக்கிட்டா...?! ஏய் ஆனே... ஒண்ணு சொல்லட்டுமா? இப்போதிருக்கும் நிலைமையில், நாம பண்ணக் கூடிய ஒரே ஒரு புத்திசாலித்தனமான செயல்- அவரை முழுசா நம்பி சரணடைந்து அத்தனை உண்மைகளையும் அவரிடம் சொல்லி விடுவதுதான்!''

விளையாட்டுத்தனமில்லாமல், முக்கியப்படுத்தி அவர் சொன்ன இந்த ஆலோசனையை நான் விசையோடு மறுத்தேன். இது ஏற்படுத்தவல்ல பிரளய திருப்பங்களை என்னால் காண முடிந்தது. 'அவர் சொன்னார் இவர் சொன்னார்' போன்ற பின் புத்தி நிறைந்த பெண்களின் முடிவுகளால், கையிலிருக்கும் சமாச்சாரம் அடியோடு முறிந்து தோற்றதைப் பல சந்தர்ப்பங்களில் கேள்விப்பட்டிருக்கிறேன். ஏனென்றால், அந்த ஒவ்வொரு சமயமும், 'அவர்' அல்லது 'இவர்' ஒரு படு முட்டாளானவராய் இருந்திருப்பார்! ஸூஸேனி திருமணமானவர்- ஏதாவது ஒரு தோளில் சாய்ந்துக் கொண்டு முன்னேற விழையும் நடுத்தரப் பெண்மை!

ஆயினும், எங்களிருவரது முன்னேற்றங்கள் குறித்து கலோனல் ரேஸிடம் ஒரு வார்த்தை உதிர்க்க மாட்டேன் என சத்தியம் செய்தார் அவர். நாங்கள் மேற்கொண்டு திட்டமிடலில் இறங்கினோம்.

''நான் இங்கேயே தங்கியிருந்து பகெட்டைப் பின்தொடர வேண்டும் என்பது க்ளியரா புரியுது. அதுக்கான ஒரே வழி இதுதான். நான் இன்னிக்கு சாயங்காலம் டர்பனுக்குக் கிளம்பிப் போயிட்டா மாதிரி ஒரு காட்சியை உருவாக்கிடணும். கையில லக்கேஜைத் தூக்கிக்கிட்டு, துணிமணி எடுத்துக்கிட்டு, இப்படி எல்லா பந்தாவும் காட்டிக்கணும்! ஆனா, அத்தனையையும் எடுத்துக்கிட்டு, நான், டவுனிலேயே ஒரு சின்ன ஓட்டலா பார்த்து அங்கே போய் தங்கிக்கணும். நான் அவன் வழியிலிருந்து விலகிட்டேன்னு நினைச்சுப்பான் அப்போ, என் தோற்றத்தைச் சின்னதா மாற்றிக்கிட்டு- - - ஒரு வெள்ளை டோப்பா... உடல் தோற்றத்தை மாற்றும் கனமான கவுன்... பெரிய

தொப்பி - - - அவன் நிஜத்துல யார் என்பதைப் பரிபூரணமா கணிக்கும் வாய்ப்பு எனக்கு அப்போ தோதா அமைந்து விடும்.''

மனப்பூர்வமாய் இத்திட்டத்தை அங்கீகரித்தார் ஸுஸேனி. ஜம்பமாய் வேலையில் இறங்கினோம். இன்னொரு முறை ரயில் கிளம்பும் நேரத்தை விசாரித்து சரி பார்த்துக் கொண்டோம். என்னுடைய மூட்டை முடிச்சுகளைக் கட்டினோம்.

ரெஸ்டாரண்ட்டில் இருவரும் ஒன்றாக சாப்பிட்டு முடித்தோம். கலோனல் ரேஸைக் கண்ணில் படவில்லை. ஆனால் சர் ஆஸ்டஸும் பகெட்டும் ஜன்னலோர இருக்கைகளை ஆக்கிரமித்திருந்தனர். பாதி சாப்பாட்டில் எழுந்து பகெட் அகன்று விட்டது, அவரிடம் குட்பை சொல்லிக் கொண்டு கிளம்ப திட்டமிட்டிருந்த என்னை வெறுப்புக் குள்ளாக்கியது.

''குட் பை, சர் ஆஸ்டஸ்'' என்றேன். ''இன்று ராத்திரி நான் டர்பனுக்குக் கிளம்பறேன்.''

அவர் நீண்டப் பெருமூச்சு விட்டார். ''கேள்விப்பட்டேன். இப்போ நானும் உன்னோட சேர்ந்து வரேன்னு முடிவெடுத்தா... உனக்கு ஆட்சேபணையில்லையே... ம்?''

''அது என் பாக்கியம்.''

''நல்ல குணம். கூடிய சீக்கிரம் நீ உன் மனசை மாத்திக்கிட்டு ருடேஸியா வந்து சிங்கங்களைப் பார்க்கணும்.''

''நிச்சயமா.''

''அவன் படு ஆணழகனா இருக்கணும்''- வருத்தம் தோய்ந்து குறிப்பிட்டார் சர் ஆஸ்டஸ்! ''என் முதிர்ச்சியை நிழலாய் ஓரங்கட்ட வைத்துவிட்டு, விறைத்துத் துடிக்கும் இளமைப் பூரிப்புக் கொண்ட ஒரு டர்பன் பயல், ஆங்?! சரி... பகெட் இன்னும் ஓரிரு நிமிடங்களில் கார்ல கிளம்பறான். அவன் உன்னை ஸ்டேஷன் கொண்டு போய் விடட்டும்.''

''ஓ, நோ தேங்க்ஸ்'' என்றேன் நான் அவசர அவசரமாய். ''நானும் மிஸஸ் ப்ளேரும் எங்களுக்காக ஒரு டாக்ஸியைச் சொல்லியாச்சு.''

பகெட்டுடன் போவதென்பது நான் கடைசி அவசரகட்ட முடிவாய் கூட எடுக்க விரும்பாத ஒன்று! சர் ஆஸ்டஸ் என்னைக் கவனம் வைத்துப் பார்த்தார். ''உனக்குப் பகெட் மேலே நம்பிக்கையே இருக்கிறதில்லே. இதுக்கு உன்னையும் குற்றம் சொல்ல முடியாது. அவனுடைய இடையூறுகள், படபடப்புகள், இதெல்லாம், இன்று

வரை அனுபவிச்சுள்ள எனக்கு, ஒருத்தரை, எந்த அளவுக்கு அவனால வெறுப்பேற்றிக் குலைக்க முடியும்னு.. நல்லாவே தெரியும்!''

''இன்று வரைனா? இன்னிக்கு என்ன பண்ணினார், அவர்?'' - சிறு ஆர்வம் பொங்கக் கேட்டேன் நான்.

''எனக்கு ஒரு செகரட்டரியைப் பிடிச்சுக்கிட்டு வந்திருக்கான். அப்படி ஒரு பொம்பிளையை வாழ்க்கையில நீ பார்த்திருக்கவே மாட்டே! விடிகாலை பொறந்தா அவளுக்கு வயசு நாற்பது! கிழவி போல முகம் முழுக்க கண்ணாடி மாட்டிக்கிட்டிருக்கா வெள்ளெழுத்து! எந்த வேலையைப் பண்ணலாம்னு அலையறா, பகெட் மாதிரியே - இதுதான் எனக்குப் பிடிக்கவே பிடிக்காத ஒண்ணு. கூடவே - நான் மிக வெறுக்கும்... மரக்கட்டை முகம்.''

''உங்கக் கையைப் பிடிச்சுக்குவா இல்லே?''

''அப்படியேதும் நடந்துடக் கூடாதுடா, ஆண்டவா!'' - ஆச்சரியமும் பதற்றமும் ஒருசேர குறிப்பிட்டார். ''அது தான் என் அழிவிற்கான இறுதிக் காரணமாய் அமையும்! ஓ கே... குட் பை, தவழும் விழியாளே! நான் ஒரு சிங்கத்தை வேட்டையாடும் வாய்ப்பு கிடைச்சா, அதன் நக கிள்ளல் கூட உனக்குத் தர மாட்டேன் - அந்த அளவுக்கு என்னை நீ ஏமாத்தி வீழ்த்திட்டுக் கிளம்பறே!''

என் கையைப் பிழியும் அளவுக்கு அன்பாய் குலுக்கினார்... பிரிந்தோம். ஸுஸேனி எனக்காக வரவேற்புப் பகுதியில் காத்திருந் தார். எனக்கு விடை கொடுக்க என்னுடன் அவர் வருவதாய் திட்டம்!

''உடனடியா கிளம்பி விடுவதே நல்லது'' என்று அவசரமானேன். டாக்ஸி ஒன்றைப் பிடித்துத் தர ஒரு பையனைத் தேடினேன். அப்போது என் பின்னாலிருந்து வந்த ஒரு குரல் என்னைத் துணுக்குற வைத்தது.

''எக்ஸ்க்யூஸ், மீ... மிஸ் பெட்டிங்ஃபெல்ட். நான் கார்ல தான் போறேன். உங்களையும் மிஸஸ் ப்ளேரையும் ரயிலடியில் இறக்கி விட்றேன்.''

''ஓ, தேங்க் யூ'' என படபடப்பானேன் நான். ''உங்களைத் தொந்தரவு பண்ண விரும்பலே, நான் - - -''

''ஒரு தொந்தரவும் கிடையாது. சொல்றதைக் கேளுங்க, இந்தாப்பா போர்ட்டர்... லக்கேஜைத் தூக்கு.''

நிராதரவானேன். இதற்கு நான் கறாரான எதிர்ப்பு தெரிவித் திருப்பேன். ஆனால், திருமதி ப்ளேரிடமிருந்து விளைந்த ஓர் அழுத்தமான கிள்ளலினால் நான் என் பொறுமையைக் கடைப்பிடிக்க

வேண்டியதாயிற்று. ''தேங்க் யூ, மிஸ்டர் பகெட்'' என்று இறுக்கமாய் சொல்லத்தான் அப்போது என்னால் இயன்றது.

நாங்கள் அவைரும் காருக்குள் ஏறிக் கொண்டோம். டவுனை நோக்கி கார் பறந்துக் கொண்டிருந்தபோது எதைப் பேசுவது என்று என் மூளையைப் போட்டுப் பிசைந்துக் கொண்டிருந்தேன். கடைசியாய் அமைதியைக் கிழித்து ஒரு வழியாய் பகெட்டே பேசினார். ''சர் ஆஸ்டஸுக்கு திறமையுள்ள ஒரு செகரட்டரியைப் பிடிச்சுக் கொடுத்திருக்கேன்'' என குறிப்பிட்டார். ''பெயர்: மிஸ் பெட்டி-க்ரூ.''

''அதுல தான் திருப்தியில்லைனு இப்போ சர் ஆஸ்டஸ் சொல்லிக்கிட்டிருந்தார்.''

என்னைக் கடுமையாய்ப் பார்த்தார் பகெட். ''அவளுக்கு சுருக்கெழுத்து மிகத் திறமையா வரும்.''

ஸ்டேஷன் வாசலில் இப்படி ஒரு இழுபறி உரையாடல். இங்கே நிச்சயமாய் பகெட் எங்களை விட்டு விட்டுப் போய் விடுவார். கைகுலுக்கி விடை கொடுக்க விரைவாய் நான் கைகொடுத்தேன் ஆனால், ம்ம்... அவர் தரவில்லை.

''உள்ளே வரைக்கும் வந்து நீங்க கிளம்பறதைப் பார்க்கிறேன். மணி எட்டுதான். எட்டே காலுக்குத்தான் ரயில் புறப்படும்.''

நிறுத்தாமல், உடனடியாய், மூட்டை சுமக்கும் சிவப்பு உடை பணியாளர்களுக்கு விறுவிறுவென கட்டளைகளைப் பிறப்பித்தார். மீண்டும் நிராதரவாய் நின்றேன். மனுஷன் சந்தேகப்படுகிறான். நான் ரயிலேறிக் கிளம்புகிறேன் என்பதைத் தீர்மானம் செய்துக் கொள்வதில் பிடிவாதமாய் இருக்கிறான். இதற்கு நான் என்ன செய்ய முடியும்? ஒன்றும் கிடையாது. கால் மணி நேரம் கழித்து, புகைக் கக்கிக் கிளம்பும் ரயிலோடு ரயிலாய், நட்டு வைத்த மரம் போல ப்ளாட்பாரத்தில் நின்று பிரியா விடையாய் கையசைக்கும் பகெட்டுக்குக் கையாட்டிக் கொண்டே நானும் கிளம்பிப் போவதை நினைத்துப் பார்த்தேன். மிக சாமர்த்தியமாய் காய்களை நகர்த்தி விட்டார். என் மீதான அவரது நம்பிக்கைகளும் கூட இப்போது மாறியிருக்கின்றன. என்னைப் பற்றி, வெளியே காட்டிக் கொள்ளாமல் உள்ளுக்குள்ளேயே படு சாமர்த்திய மாய் மறைத்து வைக்கப்பட்டிருக்கும் இருப்புக் கொள்ளாமை, அவரிடம் இருந்தது - இது, என்னை கிலி கொள்ளச் செய்தது. கழுவும் மீனில் நழுவும் கபடு நிறைந்த மனுஷன்! முதலில் என்னையே கொன்று போடத் துணிந்தார். ஆனால் இப்போதோ எனக்குப் பணிவிடை செய்ய முன்வந்துள்ளார்!

கட்டியிழுக்கப்பட்டு பின்னாலேயே செல்லும் கடா போல அவரது வழிகாட்டுதல்களுக்கு பயந்து நான் போய்க் கொண்டிருந்தேன்! படுக்கை டிக்கெட்டுகள் இரண்டு வாங்கியிருந்தேன். ஒன்று நான் படுக்க. இன்னொன்று என் மூட்டை முடிச்சுகளை அடுக்க. அதில் அனைத்தையும் ஒன்றன் மீது ஒன்றாக அடுக்கினார் பகெட். மணி எட்டு பனிரெண்டு. தவறாது, இன்னும் மூன்று நிமிடங்களில் ரயில் புறப்படும்.

ஸூஸேனியுடன் தான் கிளம்புவது என்று முடிவாய் நின்றார் பகெட்.

அப்போது திடீரென்று ''படு உஷ்ணமான பிரயாணமா இது அமையப் போகுது, ஆனே'' என்றார் ஸூஸேனி. ''அதுவும், கரு பகுதியை நாளைக்கு நீ கடக்கும்போது... ஓஹ்... அடுப்புக்குள்ளே இருக்கிற மாதிரி ஆகி விடும். உன்கிட்டே தலைவலி தைலமும் மாத்திரையும், இருக்கு இல்லே? பத்திரம்.''

என் தப்பிப்புக்குத் தரப்பட்ட இந்த நூல் நுனி, படு வெளிப்படையாய் விளங்கியது. பிடித்துக் கொண்டேன்! ''ஓ, டியர்'' என்று ஸூஸேனி சொன்னதுக்கு மறுப்பாய் கதறினேன் நான். ''தலைவலி தைலமெல்லாம் கொண்டு வரலியே! மாத்திரையும் கைவசமில்லை! அப்படியா, கொளுத்தும்?''

''உலக ஞானமே கிடையாதாடீ, உனக்கு?'' என்றவருடைய கட்டளையிட்டே பழகிய அணுகுமுறை இப்போது கைகொடுத்தது. ''மிஸ்டர் பகெட். சீக்கிரம். ஓரிரு நிமிஷம் தானிருக்கு. ஸ்டேஷன் வாசலிலேயே மருந்துக் கடையிருக்கு. இவ கையில் தலைவலி நிவாரணி தந்து தான் அனுப்பணும்.''

அவர் தயங்கினார். ஆனால், ஸூஸேனியின், கட்டுப்படுத்தி விடும்படி பேசும் அணுகுமுறையை, அவரால் மறுக்க முடியாமல் போனது. தேனொழுகக் கட்டளையிட்டு ஜெயிக்கவே பிறந்தவர். அவர் ஓடினார். அவர் மறையும் வரை கண்களால் பின்தொடர்ந்தார் ஸூஸேனி.

''ம், சீக்கிரம், ஆனே. அந்தப் பக்கமாக இறங்கிடு. அவன் நாம செய்வதை மறைந்திருந்து கவனிச்சுடக் கூடாது! உன் லக்கேஜைப் பற்றிக் கவலைப்படாதே. அடுத்த ஸ்டேஷனுக்குத் தகவல் தந்து மீட்டுக்கலாம். ஓஹ்... இப்போ ஒண்ணுதான் பாக்கி. நேரத்துக்கு ரயில் கிளம்பிடணும்.''

''அந்தப் பக்கம் வழியிருக்கா?''

''இந்த ஸ்டேஷன்ல ரெண்டு பக்கமும் ப்ளாட்பாரம் உண்டுடீ..''

''ஸூஸேனீய்!''

''என்னடி?''

''தேங்க், யூ.''

''எறங்குடீ!''

அந்தப் பக்கத்திலிருந்து பிளாட்பாரத்தில் இறங்க அமைக்கப் பட்டிருந்த கதவினைத் திறந்து இறங்கி விட்டேன் நான். யாரும் என்னைக் கவனித்து விடவில்லை. நான் எங்கே விட்டு வைத்தேனோ அதே இடத்தில் நின்றுக் கொண்டிருந்த ஸூஸேனி, நேராய் ரயிலின் ஜன்னலுக்குள் பார்த்தபடி, ஏதோ நான் அங்கே உட்கார்ந்திருப்பதைப் போல கவனித்துக் கொண்டிருந்தார்! ஒரு விஸில் அடிக்கப்பட்டது. ரயில் வெளியேறத் துவங்கியது. அப்போது காலடிகள் பறபறவென ப்ளாட்பாரத்தின் ஒட்டு வரை வந்து நின்ற ஓசையை நான் கேட்டேன். அங்கிருந்த ஒரு சஞ்சிகைக் கடைக்கு மறைவில் என்னை இழுத்து மறைத்துக் கொண்டேன் நான்.

முழுக்க நழுவியிருந்த ரயிலுக்குக் காட்டிக் கொண்டிருந்த கைக்குட்டை 'டாடா'வை நிறுத்திக் கொண்டு திரும்பினார் ஸூஸேனி!

''நேரமாக்கிட்டீங்க, பகெட்'' என்றார் அமுக்கப்பட்ட சந்தோஷத் தோடு! ''அவ, போயிட்டா. இதை முதல்லேயே யோசிக்காம போயிட்டோமே! இதுதான் தலைவலி தைலமா? குடுங்க. எனக்கும் தலைவலி வரும்!''

இருவருமாய் ரயிலடியை விட்டு வெளியேறினர். பகெட் முழுக்கவும் கோபத்தில் தவித்தார். மருந்துக் கடை வரை ஓடிப் போய் திரும்பியிருக்கிறார், பாவம்.

''உங்களுக்கு ஒரு டாக்ஸியைப் பிடிச்சுக் கொடுக்கட்டுமா, மிஸஸ் ப்ளேர்?''

ஸூஸேனி அவருடைய பாத்திரத்தை முழுவதுமாகப் பூர்த்தி செய்யத் தவறவில்லை! ''யெஸ், ப்ளீஸ்! உங்களுக்குத் திருப்பி நான் லிஃப்ட் தர முடியாதா?! டியர் பகெட்... நாளைக்கு நம்ம கூட ஆனேவும் வரக் கூடாதானு ஏங்கறேன். இப்படித் தன்னந்தனி ஆளா ஒரு வயசுப் பொண்ணுக் கிளம்பி டர்பனுக்கு ஓடுறதுல எனக்குக் கொஞ்சமும் இஷ்டம் கிடையாது. சொன்னாக் கேட்டா தானே... முடிவாயிருக்கா!

ஏதோ வயசுக் கோளாறு அங்கே அவளை இழுக்குதுனு நினைக்கிறேன் - - -''

அவர்கள் உரையாடலை காது கொடுத்து நான் கேட்கும் தூரத்திலிருந்து அவர்கள் விலகினார்கள். புத்திசாலி ஸ ூஸேனி. என்னைக் காப்பாற்றி விட்டார் அவர்.

ஓரிரு நிமிடங்களைக் கடக்க விட்ட நான், பிறகு ஸ்டேஷனை விட்டு வெளியேறினேன். அப்படி நகரும்போது, அவனுடைய முகத்துக்குக் கொஞ்சமும் பொருந்தாத மாதிரி தனியாய் பெருசாய் தொங்கிய மூக்குடைய ஒரு அசிங்கமான ஆளின் மீது... நச்சென்று மோதி விட்டேன்.

# அத்தியாயம் - 21

என் திட்டங்களை நான் கொண்டு செலுத்த, மேற்கொண்டு கஷ்டங்கள் ஏதும் இருக்கவில்லை. ஒரு சிறு ஓட்டல் கிடைத்தது. அதில் ஓர் அறை எடுத்துக் கொண்டேன். லக்கேஜ் ஏதும் என் கையில் அப்போது இல்லாததால், முன் பணம் மட்டும் தந்தேன். நிம்மதியாய் படுக்கைக்குப் போனேன்.

மறுநாள் காலை சற்று சீக்கிரமாகவே எழுந்துக் கொண்ட நான், சில துணிமணிகளை வாங்கிக் கொள்வதற்காக டவுன் வரை போனேன். பதினொரு மணிக்கான ருடேஸியா ரயில், அனைவரையும் தூக்கிக் கொண்டு ரயிலடியிலிருந்துக் கிளம்பும் வரை எதுவும் செய்ய ஆரம்பிக்க வேண்டாம் என்பது எனது எண்ணம். அவர்களிடமிருந்து முழுக்கவும் கழட்டிக் கொள்ளும் வரை, பகெட், எந்த விதமான சட்ட விரோத நடவடிக்கைகளிலும் நுழைய வாய்ப்பில்லை. இதனால், ஒரு ரயில் பிடித்து டவுன் விட்டு விலகி, இயற்கை கொஞ்சும் கிராமியச் சூழலில் உலவி வர முடிவெடுத்தேன். எவ்வித படபடப்புகளும் இன்றி அமைதியாயிருந்தேன். ஒரு நீண்ட கடல் பிரயாணம் மற்றும் 'மூஸின்-பெர்க்' வீட்டு உடல் கட்டுகள் ஆகியவற்றின் தாக்கத்தால் குலைந்துப் போயிருந்த கை கால்களை நன்கு வீசி வீசி நடந்து புத்துயிர் ஊட்டினேன்.

ஆனால் சின்ன சந்தோஷத்தைக் கூடக் கொண்டாட முடியாமல் இடையூறு வந்து விடுகின்றது... என் 'ஷூ லேஸ்' கழன்றுக் கொண்டதைச் சொல்கின்றேன். அதை இழுத்துக் கட்டிக் கொள்வதற்காக நான் சற்று நிற்க வேண்டியதாயிற்று. அது, அந்தத் தெருவின் திருப்பம். ஒத்துழைக்க மறுத்த ஷூவோடு குனிந்து நான் போராடிக் கொண்டிருக்கும்போது அந்தத் திருப்பத்தில் விரைவாய் வந்து திரும்பிய ஓர் ஆசாமி ஏறத்தாழ என்னுள் விழுந்து விடுவது போல என்னைக் கடந்து போனான். அவன் முகத்தை மறைத்திருந்த தொப்பியைத் தூக்கி சிறு மன்னிப்பை முணுமுணுத்து விட்டுப் போனான் அவன். அந்தக் கணத்தில் அவனுடைய முகம் எனக்கு பிரசித்தமான ஒன்றாய்பட்டது. ஆனால் இதுபற்றி நான் மேலும் அதிக முக்கியத்துவம் தரவில்லை. கைக்கடியாரத்தைப் பார்த்தேன்நான்.

மணி எகிறிக் கொண்டிருந்தது. என் பாதையைக் கேப் டவுன் நோக்கித் திருப்பினேன்.

ஒரு ட்ராம் கிளம்புவதற்காக உறுமிக் கொண்டு தயாராயிருந்தது. அதைப் பிடிக்க நான் விரைவாய் ஓட வேண்டியத் தேவை எழுந்தது. ஓடினேன். கூடவே எனக்குப் பின்னால் ஓடி வரும் இன்னொரு ஜோடிக் காலடி ஓசைகளும் கேட்டன. தாவி உள்ளே ஏறி விட்டேன். அப்படியே பின்னால் வந்தக் காலடிகளும் செய்தன. இப்படிச் செய்தவனை உடனடியாய் நான் அடையாளங் கண்டு கொண்டு விட்டேன். இவனே தான், 'ஷூலேஸ்' கழன்று நான் அதனோடு திண்டாடிக் கொண்டிருந்த போது என்னைக் கடந்து போனவன். ஏன் இவன் எனக்குப் பிரசித்தமான்வனாய் அப்போது தோன்றினான் என்ற காரணமும் நொடிப் பொழுதில் எனக்குப் புரிந்து போனது. நேற்றிரவு ரயிலடியை விட்டு நான் கிளம்பும் போது முட்டிக் கொண்டு நின்ற பெரிய மூக்குக்காரனிவன்!

இந்த ஒற்றுமைகள் என்னை அலற அடித்தன. திட்டமிட்டே இந்த மனிதன் என்னைப் பின் தொடர்ந்துக் கொண்டிருக்க சாத்தியமுண்டா? இதைத் தீர்மானிக்க சிறு பரீட்சை செய்து விடுவதென்று முடிவெடுத்தேன். மணி அடித்தது. அடுத்த நிறுத்தத்திலேயே நான் இறங்கி விட்டேன். அவன் இறங்கிக் கொள்ளவில்லை. அருகிலிருந்த கடையொன்றின் மறைவில் பதுங்கிக் கொண்ட நான் காத்திருந்தேன். அடுத்த நிறுத்தத்திலேயே இறங்கி விட்டிருந்த அவன் என் திசை நோக்கி விரைவாய் வந்துக் கொண்டிருந்தான்.

படு சுத்தமாய் விளங்கியது! நான் பின் தொடரப்படுகின்றேன். ஒரு பிரச்சனை முடிவதற்குள் இன்னொன்று: பகெட்டை வென்று ஒரு முழு நாள் ஆகவில்லை. இப்போது வேறு ஒரு தினுசில் புதுப் பிரச்சினை முனைத்தெழுந்துள்ளது. அடுத்து வந்த ட்ரேமில் நான் ஏறிக் கொள்ள, எதிர்பார்த்தது போலவே, என் நிழலாய் பின் தொடர்பவனும், அதில் ஏறினான். ஆழமாய் சிந்திக்கத் தலைப்பட்டேன்.

நான் எதிர்பார்த்ததை விட அளவில் பெரியதான ஒரு மாபெரும் ஆபத்துக்குள் நான் சிக்கி விட்டிருப்பது கைக்கு மெய்யாய் விளங்கியது. மார்லோ வீட்டில் நடந்துள்ள கொலை, தனியொரு நபரின் வெறுப்பு காரணமாக, தனித்து செய்யப்பட்டுள்ள ஒரு குற்றம் கிடையாது. நான், ஒரு கும்பலையே எதிர்த்துக் கொண்டு நிற்கின்றேன். 'முஸின் - பெர்க்' வீட்டில் கேட்டவற்றிலிருந்தும், கலோனல் ரேஸ் திருமதி ப்ளேருக்கு

வெளியிட்ட தகவல்களிலிருந்தும், இக்கும்பலின் பலதரப்பட்ட நடவடிக்கைகளை நான் கொஞ்சங் கொஞ்சமாக புரிந்துக் கொள்ள ஆரம்பித்தேன். 'கலோனல்' என்று அவனுடைய கூட்டாளிகளால் அறியப்பட்டுள்ள ஒரு தனி மனிதனின் கையசைவில், ஒழுங்கு படுத்தப்பட்டு முறையாய் இயங்கிக் கொண்டிருக்கும் - குற்ற கும்பல்! கப்பல் பிரயாணத்தின் போது அரசலும் புரசலுமாக நான் கேட்ட Rand என்றழைக்கப்படும் தென் ஆப்பிரிக்க நிலப்பிரச்சினை அக்கப்போர் குறித்தும், அது உருவாக்கும் பொது வேலை நிறுத்தங்கள் குறித்தும், மேலும், இவற்றை ஆற விடாமல் ஊதிக் கொண்டேயிருக்கும் சில ரகசிய அமைப்புகள் குறித்தும், இப்போது நினைவுக்கு வந்தது. இதுதான் 'கலோனல்' திட்டமிட்டு அளிப்பது..! அவருடைய வழித் தோன்றல்கள் அத்திட்டங்களைச் செயலாக்கிக் காட்டுகின்றனர். இவை எவற்றிலும் அவர் நேரடியாய் பங்கு கொள்வது கிடையாது - இதை நான் அடிக்கடி கேள்விப்பட்டிருக்கிறேன் - திட்டமிட்டு ஏற்பாடு செய்து வழி நடத்துவதோடு சரி! இப்படியே ஆயினும், அந்தக் 'கலோனல்', ஸ்தலத்திலேயே இருந்தாலும் இருக்கலாம் - யாரும் நினைத்துக் கூட பார்க்காத ஓரிடத்தில் நின்றுக் கொண்டு, கட்டளைகளைப் பிறப்பித்தபடி, இயக்கத்தை வழி நடத்தியபடி!

அப்படியானால், இதுதான், கில்மார்டன் மாளிகையில் கலோனல் ரேஸின் இருப்புக்கான அர்த்தம். படு பயங்கரமான குற்றவாளிக்குப் பின்னாலேயே இருளில் ஒதுங்கியபடி அதில் பிரயாணித்திருக்கிறார், கலோனல் ரேஸ். இந்த ஊகத்துடன் அனைத்துமே பொருந்தி நின்றன.

எனக்கு நானே ஒப்புதலாய் தலையசைத்துக் கொண்டேன். விஷயங்கள் ஸ்படிக சுத்தமாக எனக்கு விளங்கத் துவங்கின. இதில் என்னுடைய பாத்திரம் என்ன? நான் இந்த அமளியில் எந்தப் பக்கத்தில் வந்தேன்? வெறும் வைரங்களை மட்டுமா அவர்கள் துரத்திக் கொண்டு அலைகின்றார்கள்? மறுப்பாய் தலையசைத்துக் கொண்டேன். வைரங்கள் விலை மதிப்பற்றவைதான்... இல்லை என்று சொல்ல வில்லை. ஆனால் வேறு வழியேயின்றி என்னை அவர்களது பாதையிலிருந்து களைந்தெறியத் துடிக்கும் நடவடிக்கைகளுக்கு, இது விளக்கம் தரவில்லை! கிடையாது, நான் வைரங்களை விட முக்கியமான ஒன்றாய் நின்றுக் கொண்டிருக்கிறேன்! என்ன அது? ஏதோ ஒரு வகையில், நானே கூட இதுவரை அறிந்திராத ஒரு வகையில், அவர்களுக்கு நான் ஓர் ஆபத்து! அக்கும்பலுக்கு நான் ஒரு சிம்ம

சொப்பனம்! நான் வைத்திருந்த ஏதோ ஒரு தகவல், அல்லது அப்படி எனக்குத் தெரிந்திருந்ததாய் அவர்கள் நினைத்திருக்கும் ஏதோ ஒரு தகவல், என்னை எப்படியாவது களைந்தெறிந்து விட வேண்டும் என அவர்களைத் துடிதுடிப்பாய் இயங்க வைத்துள்ளது. தகவல்: எப்படியோ வைரங்களையும் சேர்த்துப் பிணைத்துள்ள ஏதோ ஒரு தகவல்! ஒருவர் இருக்கிறார்... அவர் மனது வைத்தால், இருட்டிலிருக்கும் நானறியா இத்தனை மர்மங்களுக்கும், நிச்சயமாய் வெளிச்சம் போட்டுக் காட்டி விடலாம்! அது: 'ப்ரௌன் சூட்டில் வந்தவன்' ஹார்ரி ரேபர்ன். அவனுக்குக் கதையின் மீதி பாதி தெரியும். ஆனால் அவனும் இருட்டோடு இருட்டாய் கலந்து மர்மமாகி விட்டான். தப்பிக்க வழி தேடி எங்கோ பறந்து விட்ட பறவை அவன். நானும் அவனும் இனி என்றுமே பார்த்துக் கொள்ளும் வாய்ப்புகள் இல்லாமலே ஆகி விட்டன...

ஒரு சிறு நடுக்கத்துடன், அக்கணத்தின் நிஜங்களுக்குள் என்னை இழுத்துப் புகுத்திக் கொண்டேன். இப்போது போய் மனம் துவண்டு ஹார்ரி ரேபர்ன் பற்றி நினைத்துக் குலைவதில் அர்த்தம் கிடையாது. என் மீது இயற்கையான வெறுப்பினை அவன் ஆரம்பம் முதலே கட்டுக்கடாங்காது காட்டியிருக்கிறான். நான் மட்டும் அவனை நினைத்துக் கனவு கண்டு என்ன வாழ்ந்து விடப் போகின்றது...? எனவே, போகட்டும்.. நிதர்சனமாய் கையில் உள்ள சமாச்சாரம் இப்போது என்ன பண்ணுவது என்பதே!

கூர்மையாய் கவனித்து விஷயங்களைக் கண்டுபிடித்துள்ள என் திறமையை நானே மனதாரப் பாராட்டிக் கொள்ளும் அதே வேளையில், நானுே கூட கவனிக்கப்பட்டுள்ளேன் என்பதும் விளங்கியது. இதனால் பயந்தேன். முதல் தடவையாக, தன் நிலை இழக்க ஆரம்பித்தேன். ஒரு முறை ரேபர்ன் என்னைக் காப்பாற்றிருக்கிறான். ஒரு முறை என்னை நானே காப்பாற்றிக் கொண்டுள்ளேன். ஆனால், இப்போது, திடுமென்று, தப்பிப்பற்ற எதிர்ப்புகள் முன்னே குவித்து நிற்பதை உணர்ந்தேன். என்னைச் சுற்றி அனைத்து திசைகளிலும் என் எதிரிகள் நிற்கின்றனர். மேலும், அவர்கள் நெருங்குகின்றனர் நெருக்கு கின்றனர். இனியும் தன்னந்தனியாகவே நான் முன்னேறிக் கொண்டிருந்தால், நான் காணாமல் போய் விட வேண்டியது நிச்சயம்.

சிறு முயற்சியின் விளைவாக என்னை நானே ஊக்குவித்துக் கொள்ள முயன்றேன். அவர்களால் அப்படி என்ன செய்துவிட முடியும்?

நாகரீகம் மிகுந்த நகரத்தில், நூறடிக்கு ஒரு போலீஸ் நிற்கும் பாதுகாப்பான பகுதியில் இருக்கிறேன். இனி நான் விழிப்புடன் இருந்து விட்டால் ஆயிற்று. 'மூஸின்-பெர்க்'கில் பண்ணியது போல என்னை இனியொரு முறை அவர்களால் கண்ணி வைத்துப் பிடித்து விட முடியாது.

இந்த முடிவுக்கு நான் வந்த போது ட்ரேம் நிறுத்தத்தில் நின்றது. இறங்கிக் கொண்டேன். என்ன செய்வது என்று விளங்காத குழப்பத் தோடு தெருவின் இடப்புறத்தில் மெதுவாக நடக்க ஆரம்பித்தேன். என்னைப் பின்தொடர்பவன் பின்னால் வருகிறானா என்று பார்க்கும் சிரமத்தை நான் மேற்கொள்ளவில்லை. அவன் நிழலாய் பின்னால் இருக்க வேண்டும் என்று எனக்குத் தெரியும். ஒரு சிற்றுண்டிக்குள் நுழைந்துக் கொண்ட நான், நரம்பதிர்வை மட்டுப்படுத்த, ஓர் ஐஸ் சோடாவுக்கும் ரெண்டு கோப்பை காபிக்கும் ஆர்டர் தந்தேன். ஆண்கள் ஒரு 'பெக்' அடிப்பதன் மூலம் சுறுசுறுப்பை மீட்டுக் கொள்கிறார்கள். பெண்களுக்கு அதனை ஐஸ் சோடா செய்கின்றது. ஸ்ட்ராவின் இறுதி வரை 'கர்ர்ர்' ரென்று உறிஞ்சிக்குடித்தேன். உணவுக் குழாய் வழியே குடல் அடைந்து சில்லிட வைத்த ஐஸ் சோடா அதன் வேலையை அற்புதமாய் செய்தது. புத்துணர்வு அடைந்தேன். காலியான கோப்பையை ஓரடி நகரத்தி வைத்தேன்.

கவுண்டருக்கு அருகிலேயே இருந்த உணவு மேஜையில் ஓர் உயரமான ஸ்டூலில் உட்கார்ந்திருந்தேன் நான். கவனித்துக் கொண்டிருந்த என் கண்களில், என்னை நிழலாய் தொடர்பவன் உள்ளே வந்து கதவுக்குக் பக்கத்திலிருந்த ஒரு சின்ன டேபிளருகே வெகு அடக்கமாய் உட்கார்ந்துக் கொள்வது அகப்பட்டது. காபி கோப்பை களைப் பொறுமையாய் காலி செய்ய ஆரம்பித்தேன். படபடப்பின் போது கணக்கற்ற திரவங்களைக் குடிக்க முடியும் என்னால்.

அப்போது திடுமென்று, கதவருகில் வந்தமர்ந்தவன் எழுந்து வெளியேறினான். அது என்னை ஆச்சரியப்பட வைத்தது. ஒரு வேளை வெளியே போய் எனக்காகக் காத்திருக்க விரும்பினால்..? எனில், அதை ஏன் அவன் ஆரம்பத்திலிருந்தே செய்திருக்கக் கூடாது? என் ஸ்டூலிலிருந்து எழுந்துக் கொண்ட நான் கதவு வரை மெல்லமாய் நழுவினேன். கண்களில் பட்டதைக் கண்டதுமே நான் சட்டென மறைவில் பதுங்கிக் கொண்டேன். நிழல் மனிதன், பகெட்டுடன் பேசிக் கொண்டிருந்தான்.

எனக்குள் மிச்சம் மீதி ஏதாவது சந்தேகங்கள் விட்டு வைக்கப் பட்டிருந்ததால், அவை, இப்போது முழுக்கவும் தீர்த்து வைக்கப் பட்டன. சுருக்கமாய் சில வார்த்தைகளை அவர்கள் பரிமாறிக் கொண்டார்கள். பிறகு அந்த செகரட்டரி தெருவிறங்கி ஸ்டேஷன் நோக்கி நடக்க ஆரம்பித்தான். பகெட் ஏதோ கட்டளைகளைப் பிறப்பித்துள்ளது வெளிப்படையாக தெரிந்தது. ஆனால் அவை என்ன?

துடிதுடித்து என் நெஞ்சு, வாய் வரை எட்டிப் பார்த்து சென்றது! என்னைப் பின் தொடர்ந்து வந்துக் கொண்டிருந்தவன், தெரு கடந்து அந்தப் பக்கம் போய், ஒரு போலீஸ்காரனிடம் என்னவோ கிசுகிசுக்க ஆரம்பித்தான். சற்று பெரியதாகவே போனது, அவனது பேச்சு. அப்போது திரும்பித் திரும்பி சிற்றுண்டியகத்தைச் சுட்டிக் காட்டிப் போலீஸுக்கு அவன் எதையோ விளக்குவதைக் கண்கூடாகக் காண முடிந்தது. உடனே இருவருடைய திட்டமும் எனக்குப் பிடிபட்டது. ஏதோ ஒரு குற்றஞ்சுமத்தப்பட்டு நான் கைது செய்யப்பட வேண்டும். பிக்-பாக்கெட், இப்படி! இது போன்ற ஒரு சின்னக் குற்றத்தை என் மேல் சுமத்த, ஒரு வலையை செவ்வனே விரித்து அதில் என்னைச் சிக்க வைப்பது, இத்தனை பெரிய கூட்டத்துக்குக் கை வந்த கலை தானே. நான் அப்படிப்பட்டவள் கிடையாது என்று எத்தனை மறுத்து என்னப் பிரயோஜனம் விளைந்து விடப் போகின்றது? என்னால் மறுப்பு கூறி தப்பிக்கவே முடியாத வண்ணம் மிகச் சிறப்பாய் திட்டமிட்டி ருப்பார்கள். கொஞ்ச நாட்களுக்கு முன்னால், டீ-பீர் வைரங்களைத் திருடியது ரேபர்ன் தான் என்று அவன் மீது மாபெரும் குற்றச் சாட்டினைக் கொண்டு வந்தார்கள். அவன் அந்தக் கொள்ளையைச் செய்தவன் கிடையாது என்பதில் எனக்குப் பரிபூரணமாய் நம்பிக்கை இருந்தாலும், அவனால் மறுத்து நிரூபிக்க முடியாமல் தானே போனது! அப்படி ஒன்றினைக் 'கலோனல்' எனக்கு எதிராய் வடிவமைத்தி ருந்தாரென்றால் மறுக்க எனக்கு என்ன வாய்ப்பு அமைந்துவிடப் போகின்றது?

இயந்திரத்தனமாய் தான் கடியாரத்தில் மணியினைப் பார்த்த போது, சமாச்சாரத்தின் இன்னொரு முக்கிய அம்சம் எனக்குள் ஒளிர்ந்தது. பகெட் கைக்கடிகாரத்தைப் பார்ப்பதைக் கவனித்தேன். பதினொன்றை நெருங்கிக் கொண்டிருந்தது நேரம். பதினொரு மணிக்குத் தான் எனக்கு ஏதாவது அசம்பாவிதம் நேரிட்டாலும் அதிலிருந்து என்னைக் காத்து விடுவிக்கும் செல்வாக்குள்ள அத்தனை ஜாம்பவான்களும் ருடேஸியா

நோக்கிப் பயணிக்கின்றார்கள். ஓ.. இது ஒன்று தான் என்னைக் கவ்வியிருக்கவல்ல ஆபத்திலிருந்து இந்த நொடி வரை என்னைப் பாதுகாத்து வந்தது. நேற்றிரவு முதல் இப்போது பதினோரு மணி வரை நான் பாதுகாக்கப்பட்டுள்ளேன். ஆனால் இப்போது, வலை, என் மீது வசதியாய் வீழ்கின்றது.

அவசரமானேன். மளமளவென்று கைப்பையைத் திறந்து குடித்தவற்றுக்குப் பணம் செலுத்த இறங்கினேன் நான். பணத்தை எடுத்துக் கொண்டிருந்த போதே என் இதயம் அதன் துடிப்பை நிறுத்தத் துணிந்தது. கைப்பைக்கு உள்ளே, பணம் திணிந்து உப்பிக் கிடந்த, ஓர் ஆடவனின் பர்ஸ்! ட்ராமிலிருந்து நான் இறங்கும் போது நானறியாமல் கள்ளத்தனமாய் இது உள்ளே போடப்பட்டிருக்க வேண்டும்.

சிதைந்துப் போனேன் நான். சிற்றுண்டி அகத்தை விட்டு மிக வேகமாய் வெளியேறினேன். குள்ளமாய் மிகப் பெரிய மூக்குக் கொண்டிருந்த அவனும் போலீஸ்காரனும் தெருவைக் கடந்து இந்தப் பக்கம் வந்துக் கொண்டிருந்தனர். இருவரும் என்னைப் பார்த்தனர். குள்ள மனிதன் படபடப்பாய் என்னைப் போலீஸ்காரனுக்குக் காட்டி னான். காலுக்கு சக்தியத்தனையையும் திருப்பி விட்டு ஓட ஆரம்பித்தேன். எதற்கும் உதவாத ஒருத்தனாய் தான் நான் அந்தப் போலீஸ்காரனைக் கணித்திருந்தேன். அவனிருந்த சைஸுக்கு அவனால் ஓடவே முடியாது. எனவே, கீழிறங்கிப் போய்க் கொண்டிருந்த சாலையில் தலை தெறிக்க ஓடினேன் நான். அப்போதும், எங்கு போய் நிற்பது என்பது அறியாமலே பறந்துக் கொண்டிருந்தேன். மக்கள் என்னை முறைக்க ஆரம்பித்திருந்தனர். இப்படியே ஓடினால் அடுத்த சில நிமிடங்களில் நிச்சமாய் ஒருத்தன் கையைப் பிடித்து நிறுத்தியே விடுவான் என்பதுபுரிந்தது.

இச்சிந்தனையால் ஓர் ஐடியா என் மூளைக்குள் வெட்டியது. ''ஸ்டேஷன்?'' என்று ஒருத்தரைக் கேட்டேன், மூச்சு முட்ட...

''பக்கத்துல..வலப்பக்கம்...''

வேகத்தில் பறந்தேன். ட்ரெய்னைப் பிடிக்க ஓடுவது அனுமதிக்கப் பட்டதே! ரயில் நிலையத்துக்குள் திரும்பினேன். ஆனால் அப்படி செய்யும் போதே காலடிகள் என்னை மிக சமீபித்து விட்டிருப்பது கேட்டது. அந்த மூக்குப் புடைத்த குள்ளன் நன்கு ஓடக் கூடியவன் போல்...! நான் தேடி வந்த பிளாட்பாரத்துக்குள் நேரடியாக ஓடிப் போய் விடுவதற்கு முன் சற்று பின் தங்கிவிட வேண்டும் என்பதை நான்

கணித்தேன். கடியாரத்தைப் பார்த்தேன். பதினொன்று ஆக ஒரு நிமிடம். அதிர்ஷ்டமிருந்தால் பிடித்து விடுவேன்.

சாலை நோக்கியிருந்த ஸ்டேஷனின் பிரதான நுழைவாயில் வழியாக நான் உள்ளே நுழைந்திருந்தேன்... இப்போது, மறுபடியும், விடுபட்ட ஓர் அம்பாய், ஸ்டேஷனின் பக்கவாட்டு நுழைவின் வழியாக நான் வெளியேறியிருந்தேன். எனக்கு நேரெதிரே, தபால் அலுவலகத்தின் பக்கவாட்டு நுழைவாயில்... இதன் பிரதான நுழைவாயிலும் சாலை நோக்கி அமைந்திருக்கின்றது.

நான் எதிர்ப்பார்த்தது போலவே, மேற்கூறிய என் வழித்தடத்தைப் பின்பற்றுவதற்கு பதிலாக, ஸ்டேஷனுக்கு உள்ளே நுழையாமல் நேராக சாலையில் மேற்கொண்டு ஓடிக் கொண்டிருந்தான், 'என் நிழல்'. தபால் அலுவலகத்தின் பிரதான நுழைவாயில் வழியாக வெளி வந்த நான் இதை பார்த்தேன்.

நொடிப் பொழுதுக்குள் பழையபடி ஸ்டேஷனுக்குள் விரைவாய் நுழைந்திருந்த நான், அடைய வேண்டிய பிளாட்பாரத்துக்குள் பாய்ந்து ஓடினேன். சரியாக மணி பதினொன்று. என் ரயில், மெல்லமாய் ஊர்ந்து கிளம்பி விட்டிருந்தது. ஒரு போர்ட்டர் என் கையைப் பிடித்து நிறுத்தினான். ஆனாலும் அவனுடைய ஆண்மை இரும்புப் பிடியினை ஆவேசமாய் உலுக்கித் தள்ளிவிட்டு, ஓடும் ரயிலின் ஏதோ ஒரு பெட்டிக்குள் குதித்தேறினேன். இனி எனக்குப் பாதுகாப்பு தான். தனது வழிக்குள் விரைய ஆரம்பித்தது வண்டி.

ப்ளாட்பாரத்தின் நுனியில் நின்றுக் கொண்டிருந்த ஓர் அவசர மனிதனை விட்டு விட்டு ரயில் ஓடிக் கொண்டிருக்க நான் அவரை நோக்கி ஆர்வமாய் கையசைத்தேன். கத்தினேன். ''குட் -பை மிஸ்டர் பகெட்.''

படு தோல்வியில் வீழ்ந்துத் துடிக்கும் இப்படிப்பட்ட ஓர் ஆண் மகனை நான் இதற்கு முன் பார்த்தது கிடையாது. பேய் ஒன்றினை நிஜத்தில் பார்த்தவனைப் போலானார் அவர்.

ஓரிரு நிமிடங்களில் கண்டக்டருடன் விவாதம் வந்தது. ஏற்கெனவே நொந்துக் கிடந்த நான் கடுகடுப்பானேன். ''சர் ஆஸ்டஸ் பெட்லருடைய செகரட்டரி, நான்! தயவு செய்து என்னை அவரோட கேபினுக்குக் கூட்டிட்டுப் போங்க.''

ஸூஸேனியும் கலோனல் ரேஸூம் ஜன்னலோரமாய் வேடிக்கை பார்த்தபடி நின்றுக் கொண்டிருந்தனர். என்னைப் பார்த்ததில் விளைந்த

தாள முடியாத ஆச்சரியத்தால் அப்படி ஒரு கத்தலைக் கத்தி விட்டனர் இருவரும்.

''ஹல்லோ, மிஸ் ஆனே'' - முதலில் கத்தியவர் கலோனல் ரேஸ். ''எங்கேயிருந்து இங்கே குதிச்சீங்க? நீங்க டர்பன் போயாச்சு'ன்னுல்லே நினைச்சேன்? என்ன ஒரு மந்திரவாதிப் பொண்ணு நீங்க?''

ஸுஸேனி ஒன்றுமே சொல்லவில்லை. ஆனால் அவருடைய கண்கள் ஒரு நூறு கேள்விகள் கேட்டன.

''நான் வந்தாச்சுனு என்னோட முதலாளிக்குப் போய் சொல்லணும்?'' - அடக்கமாய் குறிப்பிட்டேன் நான். ''அவர் எங்கே?''

''அவரோட தனிப்பட்ட அலுவலகக் கேபின்ல இருக்கார். நடு கம்பார்ட்மெண்ட் துரதிரஷ்டவசமான அந்த பெட்டி-க்ரூ பொண்ணுக்கு கட்டுக்கடங்கா வேகத்துல ஏதோ ஒரு கடிதத்தைச் சொல்லிக்கிட்டிருக்கார்.''

''வேலையா? அவர் பண்றாரா? வேலை பண்ண அவருக்கு ஏற்பட்டிருக்கும் இந்த சுறுசுறுப்பு - புதுசு'' குறிப்பிட்டேன் நான்.

''ஹூம்'' என்றார் கலோனல் ரேஸ். ''இப்படி ஏதாவது பெரிய வேலையா கொடுத்து, பாவப்பட்ட அந்த பெட்டி-க்ரூவை, இன்னிக்கு மீதிப் பொழுது முழுக்கத் தட்டச்சு மிஷினோடு சேர்த்து சங்கிலி போட்டுக் கட்டிப் போடும் திட்டமா இருக்கும்.''

நான் சிரித்து விட்டேன். பிறகு மற்ற இருவரோடும் சேர்ந்துக் கொண்டு சர் ஆஸ்டஸைத் தேடிப் போனேன். மூடப்பட்டிருந்த அறைக்குள் மேலும் கீழுமாய் நடந்தபடி, கரை உடைந்த வெள்ளம் போல தொடர்ச்சியாய் வார்த்தைகளை, மலங்க மலங்க எழுத முயற்சித்துக் கொண்டிருந்த பெட்டி-க்ரூ (அப்போது தான் அவரை நான் முதன் முறையாக பார்த்தேன்) நோக்கி அள்ளி வீசிக் கொண்டிருந்தார் சர். நெட்டையாய், கண்ணாடி அணிந்திருந்த, வேலைக்கு சுணங்கா, நளினமற்ற ஒரு மரக்கட்டை முகப் பெண் என்று என்னுள் பதிந்துக் கொண்டேன். அவர் எழுதிக் கொண்டிருந்த பென்சிலும் சர் ஆஸ்டஸின் அதிவேக பொழிப்புரைக்கு ஏற்ப வேகவேகமாய் பறந்துக் கொண்டிருந்த போதிலும், அதனோடு சுலபமாய் ஈடு கொடுக்க முடியாமல் அவர் திண்டாடுவது வெளிப்படையாகவேத் தெரிந்தது. காணச் சகிக்காதவாறு பெட்டி-க்ரூ திணறிக் கொண்டிருந்தார்.

நான் கம்பார்ட்மெண்ட்டுக்குள் நுழைந்தேன்.

குழப்பமான ஒரு வாக்கியத்தை நேர் செய்து செகரட்டரியிடம் சொல்லிக் கொண்டிருந்த சர் ஆஸ்டஸ், பிரசவ வலி கண்டு மயங்கி விட்டவரைப் போல, வெளிறிப் போய் கண்ணகல நின்றார்! வேலைக்கு சுணங்காத சரக்குள்ள பெண்ணாயிருந்தாலும், இந்த பெட்டி-க்ரூ, ஒரு நரம்பதிர்வுப் பேர்வழியாக இருக்க வேண்டும் - துப்பாக்கியால் யாரோ சுட்டு விட்டதைப் போல உணர்ச்சியற்று ஆனார் அவர்!

''கடவுளே'' என்றார். ''டர்பன்ல இருக்கும் இளைஞனை வெட்டி விட்டுட்டியா?''

''எனக்கு நீங்களே போதும்னு பட்டுது'' ஹாஸ்யம் தொனிக்க சன்னமாய் சொன்னேன் நான்!

''டார்லிங்'' என்றார் சர் ஆஸ்டஸ். ''உடனடியா நீ என் கையைப் பிடிச்சுக்க ஆரம்பிக்கலாம்!''

மிஸ் பெட்டி-க்ரூ இறுமிக் காட்டினார். உடனே நீட்டிய கையை இழுத்துக் கொண்டார் சர் ஆஸ்டஸ்.

''ஓஓஓ'' என்று அவர் பக்கமாய் திரும்பிக் கொண்ட சர் ஆஸ்டஸ் ''எந்த இடத்தில் விட்டேன்? ஆங்? ரூஸ் கொடுத்த பேருரை பற்றி, இல்லே?! என்னாச்சு உனக்கு.. ஏன் எழுத மாட்டேங்கிறே?''

''அதாவது'' என்று அப்போது பட்டும் படாமல் சொன்ன கலோனல் ரேஸ், ''பென்சிலுடைய முனையை உடைச்சிட்டாங்க. மிஸ் பெட்டி-க்ரூ'' என்று விட்டு, எழுதிக் கொண்டிருந்த காரிதரிசியிடமிருந்து அதனை வாங்கிக் கொண்டு கூர் செய்வதில் இறங்கினார் அவர்.

சர் ஆஸ்டஸ் விழித்தார். நானும்! பேசிய கலோனல் ரேஸின் குரலில் ஏதோ ஒரு வளையமிருந்தது. அதை என்னால் சரியாய் அப்போது விளங்கிக் கொள்ள முடியவில்லை.

# அத்தியாயம் - 22

(சர் ஆஸ்டஸ் பெட்லர் எம்.பி. டைரியிலிருந்த எடுத்தவை)

*நான் சந்தித்த மனிதர்கள் பற்றிய என் நினைவுகளைப் பதியும் புத்தக வேலையை நிறுத்திவிட முடிவெடுத்தேன். இதற்கு பதிலாக, ''நான் வைத்துக் கொண்டிருந்த செகரட்டரிகள்'' என்ற தலைப்பில் ஒரு சிறு தொகுப்பினை எழுதுகிறேன். இந்த செகரட்டரிகளைப் பொறுத்த வரை அழிக்க முடியாத ஓர் ஒவ்வாமைக்குள் நான் விழுந்து விட்டதாகவே எனக்குத் தோன்றியது. ஒரு சமயம் எனக்கு செகரட்டரிகளே இல்லாமல் இருந்தது. ஒரு சமயம் செகரட்டரிகளாகப் பொங்கி வழிந்தது. தற்சமயம் குடேஸியாவுக்குக் கொத்துப் பெண் செகரட்டரிகளோடு நான் போய்க் கொண்டிருக்கிறேன். இவற்றில் மிகச் சிறந்த இரண்டு பெண்களையும் எப்படியோ அபகரித்துக் கொண்டு கலோனல் ரேஸ் போய் விட, நான் மட்டும் களி மண்ணாய் பிறந்திருக்கும் ஒருத்தியோடு விடப்பட்டு விடுகின்றேன். இப்படித் தான் எனக்கு எப்போதுமே நடக்கின்றது.*

*சொல்லப் போனால் இது நான் ஏற்பாடு செய்திருக்கும் தனிமைப் பிரயாணம் - கலோனல் ரேஸ் பண்ணியது கிடையாது.*

*எனது அந்தரங்கக் காரிதரிசி எனும் பெயரில் மிஸ் ஆனே பெட்டிங்ஃபெல்ட்'டும் என்னோடு டுடேஸியா வரை நான் செலவழித்து ஏற்பாடு செய்திருக்கும் இப்பிரயாணத்தில் பயண மாகிறார். ஆனால், மதியம் முழுவதும், பார்வையாளர் பகுதியில் கலோனல் ரேஸுடன் இணைந்து ஜன்னலோரமாய் நின்றுக் கொண்டு, நீண்டு வழிந்தோடும் ஹெக்ஸ் நதி பற்றிப் புளகாங்கிதமடைந்துக் கொண்டிருக்கிறாள் அவள். அவளுடைய பிரதான வேலையை என் கைகளை விட்டு விடாமல் இறுகக் கட்டிக் கொண்டு இருப்பது தான் என்று நான் நிஜமாகவே சொல்லியும் ஆகிவிட்டது. ஆனால் அவள் அப்படிச் செய்யவில்லை. மிஸ் பெட்டி-க்ரூவைப் பார்த்து ஒரு வேளை அவள் பயப்படுகிறாளோ என்னவோ. இதற்காக அவளையும் குற்றம் சொல்லக்கூடாது. மிஸ் பெட்டி-க்ரூவிடம் ஈர்க்கும் கவர்ச்சியாய் எதுவுமே கிடையாது. அவள் ஒரு முதலைப் பெண்,*

அகண்டவிரல்கள் கொண்ட அகலக் கால்களோடு. இவை, ஒரு பெண்ணாய் காட்டுவதை விட அவளை ஆணாய்த்தான் அதிகம் காட்டுகின்றன.

இந்த ஆனே பெட்டிங்ஃபெல்ட் புரிந்துக் கொள்ளவே முடியாத மர்மங்கள் நிறைய கொண்டுள்ளவளாய் தோன்றுகிறாள். கடைசி நிமிடம் கடந்த பிறகு, புகை வண்டி போல கக்கித் கக்கி மூச்சு விட்டுக் கொண்டு, ஏதோ ஓட்டப்பந்தயம் ஓடி ஓய்ந்த வீராங்கனையைப் போன்ற அதி வேகத்தோடு பாய்ந்து ரயிலுக்குள் குதித்தேறியிருக்கிறாள் இவள். இத்தனைக்கும், இவள், நேற்றிரவு டர்பன் ரயிலில் ஏறி அந்நாடு நோக்கிப் பயணிக்கத் துவங்கியதைக் கண் கூடாக பகெட் பார்த்ததாக சத்தியம் செய்கிறான். ஒன்று பழையபடி பகெட் குடிக்க ஆரம்பித்திருக்க வேண்டும். அல்லது, இந்தப் பெண்ணுக்கு ஆவியாய் வேறோர் இடத்திலும் இருக்கும் வசியம் தெரிந்திருக்க வேண்டும்.

இது பற்றி துளி விளக்கம் தர மறுக்கிறாள் இவள். வேறு ஒருவரும் கூட இதனை விளக்க முன்வரவில்லை. நான் சொல்லவில்லை - 'நான் வைத்துக் கொண்டிருந்த செகரட்டரிகள்'! நெம்பர் 1: நீதியிலிருந்து மறைத்து துரிதமாக ஓடிக் கொண்டிருக்கும், ஒரு கொலைகாரன். நெம்பர் 2 : இத்தாலியில் மர்மமாய் எதிலோ சிக்கிக் கொண்டிருக்கும் ஒரு ரகசியக் குடிகாரன். நெம்பர் 3: இரு இடங்களில் ஒரே சமயத்தில் இருக்கவல்ல திறமை கொண்ட ஓர் அதியற்புத அழகி. நெம்பர். 4: மாறுவேடத்தில் வந்திருக்கும் ஆபத்தானவன் என்பதில் என்னிடம் இரண்டாவது கருத்து இல்லாத, மிஸ் பெட்டி-க்ரு. ஒரு வேளை இவள் பகெட்டின் இத்தாலிய கூட்டாளியாய் கூட இருக்கலாம். நேரம் பார்த்து என் தலையில் அழகாய் கட்டி விட்டான் அவன்! இந்தக் கொத்தில் மிகச் சிறந்தவனாய் நான் நினைப்பது, ரேபர்னைத்தான். என்னை, ரேபர்ன், எப்போதும் கவலைக்குள்ளாக்கியது கிடையாது. அல்லது என் வழியில் வந்து இடைமறித்தது கிடையாது. இந்த பகெட்டை எடுத்துக் கொள்ளுங்கள். டிரங்க் பெட்டிகளைக் கொண்டு வந்து என் அறைக்குள் போட்டு விடுவதில் குறியாயிருந்து ஜெயித்தான். போய் வருவோர் யாராய் இருந்தாலும் அவற்றில் முட்டி ஒரு முறை விழாமல் போவது கிடையாது. இவனால் என்றுமே எனக்குத் தொல்லைகள் தான்!

என்னைப் பார்த்ததும் உற்சாகமான வரவேற்பு தரப்படும் என்ற எண்ணத்தில், பார்ரவையாளர் பகுதிக்கு எழுந்து போனேன் நான். இரண்டு பெண்களும், கலோனல் ரேஸ் உதிர்த்துக் கொண்டிருந்த ஏதோ ஒரு பிரயாணக் கதையில் தன்னிலை இழந்து நின்றுக் கொண்டி ருந்தனர். ச்சே! நான் இந்த பிரத்யேக கம்பார்ட்மெண்ட்டை 'சர் ஆஸ்டஸ் ஏற்பாடு செய்தது'

*என்று இனி சொல்லப் போவதில்லை. இது: 'கலோனல் ரேஸ் மற்றும் அவரது அந்தப்புரம் பெண்கள்!'*

*அப்போது போய், மிஸஸ் ப்ளேர் 'அழகழகான' என்ற அடைமொழி கொடுத்துப் பார்க்கும் அனைத்தையும் காமிராவில் சுட வேண்டுமா....?! சுட்டார்! கற்றி வளைத்துத் திரும்பும் திருப்பத்தில் ஒவ்வொரு முறை ரயில் வண்டி வளையும் போதும், முன்னால் தெரியும் என்ஜினைக் க்ளிக் அடித்தார் அவர்.*

*''ஓ....! என்ஜின் முனை, அது கக்கும் புகை, எல்லாமும் தெரியுது'' - குதூகலமாய் கத்தினார் அவர். ''ரயிலின் பின்பாகத்தில் இருந்தபடி அதன் வளையும் முன்பாகத்தை பின்னணியில் மாபெரும் மலைகளும் பள்ளத்தாக்குகளும் புதர்களும் நெரியப் படம் பிடித்தால் - ஓஹ்... அது எத்தனை அபாயமானதா, த்ரில்லிங்கா தெரியும்!'' இந்தப் படத்தை ரயிலின் பின்னாடி பயணித்துக் கொண்டே எடுத்தது என்று யாரிடம் சொன்னாலும், அவர்கள் நம்ப மாட்டார்கள் என்று நான் குறிப்பிட்டுக் காட்டினேன். இதற்கு அவர் என்னை ஒரு பரிதாபமானவனாகப் பார்த்தார். ''இதற்கு அடியில் நான் எழுதி வைப்பேன். 'என்ஜின் வளைந்து சுழிக்கும்போது, ரயிலின் பின்னால் பயணித்தபடி எடுத்தது.'*

*''அப்படி எந்த ரயில் புகைப்படத்துக்குக் கீழேயும் நான் எழுதலாம்'' என்றேன் நான். இது போன்ற சின்னச் சின்ன சாத்தியக் கூறுகளைப் பெண்கள் எப்போதும் கவனிப்பதில்லை.*

*''இந்தப் பகுதியில் பகல்ல பிரயாணிப்பதை நினைச்சுப் பூரிக்கப் போறேன்'' என்று கூவினாள் ஆனே. ''நேற்று ராத்திரி பிரயாணத்துல நான் டர்பன் போயிருந்தேன்னா, இதையெல்லாம் என்னால் பார்த்து ரசிச்சிருக்கவே முடியாது. இல்லியா?''*

*''ஆமாம்'' என்றார் கலோனல் ரேஸ். ''மறு நாள் காலையில் கண் விழிக்கும் போது, கரு பகுதியில், அதன் கடும் பாறைகளையும் பாலைவனங்களையும் தான் பார்க்க முடிஞ்சிருக்கும்.''*

*''அப்போ என் திட்டத்தை நான் மாற்றிக்கிட்டது நல்லதா தான் ஆகியிருக்கு'' - சொல்லி விட்டு ஒரு முறை சுற்றும் பார்த்துக் கொண்டாள் அவள்.*

*வெளியே பரவிக் கொட்டிக் கிடந்த அத்தனை காட்சியும் ஆச்சரிய அதிசயமாய் இருந்தன. சுற்றி வர இருந்த கம்பீர மலைகள்! அவற்றைச் சுற்றியும் திரும்பியும் ஆடாது அசையாது நாங்கள் மேல் நோக்கி முன்னேறிக் கொண்டிருந்த அழகு பிரயாணம்! எல்லாமும்!*

''பகல் பொழுதுல குடேஸியாவுக்குப் போகும் ரயில்கள்ல இது தான் ரொம்ப வசதியானதா?'' என கேட்டாள் ஆனே.

இதற்கு, ''பகல்லியா?'' என சம்பந்தமில்லாமல் சிரித்தார் ரேஸ். ''வாரத்துக்கு மூணு ட்ரெயின்கள் தானிருக்கு, ஆனே. திங்கள், புதன், சனி.,... ஃபால்ஸ் பகுதிக்கு நாம போய் சேர சனி காலை ஆகி விடும், தெரியுமா?''

இதற்கு, ''எத்தனை நாட்கள் நீங்க ஃபால்ஸ் பகுதியில் தங்கப் போறீங்க, சர் ஆஸ்டஸ்'' என்று கேட்டார் மிஸஸ் ப்ளேர்.

''பல விஷயங்களைப் பொறுத்திருக்கு அது'' என்றேன் நான், எச்சரிக்கையாய்!

''என்ன விஷயங்கள்?''

''ஜோஹென்னஸ்பெர்க்கில் எப்படி சமாச்சாரங்கள் நகருது என்பதைப் பொறுத்து. ஓரிரு நாட்கள் ஃபால்ஸ் பகுதியில் தங்குவது தான் என்னோட முதல் திட்டம். ஆப்பிரிக்காவுக்கு நான் வருகை தருவது இது மூன்றாவது முறையா இருந்தாலும், இது வரை நான் ஃபால்ஸ் பகுதியை சுற்றிப் பார்த்ததே கிடையாது. பிறகு ஜோஹென்னஸ்பெர்க் வரை போய் அங்கே Rand பிரச்சினை என்ன நிலைமையில் இருக்குனு தெரிஞ்சுக்க திட்டமிட்டிருக்கேன். இங்கிலாந்துல ஏதோ நான் தான் தென் ஆப்பிரிக்க அரசியல் சம்பந்தமான வல்லுநர் என்பது போல காட்டிக்கிறேன். இருக்கலாம்; ஆனா, செவி வழி நான் கேள்விப்பட்ட சேதிகளிலிருந்து, இன்னும் ஒரு வாரத்துல, ஜோஹென்னஸ்பெர்க், சுற்றுலா போக ஆபத்தான ஒரு விருப்பத்தகாத பகுதியா ஆகப் போகுது! புரட்சி வெடிக்கும் நேரத்துல போய் அப்பகுதியைப் படிக்க நான் விரும்பலே.''

மேட்டுமையான சிரிப்பு ஒன்றினை உதிர்ந்தார் கலோனல் ரேஸ். ''உங்க பயங்கள் தேவையற்று மிகைப்படுத்தப்பட்டிருக்கோனு தோணுது, சர் ஆஸ்டஸ். ஜோ'பெர்க்கில் தலைப் போற அளவுக்கு எவ்வித ஆபத்தும் நிகழாது.''

இருந்த இரு பெண்களும், உடனே அவரை நோக்கி, 'ஆஹா.... எத்தனை பெரிய ஹீரோ நீ' என்பது போல பார்த்தனர். அது என்னை அடி வரை எரிச்சலாக்கியது. இந்த ரேஸைப் போன்றவன் தான் நானும். ஒவ்வோர் அங்குலத்திலும் துணிவு நிறைந்தவன். ஆனால் அதை அப்படியே சித்தரிக்கும் தோற்றம்... அது, அது தான் என்னிடம் இல்லை. ஆனால், நெட்டையாய், தொங்கு சதையற்ற நேர்த்தியான ஒல்லியாய் தோன்றும் ரேஸ் போன்றவர்களுக்கு, அது இயற்கையிலேயே அமைந்து விடுகின்றது.

உண்டான எரிச்சலைக் காட்டி விட, ''அந்த இக்கட்டான சமயத்துல நீங்க அங்கே போவீங்களோ?'' என்றுகுத்தலாய் விட்டேன் நான்.

*''சர்வ நிச்சயமா! ரெண்டு பேருமே கூட ஒண்ணா போகலாம்.''*

*''ஃபால்ஸ்ல ரொம்ப நாள் தங்குவேன்னு என்னால சொல்ல முடியாது.'' பட்டும் படாமல் விளக்கினேன் நான். எதற்காக கூலோனல் ரேஸ் நான் ஜோஹென்னஸ்பெர்க் போய் ஆக வேண்டும் என்பதில் குறியாய் நிற்கின்றார்? ஆனே மேல் கண் வைக்கிறார்... எனக்குப் புரிகின்றது. ''நீ என்ன பண்ணப் போறே, ஆனே?'' என்று கேட்டேன்.*

*''பல விஷயங்களைப் பொறுத்திருக்கு அது'' என்றாள் அவள், நான் சொன்னதை அப்படியே காப்பியடித்து.*

*''நீ என் செகரட்டரி, இல்லியா?'' என்று, அவளாய் வேறெங்கும் போய் விட முடியாது என்பதைச் சுட்டிக் காட்டினேன்.*

*''ஓ, அப்படியா! ஆனா நான் அப்படியெல்லாம் ஒண்ணும் கிடையாது'னுல்லே நினைச்சேன்? இன்னிக்கு மத்தியானம் முழுக்க நீங்க மிஸ் பெட்டி-க்ரூ' வுடைய கையையில்லே பிடிச்சுக்கிட்டே இருந்தீங்க?''*

*''நான் எதையெல்லாம் பண்ணினே'ன்னு நீ எப்படி வேணும்னாலும் சொல்லிக்கோ... ஆனா அதை மட்டும் நான் பண்ணவேயில்லே தாயீ!'' - நான் பதிலளித்தேன்.*

வியாழன் இரவு.

*கிம்பர்லியை விட்டு அப்போது தான் கிளம்பியிருந்தோம். வைரக் கொள்ளை பற்றிய கதையை மறுபடியும் முழுக்கவும் ஒரு முறை சொல்லும்படி கேட்டுக் கொள்ளப்பட்டார், ரேஸ். வைரங்கள் சம்பந்தமாய் எதுயிருந்தாலும் அதில் இந்தப் பெண்கள் ஏன் தான் இத்தனை முக்கியத்துவமும் ஈடுபாடும் காட்டுகின்றார்களோ?''*

*ஒரு வழியாய், கடைசியில், அவள் சம்பந்தமாய் போர்த்திப் பாதுகாத்து வந்த மர்ம முடிச்சினை, ஆனே பெட்டிங் ஃபெல்ட் அவிழ்த்தாள். அவள் ஒரு செய்தித்தாளின் நிருபராம். டீ. ஆர் எனும் பகுதிகளிலிருந்து வரிசையாய் தந்திகளை அனுப்பிய வண்ணமிருந்தாள் அவள்.*

*ஆரம்பம் முதலே, 'ப்ரௌன் சூட்டில் வந்தவன்' குறித்த சரியான பாதையில் ஆனே பிரயாணித்துக் கொண்டிருப்பதாய் தெரிந்தது. கில்மார்டன் மாளிகையில் அவனை ஆனே அடையாளம் காணவில்லை என்பதும் வெளிப்படையாகவே தெரிந்தது. இதற்கு அவளுக்குப் போதிய வசதி வாய்ப்புகள் அமையவே இல்லை. இருந்த போதிலும், இப்போது, மிகக் குஷியாக தந்தியடித்துக் கொண்டிருந்தாள்: ''கொலையாளி யுடன் என் அனுபவங்கள்'' மற்றும் மாபெரும் கற்பனை பொதிந்த - ''அவன் என்னிடம் சொன்னவை'' - இத்யாதிகள். இந்தக் கற்பனைகளெல்லாம் எத்தனை*

சுலபம் என்பது. எனக்கும் தெரியும். 'நினைவுகள்' பற்றிய புத்தகத்தை எழுதும் போது, இந்த பகெட் பயல் அனுமதித்தால், இதை விட சிறப்பாய் ரேபர்ன் குறித்த கற்பனை விளையாட்டுக்களை நான் என்னுடைய புத்தகத்திலும் ஆடுவேன். கூடவே நாஸ்பியின் திறமைமிகு நிருபர் ஒருவனும் எனக்கு உதவியாய் அமைந்துவிட்டால் இன்னும் ஜோடித்து டாலடிக்க வைத்து விடலாம்.

ஓஹ்..இந்தப் பொண்ணு, சாதுர்யம் தான்... புத்திசாலி தான்! என் வீட்டில் கொலையான பெண்ணின் அடையாளத்தைத் தனியொரு பெண்ணாக விரட்டிப் பிடித்து விட்டாளே! அவள் நதீனா என்றழைக்கப்படும் ஒரு ரஷ்ய நடன மங்கையாம். இது நிச்சயம் தானா என்பதை ஒரு தடவைக்கு இரு தடவை நான் ஆனேயிடம் கேட்டேன். இதற்கு, இது ஒரு கணிப்பு தான் என்றாள் - ஷெர்லக் ஹோம்ஸ் கதையில் வருவது போல! இருந்த போதிலும், இது தான் உண்மை என்று நாஸ்பிக்கு இந்த ஆனே தந்தி அனுப்பியுள்ள விஷயம் எனக்குத் தெரிய வந்தது. பெண்களுக்கு எப்போதுமே சக்தி வாய்ந்த உள்ளுணர்வு உண்டு. ஆகவே, ஆனே பெட்டிங்ஃபெல்ட் அவளுடைய ஊகத்தில் மிகவும் சரியாகவே இருப்பாள் என்றே நான் நம்பினேன். இதைப் போய் கணிப்பு என்று குறைத்து எடை போடுவது ஆகாது!

த டெய்லி பட்ஜெட் பத்திரிகையில் ஒரு நிருபராக இவள் எப்படி வேலையைக் கைப்பற்றினாள் என்பது ஒரு பேராச்சரியம். ஆனால், இப்படி ஏதாவது தடாலடியாய் சாதிக்கவே பிறந்த பெண்களின் வகை, அவள். ஆனே போன்ற தீரர்களோடு இயைந்து ஓடுவதென்பது ரொம்பக் கஷ்டம். இனிமையாய் பேசி இணங்கச் செய்து விடும் அணுகுமுறையினால், போர்த்தி மறைத்து வைப்பார்கள், இவர்களுடைய தேடுதல் தீவிரத்தை!. பாருங்கள். என்னுடைய பிரத்யேகப் பெட்டிக்குள், வானத்திலிருந்து குதித்தவளைப் போல எப்படி நுழைந்து விட்டாள் என்று!

சில தெளிவற்ற சமாச்சாரங்கள் எதிர்பட்டன. ரேபர்ன் ருடேஸியா போய் விடலாம் என்று போலீஸ் சந்தேகிப்பது போல என்னவோ சொன்னது, இந்த ரேஸ்! திங்கட்கிழமை ரயிலில் அவன் பறந்திருக்கலாம். இது குறித்து எல்லா இடங்களுக்கும் எச்சரிக்கை அனுப்பப்பட்டுள்ளதாய் அறிந்தேன். அவன் அங்க அடையாளங்களை வைத்து யாரோ பிடிக்கப்பட்டார்கள் போல.. ஆனால் அது அவன் இல்லை. அவன் தந்திரமும் சமயோஜிதமும் ஒருங்கே பெற்றவன்; அவனுக்கு ஆப்பரிக்காவும் தெரியும். வயதான ஒரு வேலைக்காரப் பெண் போல அவன் வேடமிட்டுக் கொண்டிருக்கலாம்.

*ஆனால் இந்த போலீஸோ, முகத்தில் ஒரு வெட்டுக் காயத்தோடு, ஐரோப்பிய ஆடம்பர உடையணிந்து வாட்டசாட்டமான இளமை வெடிக்கும் இளைஞனுக்காக வலையை விரித்துக் கொண்டு அலைந்துக் கொண்டிருக்கும். ஆங்... அந்தத் தழும்புக் குறித்து இன்னும் எனக்கு விளக்கம் கிடைத்தபாடில்லை.*

*இப்படி என்னவெல்லாமோயிருந்தாலும், ஆனே பெட்டிங் ஃபெல்ட், அவளுடைய பாதையில் முன்னேறிக் கொண்டிருந்தாள். அவளுக்காகவும், த டெய்லி பட்ஜெட் பத்திரிகைக்காகவும், அவன் யார் என்பதைத் தானே கண்டுபிடித்ததாய் மகுடம் சூட்டிக் கொள்ள வேண்டும் என்று துடிக்கிறாள். இந்தக் காலத்து இளம் பெண்கள் எதற்கும் துணிந்ததாய் இருக்கிறதுகள்! இதெல்லாம் ஒரு பெண் செய்யத்தக்க வேலையே கிடையாது என்பதை நான் குறிப்பிட்டும் காட்டி விட்டேன். இதற்கு அவள் என்னைப் பார்த்து நகைத்தாள். 'அவனை இந்த மண்ணில் இறக்கிக் காட்டவில்லை என்றால், பாருங்கள்' என்று கட்டை விரல் தூக்குகிறாள். இது ரேஸுக்கும் பிடிக்கவில்லை. நானும் கவனித்தேன். ஏன்.. திங்கட்கிழமை ரயிலில் போகாமல், ரேபர்ன் இதே ரயிலில் கூட இருந்துத் தொலைக்கலாம். அப்படியானால், படுக்கையிலேயே நாங்களனைவரும் கொல்லப்பட்டு விடுவோம் என்பது நிச்சயம். இதையே நான் மிஸஸ் ப்ளேரிடம் சொன்ன போது "அதையும் தான் ஒரு கை பார்த்துவிட்டால் போகின்றது....!" என்றார் அவர். ஒரு வேளை நான் கொல்லப்பட்டு விட்டால்... அது, ஆனேவுக்கு மாபெரும் இழப்பாய் ஆகிவிடும் என்று விளக்கினார்! பேரிழப்பு - ஆனேவுக்கு!*

*நாளை நாங்கள் பெரும் பாலைவனப் பகுதியைக் கடக்கப் போகிறோம். தூசு - கொடூரமாய் வீசும். மேலும், அப்பகுதியைக் கடக்கும் வரை, பல பாலைவனவாசிகள், அவர்களாய் மரங்களைக் கடைந்து செய்த பல விந்தையான மிருக உருவங்களைக் கொண்டு வந்து,விற்கிறேன் பேர்வழி என்று உசிரை வாங்குவார்கள். கூடவே பீங்கான் கிண்ணங்கள், கூடைகள் இதையெல்லாம் பார்க்கும் போது மிஸஸ் ப்ளேர் ஆனந்தக் களிப்புக் கொள்வார் என்றே எனக்குத் தோன்றியது. இச்சிற்பங்களில் அடிப்படை அழகு, மிளிரும்.. அது, மிஸஸுக்கு மிகப் பிடித்துப்போகும் என்று பட்டது.*

வெள்ளிக்கிழமை மாலை.

*நான் பயந்து போலவே, மிஸஸ் ப்ளேரும் இந்த ஆனே பொண்ணும், நாற்பத்தொன்பது மர மிருகங்களை வாங்கி வந்திருந்தனர்!*

# அத்தியாயம் - 23

(ஆனே'யின் பதிவு தொடர்கின்றது)

ருடேஸியா வரையிலான பிரயாணத்தை, அடி ஆழம் வரை அனுபவித்தேன். பார்த்துக் களித்து மகிழ, ஒவ்வொரு நாளும் ஏதாவது ஒன்று அகப்பட்டது! ஹெக்ஸ் நதி பள்ளத்தாக்கின் அபூர்வமான இயற்கை வனப்பைத் தான் முதன் முதலில் குறிப்பிட வேண்டும். அடுத்து கம்பீரமான அந்த அழுக்குப் பாலைவனம் - கரு! முடிவாக, சமதள அழகுப் பிரதேசமான பெச்சவுனா-லாண்ட். அங்கு, அப்பகுதி பழங்குடியினர் கைவினைப் பொருட்களாய் செய்து விற்பதற்காக கொண்டு வந்த அழகழகு பொம்மைகளைப் பற்றி சொல்லியே ஆக வேண்டும். ரயிலடி போன்ற எவ்வித அமைப்புமற்ற நிறுத்தங்களில் ஒவ்வொரு முறை ரயில் நின்ற போதும், ஸூஸேனியும் நானும் சுறுசுறுப்பானோம். எங்கெல்லாம் நிற்க வேண்டும் எனத் தோன்றியதோ அங்கெல்லாம் ரயில் நின்றதாய் தான் எனக்குத் தோன்றியது. நின்றதும், கூட்டமாய் ஒரு பழங்குடி கும்பல் காலியாய்க் கிடந்த தரிசிலிருந்து உருவாகி, கிண்ணங்கள், கரும்புகள், மேலங்கிகள், மற்றும் கண்ணுக்கு விருந்தாய் அமைந்த கடைந்த மரப் பொம்மைகள் ஆகியவற்றைச் சுமந்துக் கொண்டு ஓடி வந்தனர். ஸூஸேனி, பார்த்த கணமே, பொம்மைகளை சேகரித்துக் கொள்வதில் இறங்கினார். அவரை நானும் பின்பற்றினேன். ஏறத்தாழ ஒவ்வொன்றின் விலையும் ஒரு டிக்கி என்றிருந்தது (கால் பவுண்டு). ஒவ்வொன்றும் ஒவ்வொரு திறமை ஒவ்வொர் அதிசயம். ஒட்டைச் சிவிங்கிகள் இருந்தன. புலிகள், பாம்புகள் இருந்தன. வருத்தம் தோய்ந்த முகங்கள். வடிவம் முழுமைப் பெறாத சின்ன - கறுப்பு போர் வீரர்கள். இருவரும் நெஞ்சுக் கொள்ளாத அளவுக்குக் கொண்டாடினோம்.

சர் ஆஸ்டஸ், எங்களைக் கட்டுப்படுத்த முயன்றார். ம்ம். வீண்! முகவரி தெரியாத ஒரு பாலைவனத்தில் நாங்கள் தன்னந்தனியாக இறக்கி விடப்படாமல் தப்பித்தோமே என, இப்போது கூட நான்

எண்ணிப் பார்த்துக் கொள்கிறேன். தென் ஆப்பிரிக்க ரயில்கள், நின்று விட்டு மறுபடியும் கிளம்பும் போது, ஓசை தரும் ஒரு குலுக்கலோ அல்லது ஒரு விசிலோ கூட தருவதில்லை. நம்மை விட்டு பனிச் சறுக்கு போல அவை மெல்ல நழுவி விடுகின்றன. ஒரு பக்கம் பேரம் பேசியபடியே இதைப் பார்க்கும் நாம் தான், உயிரைக் கையில் பிடித்துக் கொண்டு ஓட வேண்டியிருக்கின்றது. கேப் டவுனில், இப்படி ஓடோடி வந்து நான் ரயிலேறிய போது ஸுஸேனியின் முகத்தில் விளைந்த கலவர ஆச்சரியத்தையே இதற்கு உதாரணமாகக் கொள்ளலாம்!

முதல் நாள் சாயங்காலம் நாங்கள் வெளியே போய் வந்த போது, வழி நெடுகிலும், கையிலுள்ள துப்பறியும் சமாச்சாரத்தை, நீள அகலமாக அலசினோம். பாதி இரவு வரை தொடர்ந்து பேசி முடித்தோம்.

தற்காப்பு வியூகங்கள் அமைத்துப் பாதுகாத்துக் கொள்ளும் அதே சமயம், தேவைப்பட்டால் ஆக்கிரமித்துப் போரிடவும் வியூகங்களைத் தயார் செய்துக் கொள்ள வேண்டும் என்பது துல்லியமாய் விளங்கியது. சர் ஆஸ்டஸ் பெட்லர் குழுவினருடன் பிரயாணிக்கும் போது எனக்குப் போதுமான பாதுகாப்புக் கிடைத்து விடுகின்றது. அவரும் கலோனல் ரேஸும் சக்திமிகு பாதுகாவலர்கள்! இவர்களை மீறி என்னைக் கலங்கடிக்க எதிரிகள் முயற்சிக்க மாட்டார்கள் என்பதில் நான் ஸ்திரமாயிருந்தேன். மேலும், நான் சர் ஆஸ்டஸின் அருகாமையில் இருக்கும் வரைக்கும் அந்தப் பகெட் பயல் மீதும் தொடர்பு இருந்துக் கொண்டேயிருக்கும். இந்த மர்மத்தின் இதயத்துடிப்பே பகெட் தான். ஸுஸேனியிடம், அவரது சொந்தக் கருத்துக்களின் அடிப்படையில், மர்மங்களடங்கிய 'கலோனலாய்' இந்தப் பகெட் இருப்பதற்கு சாத்தியக்கூறுகள் இருக்கின்றனவா என்று கேட்டுப் பார்த்தேன். அவருடைய கீழ்ப்படிந்து அடங்கியே இருக்கும் குணாதிசயம் இந்தக் கணிப்புக்கு எதிராய் தெரிந்தாலும் சர் ஆஸ்டஸ் அவரது காரியதரிசியால் அதிக அளவில் கட்டுப்படுத்தப்படுகிறார் என்று ஓரிரு முறை எனக்குத் தோன்றியிருக்கின்றது. இது உண்மையானால், வெளிச்சம் போட்டு விளம்பரப்படுத்தப்படாமல் பதுங்கியிருப்பதையே பகெட் ஆவலாய் விரும்பலாம்; இதற்கு, அவருடைய சுயத்தினைத் தெளிவாய் வெளியே காட்டாமல் பாதுகாக்கும் அவரது பதவிப் போர்வை பெரும் உபகாரமாய் இருக்குமே!

இந்த அத்தனையையும் ஒதுக்கித் தள்ளினார் ஸுஸேனி. அத்தனை அட்டகாசத்தையும் நடத்திக் கொண்டிருக்கும் ஒரே சக்தியாய்

பகெட்டினை ஒப்புக் கொள்ள அவர் முன் வரவேயில்லை. உண்மையான தலைவன் 'கலோனல்' பின்னணியில் எங்கோ இருக்கிறான்... அவன், நாம் வந்து சேர்வதற்கு முன்னமேயே ஆப்பிரிக்கா வந்து இறங்கியிருக்க வேண்டும், என்றார்.

அவர் சொல்வதிலும் அர்த்தமிருப்பதாய் பட்டாலும், முழுசாய் அங்கீகரிக்க முடியவில்லை. சந்தேகத்தைக் கிளப்பிய ஒவ்வொரு நிகழ்வுகளிலும் அதனை வழி நடத்திய அதிபுத்திசாலியாய் - பகெட் இருந்திருக்கிறார். சர்வதேசக் குற்றங்களுக்கான கும்பலொன்றின் தலைவனிடம் காணப்படும் ஸ்திரத்தன்மையும், முடிவெடுக்கும் சாதுர்யமும் பகெட்டின் தோற்றத்தில் இல்லாதது போல தோன்றலாம். அதனால் என்ன? கலோனல் ரேஸின் கூற்றின்படி, முகந்தெரியா அந்த மர்ம மனிதன் சப்ளை பண்ணிக் கொண்டேயிருப்பது மூளையினாலான திட்டங்களைத் தான். கலை நுணுக்கம் கொண்டு சதித் திட்டமிடும் தலைவன் சத்தற்று நோஞ்சான் போன்ற தோற்றத்தில் இருந்துவிட்டால் தான் என்ன!

'' பேராசிரியர் பொண்ணுல்லே... அதான் ரொம்ப சிந்திக்கிறே!'' எனது இத்தனை எண்ணங்களையும் முன் வைத்த போது இடைமறித்த ஸூஸேனி, இப்படிச் சொன்னார்.

நான் மேற்கொண்டு முணுமுணுத்தேன். ''சர் ஆஸ்டஸ் எப்படி இத்தனை சொத்து சேர்த்திருப்பார்னு தெரிஞ்சுக்க விரும்பறேன்.''

''மறுபடியும் அவரை நீ சந்தேகப்படறியா?''

''ஸூஸேனி... யாரையாவது சந்தேகப்பட்டுக்கிட்டே இருக்கணும் எனும் ஒரு நிலையில இருக்கேன் நான்! அவரை நான் நிஜமா சந்தேகப்படலே... ஆனா சந்தர்ப்பம் அமைஞ்சிருக்கு... அவர் தான் பகெட்டின் முதலாளி. மேலும் மில் வீட்டின் சொந்தக்காரர் அவர்.''

''அவர் மற்றவங்க கிட்டே பேச விருப்பப்படாத ஏதோ ஒரு வழியில் பணத்தை சேர்த்திருக்கார்னு நான் கேள்விப்பட்டிருக்கேன்'' என்று சிந்தனையாய் குறிப்பிட்டார் ஸூஸேனி. ''அதுக்காக.... அது. குற்றங்கள் நிறைந்த பிஸினஸாத்தான் இருக்கணும்னு சட்டம் கிடையாது.''

கவலையாய் ஒப்புக் கொண்டேன்.

''ஏ, நாடோடிப் பெண்ணே'' என்று சிறு சந்தேகம் தொனிக்க அழைத்த ஸூஸேனி, ''தப்பான வாசல்ல போய் நின்னுக்கிட்டு அங்கே

லொட்டு லொட்டுனு நாம கதவைத் தட்டலேனு நினைக்கிறேன். ஆங்.,..?! ஒருவேளை, பாவம் இந்தப் பகெட் பய, ரொம்ப ரொம்ப நல்லவனா இருந்துட்டா?'' என கேட்டார்.

இந்த ஆலோசனையை ஓரிரு நிமிடங்கள் சிந்தித்த நான், பிறகு மறுத்துத் தலையசைத்தேன். - இப்படி என்னால நினைச்சுப் பார்க்க கூட முடியலே. ம்ம்..''

''அவன் பண்ற ஒண்ணொண்ணுக்கும் தான் ஒரு விளக்கம் வெச்சிருக்கானே, அப்புறம்?''

''ஆமாம். ஆனா, அவை, அப்படியே ஏத்துக்கிற நிலைமையில் இருக்கிறதில்லே. ஓர் உதாரணம். அன்னிக்கு ராத்திரி கில்மார்டன் மாளிகையிலிருந்து என்னைத் தலைக்குப்புற கீழே தள்ள முயற்சித்த சங்கதி. ரேபர்னைப் பின் தொடர்ந்துக்கிட்டு மேல் தளம் வரை வந்ததாகவும் அப்போ ரேபர்ன் தான் பகெட்டை அடிச்சு வீழ்த்தினதாகவும் சொல்றாரு. அது உண்மையே கிடையாதுனு இப்போ நமக்குத் தெரிஞ்சுப் போயிடுச்சு.''

ஏற்றுக் கொள்ள மறுப்பவராய், ''ம்ம்'' என்றார் ஸூஸேனி. ''இப்படி நமக்குச் சொன்னது, சர் ஆஸ்டஸ். ஆனா இதுல ஜவாப்தாரி, பகெட். ஆக, பகெட் வாயிலிருந்தே நேரடியாக நாம விஷயத்தைக் கறந்திருந்தா அது தரும் அர்த்தமே வேறா இருந்திருக்கலாம். கேட்டதை ஒருத்தர் திருப்பிச் சொல்லும் போது அதுல அனர்த்தங்கள் இடம் பெற அதிக வாய்ப்பிருப்பது நமக்குத் தெரிஞ்சது தானே, ஆனே!''

விஷயத்தை என் மூளைக்குள் மீட்டிப் பார்த்துக் கொண்டிருந்தேன். பிறகு இறுதியாய் மறுத்தேன். ''இதுல தப்பிப்புக்கு எந்த வழியும் எனக்குத் தெரியலே. பகெட் குற்றமுள்ளவர். ஓடும் கப்பலிலிருந்து என்னைக் கடலுக்குள் தள்ளிவிட அவர் முயற்சித்ததை மறுப்பதற்கில்லை. மற்ற எல்லா சமாச்சாரங்களும் கூட, இவரைக் குற்றவாளினே சுட்டிக் காட்டுது. உங்களோட இந்தப் புது ஐடியாவைப் பிடிச்சுக்கிட்டு ஏன் இப்போத் தொங்கறீங்க?''

''அவரோட முகத்தினால்.''

''அவர் முகம்? அது தான்.....'''

''நீ என்ன சொல்ல வரேனு தெரியும். அது - உள்ளர்த்தம் கொண்ட ஒரு வஞ்சக முகம். அப்படித்தான் அது. ஆனா, அப்படி முகம் உள்ள எல்லா ஆண்களும் நிஜத்துலேயும் குற்றவாளிகளா இருந்துட முடியாது. அது இயற்கை செய்யும் ஓர வஞ்சனைகளில் ஒன்று!''

ஸ்ூஸேஸின் விவாதத்தை நான் நம்பவில்லை. இயற்கை பற்றி, கடந்தகால அனுபவங்கள் மூலம் நன்கு கற்றிந்தவள் நான். தங்களுக்குள்ள கருத்தின்படி மட்டுமே இயற்கையை அணுகிப் பார்க்கும் ஒரு சிலரைப் போன்றவர் இந்த ஸூஸேனி.

அடுத்து உடனடியாய் செய்ய வேண்டியவை என்ன என்பது குறித்த திட்டமிடலுக்குள் நுழைந்துக் கொண்டோம். நான் ஒரு நிலைப் பாட்டினை எடுத்தாக வேண்டும் என்பது விளங்கியது. எதிர் கொள்ளும் அனைத்து விளக்கங்களையும் மானாவாரியாக நான் நிராகரித்துக் கொண்டே செல்ல முடியாது. அனைத்துக் கஷ்டங்களுக்குமான விடுதலை, என்னுடைய கைகளிலேயே கிடக்கின்றது. நான் தான் அதனைக் கண் கொண்டு பார்க்கவில்லை. த டெய்லி பட்ஜெட்! என்னுடைய அமைதியோ அல்லது என்னுடைய பேச்சோ, இவற்றில் எதுவும் ரேபர்னைப் பாதிக்கப் போவது கிடையாது. என்னுடைய எவ்விதமான பங்களிப்பும் இல்லாமலேயே அவன், 'ப்ரௌன் சூட்டில் வந்தவன்' என்று முத்திரைக் குத்தப்பட்டுள்ளான். ஆனால் அது அவன் கிடையாது என்ற நிஜத்தை அறிந்தவள் நான் மட்டும் நான். இந்நிலையில், அவனுக்கு எதிராய் நான் இயங்கிக் கொண்டிருக்கிறேன் என்றுக் காட்டிக் கொள்வது ஒன்று தான், நான் அவனுக்கு செய்யவல்ல அற்புதமான உதவியாய் அமைய முடியும். மார்லோவில் நடந்த கொலைக்கு பலிகடாவாக 'கலோனல்' கும்பல் தேர்ந்தெடுத்துள்ள மனிதனுக்கும் எனக்கும் நட்புறவு இருந்திருக்கின்றது என்ற சந்தேகம் அந்தக் கும்பலுக்கு எந்த ஒரு கணத்திலும் வந்து விடக்கூடாது. எனக்குத் தெரிந்த அளவில், கொலையான அந்தப் பெண், இன்னும் பொது ஜனங்களால் யாரென்று கண்டுபிடிக்கப்படவில்லை. அது.. இது வரை பாரீஸ் மக்களைக் கவர்ந்துக் களிப்பூட்டி வந்த நஷ்ய நடன மங்கை நதீனா என்று, இப்போதே நான் மிஸ்டர் நாஸ்பிக்குத் தந்தியொன்று அனுப்பி விடுகின்றேன். மரணித்தது, நடன மங்கை தான் என்று இது வரை கண்டுபிடிக்கப்படாததை எண்ணும் போது எனக்கு பற்றிக் கொண்டு வந்தது. ஆனால், இந்தக் கேஸின் ஆழங்களை மெதுவாய் அறிய நேர்ந்த போது, அது, அத்தனை சுலபமானதல்ல என்பதையும் விளங்கிக் கொள்ள முடிந்தது.

பாரீஸில் வெற்றிகரமாக திகழ்ந்த போது, நதீனா, ஒரு தடவை கூட இங்கிலாந்துக்கு வந்தது கிடையாது. அவள், லண்டன் ரசிகர்களுக்கு அறிமுகமில்லாதவள். மார்லோவில் படுகொலையானவர் பற்றி செய்தித்தாள்களில் வந்திருந்த புகைப்படங்கள் தெளிவற்றும்

அடையாளம் காண முடியாதவாறும்இருந்த படியால், அவற்றை யாரும் கண்டு பிடிக்காததில் ஆச்சரியமில்லை தான்! மேலும், நதீனா, தான் இங்கிலாந்துக்கு வந்த விஷயத்தை, ஒரு நாதிக்குக் கூட தெரியாமல் பொத்திப் பொத்தி வேறு பாதுகாத்திருக்கிறார். கொலை நடந்த மறுநாள், டான்ஸரிடமிருந்து அனுப்பப்பட்டது போல காட்டிக் கொண்ட ஒரு கடிதத்தை மானேஜர் கிடைக்கப் பெற்றிருக்கிறார். அதில், நடன மங்கை, தான் விரைவாக ரஷ்யா திரும்ப உள்ளதாகவும், எனவே, மானேஜர், விடுபட்டுப் போன அனைத்து ஒப்பந்தங்களையும் எப்படியாவது பாடுபட்டுப் புதுப்பித்துத் தயாராய் வைத்திருக்க வேண்டும் என்று கூறியிருந்தார்.

இவையெல்லாவற்றையும் நான் பிறகு தான் அறிந்துக் கொண்டேன். ஸூஸேனியின் முழு ஒப்புதலோடு ஒரு தந்தியை அனுப்பினேன். த டெய்லி பட்ஜெட் இந்தப் புது திருப்பத்துக்கு தயாரானது. எனது ஊகம் சரியென ஊர்ஜதம் செய்யப்பட்டது. நிஜமென ஆனது... த டெய்லி பட்ஜெட், அதன் வாழ்நாள் சாதனையாக இச்செய்தியைக் கருதியது! ''மில் ஹவுஸில் கொலையுண்ட பரிதாபத்துக்குரியவரை அடையாளம் கண்டார் - எமது ஸ்பெஷல் ரிப்போர்ட்டர்'' இப்படி மேலும் பந்தல்கள் கட்டியது, த டெய்லி பட்ஜெட்.

**'எமது ஸ்பெஷல் நிருபர், கொலைகாரனுடனேயே கப்பலில் பிரயாணித்திருக்கிறார்.'**

**'ப்ரௌன் சூட்டில் வந்தவன்!'**

**'அவன் எப்படித் தோன்றினான்?'**

புலவாயோ'வில் நான் இருந்த போது என் கட்டுரை ஏற்றுக் கொள்ளப்பட்ட சேதியும் மேற்கொண்டு சில நிபந்தனைகளும் எனக்குக் கிடைத்தன. த டெய்லி பட்ஜெட்'டின் பணியாளர்கள் பட்டியலில் நானும் ஒருத்தியாய் குறிப்பிடப்பட்டிருந்தேன்! திருமிகு நாஸ்பியிடமிருந்தே எனக்கு ஒரு பிரத்யேக பாராட்டுப் பத்திரம் வந்திருந்தது. நான் தான் கொலைகாரனை வீழ்த்த வேண்டும் என அங்கீகரிக்கப்பட்டிருந்தேன்.

எனக்கு... ஆம், எனக்கு எனக்கு மட்டும்... எனக்கு மட்டும் தான் தெரியும். அந்தக் கொலைக்காரன் ஹார்ரி ரேபர்ன் கிடையாது என்று! ஆனால் என்னைத் தவிர்த்த இந்த உலகம், அவன் தான் கொலைகாரன் என்றே எண்ணிக் கொண்டிருக்கட்டும் - தற்சமயத்துக்கு அது தான் மிக நல்லது.

## அத்தியாயம் - 24

**ச**னிக்கிழமை விடிகாலைப் பொழுதில் புலவாயோ சென்றடைந்தோம். அங்கு நிலவிய கடும் வெப்பத்தாலும், எனக்குப் பிடிக்காத வகையில் அமைந்திட்ட ஓட்டலினாலும், புலவாயோவில் நான் ஏமாற்றம் தானடைந்தேன். இந்த அழகில் சர் ஆஸ்டஸ் வேறு... பேசாமல் சிடுசிடுப்பாய் கோபமாய் அலையும் ஒருத்தனுக்கு சிறந்த எடுத்துக்காட்டாய் ஆனார். எனக்கென்னவோ நாங்கள் அள்ளிக் கொண்டு வந்திருந்த அத்தனை மர மிருகங்களும் தான் அவரைக் கடுங்கோபம் கொள்ளச் செய்துள்ளதாய் தோன்றியது - குறிப்பாக அந்த நெட்டை 'ஜிராஃபீ....!' அது ஒரு பெரிய பிரம்மாண்டமான ஒட்டைச்சிவிங்கி. நீண்டு செழித்தக் கழுத்தோடு...! அசாதாரண தோற்றமளித்த இந்த அமைப்பில், சின்னக் கண்கள்... மேலும் கண்களுக்கு அகப்படாத ஒரு வால்...! ஆயினும் அதன் செய்நேர்த்தியில் ஓர் உயர் ஒழுங்கு இருந்தது. ஈர்ப்புமிருந்தது. அது யாருக்குச் சொந்தம் என்பதில் ஏற்கெனவே ஒரு கருத்து வேற்றுமை உருவாக ஆரம்பித் திருந்தது - எனக்கா? ஸூஸேனிக்கா? அதனை வாங்க ஆளுக்கு ஒரு டிக்கி தந்திருந்தோம். இருவரில் நானே மூத்தவள் என்பதையும் திருமணமானவள் என்ற தகுதியையும் முன் வைத்தார் அவர். அதன் அழகினை முதன்முதலில் கண்டு சொன்னது நானே என்ற நிலையைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டேன் நான்.

இதற்கிடையில் எங்களுடைய தட்டு முட்டு சாமான்களை வைத்துக் கொள்வதற்காக இருந்த பரப்பின் ஏறத்தாழ அனைத்துப் பகுதிகளையும் இவ்விலங்குகள் ஆக்கிரமித்துக் கொண்டன என்பதை யும் சொல்லித்தான் ஆக வேண்டும். விதவிதமான வடிவங்களில்.. எப்போது வேண்டுமானாலும் முறிந்துவிடும் என்ற நிலையிலிருந்த நாற்பத்தொன்பது மரச் சாமான்களைப் பத்திரமாய் சுமந்து செல்வதென்பது நிச்சயமாய் சிரமமாகவே இருந்தது. தலா ஒரு கொத்து மிருகங்களைச் சுமக்க இரண்டு போர்ட்டர்கள் நியமிக்கப்பட்டனர் -

இதில் ஒருவன், வரிசையாய் நிற்பதாய் வடிவமைக்கப்பட்டிருந்த ஒரு கும்பல் நெருப்புக் கோழி பொம்மையைக் கீழே போட்டு அதன் கைகளை முறித்துப் போட்டான். இதில் எச்சரிக்கப்பட்டு நானும் ஸூஸேனியும், எத்தனை முடியுமோ அத்தனை பொம்மைகளை நாங்களே சுமந்துக் கொண்டோம். இதில் சுலோனால் ரேஸ் கொஞ்சம் ஒத்துழைத்தார். சர் ஆஸ்டஸின் கைகளில் உள்ளதிலேயே பெரிதான ஒட்டைச்சிவிங்கியை மட்டும் விட்டு வைத்தோம். மிகச் சரியாய் முதலாளிக்கு சேவகம் பண்ணிக் கொண்டிருக்கும் மிஸ் பெட்டி-க்ரூவையும் நாங்கள் விட்டு வைக்கவில்லை. அவர் பங்குக்கு ஒரு பெரிய காண்டாமிருகமும் சில போர் வீரர்களின் உருவங்களும் தரப்பட்டன. மிஸ் பெட்டி-க்ரூவுக்கு என்னைக் கண்டாலே பிடிப்பதில்லை என்றோர் எண்ணம் எனக்கிருந்தது. நான் 'பெரிய இவள்' போல காட்டிக் கொள்வதாய் அவர் நினைத்திருக்கலாம். எதனாலோ எந்த அளவுக்கு முடியுமோ அந்த அளவுக்கு அவர் என்னைத் தவிர்த்தார். இதில் நகைப்புக்கு இடந்தரும் விஷயம் என்னவென்றால், அவரது முகம் எனக்குப் பரீச்சரியமான ஒன்றாகவேத் தோன்றி வந்ததுதான்... ஆனால் ஏன் எதனால் என்று என்னால் பொருத்திப் பார்த்து விடை காண முடியவில்லை.

காலை முழுக்க அவரவர்கள் தனியாகவே இருந்துவிட்டு, மதியத்துக்கு மேலே வெளியே கிளம்புவதாய் முடிவு செய்தோம். மே-டாபஸ் எனும் பகுதிக்குப் போகலாம் என்ற ஒருமித்த கருத்திலிருந்தோம். அங்கிருந்த ரோட்ஸ் எனும் மாவீரனின் கல்லறைக்கு. அன்றைய பொழுது இப்படித்தான் போயிருக்க வேண்டும், கடைசி நிமிடத்தில் சர் ஆஸ்டஸ் பின் வாங்காமல் இருந்திருந்தால்! காலையில் கேப் டவுன் வந்து விழுந்ததிலிருந்தே அப்படி ஒரு பொறுமையற்ற அதிர்வில் காணப்பட்டார் அவர். கையிலிருந்த சில பழங்களை வெறியாய் தரையில் எறிந்தார் - அவை கசிந்துச் சிதறின. ஊர் விட்டுத் திரும்பும் போது விடிகாலை நேரமாய் பார்த்துத் திரும்பினால், அது சர் ஆஸ்டஸூக்குப் பிடிப்பதில்லை என்பது வெளிப்படையாகவே விளங்கியது. போர்ட்டர்களைக் காரணமின்றி சபித்தார். சிற்றுண்டிப் பரிமாறிய வெயிட்டரைச் சபித்தார். ஓட்டல் நிர்வாகமே சரியில்லை என அதன் முதலாளியையும் சபித்தார். கையில் ஒரு சின்ன பென்சில் மற்றும் எழுதும் தாளோடு முன்னே தயாராய் வந்து வந்து நின்ற மிஸ் பெட்டி - க்ரூவையும் சபித்திருப்பார். ஏனோ அதனை செய்யவில்லை!

நான் எங்களுடைய பிரிய ஒட்டைச்சிவிங்கியை அவரது குரோதத் திலிருந்து சரியான நேரத்தில் காப்பாற்றி விட்டேன். நிலத்தில் போட்டு காலடியில் அதனைக் கடைந்தெடுக்க அவர் தவறியிருக்க மாட்டார் என்றே சொல்வேன்!

எங்கள் திட்டம் என்னாயிற்று என்றால்.. சர் ஆஸ்டஸ் வரப் போவதில்லை என முடிவெடுத்து ஓட்டலிலேயே தங்கிய பிறகு, மிஸ் பெட்டி-க்ரூவும், திடீரென தனது சேவை அவருக்குத் தேவைப்படலாம் என்ற அறிவிப்போடு அவர் கூடவே மரியாதையாய் தங்கிவிட்டார். ஓட்டல் விட்டு வெளியே இறங்கியிருக்க வேண்டியது தான் பாக்கி.. அப்போது போய், ஸூஸேனி, அவருக்குக் கடும் தலைவலி உண்டாகி விட்டதால் வரப் போவதில்லை என்ற சீட்டினை அனுப்பி வைத்தார்.

ஆக, நானும் கலோனல் ரேஸூம் மட்டும் தனியாய் கிளம்பினோம்.

ரேஸ், ஒரு புரிந்துக் கொள்ளயியலாத மனிதன். இதனை, பலர் கூடியிருக்கும் நேரங்களில் ஒருவரால் கவனிக்க முடிவதில்லை. ஆனால், ஒருவர் அவரோடு தன்னந்தனிமையில் விடப்படும் போது, 'அனைத்தும் தானே' என்பது மட்டுமே அவருடைய வீரியமான குணாதிசயம் என்பது தெரிந்து விடுகின்றது. வாய் விட்டுப் பேசிப்பழகாமல் மௌனமாகி விடுகின்றார். ஆயினும், அவருடைய மௌனம், பேசி சாதிப்பதைவிட பன்மடங்கு வென்று விடுகின்றது.

மஞ்சளும் ப்ரௌன் நிறமும் கலந்த மலர்கள் புதராய் மண்டிக் கிடந்த மே-டாப்ஸ் பகுதிக்கு அன்று அவரோடு சென்ற தினத்தில் இதனை நான் அனுபவித்தேன். எல்லாமும் அந்நியமான ஒருவித மௌனத்திலேயே இருந்தன. எங்களுடைய காரைத் தவிர! அது தான் மனிதனால் உருவாக்கப்பட்ட முதல் கார் என்ற நினைத்தேன்! அதன் மேற்கூரை துணி முழுவதும், பல ரிப்பன்கள் போல துண்டுத் துண்டாய் பறந்துக் கொண்டிருக்க, என்ஜின்களைப் பற்றி ஒரு மண்ணும் அறியாத என்னாலேயே கூட, காரின் உள்ளுக்குள் இருக்க வேண்டிய அறியாத அத்தனையும் சிறப்பானதாய் இல்லை என்பதை உணர முடிந்தது.

போய்க் கொண்டிருக்கும் போதே சுற்றுவட்டாரத்தின் தோற்றங் களில் மாற்றங்கள் தோன்றலாயின. மழை, புயல் ஆகியவற்றால் காலகாலமாய் சிதிலமடைந்திருந்த மாபெரும் பாறைக் கூட்டங்கள் தட்டுப்படலாயின. அவை பலவிதமான ஆச்சரிய வடிவங்களை அடைந்திருந்தன. ஆதிகாலத்துக்குள் திடுமென இறக்கப்பட்டு விட்டதாய் உணர்ந்தேன் நான். அப்பாவுக்கு நிஜமாய் தோன்றி வந்த

இரண்டு லட்சம் ஆண்டுகளுக்கு முற்பட்ட மனிதக் கூட்டம், எனக்குள்ளும் நிஜமானதை உணர்ந்தேன்.

கலோனல் ரேஸ் பக்கமாய்த் திரும்பினேன் நான். ''ராட்சதத் தோற்றம் கொண்ட மனிதர்கள் வாழ்ந்த காலமும் ஒன்று இருந்திருக்க வேண்டும்'' என்றேன் நான். கனவாய். ''அவங்க குழந்தைகளும் இப்ப இருக்கிற நம்ம குழந்தைங்க மாதிரியே தான் இருந்திருக்கணும்... என்ன சொல்றீங்க...? கை கொள்ளாம கூழாங்கற்களை அள்ளிக்கிட்டு, அதையெல்லாம் வரிசையாய் ஒண்ணு மேல ஒண்ணு அடுக்கி, விழாம பேலன்ஸ் பண்ணி, அதுல சந்தோஷம் அடைந்து, பிறகு தள்ளி விட்டு...!இதுக்கு என்னை ஒரு பேர் வைக்கச் சொன்னா 'ராட்சஸக் குழந்தைகளின் தேசம்'னு வைப்பேன்.''

''அப்படிப்பட்ட ஒரு பகுதிக்கு தான் நீங்களும், இப்ப வந்திருக்கீங்க'' என்று ஆழ்ந்து சொன்னார் கலோனல் ரேஸ். ''எளிமை, ஆனாலும் பெருசு! கூடவே கற்காலம் - அது தான் ஆப்பிரிக்கா.''

நான் பாராட்டும்படி ஒப்புதலாய் தலையசைத்தேன்.

''உங்களுக்கு இந்த இடம் பிடிக்குது இல்லையா?'' என்றேன் நான்.

''ஆமாம், ஆனா இங்கேயே வாழறதுனா நாம வழக்கமா 'கொடூரமானவன்' அப்படினு பட்டம் தரோமே, அவனைப் போன்றவங்களால தான் முடியும். வாழ்வையும் சாவையும் சரிநிகர் சமானமா நினைக்கறவங்க, ஆங்!''

''ஆமாம்'' என்றேன் நான், ஹார்ரி ரேபர்னை மனத்தில் சுமந்துக் கொண்டு. அவனும் இப்படிப்பட்டவன் தான். ''ஆனா, அப்படிப் பட்டவங்க, வலிமையற்றவங்க கிட்டே கொடூரமா நடந்துக்க மாட்டாங்க, இல்லையா?''

''எது வலிமையுள்ளது, எது அப்படி வலிமையற்றது என்பதுல மாறுபட்டக் கருத்துக்கள் உண்டு, மிஸ் ஆனே.''

முக்கியத்துவம் மிகுந்த குறிப்பு அவரது குரலிலிருந்தது அஃது என்னைத் துணுக்குற வைத்தது. இந்த மனிதனைப் பற்றி நான் மிக மிகக் கம்மியாய் தெரிந்து வைத்திருப்பதாய் உணர்ந்தேன்.

''நான் குழந்தைகளைக் குறிப்பிட்டேன், ஆங்!''என்றேன் நான்.

''குழந்தைகளிடம் என்னிக்குமே நான் கொடூரமாய் இருந்தது கிடையாது, ஆனே. ஆங்... அப்ப நீங்க பெண்களை 'வலிமை யற்றவர்களா' வகைப்படுத்தலியா?''

இக்கேள்வியை நான் முதலில் உள்வாங்கிக் கொண்டேன். பிறகு பதில் தந்தேன். ''ம்ம்... அவங்க இயற்கையிலேயே வலிமை

குறைஞ்சவங்களா இருந்த போதிலும் சொல்றேன் அப்படி நான் நினைப்பதா தோணலே. ஆனா, ஆரம்பக் காலங்கள்ல, ஆணும் பெண்ணும் சரிசமமாத் தான் உலகையே சுத்தியிருக்காங்கன்னு அப்பா சொல்லியிருக்கார். சரிநிகர் சமானமான சக்தியோடு - சிங்கம் மற்றும் புலி போல....''

''அப்ப ஒட்டைச்சிவிங்கிகள்?'' - தந்திரமான குரலெடுத்து இடைச் செருகலாய்க் கேட்டார் அவர்.

சிரித்துவிட்டேன். அந்த ஒட்டைச்சிவிங்கியை வைத்துக் கொண்டு எல்லோரும் காமெடி பண்ணுகின்றார்கள். ''ஒட்டைச் சிவிங்கிகள்! அவை, ஸ்திர குணமற்ற, நாடோடிகள் போன்றவை, தெரியுமா! சமூகம் எனும் ஓர் அமைப்பு உருவாகி ஆணுக்கென்று சில குறிப்பிட்ட வேலைகளும் பெண்ணுக்கென்று சில தனிப்பட்ட வேலைகளும், நிரந்தரமா பிரித்துத் தரப்பட்ட போது தான் பெண்கள் பலஹீனமானவர்களா ஆனாங்க. இருந்த போதிலும், அடியாழத்தில், இன்னும் நாங்க அப்படியே தானிருக்கோம். ஆதிகாலத்துப் பெண் போலே - அதே சக்தி உணர்தலோட....! இதனால் தான் சக்தி எங்களை எப்பவுமே ஈர்க்குது. ஆண்களில் சக்தியைக் காணும் போது அவனையே நாங்கள் வணங்கித் தொழுது நிற்கிறோம். ஆணின் ஈர்ப்பினால் அல்ல. இது, அவனுடைய *சக்தி* உருவாக்கும் ஈர்ப்பினால் இதை மட்டும் தான் ஒரு காலத்தில் பெண்கள் வைத்திருந்தது. பிறகு இழந்தது.''

''மூதாதையர் வழிபாடு. ஆங்?''

''சொல்லிக் கொள்ளலாம். அல்லது, அது போல ஒண்ணு.''

''இது நிதர்சனத்துல உண்மைனா நீங்க நம்பறீங்க? பெண்கள் சக்தியை வழிபடுகிறார்கன்னு சொன்னீர்களே அதைக் கேட்கிறேன்.''

''இது தான் நிஜம் என்பது என் கருத்து. அறம், தர்மம், நெறி, அது இதுனு பேசலாம்... ஆனா, ஓர் உதாரணத்துக்குக் கேட்கிறேன். காதலில் விழும் போது, ஆதிகாலத்து செட் அப்புக்கே போய், அங்கு முதலில் ஜெயிப்பது *சக்தி* மிகு அழகு தோற்றம் நானே! ஆனா இது மட்டுமே தான் இறுதினு சொல்லிட முடியாது - நாம கற்காலத்துல வாழலியே ! - எத்தனையோ சட்டத்திட்டங்கள் கொண்ட நாகரீக யுகத்துல இல்லே இருக்கோம் அதனால் மேலும் பல விஷயங்களும் இடைபுகுந்து விஷயத்தை இறுதியாக்குது என்பது தான் நிஜம்!''

''ஆக இறுதியில்'' என சிந்தனையாய் குறிப்பிட்ட கலோனல் ரேஸ், ''வெறியாய் காதலில் விழுகிறோம். அப்புறம், அது ஒண்ணுமே

யில்லேனு விளங்கும் போது, அதே காதலிலிருந்து வெளியேறி எழுகிறோம். அப்படித்தானே சொல்ல வரீங்க?'' என்றார்.

''இது தான் ஒரே தீர்வுனு சொல்ல வரலே. இப்படி நீங்க அர்த்தப்படுத்திக்க விரும்பினா - ஆட்சேபணையில்லே!''

''நீங்க எப்பவாவது காதலிலிருந்து விடுபட்டு, விளங்கிக் கொண்டு, இறுதியா வெளியேறின ஒரு பொண்ணு மாதிரி எனக்குத் தோணலே, ஆனே!''

''ம்ம். அப்படி ஓர் அனுபவம் எனக்கு நேர்ந்தது கிடையாது'' என வெளிப்படையாய் ஏற்றுக் கொண்டேன்.

''காதலில் விழுந்ததாக் கூட எனக்குத் தோணலே.''

இதற்கு நான் பதில் தரவில்லை.

நாங்கள் சேர வேண்டிய இடத்தில் போய் கார் நின்று எங்களுடைய சம்பாஷணைக்கு முற்றுப் புள்ளி வைத்தது. இறங்கிக் கொண்டோம். உலகின் உச்சியைக் கண்டு ரசிக்க, ஏறலானோம். கலோனல் ரேஸின் அருகாமையால் மறுபடியும் அசௌகரியத்தை உணரத் துவங்கினேன் நான். அவரது கறுப்பு விழிகளுக்குப் பின்னால், எதிராளியால் துளையிட்டுக் காண முடியாத அளவுக்கு அவருடைய அனைத்து எண்ணங்களையும் திரையிட்டு மூடியிருந்தார். என்னைக் கொஞ்சமாய் பயமுறுத்தினார். இப்படித்தான் அவர் எப்போதுமே என்னை கிலி படுத்துகிறார். அவரருகில் நான் என்ன பாத்திரத்தில் நின்றுக் கொண்டிருக்கிறேன் என்பது கூட எனக்குப் பிடிபடவில்லை.

பெரும் பாறாங்கற்களின் பாதுகாப்போடு, ரோட்ஸ், நித்திய நித்திரைக் கொண்டிருக்கும் இடத்திற்கு நாங்கள் போய்ச் சேரும் வரை அமைதியாகவே வந்தார் அவர். அந்நியமாயும் அமானுஷ்யமாயும் விளங்கியது அவ்விடம். மலைப்பாங்கு சுலபத்தில் காணக் கிடைக்காத தனிமைப்பிரதேசம் அது.

எனக்கு முன்னால் கலோனல் ரேஸ் ஏறி நின்றுக் கொண்டார். பிறகு திரும்பி நான் ஏற உதவினார்.

''எகிறுங்க'' விரைவாய் குறிப்பிட்ட அவர், ஊன்றி எகிறி நான் ஏற வேகமாய் கை தந்தார்.

எகிறிய பிறகு மேலே என்னை விடுவித்தபோது அவரது கரவலிமையை உணர்ந்தேன். இரும்பு மனிதன். முறுக்குக் கம்பியாய் உடம்பு. அப்போதும், எனக்கு வழிவிட்டு விலகாமல் வழிமறித்து நின்றபடி, என் கண்ணோடு கண் ஊடுருவிய அவரது பார்வையால், நான் மீண்டும் கிலி கொண்டேன். அதே நிலையில் திடுதிப்பென்று,

''இங்கே வந்து நீங்க என்ன பண்ணிக்கிட்டிருக்கீங்க, ஆனே பெட்டிங்ஃபீல்ட்?'' என்றார். ''எதைக் துரத்திக்கிட்டு இப்படி அல்லாடிக்கிட்டிருக்கீங்க?''

கணநேரம் நிதானித்தேன். பின், பேசினேன். ''நான் ஒரு நாடோடிப் பெண்ணு! ஊருராப் போய் இடங்களைச் சுற்றிப் பார்த்து வியக்கிறேன்.''

''ஆமாம், இதுதான் நிஜம்னு எனக்கும் தெரியும். செய்தித்தாள் நிருபர் என்பதெல்லாம் வெறும் மாயை. பத்திரிக்கைக்காரனுக்கு இருக்க வேண்டிய ஒரு துளி தகுதியும் உங்ககிட்டே கிடையாது. ஆனா இப்போ நீங்களே உங்களுடைய கட்டுப்பாட்டை இழந்து தவிச்சுக்கிட்டிருக்கீங்க - தவற விட்டுடக் கூடாதுனு உங்களோட உசுரை இறுக்கமா கையில் படிச்சுக்கிட்டு! சரி தானே?!ஆனா, மொத்த சமாச்சாரமும் இவை மட்டும் கிடையாது''.

இப்படிப் பேசுவதன் மூலமாய் என்னிடமிருந்து என்ன எதிர்பார்க்கிறார்? பயந்துப் போனேன் நான் பயந்தே போனேன். நானும் அவரை முகத்துக்கு முகம் பார்த்தேன். அவரைப் போல என் கண்களால் ரகசியங்களைப் பொத்தி மறைக்க முடியாது. ''என் பிரச்சினையிருக்கட்டும். நீங்க இங்கே என்ன பண்ணிக்கிட்டிருக்கீங்க, கலோனல் ரேஸ்?'' என்று தடலாடியாய் கேட்டேன் நான்.

இதற்கு அவர் பதில் சொல்லப் போவதில்லை என்றே நினைத்தேன். அந்த அளவுக்கு அறையப்பட்டார் அவர். கடைசியில், ஆச்சரியம் தொனிக்க பின்வரும் பதில் தந்தார். ''ஓர் உயரிய நோக்கத்தை அடைவதற்காக முன்னேறிக்கிட்டிருக்கேன்.'' பிறகு சிறு இடைவேளை. தொடர்ந்தார். ''ஜஸ்ட், அவ்ளோ தான். ஓர் உயரிய நோக்கத்தை அடைவதற்கான முயற்சியில இறங்கியிருக்கேன்.''

மெதுவாய் நான் குறிப்பிட்டேன். ''நீங்க, நிஜத்துல, கவர்ண் மெண்ட்' டோடு தொடர்புள்ள வேலை செய்வதாய் சொல்றாங்க, ரகசியத் துறை அப்படினு. இது உண்மையா?''

விடை தருவதற்கு முன்னால் சில நொடிகள் அவரிடம் தோன்றியது தயக்கம் தானா? அல்லது அது என் கற்பனையா?

''இந்தப் பிரயாணத்தைப் பொறுத்த வரைக்கும் என்னுடைய தனிப்பட்ட சந்தோஷத்துக்காக மட்டும் தான் நான் வந்துக் கிட்டிருக்கேன் என்பது நான் நிஜம், மிஸ் ஆனே.''

அவர் இப்பதிலை உணர்ச்சிபூர்வமாய் தான் சொன்னார் ஆனாலும் பிறகு இதை சிந்தித்துப் பார்த்த போது பதிலில் ஒரு நிச்சயமற்றத் தன்மை இருப்பதை என்னால் காண முடிந்தது.

பேசாமலே திரும்பி நாங்கள் காரினை அடைந்திருந்தோம். புலவாயோ திரும்பிக் கொண்டிருந்த போது, புராதனக் கடைபோல் தோன்றிய ஒரு தெருவோரக் கடையில் தேநீர் அருந்துவதற்காக காரை நிறுத்தினோம். தனது தோட்டத்தில் எதையோ கிண்டிக் கொண்டிருந்த கடைக்காரன், எங்களது அழைப்பை ஒரு தொந்தரவாய் கருதி எரிச்சலானான். இருந்தாலும் ஏதாவது சாப்பிட இருக்கிறதா எனப் பார்த்து வருவதாய், தாராளமாய் பேசி விட்டுப் போனான். திரும்பி வர மாட்டானா என எண்ண வைத்த நீண்ட காத்திருத்தலுக்குப் பிறகு சில நமுத்துப் போயிருந்த கேக்குகள் மற்றும் சூடு குறைந்திருந்த தேநீரோடு திரும்பினான். பிறகு தனது தோட்டத்துக்குள் மறுபடியும் போய் மறைந்துவிட்டான்.

அவன் அந்தப் பக்கம் போயிருக்கக் கூட மாட்டான். எங்களைச் சுற்றி ஒருபூனைப்படையே ஓடி வந்து நின்றது. ஒரு சேர நின்றுக் கொண்டு மிகப் பரிதாபமாய் 'மியாவ் மியாவ்' என்றன. காதே செவிடாகும்படி கதறின. அவற்றுக்கு சில கேக் விள்ளல்களை நான் போட்டேன். வெறியாய் அவற்றைக் கபளீகரம் செய்தன. எனக்காக வந்திருந்த அத்தனை பாலையும் சிறு தட்டில் விட்டு வைத்தேன். ஒன்றுக்கொன்று சண்டை போட்டுக் கொண்டு குடித்து முடித்தன.

''ஓ....'' வெறுப்பாய் கத்தினேன் நான். ''பட்டினி போட்டிருக் கானுங்க! இது கொடூரம். ப்ளீஸ், ப்ளீஸ், இன்னொரு ப்ளேட் கேக்' கும் பாலும் சொல்லுங்க.''

என் கோபத்தைக் கண்டு மறுபதில் தராது, அமைதியாய் எழுந்துப் போனார் கலோனல் ரேஸ். பூனைகள் மறுபடியும் மியாவ் ராகம் படித்தன. திரும்பும் போது ஒரு பெரிய குவளை முழுக்கப்பால் கொண்டு வந்தார் அவர். பூனைகள் அனைத்தையும் குடித்துத் தீர்த்தன.

நான் ஒரு தீர்மானமாய் எழுந்துநின்றேன்.

''இந்தப் பூனைகளை, நம்ம கூடவேவீட்டுக்குத் தூக்கிட்டுப் போகப் போறேன். இதுங்களை இங்கேயே நான் விட்டு வைக்கப் போவதில்லை.''

''என்னருமை ஆனே! ஒரு முட்டாள் போல நடந்துக்காதீங்க. அம்பது மர பொம்மைகளையும் ஆறு பூனைகளையும் தூக்கிக்கிட்டு ஊரூரா நீங்க அலைய முடியாது.''

''அந்த மர பொம்மைகளைப் பற்றிய கவலை எனக்குக் கிடையாது. இந்தப் பூனைகள் உயிருள்ளவை. இதுங்களை என்னோட கொண்டு வரத்தான் போறேன்.''

''அப்படி எதையும் நீங்க பண்ண முடியாது.''

அதிகாரமாய் வந்த இக்குரலை விசனப்பட்டு நான் பார்க்க, அவர்தொடர்ந்த வண்ணமிருந்தார். ''நான் கொடூரமானவனா தெரியலாம். ஆனா இது போன்ற விஷயங்களிலெல்லாம் உணர்ச்சி வயப்பட்டு ஒருத்தனால வாழ்க்கையை நடத்திக்கிட்டுப் போக முடியாது. இப்படி மலங்க மலங்க முழிச்சு ஆகப் போவது ஒண்ணும் கிடையாது. இதுங்களைக் கூட எடுத்து வர நான் அனுமதிக்க மாட்டேன். இது ஒரு கற்கால நாடு.. இங்கேயெல்லாமே இப்படித்தான். மேலும், நான் உன்னை விட பலம் பொருந்தியவன், ஆங்...!''

மீள முடியாத அளவுக்கு வீழ்த்தப்பட்டு விட்டால், அதனை நான் உடனே அறிந்து விடுவேன். கண்கள் முழுவதும் கண்ணீர்த் திவலைகளைச் சுமந்துக் கொண்டு காருக்குத் திரும்பினேன் நான்.

ஆறுதல் தரும் குரலெடுத்து, ''இன்னிக்கு மட்டும் தான் அதுங்க பட்டினியோ என்னவோ'' என்றார் கலோனல் ரேஸ். ''வீட்டு சாமான்களை வாங்க அந்த ஆளோட சம்சாரம் புலவாயோ வரை போயிருக்கா. திரும்பி வந்ததும், பால் கொடுத்துடுவா. அதனால பாதகம் ஒண்ணுமில்லே. இருந்தாலும் ஒண்ணு நினைவு வெச்சுக்கோ, ஆனே. உலகத்தில் பசியில் துடிக்கும் கோடி பூனைகள் உண்டு.''

''அது கூடாது - கூடாது'' நடுக்கமாய் சொன்னேன் நான்.

''வாழ்க்கையை, எப்படி எதிர்படுதோ அப்படியே ஏற்றுக் கொள்ள உங்களுக்கு சொல்லித் தந்துக்கிட்டிருக்கேன், மிஸ் ஆனே. கடுமையாகவும் இரக்கமற்றும் இறுகிவிடும்படி சொல்லித் தரேன் - என்னைப் போல. இது தான் சக்தியின் ரகசியம் - மேலும் வெற்றியின் ரகசியம்.''

''அப்படினா - நான் இறுகுவதுக்குப் பதிலா - இறந்துடுவேன்.''

காருக்குள் ஏறினோம்... கிளம்பினோம்.... மெதுவாய் என்னை நானே ஆசுவாசப்படுத்திக் கொண்டேன். அப்போது திடுமென்று, என்னை ஆச்சரியத்தின் உச்சிக்குத் தூக்கிப் போடும் விதமாய், எனது கைகளை வலித்து, அவரது கைகளுக்குள் திணித்துக் கொண்டார் ரேஸ்.

மிருதுவாய், ''ஆனே'' என அழைத்தார். ''எனக்கு நீங்க வேணும். என்னைக் கலியாணம் பண்ணிக்கிறீங்களா?''

பொட்டிலறைந்தாற் போல் வீழ்ந்து போனேன் நான். ''ஓ. நோ'' தடுமாறினேன். ''என்னால முடியாது.''

''ஏன் முடியாது?''

''உங்களை நான் அந்தக் கோணத்துல நினைக்கலே. அப்படி உங்களை நான் ஒரு தடவை கூட நினைச்சது கிடையாது.''

''ஓ. அப்படியா, இது மட்டும் தானா காரணம்?''

இவ்விஷயத்தில் நான் உண்மையாய் இருந்ததாக வேண்டும். அவரை நம்பினேன். ஆகவே சொன்னேன். ''கிடையாது. இது மட்டும் காரணம் கிடையாது. இதுவும். நான் வேற ஒருத்தனை மனசுல வரிச்சு வெச்சிருக்கேன்.''

''ஓ, அப்படியா'' என்றார் மறுபடியும். ''இது ஆரம்பத்திலிருந்தே முடிவான ஒன்றா அதாவது உங்களை நான் முதன் முதலா கில்மார்டன்'ல பார்த்துக்கு முன்பிருந்ததே....?''

''கிடையாது'' முணுமுணுத்தேன் நான். ''இது அதற்கு பிறகிருந்து..!''

''ஓ, அப்படியா'' என்றார். மூன்றாவது முறையாய். ஆனால் இம்முறை, அவரது குரலில், வேண்டுமென்றே கொண்டு வந்து திணிக்கப்பட்டிருந்த ஓர் அபாய வளையம் தொனித்தது. அது, என்னை, திரும்பிக்கலவரமாய் அவரைப் பார்க்கச் செய்தது. இது வரை நான் அவரிடம் காணாத அளவுக்கு அவருடைய முகம் இறுகிப் போயிருந்தது.

''எ-ன்-ன.,...? என்னாச்சு?'' நிச்சயமற்றுத் திக்கினேன்.

இதற்கு அவர் என்னைப் பார்த்தார். அது, அர்த்தம் விளங்காத, அதே சமயம் ஆதிக்கம் செலுத்தும் பார்வை.''இனிமே நான் என்ன பண்ணணும்னு எனக்குத் தெரிஞ்சுடுச்சு.''

அவரது அளந்துப் பேசப்பட்ட இன்வாக்கியம் என்னுள் நடுக்கத்தைச் சிலுசிலுவென ஓட விட்டது. தீர்க்கமான முடிவு இவ்வார்த்தைகளின் பின்னால் வீரமாய் நின்றுக் கொண்டிருந்தது... அது என்னை அச்சுறுத்தியது.

ஓட்டலுக்குத் திரும்பும் வரை எங்களில் ஒருத்தரும் எதுவும் பேசவேயில்லை. நான் நேராக ஸூஸேனியிடம் ஓடினேன். படுக்கையில் படுத்துப் புத்தகம் படித்துக் கொண்டிருந்த அவருக்கு தலைவலி இருந்ததற்கான எவ்வித சுவடும் தெரியவில்லை. என்னைக் கவனித்ததும், ''என்ன, என்ன ஆச்சு, ஆனே டியர்?'' என்றார் கண்ணீராறு கரை புரண்டோட அவர் முன் நின்றுக் கொண்டிருந்தேன் நான்.

அவரிடம் பூனைகள் பற்றி விவரித்தேன். இவ்விஷயத்தில் கலோனல் ரேஸின் பங்கினைச் சொல்வது சற்றே அநாகரீகமாய் போய்

விடலாம் என கருதி சொல்லாமல் விட்டு வைத்தேன். ஆனால் ஸூஸேனி தான் கத்தி போல கூர்மையானவராயிற்றே. சொன்ன சமாச்சாரத்தில் சொல்லப்பட்டவைகளை விடவும் அதிகமாய் மறைந்திருப்பதாய் உணர்ந்தார் அவர்.

''உனக்கு ஒண்ணும், ஜன்னி பிடிச்சுடலையே, ஆனே? இந்தக் கொடிய கோடை காலத்துல இந்தக் கேள்வி முட்டாள் தனமா தெரியலாம். ஆனா நீ அந்த அளவுக்கு நடுங்கிக்கிட்டிருக்கே?''

''இது ஒண்ணுமில்லே'' என்றேன் நடுங்கிய ஒரு கையை மறு கையால் இறுக்கிக் கட்டுப்படுத்தியபடி. ''நடுக்கம் என்னவோ நடக்கப்போவது போன்ற ஒரு பயம் - அதனால் நடுக்கம் - நடுக்கம்! ஏதோ ஒரு படு மோசமான சமாச்சாரம் நடக்கப் போகுது என நான் உள்ளூர அலறிக்கிட்டிருக்கேன்.''

''போடீ மண்டு'' என்றார் ஸூஸேனி, குறிப்பிட்டதில் முடிவாய்! ''விடு. நாம ஏதாவது ருசிகரமான சமாச்சாரத்தைப் பற்றிப் பேசுவோம். ஆனே, அந்த வைரங்கள்...!''

''அதுங்களுக்கென்ன இப்போ?''

''அதுங்க என்கிட்டே இருப்பதுல பாதுகாப்பு உள்ளதா எனக்குத் தோணலே. மொதல்ல எந்த ப்ராப்ளமும் இல்லே. அது என் இருப்புல இருக்குணு ஒருத்தனும் நினைச்சிருக்க முடியாது. ஆனா, இப்போ, அத்தனை பேருக்கும் நீயும், நானும் நகமும் சதையும் போலனு தெரிஞ்சுட்டப் பிறகு, என் மீதும் சந்தேகப் பார்வை படர வாய்ப்பு வந்துடுது.''

''அப்படியே சந்தேகப்பட்டாலும் அவை ஒரு காமிரா பிலிம் பெட்டிக்குள்ளே இருக்கும்னு யாருக்கும் தோணாது தெரியாது!'' நான் வாதிட்டேன். ''அது அப்படி ஓர் அற்புதமான பதுக்குமிடம்... நாம எத்தனை சிந்திச்சிருந்தாலும் இந்த மாதிரி ஓரிடத்தை முடிவு செஞ்சிருப்போமா என்பது சந்தேகந்தான்!''

சிறு சந்தேகத்துடன் தான் நான் பேசியதை ஒப்புக் கொண்டார் அவர். ஆனால், ஃபால்ஸ் பகுதிக்குப் போன பிறகு இதுபற்றி மீண்டும் விரிவாய் பேச வேண்டும் என்று அறிவுறுத்தினார்.

எங்களது ட்ரெயின் ஒன்பது மணிக்குப் போய்ச் சேர்ந்தது. இன்னும் கூட சர் ஆஸ்டஸின் கோபம் தணியாமல் தகித்துக் கொண்டு தானிருந்தது. மிஸ் பெட்டி-க்ரூ, அவர் பக்கத்திலேயே அடிபணிந்துக் கிடந்தார். கலோனல் ரேஸ், தனக்குத்தானே அற்புதமாய் அடங்கிப்

போயிருந்தார். இதனைக் கவனித்த போது, நாங்கள் திரும்பி வரும் வழியில் என்னை அழ வைத்த அத்தனையும் ஒரு கனவாகவே ஆனது!

அன்று இரவு நீண்ட நேரம் தூங்கியது போலிருந்தது எனக்கு. வருத்தம் வரும் கவலையான கனவுகள் பல கண்டேன். தலைவலியோடு எழுந்த நான், எழுந்ததும் பார்வையாளர் பகுதியில் போய் நின்றுக் கொண்டேன். அனைத்தும் புதிதாகவும் அழகாயும் விளங்கின. பார்வைக்கு எட்டும் தூரம் வரை இடுக்கு இடைவெளி விடாமல் மரங்களும் குன்றுகளும் வியாபித்திருந்தன. இப்பகுதியை நெஞ்சின் ஆழம் வரை *விரும்பினேன்.* நான் இதுவரை பார்த்த எந்தப் பகுதியை விடவும் இப்பிரதேசத்தை நெஞ்சின் ஆழம் வரை விரும்பினேன் - *விரும்பினேன்!* அப்போது, இந்த மரக் குன்றுகளின் இடையே ஒரேயொரு சிறு குடில் எனக்காக இருந்து அதில் நான் காலகாலமும் இருந்து விடக் கூடாதா என தவிப்போடு ஏங்கினேன்.

இரண்டரை மணியிருக்கலாம். அப்போது உள்ளேயிருந்து வெளியே வருமாறு என்னை அழைத்த கலோனல் ரேஸ், அங்கு, ஒரு பெரிய சைஸ் பூங்கொத்து போன்ற வடிவத்துடன், பெரும் புதர் பகுதியை மேவியிருந்த நீர்த்துளிக் கூட்டத்தை எனக்குக் காட்டினார். ''அவை ஃபால்ஸ், அதாவது நீர் வீழ்ச்சி பகுதியிலிருந்து சிந்தியவை'' என்றார். ''நாம ஃபால்ஸுக்கு மிக நெருக்கத்துல இருக்கோம்.''

நான், என் பிறந்த மண்ணுக்கே திரும்பி வந்து விட்டது போன்ற ஓர் உணர்வுதான் இப்போது எனக்குள் ஊன்றியது. பின் வேரூன்றி வளர்ந்தது. மண் - பிறந்த மண்! ஆனால் நான் இங்கு ஒரு முறை கூட என் வாழ்நாளில் வந்ததில்லை என்பதே நிஜம் - ஒருவேளை கனவில் வந்திருப்பேனோ...?

ட்ரெயினிலிருந்து ஓட்டல் வரை நடந்தே திரும்பினோம். வழியில் எந்த நல்ல சாலையும் இருக்கவில்லை. வீடுகள் கிடையாது. சில பல • நெளிந்த பாதைகள் மற்றும் குன்றுகளைக் கடந்து போய் நிமிர்ந்தபோது கண்ட காட்சி, மூச்சையே நிறுத்துவது போலானது. அங்கே, அரைமைல் போல் தள்ளி, எங்களைப் பார்த்தவாறு நின்றுக் கொண்டிருந்தது, ராட்சஸ ஃபால்ஸ். இத்தனை அமர்க்களமாயும், ஆரவாரமாயும், அதே சமயம் அழகாயும் இதுவரை வேறொன்றை நான் கண்டதில்லை - இனி பார்க்கப் போவதுமில்லை!

''ஆனே, நீ புளகாங்கிதமா தெரியறே'' என்றார் ஸூஸேனி. நாங்களனைவரும் மதிய சாப்பாட்டுக்காகக் கூடியிருந்தோம். ''இப்படி சந்தோஷத்தின் உச்சத்துல நான் உன்னைப் பார்த்ததே கிடையாது.''

சொல்லி விட்டு என்னை ஆர்வமாய்ப் பார்த்தார் அவர்.

''அப்படியா தெரியறேன், நான்?'' - நம்ப முடியாமல் கேட்ட நான் சிரித்தேன். ஆனாலும் என் சிரிப்பு மிகைப்படுத்தப்பட்டு வருவதை நான் உணர்ந்தேன். ''இந்தக் கணத்துல நான் எல்லாத்தையும் ரசிக்கறேன் - அதனால்.''

''ம்ம். இது அதையும் தாண்டி!''

ஒரு சிறு குழப்ப வில், அவரது புருவத்தில் விளைந்தது - எதையோ கண்டு கொண்டு விட்டதால் விளையும் பயத்தைப் போல.

ஆமாம். அப்போது நான் சந்தோஷமாகத் தானிருந்தேன். ஆனால், அதையும் மீறி, ஏதோ விபரீதம் ஒன்று எனக்காகக் காத்திருப்பதைப் போன்று பயப்படபடப்பு என்னுள் கிளர்ந்தெழுந்துப் படர்ந்திருந்தது. மிக விரைவில் நடக்கப் போகிற எதுவோ ஒன்று. நான் உள்ளுக்குள் ளேயே உலுக்கப்பட்டுக் கொண்டிருந்தேன். இருப்புக் கொள்ளாமலு மிருந்தேன்.

தேநீர் முடிந்ததும், பனி மூட்டமும் நீர்ச்சாரலும் அடர்ந்த மரக் காடுகளும் நெடு நெடு பள்ளத்தாக்குகளும் கொண்டு கண்ணையும் கருத்தையும் ஒருசேர ஈர்த்து நிலை நிறுத்தும் ஃபால்ஸ் பகுதிக்கு சென்றோம். திகைத்தோம். திளைத்தோம். மயங்கினோம்.

சமவெளிப் பகுதியிலிருந்து நீர்வீழ்ச்சி அருகே கொண்டு போக ஒரு பாலமிருந்தது. சிறு பாலமது. அதைக் கடந்து அந்தப் பக்கம் போனோம். நடக்க வேண்டிய பாதை எது என்று சுற்றுலாவினருக்குச் சுட்டிக் காட்ட வெள்ளைச் சாயம் அடிக்கப்பட்டிருந்த கல் பாதை தென்பட்டது. அதில் முன்னேறினோம். இப்பாதையை விட்டு விலகி நடப்பது, இருமருங்கிலும் பள்ளங்கள் நிறைந்த இங்கு, அபாயகரமானதாகும். சொன்னது போலவே, ஒரு நிலையில், பாதை தடைபட்டு விட, பிறகு பெரிய பள்ளத்தாக்கு இருந்தது.

''பால்ம் செடிகளின் பள்ளத்தாக்கு'' எனக் குறிப்பிட்டார் கலோனல் ரேஸ். ''போவோமோ?'' என்று கேட்டார். ''இல்லேனா நாளைக்கு வெச்சுக்கலமாமா? கொஞ்ச நேரம் பிடிக்கும். மறுபடியும் ஏறணும்.''

''நாளை வரை விட்டு வைப்போம்'' முடிவாய் சொன்னார் சர் ஆஸ்டஸ் பெட்லர். கஷ்டப்படுத்தும் எவ்விதமான உடல் அலைச்சல் களும் அவருக்கு சம்மதம் கிடையாது - நான் கவனித்திருக்கிறேன்!

அவர் உடனே திரும்பி விட, கூடவே நாங்களனைவரும் திரும்பினோம். வழியில், ஓசைப்படாமல் நடந்துப் போய்க்

கொண்டிருந்த ஒரு கிராமத்தானைக் கடந்தோம். அவனுக்குப் பின்னால், அவனுடைய வேகத்துக்கு மூச்சிரைத்தபடி வந்த ஒரு பெண்மணியின் தலையில், வீட்டின் அத்தனை சாமான்களும் ஒருசேர பெரிய மூட்டையாய்க் கட்டப்பட்டு ஏற்றப்பட்டது மாதிரி இருந்தது! அதில் துருத்திக் கொண்டு ஒரு தோசைக்கல்லும்!

''எப்ப வேணுமோ அப்ப என் கையில் காமிரா இருக்காது!'' உறுமினார் ஸூஸேனி.

''இப்படித்தான் எல்லாருக்கும் திருமதி ப்ளேர்'' என்றார் கலோனல் ரேஸ். ''அவசரத்துக்கு எது வேணுமோ, அது இருக்காது! விடுங்க. டென்ஷனாகாதீங்க.'' திரும்பி பாலத்தை அடைந்திருந்தோம். ''ரெயின்போ காட்டுக்குப் போலாமா?'' என்று தொடர்ந்தார் அவர். ''இல்லே, நனைஞ்சுடுவோம்னு யோசிக்கிறீங்களா?''

இக் கேள்விக்குப் பதிலாய் நானும் ஸூஸேனியும் மட்டும் அவருடன் சேர்ந்துக் கொண்டோம். சர் ஆஸ்டஸ் ஓட்டலுக்குத் திரும்பி விட்டார். ஆனால் ரெயின்போ காடு என் எதிர்பார்ப்புக்குத் தீனியாய் அமையவில்லை. அப்படியொன்றும் பிரமிப்பூட்டும் வகையில் வானவில்கள் தென்படவில்லை. தோலின் ஆழம் வரை நனைந்துப் போனது தான் மிச்சமானது. எதிர்ப்புறத்திலிருந்த நீர்வீழ்ச்சியின் தோற்றத்தை அவ்வப்போது கண்களில் கிடைக்கப் பெற்றோம். அந்தத் தூரக் காட்சியின் போது தான், அது எத்தனை விசாலமானது என்பதே பிரமிப்பாய் புரிந்தது. ஓ, டியர், நீர்வீழ்ச்சிகளே! உங்களை நான் எந்த அளவுக்கு நேசிக்கிறேன் தெரியுமா?! எத்தனை ஆழமாய் பூஜிக்கிறேன் தெரியுமா?! ஐ லவ் யூ, டியர் ஃபால்ஸ்!

இரவுச் சாப்பாட்டுக்கான சரியான நேரத்தில் நாங்கள் ஓட்டல் திரும்பியிருந்தோம். இரு பெண்களான எங்களோடு திரும்பிய கலோனல் ரேஸைக் கண்டதும் இயற்கையாய் வெறுப்பு மண்டியது, சர் ஆஸ்டஸுக்கு. இதை வைத்துக் கொண்டு அவரை நாங்களிருவரும் ஓட்டினோம்.

சாப்பிட்டானதும், அவருடைய படிக்குமறைக்கு, பெட்டி-க்ரூவையும் கையோடே இழுத்துக் கொண்டு போனார் அவர். நானும் ஸூஸேனியும் சற்று நேரம் கலோனல் ரேஸுடன் இருந்தோம். பிறகு, ஒரு நீண்ட கொட்டாவியை விடுத்தபடி, தான் படுக்கப் போவதாய் அறிவித்தார் மிஸஸ். இந்த ஆளோடு தனியாய் விடப்பட நான் விரும்பாததால், நானும் கூட எழுந்துக் கொண்டு, அதே காரணத்தைக்

*கொட்டாவியை சாட்சிக்கு வைத்தபடி உதிர்த்துவிட்டு, என் அறைக்குக் கிளம்பினேன்.*

*ஆனால், உடனடியாய் தூங்கிவிட இயலாதபடி, மிகவும் படபடப்பிலிருந்தேன் நான். உடையைக் கூட கழற்றவில்லை. சாய்வு நாற்காலியில் அப்படியே உட்கார்ந்துக் கொண்டு நினைவுகளுக்கு வழி விட்டேன். கொஞ்ச நேரமாகவே ஏதோ ஒன்று என்னை நெருங்கி நெருங்கி வந்துக் கொண்டிருப்பதை என் உள்ளுக்குள் உணர்ந்தபடி யிருந்தேன் நான்...*

*அப்போது என் அறைக் கதவில் சில தட்டுகள் விழுந்தன. எழுந்துக் கொண்ட நான், யாரென்றுப் பார்க்கப் போனேன். கறுப்பு சிறுவ னொருவன் கடுதாசி ஒன்றைப் பிடித்தபடி நின்றுக் கொண்டிருந்தான். அதில், நானறிந்திராத் கையெழுத்தில், முகவரியாக என் அறை எழுதப்பட்டிருந்தது. அதைப் பிடித்தபடியே அங்கு நான் நின்றுக் கொண்டிருந்தேன். கடைசியாய் அதை நான் திறந்தேன். சின்னதாய் ஒரு குறிப்பு அது!*

**'நான் உங்களைப் பார்த்தே ஆக வேண்டும். நேரடியாக என்னால் ஓட்டலுக்கு வர முடியாத கெடுபிடி. உங்களால் பாலம் பள்ளத்தாக்குக்கு அருகே வர முடியுமா? கேபின் 17ன் ஞாபகார்த்தமாக வரக் கூடாதா? உங்களுக்கு ஹார்ரி ரேபர்ன் என அறிமுகமானவன்.'**

*மூச்சடைத்துப் போனது என் இதயம். எனில், அவன் இங்கு தானிருக்கிறான்! ஓஹ், என் உள்ளுணர்வுக்கு இது தெரிந்திருக்கின்றது. 'அப்பட்டமாய்' என அமானுஷ்யம் இதனை மோப்பம் பிடித்திருக் கின்றது! அவனை என்னருகிலேயே நான் உணர்ந்திருக்கிறேன். என்னையுமறியாது அவனிருக்கும் இடத்துக்கே நான் நழுவி வந்திருக்கின்றேன்!*

*என் கழுத்து, காது, முகம் எல்லாவற்றையும் சுற்றி ஒரு மஃப்ளரைக் கட்டிக் கொண்டேன். கதவு வரை ஊர்ந்து வந்து நின்றேன். நான் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். நான் வீழ்த்தப்பட்டிருக்கிறேன். நான் அவனை சந்திப்பதை மற்றொருவர் பார்த்து விடக் கூடாது. ஸூஸேனி அறை வரை அரவம் காட்டாது நழுவினேன். ஆழ்ந்த தூக்கத்திலிருந்தார் அவர். சீராய் அவர் மூச்சு விட்டுக் கொண்டிருப் பதைக் கவனிக்க முடிந்தது.*

*சர் ஆஸ்டஸ்? அவரது படிக்குமறைக்கு வாசல் வரை, பாம்பாய் நழுவிப் போய் பார்த்தேன். அவர், அவருடைய காரியதரிசி*

பெட்டி-க்ருவுக்கு எழுத வேண்டிய விஷயங்களைச் சொல்லிக் கொண்டிருந்தார். உணர்ச்சியற்ற குரலில், அந்தம்மா திரும்ப சொல்வதைக் கேட்க முடிந்தது. 'ஆகையால், நான் உங்களுக்குத் தரும் அறிவுரை என்னவென்றால்...' இங்கு, மேற்கொண்டு, சர் ஆஸ்டஸ் சொல்வதற்காக பெட்டி-க்ரு தயங்கி நிற்க, கோபமாய் அவர் எதுவோ முணுமுணுப்பது தெரிந்தது.

மேலும் நழுவினேன். கலோனல் ரேஸின் அறை காலியாயிருந்தது. வரவேற்புப் பகுதியிலும் அவரை என்னால் காண முடியவில்லை. மேலும், அவர் தான் நான் அதிகம் பயப்படும் ஒரே மனிதன்! இருப்பினும், இதை நினைத்தபடி நான் காலம் கடத்தக் கூடாது. வேகமாய் ஓட்டலிலிருந்து நழுவிய நான் பாலம் நோக்கிப் போயிருந்தேன்.

அதையும் கடந்தேன். பின் சட்டென மறைந்து நின்றேன். என்னை யாராவது பின்தொடர்ந்து வந்திருந்தால் அவர் நிச்சயம் பாலத்தைக் கடந்துப் போய் விடட்டும் என்ற எதிர்பார்ப்பில்! ம்ம், நிமிடங்கள் தான் கடந்தனவே ஒழிய, யாரும் எனக்குப் பின்னால் வரவில்லை. நான் பின்தொடரப்பட வில்லை. வெளியேறிய நான் பள்ளத்தாக்குக்கு நீண்ட வழியைத் தெரிந்தெடுத்துக் கொண்டேன். ஆறேழு அடிகள் தான் முன்னேறி யிருப்பேன். அப்போது அப்படியே நின்று விட்டேன். ஏதோவொன்று எனக்குப் பின்னால் சலசலத்தது. அது, ஓட்டலிலிருந்து என்னைப் பின்தொடர்ந்து வந்த யாராவது ஒருவராய் இருக்க முடியாது. எனில் - அது - யாரோ, இங்கேயே, எனக்காகக் காத்திருந்தவராகத் தான் இருக்க வேண்டும்.

அப்போது, உடனடியாக, காரணம் சொல்லி விளக்க முடியாத தினுசில், ஆனால் உள்ளுக்குள்ளேயே உந்திக் கொண்டு உருவான கிலி உணர்ச்சியால், எனக்காக இப்பள்ளத்தாக்கில் மாபெரும் அபாயம் ஒன்று காத்திருப்பதாக விளங்கியது. அன்றிரவு கில்மார்டன் மாளிகையில் நான் அனுபவித்த அதே உணர்வு என்னைச் சுற்றி நெருங்கிக் கொண்டிருக்கும் ஆபத்து குறித்த, நிச்சயமான ஒரு முன்னெச்சரிக்கை மணி!

திரும்பி, தோளின் வழியே பார்த்தேன். அமைதி. அப்படியே நிதானித்தேன். பின் ஓரிரு அடிகள் எடுத்து மேலே வைத்தேன். மறுபடியும் அதே சலசலப்பினை நான் கேட்டேன். நடையை நிறுத்தாமல் தொடர்ந்தபடியே, நான் என்னுடைய தோள்களின்

வழியாக திரும்பிப் பார்த்தேன். நானிருந்த மறைவிலிருந்து ஒரு மனிதனின் உருவம் வெளியேறி வந்தது. நான் அதனைக் கவனித்து விட்டதைக் கண்டு விட்ட அது, பாறாங்கல்லாய் குதித்து எனது பாதையில் விழுந்தது.

யாரையும் அடையாளம் காண முடியாத அளவுக்கு கும்மிருட்டாய் இருந்தது, பிரதேசம். என்னால் பார்த்து குறித்துக் கொள்ள முடிந்ததெல்லாம் - அது, மிக நெட்டையான ஒன்று... ஆங்கிலேயன் தான். ஆப்பிரிக்கனல்ல. தாமதிக்கவில்லை. கால்களுக்கு வேலை தந்து பறந்தேன். அவனும் குதிகால் தலையில் பட என்னை விரட்டத் துவங்கியதைக் கேட்டேன். அவன் வேகத்தை விஞ்சி துரிதமாய் ஓடிய நான், அன்று நிலா ஒளி இல்லாத காரணத்தால் எங்கு காலடி பதித்து முன்னேற வேண்டும் என பாதையைச் சுட்டிக் காட்டிய வெண் கற்களில் மட்டும் கண்களைப் பதித்து விரைந்தேன்.

அப்போது, திடுமென, என் கால்கள், அடியில், 'ஒன்றுமற்ற' தன்மையை உணர்ந்தன. எனக்குப் பின்னால் வந்தவன் பேயென வஞ்சகமாய் வெடிச் சிரிப்பு சிரிப்பது கேட்டது. அது என் காதுகளில் எதிரொலித்துக் கொண்டேயிருக்க, தலைக் குப்புற, கீழே, கீழே, உடலைச் சிதறடிக்கும் அதள பாதாளத்துக்குள், நான் வீழ்ந்துக் கொண்டிருந்தேன்.

# அத்தியாயம் - 25

என் சுய நினைவுக்குள், மெதுவாகவும் கடும் வலியோடும் நான் மீண்டு வந்தேன். வெடிக்கும் தலை வலியை உணர முடிந்தது. நகர்த்த நினைத்தபோது அப்படிச் செய்ய விடாமல் இடது கையில் மின்சாரமாய் பரவிய சுளீர் கடுமையைப் பரிதவிப்பாய் உணர முடிந்தது. நடந்த அத்தனையும் ஒரு தீக்கனாவாய், நம்ப முடியாததாய் பட்டது. கிலி பரவும் காட்சிகள் கண் முன் படர்ந்தன. மறுபடியும், அந்தரத்தில், குடல் பிடுங்கும்படி நான் கீழே விழுவதை அப்போது அனுபவித்தேன். ஹார்ரி ரேபர்னின் முகம் பனி மூட்டத்திலிருந்து பொத்துக் கொண்டு எனக்கு மிக சமீபத்தில் வந்து குவிவதை, ஒரு தடவை நான் உணர்ந்தேன். அதென்னவோ உண்மை போலத்தான் எனக்குப் பட்டது. ஆனால், என்னை மீண்டும் வருத்தத்தில் மூழ்கடித்து, அது விலகிப் போய் விட்டது. கரைந்து விட்டது. இன்னொரு தடவை, யாரோ ஒரு சின்னக் கோப்பையை என் உதட்டிடுக்கில் வைத்து, அழுத்திக் குடிக்க வைக்க முயற்சித்தது போல இருந்தது. என் முகத்துக்குள்ளேயே தனது முகத்தை நுழைத்து விட்டதைப் போன்ற ஒரு கறுப்பு முகம் அது... பிசாசு போல ஆழ்ந்த முகம்... அப்போது கத்தி விட்டேன் நான். பிறகு மறுபடியும் கனவுகள். நீளமான கனாக்கள். கஷ்டப்படுத்தும் தீக்கனாக்கள். அவற்றில், நான் ஹார்ரி ரேபர்னை எச்சரிக்கிறேன் - அவன் கேட்க மறுத்தாலும், எச்சரிக்கிறேன் - எச்சரிக்கிறேன் - எது குறித்து? எனக்கே அது எது குறித்து என தெரியவில்லை. கனவல்லவா! ஆனால் ஓர் ஆபத்து இருக்கின்றது - ஏதோ ஒரு கடும் ஆபத்து அது என்னால் மட்டுமே அதிலிருந்து அவனைக் காப்பாற்ற முடியும். பிறகு மறுபடியும் கருமை. இருட்டு. கருணை மிகும் இருட்டு. தொடரும் நிஜத் தூக்கம்.

இறுதியாய், ஒரு கட்டத்தில், மீண்டும் நானாய் எழுந்தேன். நினைவும் கனவுமாய் அலைக்கழித்த கடும் வேதனை தீர்ந்தது. நடந்த அத்தனையையும், ஊசலாடாமல் என்னால் துல்லியமாக நினைவுபடுத்த முடிந்தது. ஹார்ரியைச் சந்திக்கவென்றே விரைந்து

விரைந்து நான் ஓட்டலிலிருந்து ஓடோடி வந்து... ஒளிவில் இருந்த மனிதன்... கடைசியாய் நான் விழுந்த கடும் பள்ளத்தாக்கு...

தெய்வாதீனமாகவோ அல்லது விதியின் அனுக்கிரகத்தாலோ நான் கொல்லப்படவில்லை. முறுக்கப்பட்டிருந்தேன். உடைத்தெறியப் பட்டிருந்தேன், வலியில் தள்ளாமையாயும் அசூயையாயும் கிடந்தேன்... ஆனால், உயிரோடு! எங்கிருக்கிறேன் நான்? மிகக் கஷ்டப்பட்டு நகர்த்த முடியாத தலையை ஒரு சுற்று சுற்றிப் பார்த்தேன். மரத்தாலான சுவர்களால் ஆக்கப்பட்டிருந்த ஒரு சிறு அறையி லிருந்தேன். அவற்றில் மிருகங்களின் பல கனமான தோல்களும், பலவகை தந்தங்களும் மாட்டியிருந்தன. கல் போலிருந்த ஒரு கட்டிலில் நான் கிடந்தேன்... அதுவும் தோலினால் போர்த்தப்பட்டிருந்தது. என் இடக்கை கட்டப்பட்டிருந்தது. இதனால், கை, மரக்கட்டை போலவும் உபயோகிக்க வசதியற்றும் இருந்தது. ஆரம்பத்தில் ஏதோ நான் மட்டும் தான் அந்த அறையில் தனியாய் படுத்திருப்பதாய் உணர்ந்தேன். ஆனால், பிறகு, எனக்கும் அங்கிருந்த ஒரு மேஜை விளக்குக்கும் இடையே ஜன்னலைப் பார்த்தபடி ஓர் ஆடவனும் உட்கார்ந்திருப்பது புலப்பட்டது. மரத்தினால் கடைந்து வைத்த சிலை போல அவன் துளி சலனமற்றிருந்தான். இறுக்கமாய் வெட்டப்பட்டிருந்த அந்தக் கன்னங்கறு தேகத்தில் எனக்கு அடையாளம் தெரிந்த ஏதோ புதைந்திருந்தது. அது எது? அப்போது சட்டென அவன் திரும்ப, நின்றுப் போகவிருந்த என் மூச்சினைப் பிடித்து மீண்டேன் நான். அது, ஹாரிரி ரேபர்ன். நகமும் சதையுமாய் ஹாரிரி ரேபர்ன்.

எழுந்துக் கொண்ட அவன் என்னிடம் வந்தான். ''இப்பப் பரவாயில்லையா?'' - ஆதரவு மிகுந்த தயை வைத்துக் கேட்டான்.

என்னால் வார்த்தைகள் கோர்த்துப் பதில் சொல்ல முடியவில்லை. முகத்தின் இருமருங்கிலும், தலையணை நோக்கிக் கண்ணீர் கோடு போட்டது. ரொம்பவும் சத்தற்று வீழ்த்தப்பட்டிருந்த போதிலும், இருந்த பலமனைத்தையும் திரட்டி, அவனது இரு கைகளையும் என் கைகளுக்குள் நடுங்கியபடி பிடித்துக் கொண்டேன் நான். புதுப்பிக்கப் பட்ட பார்வையோடு என்னை ஆழமாய் ஆர்வமாய் அவன் பார்த்துக் கொண்டிருக்கும் போதே, நான் செத்துப் போய்விடக் கூடாதா...?!

''அழாதீங்க, ஆனே. தயவு செய்தும்மா... அழாதீங்க. நீங்க இப்பப் பாதுகாப்பா இருக்கீங்க, இங்கே யாராலும் உங்களைத் தாக்க முடியாது.''

அவன் எழுந்துப் போய் ஒரு கோப்பையை எடுத்துக் கொண்டு என்னருகில் வந்தான். ''இந்தப் பாலைக் கொஞ்சம் குடிங்க.''

நான் மரியாதையாய் குடித்தேன்! செல்லமாய்ப் பேசி ஒரு குழந்தையைப் பணிய வைப்பது போல அவன் பேசிக் கொண்டேயிருந்தான்.

''இப்போ மேற்கொண்டு எந்தவொரு கேள்வியையும் நீங்க கேட்காதீங்க. மறுபடியும் தூங்குங்க. மெது மெதுவா நீங்க பழைய நிலைக்கு மாறுவீங்க. நல்ல, சக்தியா. இதுதான் இப்போதைக்கு மிக முக்கியம். இடையூறே கூடாது. வேணும்னா சொல்லுங்க - நான் கூட இங்கேயிருந்து போயிடறேன்.''

''வேண்டாம்'' என்றேன் நான் அவசர அவசரமாய், ''வேண்டாம், வேண்டாம்.''

''அப்ப நான் இருக்கேன்.''

ஒரு சின்ன ஸ்டூலை என் தலைமாட்டில் கொண்டு வந்து போட்டவன் அதில் உட்கார்ந்துக் கொண்டான். அவன் கையை எடுத்து என் கை மேல் வைத்துக் கொண்டவன், மிக மிருதுவாய் தடவிக் கொடுத்தும் வருடி விட்டும் நம்பிக்கையூட்டினான். நான் மறுபடியும் ஒரு முறை தூக்கத்துக்குள் விழுந்தேன்.

அப்போது சாயங்காலப் பொழுதாய் தானிருக்க வேண்டும். ஆனால் நான் மறுபடி விழித்தபோது சூரியன் தலைக்கு மேல் சுள்ளென காய்ந்துக் கொண்டிருந்தான். அறையில் நான் மட்டும் தானிருந்தேன். சிறு சலனத்தை நான் ஏற்படுத்தியதும், அங்கிருந்த அவ்வூர் கிழவியொருத்தி விழுந்தடித்துக் கொண்டு என்னை நோக்கி ஓடி வந்தாள். விகாரமான உருவத்தில் அவளிருந்தாலும், நான் சீக்கிரம் குணமாகி விட வேண்டுமென்று உற்சாகம் தந்து பேசினாள். ஒரு குவளையில் தண்ணீர் கொண்டு வந்த அவள், முகத்தையும் கை கால்களையும் நான் கழுவிக் கொள்ள ஒத்தாசை செய்தாள். பிறகு ஒரு பெரிய சொம்பில் 'சூப்' கொண்டு வந்து தந்தாள். அதன் கடைசி சொட்டு வரை குடித்து விட்டேன் நான்! பிறகு வரிசையாய் பல கேள்விகளை நான் அவள் முன் வைத்தேன். அவற்றிற்கு அவள் முறைத்தாள்... உறுமினாள்... இளித்தாள்.. விடாது நானும் கேள்விகளைத் தொடர, கண்ணகல என்னைப் பார்த்து விட்டு குனிந்துக் கொண்டாள். அவளுக்குக் காட்டு பாஷைதான் தெரிந்திருக்கிறது - என் பாஷை அல்ல, என்பது பிறகு தான் எனக்கு விளங்கியது!

அப்போது திடுமென மரியாதை கலந்து எழுந்து நின்று விட்டு பிறகு முதுகு வளைத்து மரியாதை காட்டி விட்டு ஓரமாய் ஒதுங்கி நின்றாள் - ரேபர்ன் உள்ளே வந்ததற்கு! அவளுக்கு ஒரு சிறு கண்ணசைவில் வெளியேற ரேபர்ன் கட்டளையிட, எங்களைத் தனிமையில் விட்டு விட்டு வெளியேறினாள் அவள். என்னைப் பார்த்து சிரித்தாள்.

''இன்னிக்கு ரொம்ப முன்னேற்றம் தெரியுது!''

''ஆமாம். நிச்சயமா. ஆனா இன்னும் பயமாவே இருக்கு. இப்ப நான் எங்கேயிருக்கேன்?''

''ஸாம்பஸீ பகுதியின் ஒரு சின்ன தீவுல. ஃபால்ஸ் பகுதியிலிருந்து நாலு மைல் - மேல் பக்கமா.''

''என் என் என் நண்பர்களுக்குத் தெரியுமா, நான் இங்கே தானிருக்கேன்'னு?''

மறுப்பாய் தலையசைத்தான் அவன்.

''அப்போ அவங்களுக்கு நான் தகவல் அனுப்பனுமே.''

''அது உங்க இஷ்டம்... ஆனா, நான் உங்க நிலைமையிலிருந்தா, இன்னும் என் உடல் நிலையில முன்னேற்றம் ஏற்படற வரைக்கும் நான் காத்திருப்பேன்.''

''ஏன்?''

இதற்கு அவன் உடனடியாய் பதில் தரவில்லை. ஆகவே நான் மேற்கொண்டு பேசினேன்: ''எத்தனை நாளா நான் இங்கே யிருக்கேன்?''

''நாட்களில்லே.''

''பின்னே?''

''மாதம்.''

''ஆ!''

''கிட்டத்தட்ட ஒரு மாசமா.''

''ஓ'' அலறி விட்டேன் நான். ''அப்ப நான் ஸூஸேனிக்கு நிச்சயமா தகவல் அனுப்பனும். அவங்க துடிச்சுப் போயிருப்பாங்க.''

''யாரது, ஸூஸேனி?''

''மிஸஸ் ப்ளேர். நான் அவங்களோடயும், கலோனல் ரேஸ் மற்றும் சர் ஆஸ்டஸ் கூடவும் ஓட்டல்ல இருந்தேன். ஆனா இதெல்லாம் தான் உனக்கு நல்லா தெரியுமே?''

மறுப்பாய்த் தலையசைத்தான் அவன். ''எனக்கு எதுவும் தெரியாது. ஒரு உடைஞ்ச மரக் கிளையில, சுய நினைவிழந்து, இடக்கை முறிஞ்சு

ஆடிக்கிட்டிருந்த நிலையில, ஒரு வெளவால் மாதிரி நீங்க தொங்கிக்கிட்டிருந்த சமாச்சாரம் மட்டும்தான் நானறிந்தது.''

''அந்த மரம் எங்கிருக்கு?''

''பள்ளத்தாக்கின் மலைச் சரிவுல. அங்கிருந்த இடுக்கிலிருந்து வளர்ந்த மரமது. அதன் ஒரு கிளையில் உங்களுடைய உடை மாட்டிக்கிட்டு உங்களை விழ விடாம இறுக்கமா பிடிக்கலேனா, அதள பாதாளத்துல விழுந்து பொடிப் பொடியாயிருப்பீங்க.''

நடுநடுங்கினேன் நான். அப்போது ஓர் எண்ணம் எனக்குள் வந்தது. ''நான் அங்கே வந்ததே உனக்குத் தெரியாதுனு சத்தியம் பண்றே. ஓ.கே. ஆனா அந்தக் குறிப்பு? அதுக்கு என்ன சொல்றே நீ?''

''எந்தக் குறிப்பு?''

''நீ எனக்கு அனுப்பின குறிப்பு. தவறாம அந்த நீர் வீழ்ச்சிப் பகுதிக்கு என்னை வரச் சொல்லி, நீ எனக்கு எழுதி அனுப்பிய குறிப்பு?''

அவன் என்னைப் பார்த்துத் தீவிரமாய் முழித்தான். சொன்னான்: ''நான் எந்தக் குறிப்பும் அனுப்பலே.''

மயிர்க் கால்களின் அடி வரை உலுக்கப்பட்டேன். அதிர்ஷ்டவசமாக இதை அவன் கவனிக்கவில்லை.

''அப்ப, அதெப்படி சரியா அந்த சமயத்துல, நீ அங்கே வந்து அதிசயமா நின்னே?'' கோபமேயில்லாதது மாதிரி எத்தனை சாந்தமாய் காட்டிக் கொள்ள முடியுமோ, அப்படி குரலை வைத்துக் கொண்டு கேட்டேன். ''அப்புறம்... உலகின் இந்த ஒதுக்குப்புறமான மூலையில வந்து ஒண்டிக்கிட்டு நீ அப்படி என்னதான் பண்ணிக்கிட்டிருக்கே?''

''நான் இங்கே வசிக்கிறேன்'' - ஒரே வரியில் பதில் தந்து விட்டான்.

''இந்த ஒண்ணுக்கும் உதவாத தீவுல, ஆங்?''

''ஆமாம். யுத்தத்துக்குப் பிறகு (★முதல் உலகப் போரை எழுதப்பட்ட நாவலிது. 1918) நான் இங்கே வந்துட்டேன். ஓட்டல்ல தங்கியிருக்கிற சுற்றுலா பயணிகளை படகுல ஏத்திக்கிட்டு சுத்திக் காட்டுவேன். இது சில சமயங்கள்ல தான். இங்கே வாழறதுக்கு ரொம்பக் கம்மியான செலவுதான் ஆகுது. ஸோ, எனக்கு எப்பல்லாம் தோணுதோ, அப்பல்லாம் சம்பாதிக்கப் போவேன் - படகு சவாரி.''

''இங்கே நீ தனியாவா வாழறே?''

''ம்'' என்றவன் தொடர்ந்தான்: ''ஒரு கரி மூட்டை மாதிரி உங்களைத் தூக்கி என் தோள்களுக்குக் குறுக்கே போட்டுக்கிட்டேன்.

என் படகு வரை சுமந்து நடந்தேன். கற்கால மனிதன் போலனு வெச்சுக்கோங்களேன்.''

''ஆனா வேற ஒரு வித்தியாசமான காரணத்துக்காக!'' என திருத்தினேன்.

கோபத்தாலா, அவமானத்தாலா, நாணத்தாலா என தெரியாத வண்ணம், இப்போது அவனுடைய முகம் நிறங் கொண்டது. கண்கள் முழுவதும் நீர்த்திவளைகள் ததும்பி நின்றன.

''ஆனா என்னை எதுக்காக அப்போ நீ தேடிக்கிட்டு அங்கே வந்தே என்பதற்கான காரணத்தை இன்னும் சொல்லவேயில்லை!'' - அவசர அவசரமாய் அவனுக்குள் விளைந்துள்ள குழப்பத்தைத் திசை திருப்பக் கேட்டேன் நான்.

''அன்னிக்கு என்னால ஏனோ தூங்க முடியலே. இருப்புக் கொள்ளாமை. உள்ளுக்குள்ளே கலவரம். அமைதியின்மை. பைத்தியம் பிடிக்காத நிலை. முடிவாய் எழுந்தேன். இங்கிருந்து கிளம்பி கரை அடைந்தேன். ஃபால்ஸ் நோக்கி சிறு நடை நடக்கத் துவங்கினேன். பால்ம் பள்ளத்தாக்கு பக்கமா வந்திருக்கக் கூட மாட்டேன்... உங்களுடைய கதறல் கேட்டது.''

''பக்கத்திலேயே இருந்த ஓட்டலிலிருந்து உதவி வாங்காம எதுக்காம என்னை இத்தனை தூரம் நீ தூக்கிக்கிட்டு வரணும்?'' - நான் கேட்டேன்.

மறுபடியும் இதுபோன்ற குறுக்குக் கேள்வியை உதாசீனப்படுத்துவ திலேயே இருந்தான் அவன். ''உங்களுக்கு அதிகபட்ச சுதந்திரம் தரப்பட்டிருக்குனு நினைக்கிறேன் இல்லே, நீங்க, உங்களுக்குத் தரப்பட்டுள்ள சுதந்திரத்தை அளவுக்கதிகமா உபயோகிக்கணும்! இப்பவும் கூட உங்களைச் சுற்றியிருக்கும் ஆபத்தை நீங்க உணர்ந்துள்ளதா எனக்குப் படலே! உங்க நண்பர்களைக் கூப்பிட்டு நடந்தவைகளை நான் சொல்லியிருக்கணும்னா எதிர்பார்க்கிறீங்க? அற்புத நண்பர்கள் - மரணம் வந்து மிகச் சுலபமா உங்களைக் கடத்திப் போக விட்டு விட்ட அற்புத நண்பர்கள்! வேறு எவரையும் விட நானே உங்களுக்கு மிகச் சிறப்பான சிகிச்சைத் தர வேண்டும் என்று சத்தியம் செய்துக் கொண்டு இறங்கினேன். இந்தத் தீவைத் தேடிக்கிட்டு ஒரு நாதி வராது. ஒரு கிழவி இருக்கா... அவளைக் கடும் காய்ச்சலிலிருந்து ஒரு முறை நான் காப்பாற்றியிருக்கிறேன்... அதுக்காக எனக்குதவ அவ இப்போ முன் வந்திருக்கா. அவ நன்றியுள்ளவ. இது பற்றியெல்லாம்

ஒரு வார்த்தை பேசிட மாட்டா. உங்களை நான் இங்கே மாசக் கணக்கா கூட வெச்சிருக்கலாம். ஒருத்தருக்கு விஷயம் கசியாது.''

*உங்களை நான் இங்கே மாசக் கணக்கா கூட வெச்சிருக்கலாம்... ஒருத்தருக்கு விஷயம் கசியாது!* ஆஹா... சில வார்த்தைகள் தான் எப்படி ஆறுதல் தந்து விடுகின்றன!

இப்போது அமைதியாக, ''நீ சரியாத்தான் செஞ்சிருக்கே'' என்றேன் நான். ''நானும் இனி ஒருத்தருக்கும் ஒரு வார்த்தை கூட தகவல் அனுப்ப மாட்டேன். கூட கொஞ்ச கால படபடப்பு அவங்களை ஒண்ணும் செஞ்சிடாது. அவங்கள்ல யாரும் என்னோட உறவோ உடன்பிறப்போ கிடையாதே! அவங்கள்லாம், ரயில் சிநேகங்கள் - ஸூஸேனி உட்பட!'' என்ற நான், ''மேலும்'' என தொடர்ந்து சொன்னேன்:''எனக்கு யார் அந்தக் குறிப்பினை எழுதி அனுப்பினாங்களோ, அவங்களுக்கு எக்கச்சக்கமான விஷயங்கள் தெரிஞ்சிருக்கணும் தெரிஞ்சிருக்கு! இந்தத் துண்டுக் குறிப்பு, வெளியாள் ஒருத்தனோட வேலை கிடையாது.''

மறைத்து வைக்காமல் இந்த முறை அக்குறிப்பு பற்றிய சமாச்சாரத்தை நான் சொல்லி விட்டேன்.

''நான் சொல்ற மாதிரி நீங்க நடப்பீங்கன்னா - - -'' அவன் தயங்கிக் கொண்டே ஆரம்பித்தான். ஆனால் நான், ''அப்படியெல்லாம் நான் இருப்பேன்னு எதிர்பார்க்காதீங்க'' என்று வெளிப்படையாகவே சொல்லி விட்டேன். ''இருந்தாலும் உங்களுடைய கருத்தைக் கேட்கறதுலே பாதகமொண்ணுமில்லே.''

அவன் கேட்டான்: ''நீங்க என்ன செய்யணும்னு விரும்பறீங்களோ, அதை எப்பவுமே செஞ்சிடறீங்களா... மிஸ் பெட்டிடிங் ஃபீல்ட்?''

''வழக்கமா'' என்றேன் நான். இதையே வேறு யாராவது கேட்டிருந்தால் ''எப்பவுமே'' என்றிருப்பேன்.

''உங்க புருஷனை நினைச்சு நான் பரிதாபப்படறேன்!'' என்று திடுமென்று குறிப்பிட்டான் அவன்.

''அந்தக் கவலையெல்லாம் உங்களுக்கு வேணாம்'' என எதிர்த்தேன் நான். ''ஒருத்தன் மேல பைத்தியக்காரத்தனமா நான் காதல்ல விழுந்திருக்கேன்னு எனக்கே விளங்காத வரைக்கும், நான் கலியாணம் பற்றி கனவு கூட காண மாட்டேன். அப்படி மனம் கவர்ந்தவனுக்குப் பிடிக்கிறது எனும் ஒரே காரணத்துக்காக தனக்குப் பிடிக்கவே பிடிக்காத ஒரு விஷயத்தைப் பெண் செய்து அடையும்

இன்பத்துக்கு இணையான இன்னொரு விஷயம் உலகத்திலே கிடையாது, ரேபர்ன். இதை அனுபவிக்க காதலிக்கணும். எத்தனைக்கெத்தனை அவ காதல்ல ஸ்திரமா இருக்காளோ, அந்த அளவுக்கு இந்த அனுபவத்தைப் பருகலாம்.''

''இதை என்னால ஒத்துக்க முடியலே, ப்ளீஸ். கொஞ்ச நாள்ல இதையே அவளும் திருப்பி எதிர்பார்ப்பா, இல்லையா?'' சிறு உறுமலோடு இதனைக் குறிப்பிட்டான் அவன்.

''நிச்சயமா'' ஆவலாய், தொடர விரும்பினேன் நான். ''இது கூடாது என நினைப்பதால தான், பல அதிருப்தியான திருமணங்கள் அமைஞ்சிடுது. இது ஆண்களின் தவறு. ஒண்ணு, அவனுங்க பெண்களுக்கு முழு வழியையும் விட்டுட்டு விலகி நின்னுடறானுங்க. விளைவு: அப்பெண்கள் அவனுங்களை அமுக்கி அமுக்கியே கொன்னுடறாளுங்க. இல்லேனா, முழு சுயநலப் பதரா நிக்கறானுங்க. அவனுங்க வழியிலே தான் பெண்கள் வரணும்னு கட்டளையிட்டு, எதுக்கும் ஒரு 'தேங்க்ஸ்' கூட சொல்லாம இழுத்துக்கிட்டுப் போவானுங்க. தங்களுடைய மனைவிமார்கள் என்ன பண்ணணும்னு விரும்பறாங்களோ அதுக்குக் குறுக்கா நிக்காம வழி விடுபவர்கள் தான், வெற்றிகரமான கணவன்கள்! கூடவே அப்படி அந்தப் பொம்பிளைங்க செய்யும் ஒப்பேறாத விஷயத்தையும் ஒரு பெரும் பரபரப்பா கொண்டாடணும், ஆங்...! கணவன் தன்னை ஆளணும்னு பெண்கள் நினைக்கறாங்க... அதே சமயம் அவர்களுடைய தியாகங்கள் பாராட்டப்படாமல் போவதை அவர்கள் விரும்புவதில்லை. இந்த உளவியல் புரிஞ்சு நடப்பதற்கு மாறாக, வாழ்நாள் பூரா தனக்கு அனுசரணையா அமைதியா இருக்கும் மனைவியை ஒரே ஒரு முறை கூட இந்தக் கணவன்மார்கள் பாராட்டுவது கிடையாது. கவனியுங்க... எனக்குக் கலியாணம் ஆனா, ஒரு பிசாசா இருப்பேன் நான். ஆனா, சிற்சிலு, என் கணவனே எதிர்பாரா கணங்கள்ல, என்னாலும் ஓர் அதியற்புத தேவதையா இருக்க முடியும்னு நான் காட்டுவேன்.''

இதற்கு ஹாஹாஹாவென்று சிரித்து விட்டான் ஹார்ரி. ''அப்போ அது எப்படிப்பட்ட எலி - பூனை வாழ்க்கையா இருக்கும்!''

''காதலர்கள் - எப்பவும் சண்டையிடுவார்கள்!'' - அவனுக்கு நான் ஸ்திரப்படுத்திக் காட்டினேன். ''ஏன்னா, அவங்க ஒருத்தருக்கொருத்தர் புரிந்துக் கொள்வதே கிடையாது. ஒருவழியா கடைசியா ஒருத்தரை யொருத்தர் புரிஞ்சுக்க ஆரம்பிக்கும் போது அவங்க ஒருத்தருக் கொருத்தர் காதல்ல இருக்க மாட்டாங்க.''

''இதன் தலைகீழும் உண்மை தானா? ஒருத்தருக்கொருத்தர் சண்டையிட்டுக் கொண்டேயிருக்கும் இருவர் காதலர்களா இருக்க முடியுமா?''

''எ எனக்குத் தெரியலே'' - கணப்பொழுது குழம்பிப் போய் சொன்னேன் நான்.

அவன் எழுந்து கனப்புப் பக்கமாய் போனான். ''இன்னும் கொஞ்சம் சூப் குடிக்கிறீங்களா?'' - சாதாரணக் குரலில் கேட்டான்.

''ப்ளீஸ் வேணும். இப்ப எனக்கிருக்கிற பசியில ஒரு காண்டா மிருகத்தையே முழுக்க சாப்பிடுவேன்.''

''ரொம்ப நல்லது.''

மளமளவென அடுப்பு வேலையில் இறங்குபவனைக் கவனித்த நான், ''படுக்கையிலிருந்து எழுந்து நடமாட ஆரம்பிச்சதும், நான் உனக்காக சமைப்பேன்'' என்றேன்.

''ஓ... உங்களுக்கு சமைக்கக் கூட வரும்னு நான் நினைக்கவே யில்லே.''

''டின்னுக்குள்ளே பதப்படுத்தப்பட்டிருக்கிற உணவுகளை எடுத்து சுட வெச்சுப் பரிமாறத் தெரியும் எனக்கு'', என பெருமையாய் எதிர்த்த நான், மேலே பரணியிலிருந்த சில டின்களைச் சுட்டிக் காட்டினேன்.

''பெரிய சமையல் தான் அது!'' - சொல்லிவிட்டு கிண்டலும் நட்பும் ஒரு சேர சிரித்தான் அவன்.

இப்படி அவன் சிரிக்கும் போது அவன் முழு முக அமைப்பும் ஒட்டு மொத்தமாய் மாறியது. அது, ஒரு சிறு பயலின் துறுதுறு முகமாய் ஆனது. தலைக்குப்புற மாறி விட்ட ஒரு சாதாரண ஆளாய் சந்தோஷமாய்!

எனக்களிக்கப்பட்ட சூப்பினை ருசித்துப் புசித்தேன். குடித்துக் கொண்டிருக்கும் போதுதான், என்னை உபசரிப்பாய் கேட்ட அவன். ஒரு துளி கூட தனக்காக எடுத்துக் கொள்வதில்லை என்பதை அறிந்தேன்.

இப்போது, ''ஆங் நான் என்ன சொல்ல வந்தேன்னா,'' என ஆரம்பித்தான் அவன். ''நான் உங்க நிலைமையில இருந்தேன்னா, கை காலை சும்மா வெச்சுக்கிட்டு பரிபூரணமா குணமாகிற வரைக்கும் இங்கேயே பேசாம கிடந்துடுவேன். உங்களோட எதிரிங்க, அப்போ தான் நீங்க இறந்தாச்சுனு முழு முடிவுக்கு வருவானுங்க. அப்போ உடல்

எங்கே போச்சுனெல்லாம் அவனுங்க தேட மாட்டானுங்க. அதள பாதாளம். கீழே முழுக்கக் கூரான பாறாங்கற்கள். உடம்பு தூள் தூளா போயிருக்கும். அதை நீர்வீழ்ச்சி அடிச்சுக்கிட்டுப் போயிருக்கும். இப்படி நினைச்சுடுவானுங்க.''

நான் நடுநடுங்கினேன்.

''துல்லியமா நீங்க குணமடைஞ்ச பிறகு, மூச்சு காட்டாம பெய்ரா பகுதி வரை போய், அங்கேயிருந்து கப்பல்ல இங்கிலாந்துக்கு ஓடிடலாம்.''

''கோழைத்தனம்'' - கடுகடுப்பாய் குறிப்பிட்டேன் நான்.

''இந்த இக்கட்டுல போய் பள்ளிக்கூடப் பொண்ணு மாதிரி வீரம் பேசாதீங்க.''

''நான் ஒண்ணும் ஸ்கூல் பொண்ணு கிடையாது'' வெறுப்பும் கோபமும் கலந்து அலறினேன் நான். ''நான் வளர்ந்தப் பொண்ணு. கூடவே அழகி.''

என்னால் கணிக்க முடியாத பாவத்தோடு என்னைப் புதிதாய் பார்ப்பதைப் போல பார்த்தான் அவன். ''ஓ, கடவுளே!'' என ஆச்சரிய அதிசயமாய் சொன்னவன், ''ஆமாம். நீங்க அழகிய குமரிப்பொண்ணு தான்! வாவ்!'' என்றான்.

குனிந்துக் கொண்டு விட்டேன். எனது கோபமும் வெறுப்பும் எப்படி அப்போது அகன்றன!

துரிதமாய் நான் குணமடைய ஆரம்பித்தேன். எனக்கிருந்த இரண்டு மிக மோசமான காயங்கள்: ஒன்று, தலையில் கனமான அடி. மற்றொன்று படு மோசமாய் திருகிப் போயிருந்த இடக்கை. இரண்டாவது காயம் தான் தீவிரமானதாயிருந்தது. என்னைக் காப்பாற்றியவன், கை, உடைந்தே போயுள்ளது எனத்தான் கருதியிருக்கிறான். ஜாக்கிரதையாய் பரிசோதித்து பார்த்த போது, அப்படி ஏதுமில்லை என்ற நல்ல சேதி அவனுக்கு விளங்கியுள்ளது. கடும் வலியை அது தந்த போதிலும் தாங்கிக் கொண்ட நான் அக்காயத்திலிருந்தும் மீண்டுக் கொண்டிருந்தேன்.

இந்த இடைப்பட்ட காலம் ஒரு விளக்கயியலாத காலமாய் இருந்தது. ஆதாமும் ஏவாளும் எப்படி தன்னந்தனிமையில் இருந்திருப் பார்களோ, அப்படி, நானும் ரேபர்னும் மட்டும், உலகின் ஏனைய அனைத்திலிருந்தும் துண்டிக்கப்பட்டுத் தனியாக்கப்பட்டோம். ஆனால் ஒரு பெருத்த வித்தியாசம் எங்களது விஷயத்தில் இருந்தது. கூடவே அந்தக் கிழவியும்! காவக்கார நாயை விட மோசமாக

எங்களைக் கண்காணித்துக் கொண்டிருந்தாள் அவள். நானே சமையலைக் கவனித்துக் கொள்கிறேன் எனச் சொல்லிப் பார்த்தேன். இதற்கு அவள் அலறிய போது ஒரு கையால் என்னால் சமாளித்துக் கொள்ள முடியும் என்றும் சொல்லிப் பார்த்தேன். ம்ம்! ஹார்ரி ஒரு நாளின் பல மணி நேரங்கள் வெளியே எங்கேயோ போய் வந்தான். ஆனால், அவனிருந்த போதெல்லாம், பனைமர நிழல்களில் நீண்ட நெடுநேரம் கிடந்தோம், ஒன்றாய்! வானத்துக்குக் கீழேயிருக்கும் அனைத்தையும் பேசினோம். விவாதித்தோம். விவாதித்ததில் சண்டையிட்டோம். சண்டையிட்டதில் விவாதித்தோம். வேக வேகமாய் உணர்ச்சிவயப்பட்டு நாங்கள் கருத்து வேறுபாடு கொண்டதென்னவோ உண்மையே. ஆனாலும், உண்மையாயும் நீண்ட நாட்கள் நிற்கும் ஸ்திரத்தன்மையோடும், இப்படியெல்லாம் கூட சாத்தியம் என நான் நம்பவே வழியில்லாத ஆழ்ந்த சிநேகம், எங்களுக்குள் வளர்ந்துக் கொண்டிருந்தது.

நேரம் நெருங்க ஆரம்பித்தது. இதை நானே உணர்ந்தேன். உடல் நலம் அற்புதமாகிக் கொண்டிருந்தது. எனில் கிளம்ப வேண்டும். கனத்த மனத்துடன் உணர்ந்தேன். என்னை அப்படியே அவன் விட்டு விடத் தான் போகின்றானா? மறுப்பாய் ஒரு வார்த்தை கூட சொல்லாமல்? வார்த்தைகளற்ற குறிப்பாய் கூட உணர்த்தாமல்? அமைதியாகவே கிடந்து விடும் பலம் அவனுக்கு உண்டு. ஆகவே செய்தாலும் செய்வான். ஒரு மாலைப்பொழுதில் நான் பயந்துக் கொண்டிருந்த இந்த இக்கட்டு நேர்ந்தது. இரவுச் சாப்பாட்டை சற்று முன்னதாகவே முடித்திருந்த நாங்களிருவரும் குடிசையின் வாசலில் உட்கார்ந்திருந்தோம். சூரியன் தன்னை உள்ளுக்கிழுத்துக் கொண்டி ருந்தான்.

கூந்தல் கிளிப்புகள் ஒரு பெண்ணுக்கு மிக அத்தியாவசியமானவை. அதை எனக்கு ஹார்ரியால் வாங்கி வந்து தர இயலவில்லை. ஆகவே என் கூந்தலின் நெடு முடிகள் கணுக்கால் வரை தளர்ந்து சிக்கலாய் இருந்தன. குத்துக்காலிட்டு உட்கார்ந்து முகத்தை, இணைந்திருந்த இரு கால் முட்டிகளின் மீதும் பதித்து, இந்த என் அமைப்பைக் கூந்தல் முழுவதும் கருமையாய் மூடியிருக்கும்படி, அமர்ந்திருந்தேன்! இப்படி நானிருக்கும் கோலத்தை ஹார்ரி கவனிப்பதைக் கூட கவனிக்காமல்!'

இத்தனை நாட்கள் நான்இங்கிருந்த வரையிலும் அவனுடைய குரலில் நான் கண்டிராத கடுமையில் ஹார்ரி சொன்னான்: ''நீங்க ஒரு பிசாசு, ஆனே.''

அவனுடைய கையை நீட்டி என் கூந்தலைத் தொட்டான். நான் என்னையுமறியாது நடுங்கினேன். அப்போது சட்டென சபதமாய் பின்வருமாறு பேசினான்: ''நாளைக்கு நீங்க இங்கேயிருந்து கிளம்பியாகணும்... என்ன, கேட்குதா? எ... எ... என்னால... இனியும் உங்களைச் சுமக்க முடியாது. நான் சம்பாத்தியம் இல்லாத ஒரு தனிக்கட்டை, நினைவிருக்கில்லே? நீங்க கிளம்புங்க, ஆனே. கிளம்பியாகணும். சொல்வதைப் புரிந்துக் கொள்ள முடியாத முட்டாள் கிடையாது, நீங்க, ஓகே? இந்த நிலைமை இனியும் தொடர்ந்து நீடிக்க முடியாது என்பது உங்களுக்கே கூட தெரியும்.''

''ஆமாம்'' என்றேன் நான் மெதுவாய். ''ஆனா - இது சந்தோஷத்தின் உச்சமாய் இருந்தது. இல்லையா?''

''சந்தோஷம்? தூ! நரகம், நரகம்!''

''அவ்ளோ மோசமாவா இருந்தது?''

''ஓ... ஏன் என்னை நீங்க இப்படி வதைக்கிறீங்க? என்னை வெச்சு காமெடி பண்றீங்களா? ஆங்? எதுக்காக உங்க முடிக்குள்ளே முகத்தை மறைச்சு கிண்டலா சிரிச்சுக்கிட்டே அப்படிசொன்னீங்க? கொழுப்பா?''

முகம் முழுவதும் முடிக்கற்றையை விடுவித்துக் கொண்ட நான், ''நான் ஒண்ணும் சிரிக்கலே'' என்றேன். ''காமடியும் பண்ணலே. என்னை நீ போகச் சொன்னா, நான் கிளம்பறேன். ஆனா இருக்கச் சொன்னா இருந்துடறேன்.''

''அது வேணாம். அப்படி சொல்லி என்னைத் தூண்டாதே ப்ளீஸ்.'' - உக்கிரமாய் அலறினான் அவன்.

நான் நமுட்டுச் சிரிப்பினை மறைத்துக் கொண்டு, ''நீ என்னை திடீர்னு ஒருமையில கூப்பிடறே, உன்னையும் அறியாம'' என்றேன். இதற்கு அவனுடைய உக்கிரம் இன்னும் கூட ஏதோ பேச வாயெடுத்தவனை, ''ப்ளீஸ்'' என தடுத்த நான், ''ப்ளீஸ் ... அப்படியே இனி கூப்பிடு'' என்றேன். ''ஒருமையிலேயே!''

''ஆ..ஆ... ஆ..'' என்றலறினான் கடும் வலி கொண்டவனாய். ''நான் என்ன மாதிரியான ஒரு நிலைமையில் வாழறேன்னு உங்களுக்கு.. உனக்கு... உங்களுக்கு... உனக்கு.. உனக்குப் புரியலியா, ஆனே? இரண்டு முறை குற்றஞ்சாட்டப்பட்டுள்ள ஒரு குற்றவாளி. தீவிரமாய் தேடப்பட்டு வரும் ஒரு நபர். இங்கே என்னை ஹார்ரி பார்க்கர் அப்படினு மக்களுக்குத் தெரியும்! தொழில் விஷயமா

தூரத்தேசத்துக்குப் போய்ட்டு வரேன்னு நினைச்சுக்கிட்டிருக்காங்க. ஆனா என்னிக்கு வேணும்னாலும் நிஜத்தை இவங்கத் தெரிஞ்சுக்கலாம். அப்போ - என் தலை மீது இடி விழும். நீ அற்புதமான ஓர் இளையவள், ஆனே. கூடவே மிகச் சிறந்த அழகி. ஆண்களைப் பித்துப் பிடித்து உன் பின்னால் அலைய வைக்கவல்ல, அதிரூப அழகி. இப்படிப்பட்ட உன் முன்னால், உலகமே காத்துக் கிடக்கு. காதல், வாழ்க்கை, வசதி என எல்லாமே. என்னுடையது? நான் ஒரு வறண்டக் காடு - பாழாய் போனவன். வெறும் சாம்பல் போன்ற சுவையற்றவன்.''

''உனக்கு நான் வேண்டாம்னு நீ நினைச்சே' னா......''

''உனக்குத் தெரியும். எனக்கு நீ வேணும்னு! என் உயிரைக் கொடுத்தாவது உன்னை என் உள்ளங்கைகளில் சுமந்து, வெளி உலகத்திலிருந்து பிரித்து தனித்திருக்கும் இங்கே, காலகாலமாய் பொத்திப் பாதுகாப்பேன்னு உனக்கே தெரியும். இருந்தும், நீ என்னைக் கிண்டிப் பார்க்கிறே. ஆனே, நீ... உன்னுடைய அந்த நீண்ட கவர்ச்சிப் பிசாசுக் கூந்தலோடு... தங்கமும் நீலமும் கருமையும் கலந்து டாலடிக்கும் உன் கண்களோடு... ஆழ்ந்த வருத்தத்திலிருந்தாலும் என்னைப் பார்த்து விட்டால் சிரிக்கும் அந்த உதடுகளோடு... ஓ, ஆனே, ஆனே! இத்தனையிருந்தாலும், உன்னை, உன்னிடமிருந்தும் என்னிடமிருந்தும் நான் காப்பாற்றத்தான் வேண்டும், ஆனே. இன்னிக்கு ராத்திரி நீ கிளம்பிடு. நேரா நீ பெய்ரா பகுதிக்குப் போயிரு...

இப்போது, ''ம்ம்'' என் மறுத்து இடைமறித்தேன் நான். ''நான் பெய்ராவுக்குப் போகலே.''

''நீ போறே! இல்லேனா உன்னை நானே குண்டு கட்டா தூக்கிக்கிட்டுப் போய் பெய்ராவில் இறக்கி அங்கே ஒரு கப்பலில் திணிச்சு இங்கிலாந்துக்கு அனுப்புவேன்! என்னை நீ என்னனு நினைச்சுக்கிட்டிருக்கே? ஒவ்வொரு ராத்திரியும் படுத்து மறுநாள் விழிக்கும் போது, அவனுங்க வந்து உன்னைக் கபளீகரம் பண்ணிக்கிட்டுப் போயிடுவாங்கன்னு பயந்துக்கிட்டே வாழச் சொல்றியா? நெவர். எப்பவுமே நமக்கு அதிசய திருப்பங்கள் நடக்கும்னு கற்பனை பண்ணிக்கிட்டே ஒருத்தன் வாழ்ந்துட முடியாது. ஆமாம்! நீ, இங்கிலாந்துக்குப் போயாகணும், ஆனே. அப்புறம் - அங்கே - சந்தோஷமா - கலியாணம் - பண்ணிக்கிட்டு...''

''அப்போ உனக்கு என்ன ஆகும்?''

அவனது முகம் இறுகி அப்படியே நிலைத்தது. ''எனக்குக் கை மேல வேலையிருக்கு. அது என்ன ஏதுனு கேட்காதே... அது என்ன என்பதை உன்னால் நிச்சயமா ஊகிக்க முடியும். யெஸ் சுருக்கமா சொல்லனும்னா என் பெயரிலிருக்கும் களங்கத்தைத் துடைக்க முயற்சிப்பேன் இல்லேனா, அந்த முயற்சியிலே மரிப்பேன்... உன்னைக் கொல்ல இப்படித் துணிஞ்சானே.. அந்த நாய் மகனின் குடலை உருவாம ஓய மாட்டேன்...''

''நாம நியாயமா நடக்கணும்'' என்றேன், நான் இப்போது. ''என்னை அவன் பிடிச்சுத் தள்ளலை.''

''அப்படி அவன் நேரடியா பண்ணணும்னு அவசியம் கிடையாதும்மா. அவன் திட்டம் அத்தனை புத்திசாலித்தனமானது. எல்லாம் முடிஞ்ச பிறகு அந்த வழியிலே மறுபடியும் நான் போய் பார்த்தேன். எல்லாமும் சரியா இருப்பதா தான் பட்டுது. ஆனா, வழி காட்டிய அந்த வெள்ளைக் கற்கள் சில பிடுங்கப்பட்டு, கொஞ்சமா பாதை திசை திருப்பப்பட்டிருப்பதை நான் கவனிச்சேன். அந்தப் பாதை முழுக்க புதர்கள் தானே.. எனவே, நீ ஓடும் வேகத்துல, வெள்ளைக் கற்கள் காட்டும் பாதை சரினே நினைச்சுக்கிட்டு ஓடுவே.. ஆனா, அது, ஒரு நிலையில, கீழே தரையேயற்ற அதள பாதாளத்தின் முதல் அடியில் போய் முடியும்! அவன் யார்னு தெரிஞ்சு அவன் கழுத்துல நான் என் கைகளைப் பதிக்கும் போது-ஓஹ் அப்போ, அவனைக் கடவுள் காப்பாற்றட்டும்.''

ஒரு நிமிடம் போல நிறுத்தியவன், பிறகு, மாறுபட்டக் குரலெடுத்து சொன்னான்: இதைப் பற்றியெல்லாம் நாம பேசினதே கிடையாது ஆனே, இல்லை? ஆனா - நேரம் வந்தாச்சு. நீயும் நானும் பிரிய. இனி சந்திப்புக்கு வழியே கிடைக்காது. எனக்கென்னவோ, நீ முழு கதையையும் கேட்கணும்னு தோணுது ஆனே.... ஆரம்பத்திலிருந்து.''

''இந்த மலரும் நினைவுகள் உன்னைக் காயப்படுத்தும்னா வேண்டாம்'' என்றேன் நான் மிருதுவாய்.

''ஆனா உனக்குத் தெரியணும்னு நினைக்கிறேன். என் வாழ்க்கையின் அந்தப் பகுதியை, வேற ஒருத்தர் கிட்டே பங்கு போட்டு நான் பேசுவேன் என்று நினைச்சதே கிடையாது. விதியின் விந்தையான விளையாட்டுக்கள் கோமாளித்தனமாயிருக்கு, இல்லே....?''

சில நிமிடங்கள் அவன் அமைதியில் உறைந்தான். சூரியன் அஸ்தமனமாயிருந்தான். ஆப்பரிக்க இரவின் கரும் வெல்வெட் நிற

இருட்டு எங்களைப் போர்த்தத் துவங்கியிருந்தது. அப்போது, ''அவற்றில் சில எனக்குத் தெரியும்'' என்று பேச்சு கொடுத்தேன் நான்.

''என்ன தெரியும், உனக்கு?''

''உன்னோட நிஜப்பெயர், ஹார்ரி லூகாஸ் என்று எனக்குத் தெரியும்.''

இன்னும் அவன் தயங்கினான் என்னை நேராய் கண்ணுக்குக் கண்ணாய் பார்க்காமல், அவனுக்கு எதிரேயிருந்த பகுதியை உற்றுப் பார்த்தபடி! அவன் மூளைக்குள் என்ன ஓடிக் கொண்டிருக்கிறது என்பது பற்றி எனக்குள் ஒரு சிறு குறிப்பு கூட கிடையாது. ஆனால், இறுதியாய், ஒரு முடிவினைக் கையிலெடுத்துக் கொண்டவனைப் போல அவனுடைய தலையை ஒரு சொடுக்குச் சொடுக்கி உலுக்கி விட்டு, அவனது கதையை ஆரம்பித்தான்.

# அத்தியாயம் - 26

''நீ சொன்னது சரி தான். என் நிஜப் பெயர், ஹார்ரி லூகாஸ். என் தகப்பனார் ஓர் ஓய்வுப் பெற்ற பட்டாளத்தான். இங்கே ருடஸியாவுக்கு விவசாயம் பண்ணிப் பிழைப்பு நடத்த வந்தார். கேம்ப்ரிட்ஜ்ல் நான் ரெண்டாம் வருஷம் படிச்சுக்கிட்டிருந்த போது அவர் காலமானார்.''

''உனக்கு அவர்னா ரொம்பப் பிடிக்குமா?'' - சட்டென கேட்டேன் நான்.

''எனக்கு - தெரியலே...''

பிறகு இக்கேள்வியை ஒதுக்கித் தள்ளிவிட்டு வெறியாய் முன்னேறினான்.

''ஏன் நான் அப்படி பதில் தரணும்? நான் எங்கப்பாவை விரும்பினேன். யெஸ் நான் அவரைக் கடைசி தடவைப் பார்த்த போது ஒருத்தர் மேல இன்னொருத்தர் கசப்பான வார்த்தைகளை வீசிக்கிட்டோம். எனது மிருகத்தனமான அணுகுமுறைகளாலும், நான் ஏற்படுத்தித் தந்த கடன் தொல்லைகளாலும், ரெண்டு பேருக்கும் மாற்றி மாற்றி சண்டை மூளும்... ஆனா நான் அந்த ஓல்ட் மேனைக் காப்பாற்றினேன். இன்னும் உதவிகள் பல அவருக்குப் பண்ணி யிருக்கணும்னு இப்பத் தெரியுது. ஆனா டூ லேட்.''

சாந்தமாகிவிட்டு, தொடர்ந்தான்: ''அங்கே தான் எனது இன்னொரு புது நண்பனை சந்தித்தேன்.''

''யங்க் எட்ஸ்லே?''

''ஆமாம். யங்க் எட்ஸ்லே தான். உனக்கே தெரிஞ்சிருப்பது போல, அவனுடைய தகப்பனார் தென் ஆப்பிரிக்காவின் குறிப்பிடத்தகுந்த பெரும் புள்ளி. நாங்க ரெண்டு பேரும் - நானும் என் நண்பனும் - உடனே ஓசைப்படாம நழுவினோம். எங்க ரெண்டு பேருக்குள்ளும் பொதுவான ஓர் ஒற்றுமையா தென் ஆப்பிரிக்கா மீதான மோகம் இருந்தது; உலகில் மக்கள் பாதங்கள் படாத இடங்களைப் போய் பார்த்தவர்களா நாங்க தான் இருக்கணும் எனும் ஆசையும் அதிகமா

இருந்தது. கம்ப்ரிட்ஜிலிருந்து கிளம்பினதும், தன்னோட தகப்பனார் கூட இறுதியான மோதல்ல இறங்கினான் எட்ஸ்லே... ஏற்கெனவே ரெண்டு தடவை, பாவம் அந்தக் கிழ அப்பா, இவனோட கடன்களை அடைச்சிருக்கார். இம்முறை அதுக்கு அவர் தாயராயில்லை. ரெண்டு பேருக்கும் நடுவே கசப்பான காட்சிகள் அரங்கேறியிருக்கு. கடும் வார்த்தைகள். சுடு சொற்கள்... கடைசியாய் பொறுமையிழந்த சர் லாரன்ஸ், தனது மகனுக்கு இனி எவ்விதமான உதவியும் தர முடியாது என்பதை வார்த்தைகளாலேயே அறிவிச்சிருக்கார்- கொஞ்சம் காலம் அவனோட சொந்தக் கால்களிலேயே நின்னு நிரூபிக்கணும்'னு சொல்லிட்டார். இதன் விளைவு அந்த இரண்டு இளங்காளைகளும் வைரங்களைத் தேடி தென் அமெரிக்காவின் ஆழப் பகுதிகளுக்குக் கிளம்பிட்டானுங்க. அதன் விவரணைகளுக்கு நான் இப்பப் போகப் போவதில்லை. ஆனா, நாங்க, அங்கே, ஆச்சரியமான தருணங்களை அனுபவிச்சோம். பல இன்னல்கள் இருந்தன. ஆனா அது ஓர் அற்புதமான இனிய வாழ்க்கை. துரத்தியடிக்கப்பட்ட பிறகு கைக்கும் வாய்க்குமா வாழ்ந்த ஒரு வாழ்க்கை. ஓ. காட். அப்பத் தெரிஞ்சது ஒரு நிஜ நண்பனின் அருகாமை! அங்கே எங்க ரெண்டு பேரை மட்டுமே உள்ளடக்கி ஓர் இறுக்கமான பந்தம் உருவாகியிருந்தது. அதைமரணம் மட்டும் தான் உடைத்தெறிஞ்சிருக்க முடியும். ஓ கே. ஏற்கெனவே கலோனல் ரேஸ் சொன்னது போல, எங்களுடைய வெற்றி, மணிமகுடம் சூடியது. பிரிட்டனின் கயானா காடுகளின் இருதயப் பகுதியில், நாங்கள், ரெண்டாவது கிம்பர்லியைக் கண்டுபிடிச்சோம். எங்களுடைய வெற்றிக் களிப்பை வார்த்தையில, வர்ணிச்சு உனக்கு சொல்ல முடியாது. இந்தக் கண்டுபிடிப்பால வரப்போகிற பணத்தைப் பற்றிய பூரிப்பு கிடையாது, இது! எட்ஸ்லே பணத்தில் தூங்கியவன். அவன் அப்பா மண்டையைப் போட்டா இவனுக்கு வந்து சேரப் போகிற சொத்தினால் மில்லியனராக ஆகி விடலாம் என்பது அவன் அறிந்ததே. லூகாஸ் - நேரெதிர் - ஏழையாகவே வாழ்ந்தவன் - அது, அவனுக்குப் பழகி விட்டது. இது அவங்க ரெண்டு பேருக்கும் கண்டுபிடிப்பு ஏற்றி விட்டப் புளகாங்கிதம்!''

இங்கு நிறுத்தியவன், மன்னிப்புக் கோரும் வகையில் பேசினான்: ''நான் கதையை இப்படி சொல்வதுல உனக்கு ஒண்ணும் சிரம மில்லையே? ஏதோ நான் இதுல இல்லாதது போலவும் லூகாஸும் யங் எட்ஸ்லேயும், நான் சம்பந்தப்படாத இரு வேறு நபர்கள்

போலவும்! அந்த ரெண்டு சின்னப் பசங்களைத் திரும்பிப் பார்க்கும் போது எனக்கென்னவோ இப்போ அப்படித்தான் தோணுது. அந்த ரெண்டுல ஒருத்தன் ஹார்ரி ரேபர்ன் என்பதையே இப்ப நான் மறந்துட்டேன்.''

''உனக்கு எப்படி தோணுதோ அப்படி சொல்லு'' என்றேன் நான். அவன் தொடரலானான்.

''கிம்பர்லிக்கு வந்தோம். எங்க கண்டுபிடிப்பு தந்த பிரமிப்பு மறையவே இல்லை. வைர விற்பன்னர்களிடம் கொடுத்து மதிப்பிடு வதற்காக எங்க கூடவே விதவிதமான பலதரப்பட்ட வைரக்கற்களை நாங்க எடுத்து வந்திருந்தோம். அப்போ தான் - கிம்பர்லி ஓட்டல்ல - நாங்க அவளை சந்திச்சோம்....''

நான் சற்று இறுகினேன். அருகிலிருந்த கதவின் விளிம்பில் பொருந்தியிருந்த என் கை, கட்டளையேதுமின்றி தானாக அதை இறுக்கியது.

''அனிதா இது தான் அவ பேர். அவ ஒரு நடிகை. ரொம்ப இளையவள் மற்றும் அதிக அழகானவள். தென் ஆப்பரிக்காவில் பிறந்தவ... ஆனா அவ தாயார் ஹங்கேரியன்னு நினைக்கிறேன். அவளைச் சுற்றி ஒரு மர்ம வளையம் இருப்பது போல இருந்தது. அது, காட்டுக்குள்ளிருந்து நாட்டுக்குள்ளே விழுந்த ரெண்டு விடலைக் களையும் தீவிரமா ஈர்த்தது. ரெண்டுபேரும் தாமதம் இல்லாம அவ மேல பைத்தியமானோம். ரெண்டு பேருமே, இப்படி விழுந்ததைத் தத்தம் தீவிரமா எடுத்துக்கிட்டோம். அது தான் எங்களுக்குள் விழுந்த ஒரே கறுப்பு நிழல் இருந்தாலும், இது எங்களிருவருக்கும் இடையிலான நட்பை எந்த வகையிலும் சேதப்படுத்தலே. நாங்க ரெண்டு பேருமே மற்றவன் உள்ளே போய் இந்த விஷயத்துல ஜெயிச்சுக்கட்டும்னு ஒதுங்கி தான் நின்னிருப்போம் நிச்சயமா. ஆனா., அவ ஆட வந்த விளையாட்டு இது கிடையாது. அப்புறமா, பல தடவை நான் யோசிச்சிருக்கேன் - ஏன், அவ, சர் லாரன்ஸின் ஒரே மகன் எனும் அந்த அற்புத புதையலை, வெறுத்தான்னு?! ஆனா இதன் உண்மையான காரணம் என்னனா - அவ, ஏற்கெனவே திருமணமானவ! டீ-பீர்லிருக்கும் ஒருத்தனுக்கு! ஓஹ்! இது ஒருத்தருக்கும் தெரியாது. எங்க கண்டுபிடிப்புல அளவு கடந்த ஈடுபாடு இருப்பதா காட்டிக்கிட்டா, அவ. அவளுக்கு நாங்க கண்டுபிடிச்ச முறை பற்றி அத்தனையையும் விளாவாரியா விளக்கிய நாங்க ரெண்டு பேரும்,

கையோட கொண்டு போயிருந்த வைரக் கற்களையும் கூட காட்டி னோம். இந்த கட்டத்துல தான் - அவ கட்ட வேண்டிய பாத்திரத்தை அம்சமா கட்டிஜெயிச்சிருக்கா!

''டீ- பீர் வைரக்கற்களின் கொள்ளையடிப்புக் கண்டுபிடிக்கப் பட்டது. முறிந்து விழும் இடி போல, போலீஸ், எங்களைக் குறி வெச்சு வந்து எங்க மேலே விழுந்தது. எங்க இருப்புல இருந்த வைரங்களை அவங்க கைப்பற்றினாங்க... என்ன ஒரு முட்டாள்தனம்னு வாய் விட்டே சொல்லி, நாங்க ரெண்டு பேரும் விழுந்து விழுந்து சிரிச்சோம். பிறகு அந்த வைரக்கற்களைக் கோர்ட்டில் சமர்ப்பிப்பது வரை நடந்தது. அங்கு மறு கேள்விக்கு பதிலில்லாமல் ஆயிற்று - அந்தக் கற்கள் நான், டீ - பீரிலிருந்து களவாடப்பட்ட வைரக்கற்கள். அனிதா காணாமல் போய் விட்டாள். துளி பிசுகில்லாம வைரக்கற்களை மாற்றி வேலையை அவ செஞ்சு முடிச்சதாலே... எங்களிடமிருந்து வைரக் கற்கள் அவை கிடையாது அப்படினு நாங்க நாயா கத்தின எதுவும் எடுபடாமலே போச்சு.

''சர் லாரன்ஸ் எட்ஸ்லேக்கு எண்ணிலடங்கா செல்வாக்கு உண்டு. இந்த கேஸ் தள்ளுபடி ஆகும்படி செய்து விடுவதில் அவர் ஜெயிச்சார். ஆனா, இது இரண்டு இளைய, சாகசக்காரர்களின் வாழ்க்கையையே துடைத்தெறிந்து, 'திருடர்கள்' என்ற பட்டத்தைச் சுமத்தபடி இந்த உலகையே எதிர்கொள்ள முடியாதபடி அவர்களை முடக்கிப் போட்டது. வயசான அப்பாவின் மனசையும் இது ரெண்டு துண்டா உடைச்சுப் போட்டது. அப்பாவும், பிள்ளையும் சந்தித்துக் கொண்ட போது, ஊரிலுள்ள அத்தனை கடும் சொற்களையும் ஒன்று குவித்து அவன் மீது எறிந்திருக்கிறார் அவர். குடும்ப கௌரவத்தைக் காப்பாற்ற தான் செய்ய வேண்டியதை வழக்கு இல்லாமல் செய்வது தான் பண்ணி விட்டதாக சொன்ன அப்பாக்காரரர், ஆனால், இனி தன் மகன், ஓர் இறந்த மகன் அப்படினு சொல்லிட்டார். தூனு முகத்துல உமிழ்ந்திருக்கார். ஆனா அந்த சின்னப் பையனோ, அப்பாவோட அவ நம்பிக்கை அத்தனையும் தவறுனு நிரூபிக்க எவ்விதமான அடிகளையும் எடுத்து வைக்காம அமைதியா நின்னிருக்கான். அப்பாவிடமிருந்து விலகி வெறியாய் வெளியேறியிருக்கான் அவன். அவனுடைய நண்பனும் வெளியிலேயே காத்திருந்திருக்கான். ஒரு வாரம் கூட போகலே. போர் அறிவிக்கப்பட்டது. ரெண்டு நண்பர்களின் பெயர்களும் போர் வீரர்களின் பட்டியல்ல அறிவிக்கப்பட்டிருக்கு.

என்ன நடந்ததுனு தான் உனக்கே தெரியுமே. ஒருத்தனுக்குக் கிடைப்பதற்கரிய மிக அற்புத உயிர் தோழன் கொல்லப்படுகிறான். களங்கப் பெயரைச் சுமந்தபடி மரிக்கிறான் அவன்...

''சத்தியமா சொல்றேன் ஆனே... அவனால தான் நான் அந்தப் பெண் மேல அத்தனை கொலை வெறியா இருக்கேன். அவள் சமாச்சாரம்... என்னை விட அவனுள்ளே தான் படு ஆழமா இறங்கியிருக்கு. அந்த சமயத்துல நான் அவ மேல காதல் பித்தனா இருந்தேன். இதை வெளிப்படுத்த சில சமயங்களல்ல நான் அவளை பயமுறுத்தியது கூட உண்டு. ஆனா அவன் விஷயத்துல, அது, ஒரு வசனமற்ற, அமைதியான ஆழமான ஊமை உணர்வு! அவனது உலகத்தின் நடு மையமே அவளாய் இருந்தாள். அவ அவனை ஏமாற்றியதால் - அவனுடைய வாழ்க்கையின் ஆணி வேரே ஆட்டிப் பிடுங்கியெறியப்பட்டது. விழுந்த அடி அவனைத் திணற அடித்து மனமெங்கும் வாதம் கொள்ள வைத்தது.''

இங்கு கடும் சிந்தனையோடு நிறுத்தினான் ஹார்ரி. ஓரிரு நிமிடங்கள் ஓடின. பிறகு தொடர்ந்தான்.

''உங்க எல்லாருக்கும் தெரிஞ்ச மாதிரியே, நான், 'காணாமல் போனவன், இறந்திருக்கக் கூடும்' என அறிவிக்கப்பட்டேன். இந்தத் தவறைத் திருத்த நான் ஒரு போதும் முயற்சிக்கவேயில்லை. பார்க்கர் அப்படினு ஒரு பெயரை நானே தேர்ந்தெடுத்துக்கிட்டு, சிறு பொழுதிலிருந்தே நான் அறிந்திருந்த இந்தத் தீவுக்கு வந்தேன். போரின் துவக்கத்தில் நான் குற்றமற்றவன் அப்படினு நிரூபிச்சே தீரணும்னு நம்பிக்கையோட எதிர்பார்த்துக் காத்திருந்தேன். ஆனா இப்போ அந்த அத்தனை வெறியும் மடிஞ்சுப் போயிட்ட மாதிரி தோணுது. 'நிரூபிச்சு என்ன கிழிஞ்சுடப் போகுது?' - இந்தக் கேள்வி ஒண்ணு தான் தெரியுது. என் நண்பனும் போயாச்சு... எங்களைத் தேடி வாடும் அவனோட அல்லது என்னோட உறவுகள் யாரும் கிடையாது. நானும் அவனைப் போலவே செத்துப் போயிருக்கணும். இந்த நிலைமையிலே அமைதியா நான் இங்கே வாழ்ந்துக்கிட்டிருந்தேன்; சந்தோஷமாவும் இல்லாம, துக்கமாவும் இல்லாம. எல்லா உணர்வுகளும் மரத்துப்போன நிலையில். அப்போ தெரியலே.. இப்போ புரியது. இது கூட போர் விளைவித்துத் தரும் ஒரு விபரீத விளைவு - *மரத்துப் போதல்.*

''அப்புறம், ஒரு நாள், என்னைத் தட்டியெழுப்பி மறுபடியும் நெட்டைக் குத்தலா நிற்க வைக்கும்படி ஒண்ணு நடக்குது. நதியைக்

கடந்து அக்கரையில கொண்டு விட, சுற்றுலா வந்த ஒரு கூட்டத்தைக் கூட்டிக்கிட்டு நான் படகு சவாரி செஞ்சுக்கிட்டிருந்தேன். கரையடைஞ்சதும், கீழே இறங்கி நின்னுக்கிட்டு, ஒவ்வொருத்தரா கரையிறங்க கை தந்து நான் உதவிக்கிட்டிருக்க, அப்போ, அதுல ஒரு ஆள் தாள முடியாத ஆச்சரியக் குரல் கொடுத்தான். அது என் கவனத்தை அவன் மேல திருப்பிச்சு. அவன், குட்டையான, ஒல்லியான ஆள். தாடி வெச்சிருந்தான். நான் ஏதோ கால் கை இல்லாத ஓர் ஆவி போல அத்தனை பயமா என்னை அவன் வெச்ச கண் எடுக்காம முறைச்சான். அவனோட பார்வையின் திகில் தீவிர ஆழமா இருந்ததால, எதனால் இப்படி அவன் துடிக்கிறான்னு எனக்குள்ளே சிறு ஆர்வம் மேலோங்கிச்சு.. உடனடியா அவனைப் பற்றிய சேதிகளை நான் ஓட்டலிலிருந்து சேகரிச்ச போது, அவன் பேர் கார்ட்டன் என்றும் அவன் கிம்பர்லியிலிருந்து வந்திருக்கான் என்றும் தெரிய வந்தது. அவன் ஒரு வைர வியாபாரி. வைரங்களைத் தரம் பிரிப்பவன். டீ- பீர் வைரங்களைக் கணிக்க நியமிக்கப்பட்டுள்ளவன்! ஒரு நிமிஷத்துல பழசு எல்லாம் எனக்குள்ளே அலை அலையா மோதிச்சு. தீவை விட்டுட்டு உடனடியா கிம்பர்லிக்கு ஓடினேன்.

''ஆனாலும் பிரயோஜனமில்லை. அவனைப் பற்றி மிகக் கம்மியா தான் விஷயம் சேகரிக்க முடிஞ்சுது. அதனால அவனை நேரா சந்திப்பதைத் தவிர வேற வழியில்லனு முடிவு செஞ்சேன். கையோட துப்பாக்கியை எடுத்துக்கிட்டுக் கிளம்பினேன். அவனைக் கொஞ்சமா அன்னிக்கு நான் பார்த்த நோட்டத்திலிருந்தே உடம்பால எந்த எதிர்ப்பும் காட்ட முடியாத ஒரு கோழை அவன்னு நான் கணிச்சுட்டேன். நானும் அவனும் முகத்துக்கு முகம் சந்திச்ச போது என்னைப் பார்த்து விட்ட ஒரே காரணத்துக்காக பயந்துச் சிதறிப் பொடிப் பொடியா ஆனான் அவன். அவனுக்குத் தெரிஞ்ச எல்லாத்தையும் என் கிட்டே சொன்னா தான் ஆச்சுனு நான் அவனை நெருக்கினேன். அவன் தான், என் வாழ்க்கையைச் சீரழிச்ச கொள்ளையின் ஒரு பகுதியை நடத்தியுள்ளவன்... அனிதா, அவன் மனைவி. நானும் அவளும் ஒரு நாள் ஓட்டல்ல இரவுச் சாப்பாடு சாப்பிட்டதைக் கவனிச்சிருக்கும் அவனுக்கு, இறந்துவிட்டதா அறியப்படும் நான் சதையும் ரத்தமுமா ஃபால்ஸ் பகுதியில காட்சி தந்ததை நம்பவே முடியாம போயிருக்கு. அவனும் அனிதாவும் ரொம்ப இளைய வயதிலேயே கலியாணம் பண்ணிக்கிட்டிருக்காங்க. ஆனா அவ

உடடினயாகவே அவனை விட்டு விலகியிருக்கா. ஏதோ சேரக் கூடாத ஒரு கும்பலோட அவ இணைஞ்சுட்டானு அவன் சொன்னான். அப்போ தான் ஆனே நான் முதல் முறையா 'கலோனல்' எனும் தலைவனது பெயரையே கேட்டேன். ஆனா அவனுங்க நடத்தின எந்த தில்லுமுல்லுவிலும் கார்ட்டன் தன்னை இணைச்சுக்கவே இல்லை. கடவுளை சாட்சி வைத்து இதை அடிச்சு சொன்னான் அவன். அதனால நானும் நம்ப வேண்டியதாச்சு. மேலும் வெற்றிகரமாயிருக்கும் க்ரிமினல்களின் எந்தவொரு குணாதிசயமும் அவன் கிட்டே தென்படலே என்பதையும் குறிச்சுக்கணும்.

''இந்தக் கட்டத்திலும் - அவன் எதையோ என்கிட்டே சொல்லாம மூடி மறைக்கிறான்னு எனக்குத் தோணிச்சு. இதைப் பரீட்சித்துப் பார்க்க, மீதி விஷயங்களையும் என்கிட்டே அப்பவே சொல்லைனா, வாழ்க்கை பற்றி துளி கவலை இல்லாத நான் வெறி தீரும் வரைக்கும் அவனை அங்கேயே கட்டுப் பொசுக்கிடுவேன்னு பயமுறுத்தினேன். துப்பாக்கியை உயர்த்தினேன். குலை நடுங்க வைத்த இந்த மிரட்டலின் ஆக்கிரமிப்பினால் மளமளைனு மீதியெல்லாத்தையும் கொட்டினான் அவன். நல்லா கவனி. 'கலோனல்' கூட்டம் டீ - பீர் வைரக்கற்களைக் களவாடியிருக்கு. அதுல சிலதை மட்டும் எங்க இருப்புல இருக்கும் வைரத்தோட கலந்துடறாங்க. ஆக, விசாரணையில் நாங்க தான் களவாடிய குற்றவாளிகளா அறிவிக்கப்படுவோம். இதுல முக்கியமான குறிப்பு அனிதாவே, அந்த 'கலோனல்' என்பவனை முழுதுமாக நம்பவில்லை என்பதாகும்.

''பசங்க கிட்டேயிருந்து கையாடிய வைரக்கற்களை, 'கலோனல்' கிட்டே நேரடியா கொண்டு போய் கொடுக்க வேண்டிய கட்டத்தில் ஒரு கல் பாக்கியில்லாமல் அத்தனையையும் அவரிடம் கொடுத்து விட்டதாக அனிதா காட்டிக் கொண்டிருந்தாலும், அவ, உண்மையா அப்படி செய்யலே. இந்த விஷயத்துல, எதை அவங்க மறைச்சுப் பதுக்கி வெச்சுக்கலாம் எனும் அறிவுறுத்தலைத் தன்னுடைய வைரம் கணிக்கும் அனுபவத்தை வெச்சுக்கிட்டு கார்ட்டன் தான் வழி காட்டியிருக்கான். நாளைக்கே, ஒரு வேளை இவங்க கையிருப்பி லிருக்கும் டீ-பீர் வைரக்கற்களையே கையகப்படுத்த நேர்தாலும், அவற்றின் பிரத்யேகமான நிறம் மற்றும் தரத்தைப் பார்த்த உடனேயே, அவை, முன்னர் தங்கள் கைகளுக்குப் பரிசோதனைக்காக வரவில்லைனு டீ-பீர்லிருக்கும் வைர விற்பன்னர்கள் தயங்காம

சொல்லிடலாம். ஆக-இவங்க பாதுகாப்பாயிடறாங்க. ஆனா, 'கலோனல்' பக்கம், பாதுகாப்பு அற்றுப் போகுது. எப்படி? வழக்கத்துக்கு மாறாக, இந்தக் களவுல மட்டும், 'கலோனலின்' நேரடிப் பங்களிப்பு இருந்திருக்கு எனும் தகவலை, நான் கொஞ்சம் மெனக்கெட்டு சேகரித்தேன். அவரிடமிருக்கும் வைரக்கற்கள், இவங்க கைகளிலிருக்கும் கற்களைப் போன்ற தனித்துவம் மிக்கவை கிடையாது. அச்சு அசலா களவு போன டீ- பீர் போன்றவையே. ஆகவே மறைக்க முடியாது. இதனால அவரோட குடுமி தன் கையிலிருப்பதா இறுமாப்பா உணர்ந்திருக்கா, அனிதா. தேவைப்பட்டா ப்ளாக்-மெயில் பண்ணவும் துணிஞ்சிருக்கா. அந்த சமயத்துல கார்ட்டன் என்னிடம் ஒரு திட்டத்தைச் சொன்னார். நான் போய் அனிதா கிட்டே (அல்லது உன் பாஷையில சொல்லணும்னா நதீனா கிட்டே) பேரம் பேசணும்'னு. எதுக்காக? நல்ல ரொக்கமான தொகை மட்டும் கிடைச்சா அவளுடைய 'தலைவனுக்கே' அவ வைரங்களை விட்டுக் கொடுத்துடுவா என்பது கார்ட்டனின் எண்ணம் - இதுக்காக.

''இந்தக் கட்டத்திலும் - அவன் எதையோ என்கிட்டே சொல்லாம மூடி மறைக்கிறான்னு எனக்குத் தோணிச்சு. ஆமாம்... சந்தேகப் பட்டேன். அவன் ஒரு பயந்தாங்கொள்ளி தான். சுலபமா பயமுறுத்திடலாம்... ஆனா, அந்த பயத்துல வரிசையா பொய்களா அடுக்கிக் கிட்டே போவானுங்களே தவிர அவனுங்க கிட்டேயிருந்த நிஜ உண்மையைப் பிடுங்குவதென்பது அத்தனை கஷ்டமான ஒண்ணா ஆயிடும். நான் ஓட்டலுக்குத் திரும்பிப் போய் காத்திருந்தேன். மறுநாள் சாயந்திரம் அவள் அனுப்பின தந்திக்கான பதில் வந்திருக்கும் என்பது என் கணிப்பு. அவள் வீடு வரைக்கும் போனேன். ஆனா கார்ட்டன் எங்கேயோ போயிருப்பதாகவும் மறுநாள் நான் வருவார்னும் சொன்னாங்க... உடனடியா என் சந்தேகம் வெகுண்டது. அவன் இங்கிலாந்து நோக்கி கில்மார்டன் மாளிகையில பறந்துக்கிட்டிருக்கும் தகவலை அந்தக் குறுகிய நேரத்துல கண்டுபிடிச்சுட்டேன். ரெண்டு நாள்ல அது கேப் டவுனிலிருந்து கிளம்புவதாக இருந்தது. சரியான நேரத்துல குறி வெச்சு அதே கப்பலைப் பிடிச்சேன்.

''அதே கப்பல்ல தான் நானும் பிரயாணிக்கிறேன்னு காட்டி அவன் எச்சரிக்கையாகிவிட நான் அனுமதிக்கலே. கேம்ப்ரிட்ஜ்ல படிக்கும் போது எல்லா கலைநிகழ்ச்சிகளிலும் நடிப்புல கொடி கட்டிப் பறந்தவன் நான். அதனால, ரொம்பவும் சீரியஸான ஒரு ஆள் போல,

தாடி வெச்சுக்கிட்டு, கண்ணாடி போட்டுக்கிட்டு, உடனடியா மாற ரொம்ப நேரம் பிடிக்கலே. இருந்தாலும் அந்தக் கப்பல் பிராயணம் முழுக்க நான் கார்ட்டனைத் தவிர்த்தேன். உடல் சுகமில்லை எனும் காரணத்தைக் காட்டி கூடுமான வரைக்கும் என் கேபின்லேயே கிடந்தேன்.

''லண்டன் வந்ததும் அவனைத் தொடர்வதில் எனக்கு எவ்வித சிக்கலும் இருக்கலே. நேரா ஓட்டலுக்குப் போனான். மறுநாள் விடியற வரைக்கும் அவன் வெளியே தலை காட்டவே இல்லை. ஒரு மணியான உடனே ஓட்டலை விட்டுப் புறப்பட்டான் அவன். நான் பின்னாலேயே. அந்தப் பகுதி வீட்டுத் தரகன் கிட்டே போன அவன், நதியையொட்டி வாடகைக்கு இருக்கிற வீடுகள் பற்றிய தகவலை சேகரிச்சான்.

''அவனுக்குப் பக்கத்து டேபிள்லேயே நான். வீடு பற்றி கேட்டுக்கிட்டு. அப்போ திடீர்னு உள்ளே வந்தா அனிதா நதீனா. சூப்பர்ப், அகந்தை, எப்பவும் போன்றே வீழ்த்தும் அழகு. கடவுளே! அடி வரை வெறுத்தேன் நான். அவளைக் குதற நினைச்சேன். அதே பெண் - என் வாழ்க்கையைச் சீரழித்த பெண் - என் வாழ்க்கையை விடவும் மேலான இன்னோர் உயரிய வாழ்க்கையைச் சீரழித்த பெண். அந்தக் கணத்துல என் கைளிரண்டையும் அவ கழுத்தைச் சுற்றிப் போட்டு இறுக்கிப் பிழிஞ்சு அவளோட வாழ்க்கையை இஞ்ச் -பை- இஞ்சா நான் விழுங்கியிருப்பேன்! ஒரு சில நிமிஷம் என் கட்டுப்பாட்டை இழந்த குரோதத்தில் நானிருப்பது எனக்கே தெரிஞ்சது. ஏஜெண்ட் சொன்ன எந்த வார்த்தையையும் நான் காதுல வாங்கிக்கலே. எனக்கு அடுத்து வந்து உட்கார்ந்த அவ, உச்ச ஸ்தாயியில, படுதுல்லியமா, மிகைப்படுத்தப்பட்ட அமெரிக்க ஸ்டைல்ல சொன்ன வார்த்தைகள் மட்டும் தான் என் காதுகளில் விழுந்தன. ''மில் வீடு - மார்லோ - சர் ஆஸ்டஸ் பெட்லருடைய வீடு அது. அது என்னோட தேவைகளுக்குப் பொருந்தும் போல தெரியுது. ஒரு தட்வை நேர்ல போய் பார்த்துடறேனே.''

''அந்த ஆபீஸ் காரன் அவனுக்கான சீட்டை எழுதித் தர, அவளுக்கே உரிய மமதையான நடையோடு கிளம்பிப் போனாள். ஒரு வார்த்தையின் மூலமாகவோ அல்லது சின்ன முகக் குறிப்பின் மூலமாகவோ கூட, அவ, கார்ட்டனைத் தெரிஞ்ச மாதிரி காட்டிக்கலே... இருந்தாலும், அங்கு இடம்பெற்றுக் கொண்டிருந்த இருவருடைய சந்திப்பும், ஏற்கெனவே இருவருக்குள்ளும் ஒப்புக்

கொள்ளப்பட்ட சிறப்பான திட்டம் என்பது மட்டும் எனக்குப் புரிஞ்சது. அப்போ சில முடிவுகள் தானா வந்து என்னுள் விழுந்தன. சர் ஆஸ்டஸ் இங்கே இல்லை என்பதே தெரியாம நடத்தப்படும் இந்த வீடு தேடும் படலமே.. அவரை மில் வீட்டில் வைத்து சந்திப்பதற்கான சரியான ஒரு சாக்குப்போக்கு.... களவு நடந்த போது அவர் இருந்தது தென் ஆப்பிரிக்காவில என்பது எனக்குத் தெரியும்; மேலும், அவரை அதுக்கு முன்னால் நான் பார்த்தேயிராத காரணத்தால், அவர் தான் பல நாட்களாக நான் கேள்விப்பட்டுக் கொண்டேயிருக்கும் 'கலோனல்' அப்படினு முடிவு செஞ்சேன்.

''இந்த ரெண்டு சந்தேகத்துக்குரியவர்களையும் பின் தொடர்ந்துக் கிட்டு, வீட்டுத் தரகன் அலுவலகத்திலிருந்து கிளம்பினேன். அங்கிருந்த ஹைட் பார்க் ஓட்டலுக்குப் போனா நதீனா. என்னோட அடிகளை விரைவுப்படுத்திக்கிட்டு நானும் உள்ளே போனேன். ரெஸ்டாரண்ட்ல போய் உட்கார்ந்துக்கிட்டா. அந்த நேரத்துல அவ என்னை அடையாளம் கண்டுபிடிச்சுட்டா திட்டங்கள் வீணாயிடும்னு நினைச்ச நான், அப்போதைக்கு, கார்ட்டரைப் பின் தொடரலாம் என்று புது முடிவை எடுத்தேன். அவன் வைரங்களைக் கையகப்படுத்தப் போகிறான் எனும் ஸ்திரமான நம்பிக்கையிலிருந்த எனக்கு, அவனே எதிர்பார்க்காத தருணத்தில் நான் அவன் முன்னாடி போய் விழுந்தா அந்த அதிர்ச்சியின் மூலமாக அவன்கிட்டேயிருந்து உண்மைகளைக் கறந்துடலாம் என்பது, எதிர்பார்ப்பா இருந்தது. அங்கேயிருந்த ரயிலடி வரைக்கும் போன அவனை நான் விட்டுடாம தொடர்ந்துக்கிட்டே போனேன். ப்ளாட் பாரத்தின் முனையில போய் அவனையறியாம நின்னுக்கிட்டிருந்தான் அவன். அங்கே யாரோ ஒரு பொண்ணு மட்டும் தான் நின்னுக் கிட்டிருந்தா. மற்றபடி ஒருத்தர் கிடையாது. அங்கேயே அப்பவே அவனை அழைச்சுப் பேசிட முடிவெடுத்தேன். அப்ப என்ன நடந்தது தெரியுமா? எங்கேயோ தென் ஆப்பிரிக்கால இருப்பதா அவன் நினைச்சுக்கிட்டிருந்த ஒரு மனுஷனை, அங்கே தத்ரூபமா பார்த்ததும், தலை கால் புரியாம போன அவன் ஓரடி எடுத்துப் பின்னாடி வெச்சுட்டான். பின்னாலிருப்பது மின் தண்டவாளம். அவன் எப்பவுமே கோழை. என்னை ஒரு மருத்துவர்னு அறிவிச்சுக்கிட்ட நான் அந்தப் போர்வையில வேகவேகமா அவனுடையப் பாக்கெட்டைத் துளாவித் தேட முயற்சித்தேன். கொஞ்சம் நோட்டுகளோடு ஒரு பர்ஸ். ஓரிரு முக்கியமற்ற கடிதங்கள். ஒரு போட்டோ சுருள் (அதை நான்

அப்புறமா எங்கேயோ தவற விட்டுட்டேன்). மேலும் 22ஆம் தேதி கில்மார்டன் மாளிகையில் சந்திப்பதாய் ஏற்பாடாகியிருந்த ஒரு சின்ன சீட்டு... என்னை யாராவது பிடிச்சு நிறுத்திடக் கூடாது எனும் அவசரத்துல ஓடிய நான் அதை கீழே போட்டிருக்கேன். ஆனா அதிலிருந்த விஷயங்கள் மட்டும் நினைவில் பதிஞ்சிருந்தது.

''பக்கத்துல அகப்பட்ட ஓர் அறைக்குள்ளே நுழைஞ்ச நான் வேகவேகமா என் மேக்-ஆப் பைக் கலைச்சுட்டு உடனடியாக ஹைட் பார்க் ஓட்டலுக்குப் போனேன். நதீனா அப்பவும் லஞ்ச் சாப்பிட்டுக்கிட்டிருந்தா. மார்லோ வரை அவ கண்ல பட்டுடாம பின் தொடர்ந்தேன். வீட்டுக்குள்ளே அவ தான் முதல்ல போனா - அவ கூட. வந்தவன் நான் அப்படினு அந்த வீட்டுக் காவக்காரப் பொம்பிளையை நம்ப வெச்சேன். பிறகு, நானும் உள்ளே போனேன்.''

இப்போது பேசுவதை நிறுத்தினான் ஹார்ரி ரேபர்ன். அங்கு அடர்த்தியான அமைதி நிலவியது.

''நீ என்னை நம்புவே தானே, ஆனே? கடவுள் மேல சத்தியமிட்டு சொல்றேன். நான் இப்ப சொல்லப் போவது சத்தியமான நிஜம். அவ உள்ளே நுழைஞ்சா. உடனேயே என் நெஞ்சு முழுக்கக் கொலைவெறி தலை தூக்கியாட, நானும் உள்ளே நுழைஞ்சேன். ஆனா அங்கே அவ செத்துக் கிடந்தா! அவளை நான் முதல் தள அறை ஒன்றில் இந்தக் கோலத்துல பார்த்தேன். ஓ. காட்!அது - ஒரு கொடூரம். மரணம். நானோ அவள் நுழைஞ்ச மூன்றாவது நிமிஷத்துல உள்ளேயிருக்கேன். உடனேயே என்ன மாதிரியான ஓர் இக்கட்டான நிலைமையில் நான் இருக்கேன் என்பது எனக்குப் புரிஞ்சுப் போச்சு. ஒரே கல்லுல.... ப்ளாக்-மெயில் செய்யப்பட்டவன் ப்ளாக் -மெயில் செஞ்சவனையே இல்லாம பண்ணியதோட மட்டுமில்லாம, அந்தப் பழியையும் இன்னொருத்தன் மேலே ரொம்ப வசதியா நட்டு வெச்சுட்டுப் போயிட்டான். 'கலோனாலின்' கை வரிசை, வெளிப்படையா தெரிஞ்சது. இரண்டாவது தடவை நான் அவனுடைய பலிகடாவாக ஆனேன். இத்தனை சுலபமா அவன் விரித்த வலையில் வாகா போய் விழுந்துள்ள என்னை விட சரியான முட்டாள் வேற யார் இருக்க முடியும்!

''அடுத்து நான் என்ன பண்ணினேன்னு எனக்கே தெரியலே. அசாதாரணமா என்னுள் எதுவும் இல்லே என்பது போல காட்டிக்கிட்டு வெளியேறினேன். ஆனா, கொலை கண்டுப்பிடிக்கப்பட்டகையோட,

என்னைப் பற்றிய அங்க அடையாளங்கள் அத்தனையும் வெகு துல்லியமா நாடு முழுக்கப் பரவி, வாழவே இயலாத ஒரு நிலை உருவாகும்னு எனக்கே கூட அப்ப தெரியும்.

''வெளிப்படையா வர துணிச்சலில்லாம கொஞ்ச நாட்கள் பதுங்கியே கிடந்தேன். ஒரு நிலையில, வசதியான வாய்ப்பு ஒண்ணு கனிஞ்சு என் கையில் தானா வந்துவிழுந்தது. தெருவில் போய்க் கொண்டிருந்த ரெண்டு நடு வயது ஜென்டில்மேன் பேசிய உரையாடல் காற்றுவாக்குல என் காதுல வந்து விழுந்தது. அதுல ஒருத்தர் சர் ஆஸ்டர் பெட்லர். அதைக் கேட்டவுடனேயே என்னை அவரோட காரியதரிசியா ஒட்ட வெச்சுக்க முடிவெடுத்தேன். நான் ஒட்டுக்கேட்ட உரையாடலின் ஒரு துண்டு வசனம் தான் இதுக்கான க்ளூவை என்னுள் விதைச்சது. அப்போதிலிருந்து சர் ஆஸ்டஸ் தான் 'கலோனல்' எனும் ஊகம் என்னுள் ரொம்பவுமே அழிஞ்சுப் போச்சு. அவருடைய வீடு, ஒரு விபத்து மாதிரி தான் சந்திப்புக்கு பயன்படுத்தப்பட்டிருக்கணும். அல்லது நானறியாத வேற ஏதோ ஒரு மர்ம காரணத்துக்காக.''

''இந்தப் பகெட், கொலை நடந்த தினத்தன்று மார்லோ வீட்டிலிருந்தான் என்ற தகவல் உனக்குத் தெரியுமா?'' இடைமறித்தேன் நான்.

''ஓஹ்... அப்ப எல்லாம் சரியா போகுது. அவன் சர் ஆஸ்டஸ் கூடவே உதவியா புறப்பட்டு போயிருப்பான்னு இல்லே நினைச்சிருந்தேன்...?''

''கிடையாது. அப்போ அவர் ஃப்ளாரன்ஸ் பிரதேசத்துல இருந்திருக்கணும் - அங்கேயும் அவர் போகலே. அவர் மார்லோவில தான் இருந்தார்னு அடிச்சு சொல்வேன் - ஆனா, ப்ரூஃப்?''

''அன்னிக்கு ராத்திரி உன்னை பூதாகாரமா அவர் தாக்க துணியற வரைக்கும் அவரை நான் துளி சந்தேகப்படலே என்பதையும் குறிச்சுக்கணும். ஓஹ், என்ன ஒரு நடிகன்!''

''ஆமாம்.''

''இது எதுக்காக மில் வீடு தெரிந்தெடுக்கப்பட்டது என்பதையும் விளக்குது. அதுக்குள்ளே ஒருத்தரும் கவனிக்காத மாதிரி பகெட்டாலே நுழைய முடியும். வெளியேறவும் முடியும். நானும் கப்பல்ல சர் ஆஸ்டஸ் கூட வர இவர் ஏன் மறுப்பு தெரிவிக்கலே, தெரியுமா? என்னோட இணைப்பை முழுசுமா துண்டிச்சுக்க விருப்பமில்லே, அதனால! நதீனா, அவ கூட கற்களையும் கொண்டு வருவா என்பது அவங்களுடைய அதீத எதிர்பார்ப்பா இருந்தாலும், இந்த சந்திப்பின்

போது, அவ கூட கற்களைக் கொண்டு வரலே என்பது வெளிப்படையா இப்ப தெரியுது. எனக்கென்னவோ, இந்தக் கார்ட்டன் தான் அவன் கூடவே அந்தக் கற்களை வெச்சுக்கிட்டு, அவற்றை ஏதோ ஒரு வகையில பதுக்கி எடுத்துக்கிட்டு கில்மார்டன் மாளிகையில பிரயாணிச் சிருக்கணும்னு தோணுது - இங்கே தான் அவரோட தேவையே தெரியுது இல்லே? அவை எங்கே பதுக்கி வெக்கப்பட்டிருக்கும்னு எனக்கு ஏதாவது துப்பு தெரிஞ்சிருக்கலாம் என்பது அவங்களுடைய ஊகம். வைரங்களைக் 'கலோனல்' இன்னும் கையகப்படுத்தாம இருந்தா, அவர் சந்தேகத்துக்கிடமின்றி இன்னமும் ஆபத்துலதான் இருக்கார். ஓஹ், அப்போ, அவரோட படபடப்புக்கும் பதைபதைப்புக்கும் அதை எப்படியாவது கைப்பற்றி விடணும் என்பது தான் காரணமாகுது! அப்போ அவற்றை இந்த கார்ட்டன் எங்கே தான் பதுக்கியிருப்பான்? அவன் தான் பதுக்கியிருக்கானா? இல்லே வேற யாராவது?''

''அது இன்னொரு கதை'' குறிப்பிட்டேன் நான். ''அதை இப்போ உனக்கு நான் சொல்லப் போறேன்.''

# அத்தியாயம் - 27

இந்தப் பக்கங்கள் அனைத்திலும் நேயர்களுக்கு முன் நான் விரித்துப்போட்ட அத்தனை சமாச்சாரங்களையும் ஒன்று விடாமல் ஹார்ரேயிடம் சொல்லும் போது, அவன் மிகுந்த ஈடுபாடு பொதித்து அத்தனையையும் கேட்டான். இந்த அனைத்திலும், இத்தனை காலமாய் வைரங்கள் என் கையில் தான் (குறிப்பாய், ஸூஸேனியிடம்) இருந்திருக்கின்றன எனும் சேதி தான், அவனை பயமுறுத்தி வியக்க வைத்த ஒரே சமாச்சாரம்! இந்த உண்மையை மட்டும் தான் அவன் என்றுமே ஊகித்ததில்லை. இவன் சொன்ன முழு கதையையும் கேட்ட பிறகு தான், இது, கார்ட்டன் அல்லது அந்த நதீனா ஆகியோரது திட்டம் என்பது சந்தேகத்துக்கிடமின்றி எனக்கு விளங்கியது. அவளையோ அல்லது அவளுடைய கணவனையோ ஏமாற்றி அபகரித்துச் செல்லவே முடியாத ஓரிடம்! வைரங்கள் பதுக்கப்பட்டுள்ள இடம் அவளது மூளைக்கு மட்டுமே வெளிச்சம். மேலும், அவை, ஒரு கப்பல் சிப்பந்தியிடம் கொடுக்கப்பட்டிருக்கும் என்று 'கலோனல்' ஒரு நாளும் சந்தேகிக்கப்போவது கிடையாது...

களவாடியவன் என்ற முதல் குற்றச்சாட்டுக்குப் பழிக்குப் பழி வாங்கியே ஆக வேண்டும் என்ற ஹார்ரியின் வெறி இப்போது தணிக்கப்பட்டது. எங்களை இயங்க விடாமல் முடக்கிப் போட்டது, அந்த இரண்டாவது குற்றச்சாட்டு. இப்போதுள்ள நிலைமையை வைத்துக் கொண்டு பார்த்தால், ஹார்ரேயால் வெளியே வந்து தன்னை நிரபாரதி என நிரூபிக்க முடியாது.

ஆக, திரும்பித் திரும்பி நாங்கள் வந்து முட்டிக் கொண்டு நின்ற கேள்விகள்: 'கலோனல்' என்பவனுடைய அடையாளங்கள் என்னென்ன? அது பகெட்டா, இல்லையா?

''அவன் தான்னு நிச்சயமா சொல்வேன்- ஒரே ஒரு விஷயம் மட்டும் இடைமறிக்கலேனா'' என்றான் ஹார்ரே. ''மார்லோவில் அனிதாவைக் கொன்றது பகெட் தான் என்பது நிதர்சனம் என்பது போல தெரியுது... இது, அவன் தான் 'கலோனல்' எனும் முடிவுக்கும் வழிவகுத்துத் தருது;

ஏன்னா, அனிதா ஈடுபட்டிருந்த சமாச்சாரம், அடியாட்கள் கூட விவாதிக்கவல்ல ஒரு விஷயம் கிடையாது. இம்முடிவுகளுக்கு முன்னே ஒண்ணு மட்டும் தான் பிடிவாதமா எதிர்ப்பு காட்டுது. அது: கப்பல்ல அந்த ராத்திரி வேளையில எதுக்காக உன்னை இந்த பிரச்சினையிலிருந்து முழுவதுமா பெயர்த் தெரியும் முடிவோடு அப்படி வெறித்தனமா பகெட் நடந்துக்கிட்டான்? கேப் டவுனிலேயே பகெட் கழட்டி விடப்பட்டு விட்டதை நீ பார்த்திருக்கே. அடுத்த புதனுக்குள்ளே அவனால நிச்சயம் இங்கே வந்திருக்கவே முடியாது. அவனுக்கு உளவு பார்த்து சொல்ல உதவிய ஆளுங்க இருப்பானுங்கனு நம்ப முடியலே.''

நானும் ஹார்ரியும் சற்று நேரம் மவுனமாக இருந்தோம். பிறகு அவனே மெதுவாய் துவங்கினான்: ''நீ ஓட்டலை விட்டுக் கிளம்பும் போது திருமதி ப்ளேர் நல்லா துங்கிக்கிட்டிருந்ததாகவும் சர் ஆஸ்டஸ் அவரோட காரியதரிசிக்கு என்னத்தையோ சொல்லிக் கிட்டிருந்ததாக வும் சொன்னே, இல்லையா? கலோனல் ரேஸ் அப்போ எங்கே யிருந்தார்?''

''அவரை நான் எங்கேயும் பார்க்கலே.''

''நீயும் நானும் நண்பர்களா இருப்போம்னு அவர் நம்ப - ஏதாவது காரணங்கள் தென்படுதா?''

''அவருக்கு ஏதாவது இருந்திருக்கலாம்'' என்று சிந்தனையாய் சொன்னேன் நான். காரில் திரும்பிக் கொண்டிருந்த போது எங்கள் இருவருக்கும் இடையே நடந்த சம்பாஷணையை நினைத்துக் கொண்டிருந்தேன். ''அவர் ரொம்ப ஆழமான, ஆளுமையான மனுஷன்'' என்று தொடர்ந்த நான், 'ஆனா 'கலோனல்' என்ற என் ஊகத்துக்கு சற்றும் பொருந்தாதவர்'' என்றேன். ''அப்படி ஏதாவது அவர் மேல சந்தேகம் வந்தாலும் அதுல ஒரு பிரயோஜனமும் விளையாது. அவர் ரகசிய சேவை பிரிவுல பணியாற்றியிருக்கார்.''

''அப்படித்தான் அவர் வேலை செஞ்சார்னு உனக்கு எப்படி துல்லியமாய் தெரியும்? இது போல ஏதாவது மதிப்பு மிகுந்த ஒரு குறிப்பைத் தூவி விட்டுட்டு மறைஞ்சு வாழ்வதென்பது இந்த உலகத்துல ரொம்ப ரொம்ப சுலபமான ஒன்று. இதை யாரும் மறுப்பது கிடையாது. கடைசியா அப்படி சொன்னது ஒரு பொய்னு ஊர்ஜிதம் ஆகும் வரைக்கும் சந்தேகத்துக்கிடமா தெரியும் அனைத்து நடவடிக்கைகளிலிருந்தும் இந்த ஒரே ஒரு உயர்வான போர்வை அவனுங்களைக் காப்பாத்திடுது. சொல்லு, ஆனே, உனக்கு ரேஸைப் பிடிக்குதா?''

''எனக்குப் பிடிக்குது - எனக்குப் பிடிக்கலே. என்னை வெறுக்கவும் வைக்கிறார். அதே சமயத்துல என்னை பிரமிக்கவும் வைக்கிறார். ஆனா ஒண்ணு மட்டும் எனக்கு குழப்பமின்றி தெரியும். 'அவர்' னாலே, எனக்குக் கொஞ்சம் பயம் தான்.''

''கிம்பர்லி களவு நடக்கும் போது அவர் தென் ஆப்பிரிக்காவில தான் இருந்தார்'' என்றான் அவன் மெதுவாய்.

''ஆனா, அவர் தான், ஸூஸேனி கிட்டே, அந்த 'கலோனல்' பற்றிய அத்தனையையும் முதல்ல சொன்னது. பாரீஸ்ல 'கலோனலை' க் கையும் களவுமா பிடிக்க எப்படியெல்லாம் போராடினார்னும் அப்போ விளக்கினார்.''

''படு புத்திசாலித்தனமான நகர்த்தல்.''

''அப்படின்னா இதுல பகெட் எங்கிருந்து வரான்? ரேஸின் கூலியாளா?''

''ஒரு வேளை'' என்ற ரேபர்ன் நிதானமாய் சொன்னான்: ''ஒரு வேளை, இதுல பகெட் துளி கூட சம்பந்தப்படாதவனா இருக்கலாம்.''

''என்ன புது கதை.''

''கொஞ்சம் பின்னாடி போய் யோசி,ஆனே... கில்மார்டனில் அன்று இரவு நடந்தது என்ன என்பதை நீ பகெட் வாயாலே நேரடியா கேட்டியா?''

''ஆமாம். சர் ஆஸ்டஸ் மூலமா.''

அந்தப் பகுதியை நான் மறுபடியும் சொல்ல கூர்மையாய் கவனித்தான் அவன்.

''ஆக, சர் ஆஸ்டஸ் அறைப் பகுதியிலிருந்து ஒரு மனிதன் வெளியேறுவதைப் பார்க்கும் பகெட் அவனைத் தொடர்ந்து மேல் தளம் வரைக்கும் வரார். இது தானே அவர் சொன்னது ? சர் ஆஸ்டஸ் எதிர் கேபினை யார் வெச்சிருந்தது? கலோனல் ரேஸ். ஒரு வேளை அங்கே நடந்தது இப்படி இருந்திருந்தா..? கவனி. கலோனல் ரேஸ் அந்தப் பகுதியில் ஒருத்தருக்கும் தெரியாம ஒளிந்து இருந்திருக்கார். சமயம் வந்த போது அவருடைய தாக்குதலை உன் மேல் செலுத்தறார். உங்க ரெண்டு பேருக்கும் போராட்டம். அப்புறம் தப்பிச்சுப் பறந்துட முயற்சிக்கிறார். அப்போ அங்கே பகெட் நுழையறதைக் கவனிக்கிறார். அங்கேயே ஒரு உதை கொடுத்து சாய்ச்சுட்டு உள்ளே ஓடி கதவை முடிக்கிறார். நாம ஓடோடி வந்து அங்கே பகெட் விழுந்துக் கிடப்பதைப் பார்க்கிறோம். இதெப்படி?''

''அங்கே வந்து அடிச்சு போட்டது நீ தான்னு தொண்டை கிழிய அவன் கத்தறதை நீ மறந்துட்டியா?''

''ஒரு வேளை, அவன், தன்னுடைய சுய நினைவினை மறுபடியும் அடையும் போது, தூரத்துல நான் போய்க்கிட்டிருப்பதைப் பார்த்திருந்தா? அப்போ, நான் தான் அவனைக் கொன்னுப் போட வந்தவன்னு அவன் நினைச்சிருக்க மாட்டான்? அதிலும், குறிப்பா, முழுக்க முழுக்க என்னை அவன் தொடர்ந்துகிட்டே இருக்கிறதா நான் நினைக்கிறதாக ஒரு கற்பனையில அவன் இருக்கும் போது...?''

''ஆமாம். இது சாத்தியம் தான்'' என்றேன் நான் மெதுவாய். ''ஆனா இது நம்முடைய அத்தனை ஊகங்களையும் மாற்றுது.மேலும், நாம யோசிக்க வேண்டிய இன்னும் பல விஷயங்களும் இருக்கு.''

''அவை அத்தனையும் விளக்கங்கள் உள்ளவை'' என்றான் அவன். ''உன்னை கேப் டவுனில் பின்தொடர்ந்த ஆள் பகெட்' டுடன் நெருக்கமா பேசியிருக்கான். அதுக்கு பகெட் தனது கைக்கடிகாரத்தைப் பார்த்திருக்கான். அந்த ஆள் மணி என்ன எனும் சின்ன கேள்வியை மட்டும் பகெட்டிடம் கேட்டிருக்கலாம்.''

''அது வெறும் எதிர்பாராத ஓர் ஒற்றுமைனா சொல்றே!''

''முழுக்க அப்படி சொல்லிட முடியாது. பகெட்டை இந்த சமாச் சாரத்துக்குள்ளே வசதியா நுழைக்கும் ஓர் ஒழுங்கான அணுகுமுறை இந்த கேஸ் முழுக்கவும் இருக்கு. இந்த நாம கவனிக்கணும். மில் வீடு ஏன் கொலைக்கான களமா தெரிந்தெடுக்கப்படணும்? வைரங்கள் களவு போனபோது பகெட் கிம்பர்லியில இருந்தான் என்ற காரணத் துக்காவா? அந்தக் காட்சியில நான் போய் முழுசா நிற்கலைனா... ஒரு வேளை பலிகடாவாக ஆக்கப்பட்டிருப்பது, பகெட்டா இருக்குமா?''

''ஓ, அப்படினா பகெட் முழுக்க முழுக்க ஒரு வெகுளினா சொல்றே?''

''இது அப்படித்தான் போகுது.ஆனா, அப்படினா, இந்த பகெட் பய மார்லோல என்ன பண்ணிக்கிட்டிருந்தான்னு நாம கண்டுபிடிச் சாகணும். இதுக்கு அவன்கிட்டே காரண காரியத்தோட இணைந்து பதில் மட்டும் இருந்துட்டா, நாம சரியான பாதையில தான் போய்க் கிட்டிருந்தோம்.''

சொல்லிவிட்டு எழுந்துக் கொண்டான் அவன். ''நடு ராத்திரி கடந்தாச்சு. ஆனே, உள்ளே போ. கொஞ்சம் தூங்கு. ட்ரெயின் புறப்படற வரை உன்னை பொத்திப் பொத்தி மறைச்சு வைக்க அங்கே

என் நண்பன் ஒருத்தன் வருவான். நேரா புலவாயோ போ. அங்கிருந்து பெய்ராக்கு ட்ரெயின் பிடி - நீ தங்கியிருந்த ஒட்டலுக்கு ஆள் அனுப்பி உன் நண்பர்களுக்கெல்லாம் என்ன ஆச்சு, அவங்க எங்கேயிருக்காங்க எனும் அத்தனை விவரங்களையும் நான் கண்டுபிடிக்கிறேன்.''

''பெய்ரா'' சிந்தனையாய் சொன்னேன் நான்.

''யெஸ், ஆனே, பெய்ரா தான், உனக்கு. இது ஆண் செய்ய வேண்டிய வேலை. என்கிட்டே விடு.''

இந்த நிலைமையை மறுபடியும் பேசும் போது உணர்ச்சிப் பெருக்கால் இரு பக்கமும் கோபங்கள் விளைந்தன. மறுபடியும் அமைதியானோம். ஒருவர் முகத்தை மற்றவர் பார்த்துக் கொள்ளக் கூட இல்லை.

''அப்ப ரொம்ப சரி'' என்ற நான் குடிசைக்குள் போய் விட்டேன்.

தோல் போட்டு மூடப்பட்டிருந்த கட்டிலில் படுத்துக் கொண்ட நான், தூங்கவில்லை, வெளியே கும்மிருட்டு. இரவு முழுக்க, மேலும் கீழும் மேலும் கீழும் ரேபர்ன் நடந்துக் கொண்டேயிருப்பதை என்னால் கேட்க முடிந்தது. இறுதியாய் அவன் என்னை அழைத்தான்: ''வா ஆனே, இது கிளம்ப வேண்டிய நேரம்.''

எழுந்துக் கொண்ட நான் மரியாதையாய் வெளியே வந்து நின்றேன். எங்கும், கும்மிருட்டாய் இருந்தாலும் விடியல் வெகு தொலைவில் இல்லை என்பதை நான் அறிந்துக் கொண்டேன்.

''மோட்டார் படகுல தான் போறோம். இருந்தாலும், துடுப்பு எடுத்துப்போம்...''

இப்படித்தான் ஆரம்பித்தான் ஹார்ரி. ஆனால் அப்போது சட்டென பேசுவதை நிறுத்தியவன், ''உஷ்'' என்று இருவரையும் அடக்கினான். ''என்னது அது?''

நான் காது கொடுத்துக்கேட்டேன். ஆனால் ஒன்றும் கேட்க இயலவில்லை. கடும் காடுகளில் பல நாட்கள் தங்கியிருந்த அவனுடைய காதுகள், ஆண் காதுகள், என்னுடையவைகளை விட கூர்மையாய் இயங்கின. ஆங்.. இப்போது நானும் கேட்டேன். துடுப்புகள் கடல் நீரில் அடிக்கப்படும் இயக்கத்தின் மெலிதான ஓசை. நதியின் கிழக்குக் கரை பகுதியிலிருந்து வந்தது அது. அங்கிருந்த சிறு கரையிறங்கும் பகுதியை நோக்கி அது நெருங்கியது.

இருட்டைக் கிழித்துக் கொண்டு பார்வையால் இருவரும் துளாவினோம். அப்பகுதியில், கடலின் அலைகளின் மீது, தெளிவற்ற

கறுப்பு நிழல் உருவமொன்று புலப்பட்டது. அது ஒரு படகு. பிறகு, நொடிப் பொழுது விளைந்து அடங்கிய ஜ்வாலைப் பொறிகள் தென்பட்டன. யாரோ தீக்குச்சியைப் பற்ற வைத்திருக்க வேண்டும். அந்த ஒளியில் நான் ஓர் உருவத்தை அடையாளம் கண்டேன். மூஸின் பெர்க் வீட்டிலிருந்த சிகப்பு தாடி வைத்த டச்சுக்காரன் அவன். மற்றவர்கள் இங்கிருக்கும் காட்டுவாசிகள்.

''சீக்கிரம் மறுபடியும் குடிசைக்கு ஓடு.''

என்னைப் புயலாய் சுருட்டிக் கொண்டு ஓடினான் ஹார்ரி. கையில் சில துப்பாக்கி குண்டுகளை எடுத்துக் கொண்டவன், கூடவே இரு பெரிய துப்பாக்கிகளையும் எடுத்துக் கொண்டான்.

''உனக்கு துப்பாக்கிக்குள்ளே குண்டு போடத் தெயுமா?''

''பண்ணினது கிடையாது. எப்படின்னு காட்டிக் கொடு.''

அவன் சொன்ன முறையைக் கெட்டியாய் பிடித்துக் கொண்டேன். கதவை மூடி விட்டோம். ஹார்ரி, கரையிறங்கும் பகுதியைக் காட்டிய ஜன்னல் பக்கத்தில் போய் உட்கார்ந்துக் கொண்டான். அங்கு படகு அப்போது தான் வந்து சேர்ந்துக் கொண்டிருந்தது.

''யாருப்பா அது?'' என்று அதட்டும் குரலில் கத்தினான் ஹார்ரி.

எங்களைத் தேடி வந்திருக்கும் பார்வையாளர்கள் பற்றி எங்களுக்குள் ஏதாவது சந்தேகங்கள் இருந்திருந்தால் அவை உடனடியாய் நிவர்த்தியாயின. எங்களைச் சுற்றிலும் ஒரு குண்டுப் புயல் கடந்துப் போனது. எங்களில் ஒருவரும் காயப்படாதது அதிர்ஷ்டவசம் தான். ஹார்ரி அவனுடைய துப்பாக்கியை உயர்த்தினான். அது கொலை வெறியோடு வெடித்தது. மீண்டும், மீண்டும், அந்தப் பக்கத்தில் இரண்டு மரண ஓலங்களும் ஒரு நெருப்புக் கங்கும் தென்பட்டன.

''ஆங்.... அடிச்ச அடி அவனுங்களை யோசிக்க வெச்சிருக்கும்'' என்றான் இறுக்கமாய். கையிலிருந்த துப்பாக்கியை இறக்கிவிட்டு அடுத்ததை எடுத்துக் கொண்டவன், ''தயவு செய்து குனிஞ்சு உட்கார்ந்திடு ஆனே. உனக்குப் புண்ணியமா போகும். படமா ஓடுது, எட்டியெட்டிப் பார்க்க!ம். அந்தத் துப்பாக்கியில் குண்டுகளை நிரப்பு.''

பல குண்டுகள். ஒன்று, ஹார்ரியின் கன்னத்தை வெகு பக்கத்தில் கடந்துப் போனது. நெருப்பாய் இவன் தந்த உடனடி பதில்கள் அவர்களுடையவற்றை விட படு துரிதமாயிருந்தது. அவன் திரும்பிக் கையை நீட்டிய போது துப்பாக்கியை நிரப்பியிருந்தேன் நான். இப்போது, அதை வாங்கிக் கொண்டு மீண்டும் ஜன்னல் பக்கம்

திரும்புவதற்குள், வெறித்தனமாய் எனக்கொரு முத்தமிட்டான் அவன்! சட்டென ஒரு குமுறலாய் சொன்னான் : ''அவனுங்க போறானுங்க. திரும்பறானுங்க. தாள முடியலே போல! இப்போதைக்குக் கடலுக்குள்ளே போயிட்டாலும் நாய்ங்க திரும்பி வருவானுங்க. அதுக்கும் நாம தயாரா இருக்கணும்.'' - சொல்லி விட்டு துப்பாக்கியைக் கீழே வைத்தவன் திரும்பி என்னைப் பார்த்தான்.

''ஆனே! ப்யூட்டி! அற்புதமே! என் குட்டி ராணி! சிங்கத்தைப் போன்ற துணிச்சல், ஆஹ்! பிசாசு - என் கருங்கூந்தல் பிசாசு!''

அவன் கையோடு கையாக பிணைத்துக் கொண்டான். முதலில் என் கூந்தல், பிறகு கண்கள், இறுதியாய் வாய். முத்தங்களிட்டான்.

''போதும், போதும்! முதல்ல எடுத்த காரியம்'' - திடுமென என்னை விடுவித்துவிட்டு சொன்னான் அவன். ''அந்த பாரஃபின் டின்களை வெளியிலே கொண்டு போ.''

எனக்கு சொன்னபடி செய்தேன் நான். அவன் குடிசைக்குள் என்னவோ செய்துக் கொண்டிருந்தான். தற்சமயம் குடிசையின் கூரைக்கு மேலே கையில் எதையோ வைத்துக் கொண்டு அவன் மெல்லமாய் தவழ்ந்தபடி ஊர்ந்துக் கொண்டிருப்பதை நான் பார்த்தேன். பிறகு ஓரிரு நிமிடங்களில் என்னுடன் சேர்ந்துக் கொண்டான்.

''படகுக்குப் போ. நாம இவற்றை தீவினைக் கடந்து அந்தப் பக்கத்துக்குக் கொண்டு போகணும்.''

நான் மறையத் தொடங்கியதும் பாரஃபின் டின்களை எடுத்துக் கொண்டான் அவன்.

அப்போது, ''அவனுங்க திரும்பி வரானுங்க.'' மிருதுவாய் குறிப்பிட்டேன் நான். எதிர்க்கரையிலிருந்து நிழலுருவம் பிரயாணிக்க ஆரம்பிப்பதை நான் கவனித்தேன்.

அவன் ஓட்டமாய் என்னை நெருங்கினான். ''நேரங்கடத்தக்கூடாது. ச்சே! எங்கே போச்சு அந்தப் படகு?''

படகுகளை இறுக்கிப் பிடித்திருந்த கயிறுகள் அறுக்கப்பட்டிருந்தன. ஹார்ரி சங்கேதமாய் விசிலடித்தான். ''இறுக்கமாய் நெருக்கப்படுகிறோம் ஹனி. புரியுதா?''

''நீ இருக்கும் போது கவலையில்லை.''

''ஆஹ்! ஆனா ரெண்டு பேரும் சேர்ந்து ஒண்ணா மண்டையைப் போடுவது என்ன, லட்டு சாப்பிடற மாதிரியா? அங்கே கவனி - இந்தத் தடவை ரெண்டு படகுல கூட்டமா வரானுங்க. இரு வேறு பகுதியில

இறங்குவானுங்க. இப்போதான் என்ன சின்ன திருட்டு மூளை வேலை செய்யணும்.''

இப்படி அவன் பேசி முடிப்பதற்குள்ளாகவே நீளமான தீ ஜ்வாலைகள் குடிசையின் மேலிருந்து கிளம்பின.

''என் பழைய துணிகள் - பெரிய பெரிய மூட்டைகளா கனமான சாக்குள்ல இருக்கு. போகட்டும். கிளம்பு ஜானே. தப்பிக்க எப்படியாவது ஒரு வழியைத் தேடி பிடிச்சாகணும்.''

கையோடு கை. தீவின் குறுக்காய் ஓடினோம். ஓரிடத்தில் ஒரு சிறு குறுகலான நதிப் பாதை, கரையின் அப்பகுதியைத் தீவிலிருந்து பிரித்து வைத்தது. ''இதுல நீத்தித் தான் கடக்கணும். உனக்கு நீந்த வருமா, ஆனே? தெரியாவிட்டாலும், பரவாயில்லை. உன்னைச் சுமந்துக் கிட்டே நான் அந்தப் பக்கம் போயிடுவேன். நோ ப்ராப்ளம். இது படகுகளுக்கு உகந்த பகுதி கிடையாது. வெறும் பாறைகள், கற்கள், இடைமறிப்புகள்! ஆனா, நீந்துவதற்கு மிக உகந்த பகுதி. லிவிங்ஸ்டன் ரயிலடிக்கும் நெருக்கமான பகுதி, ம்!''

''நான் கொஞ்சம் நீந்துவேன். ஆனா உன் முகத்துல களை குறையுதே ஹாரி? இங்கே என்ன ஆபத்து இருக்கு?'' - அவன் முகத்தின் வண்ணம் குறைவதைக் கவனித்தேன். ''திமிங்கிலங்கள்?''

''கிடையாது, வாத்தே! திமிங்கிலங்கள் வாழ கடல் தேவை. ஆனா நீ படு ஸ்மார்ட் ஆனே, கற்பூரம்! இப்ப பிரச்சனை - முதலைகள்.''

''முதலைகள்?''

''ஆமாம். அதுக்காக அதுங்களையே கற்பனை பண்ணாதே. இறங்கிக் கடக்க முடியாது. உனக்குப் பிடிச்ச பிரார்த்தனை பாடலைப்பாடு. குதி.''

நாங்கள் குதித்தோம். என் பிரார்த்தனைகளுக்கு பதில் கிடைத் திருக்க வேண்டும்... எவ்வித வீர தீர சாகசக்காட்சிகளுக்கும் இடமின்றி நாங்கள் கரையடைந்தோம். முழுதும் நனைந்து சொட்டும் ஈரத்தோடு, இழுத்துத் தவழ்ந்தபடி கரை ஏறினோம்.

''இப்ப நேரா லிவிங்ஸ்டன். இந்த நிலைமையில் நடக்கறது கஷ்டமாயிருக்கும். ஈரத்துணிகள் நடக்க விடாது. ஆனா - நடந்தாகணும் - சீக்கிரமா.''

அங்கு நடந்த நடை. - ஒரு சித்ரவதை. எனது ஈர தொள தொள உடைகள் காலோடு காலாக பின்னிக் கொண்டு நடக்க விடாமல் இறுக்கின. இருட்டில் மேலே பட்டு இழுத்த முட்களால் எனது

மேலங்கிகள் கிழிந்து அவை ஒரு பக்கம் இறுக்கி இம்சித்தன. ஒரு கட்டத்தில் நின்றுவிட்டேன் - உடல் சக்தி முழுவதும் இற்றுப் போய். முன்னால் போயிருந்த ஹார்ரி விறுவிறுவென திரும்பி என்னை நெருங்கினான்.

''ஏறிக்கோ, ஹனி. உன்னைக் கொஞ்ச தூரம் தூக்கிட்டுப் போறேன்.''

இப்படி, அவன் தோளில் ஒரு பொதி மூட்டையாய் தொங்கிக் கொண்டு, நான் லிவிங்ஸ்டன் வந்து சேர்ந்தேன். எப்படித்தான் என்னை அத்தனை தூரம் தூக்கியபடி அவன் வந்தானோ - அது நானறியாதது. சேர வேண்டிய இடத்தை அடைந்த போது கீழ்வானத்தைத் துளைக்கும் கதிரவனின் முதல் கிரணங்கள் பூமியை வந்தடைந்தன. ஹார்ரியின் நண்பன் இருபது வயது மதிக்கத்தக்க ஒரு விடலைப் பையன் அவனிடம் காட்டு வாசிகளிடம் இருக்கவல்ல ஏராளமான ஆயுதங்களிருந்தன. அவன் பெயராய் ஒன்று சொல்லப்பட்டது ஆனால் நிச்சயமாய் அவனுக்கு வேறு பெயர் இருந்ததாக வேண்டும். அவன் - முழுவதும் நனைந்த நிலையில் ஒரு பெண்ணைச் சுமந்துக் கொண்டு, அதே அளவு நனைந்த நிலையில் ஹார்ரே நடந்து வருவதைப் பார்த்துத் துளியும் ஆச்சரியமெல்லாம் அடையவில்லை. ஆண்களே ஆச்சரியமானவர்களல்லவா!

உண்ண உணவு தந்தான். சூடாய் காபி தந்தான். கனமான ஏதோ ஒரு வகை உடைக்குள் நாங்களிருவரும் தஞ்சமடைந்திருந்த நேரத்தில் எங்களது துணிமணிகளைக் காய வைத்துத் தந்தான். சர் ஆஸ்டஸ் குழுவினருக்கு என்ன ஆயிற்று என்றும் அவர்கள் அனைவரும் இன்னும் ஓட்டலில் தான் இருக்கிறார்களா என்றும் விசாரித்து வருவதற்காக அவன் வெளியேறிய போது, நாங்கள் அடைத்து வைக்கப்பட்டிருந்த மிகச் சிறிய அறை, எவ்வித சந்தேகத்தையும் வெளியுலகுக்கு ஏற்படுத்தித் தராத அளவுக்குப் பாதுகாப்பானதாக இருந்தது.

அந்தத் தனிமையின் போது நான் தான் ஹார்ரேயிடம் சொன்னேன்: ''பெய்ராவுக்குப் போகும்படி என்னை எந்த சக்தியாலும் விரட்டியடிக்க முடியாது.'' என் விரோதிகள் அனைவரும் நான் இறந்து விட்டதாகவே நினைத்துக் கொண்டிருந்தார்கள். ஆனால் இப்போது, அப்படியல்ல. நான் இறக்கவில்லை என்பது தெரிந்துவிட்ட பிறகு நான் கிளம்பிப் போவதில் பயனொன்றும் விளைந்துவிடப் போவதில்லை. என்னை

அவர்கள் வெகு சுலபமாக பின்தொடர்ந்து காதும் காதும் வைத்தாற்போல போட்டுத் தள்ளி விடலாம். என்னைக் காப்பாற்ற ஒருவர் இருக்க மாட்டார்கள். நான் நேரடியாக ஸுஸேனியிடம், அவர் எங்கிருந்தாலும் அங்கு போய் அவரோடு சேர்ந்துவிட வேண்டும் என்று முடிவானது. பிறகு நான் என் சக்தி அத்தனையையும் என்னைத் தற்காத்துக் கொள்வதிலேயே செலவழிக்க வேண்டும். எக்காரணத்தை முன்னிட்டும், வீர சாகசம் செய்கிறேன் பேர்வழி என்றோ அல்லது 'கலோனலை' நீதிக்கு முன் இழுக்கிறேன் என்றோ நான் நடந்துக் கொள்ளவே கூடாது என முக்கியமாய் அறிவிக்கப்பட்டது.

நான் ஸுஸேனியிடமே, ஹார்ரியிடமிருந்து கட்டளைகள் வரும் வரை பொறுமையாய் காத்திருக்க வேண்டும். கிம்பர்லி வங்கியில் 'பார்க்கர்' எனும் பெயரில் வைரங்கள் பாதுகாப்பாய் வைக்கப்பட வேண்டும்.

''இன்னும் ஒரு விஷயமிருக்கு'' என்றேன் நான். சிந்தனையாய். ''நம்ம ரெண்டு பேருக்கும் மட்டுமே புரியவல்ல சங்கேத மொழி ஒன்று அத்தியாவசியம். நானும் நீயும் சந்திக்க விரும்புவது போன்ற கடிதங்களால் நாம மறுபடியும் ஏமாற்றப்படுதல் கூடாது.'

''அதுக்கென்ன - ரொம்ப சுலபம். என்னிடமிருந்து உண்மையாய் வரும் எந்தத் தகவலும், ''ஆண்டீ'' என்ற பெயர் தாங்கி வரும்.''

''இப்போது, ட்ரெயின் எப்ப வேணும்னாலும் உள்ளே வரும், ஹார்ரி'' என்றான் நண்பன், அது வரும் திசையில் தலையை எட்டி எட்டிக் காட்டி.

நான் எழுந்துக் கொண்டேன். ''உறுதியான மனம் கொண்ட ஆம்பிளை கிடைச்சா, நான் கலியாணம் பண்ணிக்கலாம் இல்லே?'' கேட்டேன் நான்.

இதற்கு ஹார்ரி என்னை மிக நெருங்கி வந்து நின்றான். ''என்னைத் தவிர மவனே நீ வேற ஒருத்தனைக் கலியாணம் பண்ணினேனு வை... அவன் கழுத்தைத் திருகியே கொல்வேன். உன்னையும் விட்டுடுவேன்னு நினைக்காதே...''

கடைசியாய் அவன் சொன்னதற்கு சந்தோஷமாய் கிளர்ந்தெழுந்த நான், ''எடுத்துக்கோ....'' என்றேன். என் கழுத்தை!

''அவனுக்கு நேரா சாவு, ஆனா உனக்கு? ம்ம்! அங்குலம் அங்குலமா அடிச்சு. ரத்த விளாரா ... ஆக்கி ....''

''எத்தனை அற்புதமான கணவனைத் தேர்ந்தெடுத்திருக்கேன், நான்.''

# அத்தியாயம் - 28

(சர் ஆஸ்டஸ் பெட்லர் எம்.பி. டைரியிலிருந்து எடுத்தவை)

*ஏற்கெனவே ஒரு முறை குறிப்பிட்டிருந்தது போல, அமைதியான வாழ்க்கையை நேசிக்கும் மனிதன், நான். படாடோபமற்ற சாந்தமான வாழ்க்கையை நாடியிருப்பவன் - ஆனால் ஜஸ்ட் இது ஒன்று மட்டும் தான் எனக்கு வாய்க்கவே வாய்க்காது போலிருக்கின்றது. நான் எப்போதுமே புயல்களுக்கும் எச்சரிப்புகளுக்கும் மத்தியிலேயே இருக்கிறேன். தேவையில்லாமல் மூக்கை நுழைத்து இடைவிடாது ஏதாவது சதியாலோசனை தந்துக் கொண்டேயிருக்கும் பகெட்டிட மிருந்து தப்பித்து விடுவதால் வரும் நிவாரணம் மகத்தானது. இதற்கு, மிஸ் பெட்டி-க்ரூ, நிச்சயமாய் ஒரு உபயோகமான படைப்பே. ஆஹா ஓஹோவென சொல்ல அவளிடம் பெரிதாய் ஏதுமில்லா விட்டாலும் அவளுக்கென்று இருக்கும் ஒருசில பிரத்யேக ஆற்றல்கள் குறிப்பிட வேண்டியவை. புலவாயோவில் எனக்குத் தாளாத வயிற்றுப்பிரச்சினை வந்தது என்பதையும் அதன் காரணமாக நான் ஒரு முரட்டு மிருகம் போல் நடந்துக் கொண்டேன் என்பதையும் ஒப்புக் கொள்கிறேன். ஆனால் இதையும் தாண்டி, அங்கு, என்னை மிகவும் தொல்லைக்குள்ளாக்கிய இரவு ஒன்று அமைந்தது. காலை மூன்று மணியிருக்கும். பிரத்யேகமான உடையலங்காரத்தில் இருந்த ஓர் ஆடவன் என் பெட்டிக்குள் நுழைந்து என்னைத் தட்டியெழுப்பி நான் எங்கு பிரயாணித்துக் கொண்டிருக்கிறேன் என கேட்டான். ''டீ -தப்பிக் கூட அதுல சர்க்கரை போட்டுட வேண்டாம்' என்று என் முதல் பதிலைத் தூக்கியெறிந்துவிட்டு, அவன் டீ-காரன் இல்லையென்றும் ரயிலதிகாரி என்றும் அழுத்தந்திருத்தமாய் எச்சரித்து விட்டு மறுபடியும் அதே கேள்வியைக் கேட்டான் அவன். நான் திருட்டுப் பயல் இல்லை என்றும், ருடேஸியாவுக்கு தனிப்பட்ட பிரயாணம் மேற்கொண்டிருப்பதாகவும், நான் யார் என்பதையும், என் முழு பெயர் மற்றும் பிறந்த தேதி இத்யாதிகளையும் தந்தேன். ஒழிந்தான். பிறகு சிறு துண்டுத் தூக்கமாவது வராதா என நான் முயலும் போது, ஏதோ ஒரு ரயில்வே கழுதை, திரவ சர்க்கரையை டீ என அழைத்துக் கொண்டு என்னை ஐந்தரைக்கு எழுப்பியது. அவன் முகத்தில்*

*அந்தத் தண்ணீரை எறிய வேண்டும் என்று தான் நினைத்தேன். ம்ம், பிழைத்தான். நான் அப்படி செய்யவில்லை. அவனே, ஐஸ் கட்டி ஜில்லிப்பில் இருந்த டீயை ஆறு மணிக்கு எடுத்து வந்தான். இதற்கு பிறகு, இனி மேற்கொண்டு போராடவே முடியாது என துவண்டுப் போய் நீண்ட தூக்கத்தில் வீழ்ந்தேன். புலவாயோ தாண்டி, நீட்ட நீட்டமாய் காலி கைகளும் கழுத்தும் கொண்ட ஒட்டைச் சிவிங்கியின் முகத்தில் விழித்தேன் நான்.*

*இப்படி உருவான சில சில இடையூறுகளைத் தவிர ஏனைய அனைத்துமே மிருதுவாகத் தான் அமைந்தன. பிறகு ஒரு புதிய பிரளயம் வெடித்தது.*

*இது நடந்தது, ஃபால்ஸ் பகுதிக்கு நாங்கள் வந்த இரவில். என் படிக்குமறையில் உட்கார்ந்துக் கொண்டு பதிலனுப்ப வேண்டிய கடித சமாச்சாரங்களை மிஸ் பெட்டி-க்ரூவுக்கு நான் சொல்லிக் கொண்டிருந்த சமயம். ஒரு வார்த்தை எக்ஸ்க்யூஸ் கூட கேட்காமல் தடாலடியாய் என்னறைக்குள் நுழைந்தார் மிஸஸ் ப்ளேர்.*

*''ஆனே எங்கே?'' - அலறலாய்க் கேட்டார் அவர்.*

*கேட்க வேண்டிய கேள்வி தான் - என்னைப் பார்த்து! ஏதோ நான் தான் அந்தப் பெண்ணுக்கு ஜவாப்தாரி என்பது போல! இக்கேள்வியால் மிஸ் பெட்டி-க்ரூ என்ன நினைப்பாள் என கொஞ்சமாவது சிந்தித்திருப்பாரா அவர்? நள்ளிரவை ஒட்டிய நேரத்தில் தான், நான் எப்போதும் என் பாக்கெட்டிலிருந்து ஆனே பெட்டிங்ஃபீல்ட்டை எடுத்து வெளியே விடும் குணமுள்ளவன் என நினைத்து விட்டால்...?! அதுவும் என் போன்ற ஓர் உயர் பதவியிலிருப்பவனுக்கு இது ரொம்ப அவசியம்!*

*''அவ.....'' என கடுமையாய் முகத்தினை வைத்துக் கொண்டு ஆரம்பித்த நான், ''..... அவளோட படுக்கையிலே இருக்கணும்'' என்றேன்.*

*தொண்டையைச் செருமிக் கொண்டு மிஸ் பெட்டி-க்ரூவை நோட்டமிட்ட நான், இச்செய்கையால், கடிதத்தைத் தொடர்ந்து சொல்லப் போகிறேன் என்பதைப் பொதுவாய் உணர்த்தினேன். இந்தக் குறிப்பினை புத்தியிருந்தால் மிஸஸ் ப்ளேர் புரிந்துக் கொள்வார் என எதிர்பார்த்தேன். அப்படி எதையும் அவர் காட்டிக் கொள்ளவில்லை. மாறாக அருகிலிருந்த ஒரு நாற்காலிக்குள் புதைந்துக் கொண்ட அவர், காலணி போட்டிருந்த காலைக் காலுக்கு மேல் போட்டு ஆட்டியபடி அதிர்விலிருந்தார்.*

*''அவ, அவளோட ரூம்ல இல்லே. நான் அங்கே போய் பார்த்துட்டு தான் வரேன். நான் ஒரு கனவு கண்டேன். பயங்கரமான கனவு. அவ, மீள முடியாத ஆபத்து ஒண்ணுல மாட்டிக்கிட்ட மாதிரி. அப்படியெல்லாம் எதுவும் கிடையாதுனு ஊர்ஜிதப்படுத்திக்க அவ ரூம் வரை போய் எட்டிப் பார்த்தேன். சர் ஆஸ்டஸ், ஓஹ், அவ அங்கே இல்லை. படுக்கையில் படுத்ததுக்கான அறிகுறிகளும் காணோம்.''*

உதவ மாட்டீர்களா என்பது போல என்னைப் பார்த்தார் அவர். ''நான் இப்ப என்ன பண்ணட்டும், சர் ஆஸ்டஸ்?''

''படுக்கப் போங்க. ஒண்ணுமில்லாததுக்கு கலவரப்படாதீங்க. தளதளனு பலம் பொருந்திய ஆனே போன்ற துணிச்சலான பெண்களுக்கு அவங்களை அவங்களே பாதுகாத்துக்கத் தெரியும்.'' முறைப்பாய் சொன்ன நான் விட்டேற்றித்தனமாய் கேட்டேன்: ''இது பற்றி ரேஸ் என்ன சொல்றார்?''

''அவரை நான் எங்கேயும் பார்க்க முடியலே.''

இந்த ராத்திரி பொழுதையே களேபரமாக்க அவர் முயல்வது வெளிப்படையாய் தெரிந்தது. நான் பெருமூச்சு விட்டு என் நாற்காலியில் வசதியாக சாய்ந்துக் கொண்டேன். பொறுமையைக் கடைபிடித்து ''உங்களோட படபடப்புக்கு ஒரு காரணமும் எனக்கு இன்னமும் தென்படலே'' என்றேன்.

''என் கனவு....''

''டின்னர்ல அதிகமா நாம சாப்பிட்ட அந்த எண்ணெய் கறி!''

''ஓ, சர் ஆஸ்டஸ்!''

வெறுப்பும் கோபமுமாய் ஆனார் அவர். இருந்தாலும், ஜீரணமாகாத பொருட்களின் விளைவாய் கெட்ட கனவுகள் அலைக்கழிக்கும் என்பது பலர் அறிந்ததே!

அவரை ஊக்குவிக்கும் விதமாய், ''ஒரு வேளை'' என ஆரம்பித்த நான், ''பெட்டிங்ஃபெல்ட்டும் ரேஸூம் ஒரு சிறு நடைக்கு வெளியே போயிருந்தா?'' என்றேன். ''இதுக்காக ஓட்டலையே எழுப்பி அவங்க அறிவிச்சிருக்க வேண்டாம், இல்லே?''

''அவங்க ரெண்டு பேரும் சும்மா வெறும், சிறு நடை நடக்கத்தான் போயிருப்பாங்கனா சொல்றீங்க, ஆங்? அதுவும் இந்த நடு ராத்திரி கடந்துவிட்ட அகாலத்துல?''

''இளமையில் இது போன்ற பல முட்டாள் தனங்கள் பண்ணுவதுண்டு, மிஸஸ்'' என, முணுமுணுத்த நான், ''ஆனா, அந்த ரேஸ் பய கிழவனுல்லே...?'' என்றேன்.

''அப்படியா? அப்படியா நீங்க நிஜமாவே நினைக்கிறீங்க?''

''ரெண்டு பேருக்கும் பொருத்தம் ஒத்து வருமானு பேசத்தான் போயிருக்காங்க'' என்றேன் நான் - இதைப் போல முட்டாள்தனமான வேறு ஓர் ஆலோசனையை இந்தக் குழப்பத்துக்கு யாராலும் தர முடியாது என்ற நினைப்போடு! இல்லையென்றாலும், இது போன்ற வனாந்திரப் புதுப் பகுதியில் வேறெங்குத் தான் ஓட முடியும்?

எத்தனை நேரம் தான் இப்படிப்பட்ட ஆலோசனைகளை அள்ளி அள்ளி வீசிக் கொண்டிருந்தேனோ, அது எனக்கே தெரியாது. ஆனால் ஒரு

*கட்டத்தில் ரேஸே எங்களை நாடி உள்ளே வந்துக் கொண்டிருந்தார். என் ஊகம் பாதி சரி தான்.... அவர் சிறு நடைக்காக வெளியே போயிருக்கிறார். ஆனால் கூட ஆனேவையும் இழுத்துக் கொண்டு அவர் போகவில்லை. அப்படியே ஆனாலும், நிலைமையைக் கையாள்வதில் என் அணுகுமுறையில் நான் அதிகத் தவறு இழைத்திருந்தேன். இது உடனேயே எனக்கு உணர்த்தப்பட்டது. மூன்றே நிமிடங்கள் தான் - ஓட்டலையே தலை கீழாய் கவிழ்த்திருந்தார் ரேஸ். இந்த அளவுக்கு அப்செட் ஆகிய ஓர் ஆடவனை நான் பார்த்ததேயில்லை.*

*விஷயம் மிக அசாதாரணமான ஒன்றாய் உருவெடுத்தது. அந்தப் பொண்ணு எங்கே போனாள்? பதினோரு மணி பத்து நிமிடங்களுக்கு, அந்த இரவில் தேவையேற்ற அளவுக்கு அலங்காரங்கள் செய்துக் கொண்டு வெளியே கிளம்பியிருக்கும் பெண், பிறகு ஓட்டல் திரும்பவில்லை. தற்கொலை எனும் ஊகம் ஆனேயோடு பொருத்திப் பார்க்கயியலாத ஒரு கற்பனையாய் தான் தோன்றியது. வாழ்க்கையை தானாய் அறுத்துக் கொள்ளும் எண்ணம் துளியும் இல்லாத பெண். நாளை நண்பகல் வரை இருபுறத்திலிருந்தும் ஒரு ட்ரெயினும் கிடையாது. ஆக இந்த இடத்தை விட்டுவிட்டு அவள் எங்கும் போயிருக்க முடியாது. பின் எங்கு நான் போனது அந்தப் பிசாசு?*

*விறுவிறுவென இயங்கிக் கொண்டிருந்தார், புவர் ரேஸ். எந்தக் கல்லை விட்டெறிந்தாவது ஆனேவைக் கண்டுபிடித்து விட வேண்டும் என தனது செல்வாக்கு அத்தனையையும் கொட்டிக் கொண்டிருந்தார். கமிஷனர், இன்ஸ்பெக்டர் - எப்படியெல்லாம் சொல்லிக் கொள்ள முடியுமோ செய்துக் கொள்ளுங்கள். அத்தனை பேரையும் ஒன்று திரட்டி இருட்டுக்குள் தேடும்படி உருட்டி விட்டார். அங்கிருந்த உள்நாட்டு மக்கள், தேடுதலில் நாலு திசைகளிலும் திணிக்கப்பட்டனர். இப்படியாக என்னவெல்லாம் பண்ண முடியுமோ பண்ணினார். ஆனால் ஆனே கிடைக்கவில்லை. இறுதியாய், அவள் தூக்கத்தில் நடந்துப் போயிருக்கிறாள் என்ற தியரி ஒரு மனதாய் ஏற்றுக் கொள்ளப்பட்டது. பாலத்தினை ஒட்டி, பாதையை விட்டு விலகிப் போன காலடித் தடங்கள் கண்டெடுக்கப்பட்டன. இதுதான் உண்மை யானால், அவள் நிச்சயமாய் கீழே அடியில் கிடக்கும் பாறைகளில் மோதி பீஸ் பீஸாகியிருப்பாள். அதிர்ஷ்டவசமாக, அக்காலடிகள் அன்று காலையில் அந்தப் பக்கமாய் வந்த சுற்றுலா பயணிகளின் காலடிகளாகவும் இருக்கலாம் என்று வந்த சேதி ஆசுவாசமாய் அமைந்தது. இருந்த போதிலும் - அவள் எங்கே?*

*தூக்க நடை என்பதென்னவோ எனக்கு ஒரு திருப்திகரமான அறிவிப்பாய்ப்படவில்லை. தூக்கத்தில் நடப்பவர்கள் வழி தவறி அவதிப்பட*

*மாட்டார்கள் என்றும் அவர்களது விழித்திருக்கும் ஆறாவது அறிவு அவர்களைக் கவனித்துக் கொள்ளும் எனவும் நான் பற்பல முறை கேள்விப்பட்டிருக்கிறேன். இது, மிஸஸ் ப்ளேருக்கும் திருப்தி அளிக்கவில்லை என்பதை உணர்ந்தேன் நான்.*

*இத்தனையிலும் மிஸஸை என்னால் வெளியேற்ற முடியவில்லை. ரேஸ் மீதான அவரது முழு அணுகுமுறையும் மாறிப் போனது. எலியைக் கண்காணிக்கும் பூனை போல ஆனார் அவர். ''நிச்சயமாய் ரேஸுக்கு முழு எதிரியாய் ஒரு நாள் நானே வெடிப்பேன்'' என்பது போல நடந்துக் கொண்டார் அவர். பார்க்கப் போனால் இவர்கள் இருவரும் தான் அத்தனை நெருக்கமான நண்பர்களாயிருந்தவர்கள். இது தவிரவும், முழுக்க முழுக்க, அவர், அவராயில்லை. அதிர்ந்தார், படபடப்பானார், சின்னதுக்கெல்லாம் கத்தினார். குட்டி ஓசைக்குக்கூட கதறிக் கொண்டு துள்ளியெழுந்தார். இது தான் ஜோஹென்னஸ் பெர்க்குக்கு நான் கிளம்பி ஓட வேண்டிய சரியான தருணம் என முடிவெடுத்தேன் நான்.*

*நேற்றொரு புரளி, காற்று வாக்கில் அடித்தது. இங்கு ஓடும் ஆற்றை ஒட்டி ஒரு மர்மத்தீவு இருக்கிறதாம். அதில் ஓர் ஆணும் ஒரு பெண்ணும் மட்டுமே இருக்கிறார்களாம். இதைக் கேட்டதும் ரேஸ் கிளர்ந்தெழுத்துப் போனார். ஆனால் இந்த செய்தி எங்களுக்கு எவ்வித உபயோகமுமற்றது என்பது உடனேயே விளங்கியது. அந்த ஆடவன் அங்கேயே பல வருடங்கள் இருக்கின்றானாம். ஓட்டல் மானேஜருக்கு அவனுடன் நல்ல பழக்கம் இருந்தது. விழாக் காலங்களில் வரும் சுற்றுலாப் பயணிகளை நதிக்கு இந்தப் பக்கமும் அந்தப் பக்கமும் படகில் கொண்டு போய் சுற்றிக் காட்டும் வழக்குமுள்ள அவன், அங்கு தென்படும் முதலை மற்றும் நீர் யானைகள் போன்றவற்றைக் காட்டி பிரமிக்க வைத்துப் பிழைப்பு நடத்தியிருக்கிறான். அந்தப் பெண் எத்தனை காலமாய் அங்கிருக்கிறாள் என்பது சரிவர தெரியா விட்டாலும் அது நிச்சயமாய் ஆனேவாய் இருக்க முடியாது என்ற அளவில் குழப்பமற்று இருந்தது. பின் அது யார் என்ற கேள்விக்கு, பிறருடைய அந்தரங்க விஷயத்தில் அதிகம் மூக்கை நுழைப்பது நாகரீகமற்ற ஒன்றாய் நின்று போனது. நான் மட்டும் அந்த இளைய காளையாயிருந்தால், ''உங்களிருவருக்கும் காதலா அல்லது கத்திரிக்காயா'' என்று கேட்டு தீவுக்குள் வரும் இந்த ரேஸ் மகனைப் பந்தாடியிருப்பேன்.*

பிறகு.

*நாளைக்கு நான் ஜோஹென்னஸ்பெர்க் கிளம்புவது என்று நிச்சயமாய் முடிவானது. அதை உடனே பண்ணும்படி கெஞ்சினார் ரேஸ். எனக்குக்*

*கிடைத்த தகவல்களின்படி அங்கு நிலைமை கட்டுப்பாடிழந்து வருவதாகத் தோன்றியது. அது முழுசும் மோசமாவதற்குள் நான் போய் சேர்ந்து விடுவது தான் நல்லது. மிஸஸ் ப்ளேரும் என்னுடன் வருவதாய்த்தானிருந்தது. ஆனால், கடைசி நொடியில், தனது மனதை மாற்றிக் கொண்ட அவர் ஃபால்ஸ் பகுதியிலேயே இருந்து விடுவதாய் சொல்லிவிட்டார். ரேஸின் மீது அவர் பதித்திருக்கும் கண்களை விலக்கிக் கொள்ள அவர் விரும்பவில்லை என்பது காரணமாய் பட்டது. அன்றிரவு, சிறு தயக்கத்தோடு என்னைக் காண வந்த அவர், என்னால் ஓர் உதவி ஆக வேண்டும் என்று சொன்னார். அவருக்காக, அவர் வாங்கி ரொப்பியிருக்கும் சாமான்களை நான் சுமந்துப் போக முடியுமா?*

*அடக்க முடியாத எச்சரிக்கை உணர்வால், ''அந்த மிருகங்கள் கிடையாதே?'' என்று கேட்டேன் நான்.உடனடியாகவோ அல்லது சில நாட்கள் கழித்தோ, நிச்சயம் அந்த விலங்குகள் என் கை விலங்குகளாகும் என்பது நான் எதிர்பார்த்தது தான்.*

*முடிவாய் ஓர் உடன்பாட்டுக்கு வந்தோம். அவருக்காக, உடையவல்ல பொருட்கள் இருந்த இரண்டு சின்னப் பெட்டிகளை மட்டும் நான் என் பொறுப்பில் எடுத்துக் கொண்டேன். மிருக பொம்மைகள் அனைத்தும் பெட்டிகளில் அடுக்கப்பட்டு ட்ரெயின் மூலமாக கேப் டவுனுக்கு அனுப்பப்பட்டு விட வேண்டும். அங்கே அவற்றை பெற்றுக் கொண்டு பாதுகாக்கும் பொறுப்பு, பகெட்'டுடையது.*

*அவையனைத்தையும் பெட்டிக்குள் போட்டு கட்டிய தொழிலாளர்கள், ஒவ்வொன்றும் ஒவ்வொரு தினுசான அளவில் ஆச்சரிய தொகுப்பாய் இருந்ததாகவும், ஒவ்வொன்றுக்கும் தனித் தனியாய் ஸ்பெஷல் பெட்டிகள் செய்ய வேண்டிய தேவையிருந்தது என்றும் சொன்னார்கள். ஒரு டிக்கி கொடுத்து வாங்கிய இந்த ஒவ்வொரு மாடும், ஆடும், ஊர் போய் சேரும் போது ஒரு டாலர் செலவை விழுங்கி முடிந்திருக்கும் என்று நான் மிஸஸிடம் சொன்னேன்.*

*என்னோடு எப்போது ஜோஹென்னஸ்பெர்க்'கில் சேரப் போகிறோம் என மனுஷன் கிடந்து தவித்துக் கொண்டிருந்திருக்கிறான் - பகெட்டைத் தான் சொல்கிறேன். அந்தப் பெட்டிக்குள் கிடைப்பதற் கரிய பொக்கிஷப் பொருட்கள் இருப்பதாயும் அவற்றை வந்து பெற்றுக் கொண்டு மிகப் பாதுகாப்பாய் வைக்க வேண்டும் என்றும் ஏற்கெனவே அவனுக்கு நான் தகவல் எழுதியிருந்தேன்.*

*ஆக, எல்லாமும் முடிந்தன. யார் எப்போது பார்த்தாலும் மரியாதைக்குரிய பெண்ணாய் தோன்றும் மிஸ் பெட்டி-க்ரூவோடு நான் தனிமையானேன்.*

## அத்தியாயம் - 29

(சர் ஆஸ்டஸ் பெட்லர் எம்.பி. டைரியிலிருந்து எடுத்தவை)

*ஜோஹென்னஸ்பெர்க், மார்ச் 6.*

*இந்த நாளில், ஓட்டல் பையன் மூலம் எனக்கு வந்திருந்த தந்தியொன்று என்னிடம் அளிக்கப்பட்டது. 'ஆனே நலமாயிருக்கிறாள். இங்கு, என்னுடன் கிம்பர்லியில். ஸுஸேனி ப்ளேர்.' இதை பையில் போட்டுக் கொண்டு, தலையில் தொப்பியை அணிந்தபடி, சில பரிசுப் பொருட்களை வாங்குவதற்காக கிளம்பினேன். அபூர்வமாய் கிடைக்கும் பொருட்களை யெல்லாம் அதிசயிக்கத்தக்க வகையில் விற்பனை செய்யும் கலைக் கூடங்கள், இங்கு ஜோஹென்னஸ் பெர்க்கில் மனோஹரமாக அமைக்கப்பட்டிருக்கின்றன. விதவிதமான ஆப்பிரிக்கக் கலைப்பொருட்களை ஜன்னலெங்கும் அடுக்கி வைத்திருந்த ஒரு கடையின் வாசலில் நின்றபடி அவற்றை நான் சும்மா வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தபோது கடையிலிருந்து வெளி வந்து திரும்பிய ஒரு மனிதன் அப்படியே என் மேல் மோதி விடும்படி ஆனது. என்னை ஆச்சரியத்தில் தூக்கிப் போடும்படி, அது, ரேஸ் என்று அமைந்தது!*

*என்னைச் சந்தித்ததில் அவருக்கு சந்தோஷம் உண்டாயிற்று என்று என்னால் ஒரு பொய்யைச் சொல்லி விட முடியாது. சொல்லப் போனால், அவர் வெளிப்படையாகவே எரிச்சலானார். ஆனால் நான் விடாமல் அவர் என்னோடு சேர்ந்து ஓட்டல் வரை வந்தால் தான் ஆயிற்று என மிகவும் வற்புறுத்தினேன்.*

*நடக்கும் போது பேசுவதற்காக, ''நீங்க ஜோஹன்னஸ்பெர்க் வந்திருப்பதா நான் கொஞ்சங்கூட நினைக்கலே'' என்றேன். ''எப்போ நீங்க வந்தீங்க?''*

*''நேற்றிரவு.''*

*''எங்கே தங்கியிருக்கீங்க?''*

*''நண்பர்களோட.''*

*என்னோடு சகஜமாய் பேசிப்பழகாமல் அசாதாரண முறையில் அவர் ஒதுங்கியது மட்டுமல்ல... என் கேள்விகளால் அதிக லஜ்ஜையாகிப் போனவராகவும் தெரிந்தார். இந்நிலையில், ''கேள்விப் பட்டீங்களா?'' என கேட்டேன் நான், அவரோடு ஓட்டல் திரும்பியதும். ''அந்த ஆனே பொண்ணு உயிரோடத்தான் இருக்காமே?''*

*அவர் ஒப்புதலாய் தலையசைத்தார்.*

*''நம்ம வயத்துல என்னமா புளியைக் கரைச்சா அவ'' என்றேன் நான் காற்றில். ''அந்த அகால ராத்திரியில அவ எங்கே தான் போனா - இது தான் இப்ப நான் தெரிஞ்சுக்க விரும்பற ஒரே கேள்வி.''*

*''அவ முழுக்க முழுக்க அந்தத் தீவுலேயே நான் இருந்திருக்கா.''*

*''என்ன தீவு? யாரோ ஒரே ஒருத்தன் மட்டும் இருந்தான்னு சொல்றாங்களே.... அந்தத் தீவு கிடையாதே?''*

*''அதான்.''*

*''என்ன ஒரு பொருந்தா கூத்துய்யா இது'' என்றேன் நான்.''பகெட் கேட்டான்னா மயக்கம் போட்டுடுவான். அவன் எப்பவுமே ஆனேயை ஒத்துக்கவே மாட்டான். ஒரு வேளை இந்த ஆளைத் தான் அவ முதல்ல டர்பன்ல சந்திக்க நினைச்சாளோ என்னவோ?''*

*''எனக்கு அப்படித் தோணலே.''*

*''போதும்ப்பா போதும்... மேற்கொண்டு ஏதாவது உங்களுக்குத் தெரிஞ்சாலும் என்கிட்டே சொல்லிடாதீங்க'' என்றேன் நான், 'சொல்லி விடு' என்ற உற்சாகப்படுத்தலை உள்ளடக்கி!''தலையைச் சுத்துது.''*

*''எனக்கென்னவோ, இவன், நாம எல்லாரும் ரொம்ப ஆவலா தேடிக்கிட்டிருக்கும் ஆசாமியா இருப்பானோனு தோணுது.''*

*''ஓ'' கிளர்ந்தெழுந்து அலறி விட்டேன் நான். ''அப்படினா....?''*

*அவர் ஒப்புதலாய் தலையசைத்தார். ''ஹார்ரி ரேபர்ன் என்கிற ஹார்ரி லூகாய் - இது தான் அவனோ நிஜப் பெயர், ஓ. கே! மறுபடியும் நம்ம எல்லார் கண்லேயும் மிளகாய்ப்பொடி தூவிட்டு இன்னொரு முறை அவன் தப்பிச்சிருக்கான். ஆனா இது எப்பவும் நடக்காது. அவனைக் கயிறு போட்டுக் கட்டி இழுக்கறோமா இல்லையானு பாருங்க.''*

*''அப்போ, அவ- - - அவ- - -?''*

*''எங்க வட்டம், அந்தப் பொண்ணை எந்தக் காரணம் கொண்டு சந்தேகிக்கலே. அவளைப் பொறுத்த வரைக்கும், இது, ஜஸ்ட் ஒரு காதல் சிக்கல்.''*

எனக்கு எப்போதுமே இந்த ரேஸ் தான் ஆனே மீது கொள்ளைக் காதல் வைத்திருப்பதாய்த் தோன்றிக் கொண்டிருந்தது. இப்போது கூட, அந்தக் கடைசி வார்த்தைகளை அவர் சொன்ன விதம், இவ்வெண் ணத்தையே ஊர்ஜிதம் செய்தன.

''அவ பெய்ராவுக்குப் போயிருக்கா'' - அவசரமாய் தொடர்ந்தார் அவர்.

''அப்படித்தான்'' என்றேன் நான், முழித்தபடி. ''இதெப்படி உங்களுக்குத் தெரியும்?''

''புலாயோவிலிருந்து, அந்த வழியா அவ வீடு திரும்பிக்கிட்டிருப் பதா எனக்கு தந்தி அனுப்பியிருக்கா அவ. அவ இப்போதைக்குப் பண்ணக்கூடிய ஒரே சிறந்த வேலை இது தான். புவர் சைல்ட்.''

சிந்தனையாய், ''எனக்கென்னவோ அவ பெய்ரா'வில் இல்லைனு தோணுது'' என்று குறிப்பிட்டேன் நான்.

''எனக்கு அவ தகவல் எழுதின போது தான் அங்கேயிருந்து கிளம்பிக்கிட்டிருந்தா.''

புதிர்ப்போடப்பட்டவனைப் போலானேன் நான். யாரோ ஒருத்தர் படு நிச்சயமாக பொய் சொல்கிறர்கள். ஆனே, பாதை மாற்றிப் போடும் அறிக்கையை விட்டிருப்பதற்கு சிறப்பானதொரு ஒரு காரணம் இருக்க வேண்டும் என நான் சிந்திக்கத் துவங்குவதற்கு முன், ரேஸை மடக்கிப் போட்டு விழி பிதுங்க வைக்கும் வெற்றியைச் சுருட்டிக் கொள்ளத் துணிந்தேன். தனக்கே எப்போதும் எல்லா சமாச்சாரங்களும் படு துல்லியமாய் தெரியும் என்பதில் அத்தனை தலைக்கனம் கொண்டவர். என் சட்டைப் பையிலிருந்த தந்தியை எடுத்து அவரிடம் தீட்டினேன். ''அப்போ இதுக்கு என்ன விளக்கம் தரப்போறீங்க?''

உடல் முழுதும் மரத்துப் போனவராய் ஆனார் அவர். ''அப்பத்தான் பெய்ராவுக்குக் கிளம்பிக்கிட்டிருப்பதா அவ சொன்னா'' களையிழந்துப் போனது அவருடைய முகம்.

பொதுவாய் ஒரு புத்திசாலி என அறியப்படுபவர் இந்த ரேஸ் என்பது எனக்கும் தெரியும். ஆனால் எனது தனிப்பட்ட கணிப்பில், இவர் ஒரு முழு முட்டாள். எப்போதும் பெண்கள் உண்மையைப் பேசுவதில்லை என்பது ரேஸூக்கு இதுவரை புரியாத ஒன்றாய் தோன்றியது.

''கிம்பர்லிக்கு. அங்கே போய் என்ன பண்ணதுங்க, இதுங்க?'' - முணுமுணுத்தார்.

''இது தான் என்னை ஆச்சரியப்படுத்தது. இங்கேயிருந்தபடி, இந்த இறுக்கமான சங்கதிகளை அப்பட்டமா எழுதி 'த டெய்லி பட்ஜெட்' டுக்கு வரிசையா அனுப்பிச்சுக்கிட்டு இருப்பானுல்லே நான் நினைச்சேன்.''

*மறுபடியும் ''கிம்பர்லி'' என்றார் அவர். இந்தப் பிரதேசத்தின் பெயரே ரேஸைத் தலைகீழாக்கிப் போட்டது. ''அங்கே சுத்திப் பார்க்கக்கூட ஒரு நல்ல இடம் கிடையாது.''*

*''உங்களுக்குத் தான் இந்தப் பொண்ணுங்களைப் பற்றி நல்லா தெரியுமே'' என நிச்சயமற்ற தொனி தெறிக்க குறிப்பிட்டேன் நான்.*

*இடவலமாய் தனக்குத்தானே தலையசைத்துக் கொண்டு பிறகு நகர்ந்துப் போனார் அவர். மனுஷன் நிம்மதியற்று சிந்தித்துக் கொண்டேயிருக்க ஒரு நல்ல குழப்பத் தீனியை நான் தந்திருப்பது வெளிப்படையாகவே தெரிந்தது.*

*அவர் அப்படிப் போயிருக்க மாட்டார். இப்படி, கில்மார்டன் மாளிகையில் எனக்கு அறிமுகமாயிருந்த அந்த திருத்தமாய் தெரிந்த குள்ள இளைஞனான ரீவ்ஸ், என்னைச் சந்திக்க வந்தான். இவன் தான், இம்முறை நான் இங்கு வந்ததும், நாட்டின் பாராளுமன்றத்தில் சிறு உரை நிகழ்த்திய போது, அரசு சார்பாக கூட மாட ஒத்தாசை செய்தவன். ''உங்களை மறுபடியும் நான் வந்து தொந்தரவு தருவதற்கு மன்னிக்கணும், சர் ஆஸ்டஸ்'' என்றான். ''ஆனா, உங்களை நான் கேட்டுத் தெரிஞ்சுக்க வேண்டிய ஓரிரு கேள்விகள் இருக்கு.''*

*''நிச்சயமாப்பா'' என உற்சாகமாய் சொன்னேன். ''கேட்டுடு.''*

*''உங்க செகரட்டரியைப் பற்றியது அது.....''*

*''அவனைப் பற்றி ஒரு எழவும் எனக்குத் தெரியாது'' என அவசரமாய் நானே முடித்துவிட்டேன். ''லண்டன்ல அவனாவே வந்து என்கூட சேர்ந்துக்கிட்டான். என் பாதுகாப்பிலிருந்த முக்கியத் தாள்களை திருடிக்கிட்டு ஓடிட்டான். செப்பிடு வித்தைக்காரன் போல கேப் பவுன்'ல இறங்கினதும் மறைஞ்சுட்டான். ஃபால்ஸ் பகுதியில் அவன் இருந்த காலகட்டத்துல தான் நானும் அங்கிருந்தேன் என்ற அளவு சரிதான். ஆனா, நான் ஓட்டல்ல இருந்தேன். அவன் தீவுல இருந்தான். நான் அங்கிருந்த வரைக்கும் ஒரே ஒரு தடவை கூட நான் அவனைப் பார்க்கலே என்பது, சத்தியம்.''*

*மூச்சு விட்டுக் கொள்ள சற்று நிறுத்தினேன்.*

*''நீங்க என்னைத் தப்பாப் புரிஞ்சுக்கிட்டீங்க. நான் பேசினது, உங்களோடு அந்த இன்னொரு செகரட்டரியைப் பற்றி.''*

*''என்ன? பகெட்?'' - மறைக்கயியலாத ஆச்சரியத்துடன் அலறி விட்டேன் நான். ''என்கிட்டே அவன் எட்டு வருஷமா இருக்கான் - மிகுந்த நம்பிக்கைக்கு உகந்தவன்.''*

*என்னை வழிமறித்து உரையாடிக் கொண்டிருப்பவன் புன்னகைத் தான். ''நாம இன்னும் ஒருத்தருக்கொருத்தர் புரிஞ்சுக்காமலே இருக்கோம். நான் குறிப்பிடுவது - அந்தப் பொம்பிளையை.''*

*''மிஸ் பெட்டி-க்ரூ'' - வியப்பானேன் நான்.*

*''ஆமாம். அவ, ஆதிவாசிங்க பொருட்களை விற்கும் ''ஆங்கிலோ'' எனும் ஒரு கலைக் கூடத்திலிருந்து வெளியே வருவது கண்காணிக்கப் பட்டிருக்கு.''*

*''ஓ. கடவுளே, அதனால என்ன?'' இடைமறித்தேன் நான். ''நானே கூட அந்தக் கடைக்கு மத்தியானம், போவதா ஏற்பாடு. நான் வெளியே வருவதையும் அப்ப நீங்க கவனிச்சிருப்பீங்க!'' -இந்த ஜோஹென்னஸ் பெர்க்'கில், சந்தேகத்துக்கு ஆட்படாமல் எந்த சின்ன சராசரி சாதாரண சமாச்சாரத்தையும் செய்ய முடியாது.*

*''ஆனா, அவ, அதே கடைக்கு, ஒரு தடவைக்கு மேல் போய்ட்டு வருவதை நான் கவனிச்சிருக்கேன். அதாவது, அடிக்கடி. சந்தேகமான சந்தர்ப்பங்கள்ல. சந்தேகம் ஏற்படுத்தும் தினுசுல. ஒண்ணு நினைவு வெச்சுக்குங்க, சர் ஆஸ்டஸ் - ரகசியம் இது, ஓ.கே. அந்தக் கடை, நடந்துக் கிட்டிருக்கிற புரட்சிக்குக் காரணகர்த்தாக்கள் கூடி சந்திக்கும் ஒரு ரகசிய இடம்னு தகவலிருக்கு, ஆங்! அதனால தான் கேட்கிறேன். இந்தப் பொம்பிளையைப் பற்றி உங்களுக்கு என்னவெல்லாம் தெரியுமோ அதையெல்லாம் சொன்னீங்கன்னா எனக்கு ரொம்ப உபகாரமா போகும்.''*

*''அவ எனக்கு செகரட்டரியா அனுப்பப்பட்டா'' என்றேன் நான் கறாராய். ''உங்க கவர்ண்மெண்ட்டால!''*

*அவன் சுக்கு நூறாக நொறுங்கிப் போனான்.*

## அத்தியாயம் - 30

### (ஆனே'யின் பதிவு தொடர்கின்றது)

கிம்பர்லியில் நான் போய் இறங்கியக் கையோடு முதலில் ஸூஸேனிக்குத் தந்தியொன்று அனுப்பினேன். இதற்கு அவர் அனுப்பிய பதில் தந்தியை அவரே வந்து பெற்றுக் கொள்ளுமளவுக்கு துரிதமாக அவரே என்னிடம் வந்து சேர்ந்து விட்டார். இந்த அளவுக்கு அவர் என் மேல் ப்ரியம் கொண்டு என்னைத் திக்கு முக்காட வைப்பதை அனுபவித்து, நான் நெஞ்சுக் கொள்ளாத அளவுக்கு ஆச்சரியித்துப் போனேன். என் கழுத்தில் வந்து அப்படியே இறுக்கமாய் விழுந்து, கட்டிக் கொண்டு ஓவென அழுதார் அவர்.

இந்த உணர்ச்சி வெடிப்பிலிருந்த நாங்கள் ஒரு வழியாய் மீண்ட போது, படுக்கையின் நுனியில் உட்கார்ந்துக் கொண்ட நான், நடந்த அத்தனையையும் அ முதல் ஃ வரை ஒப்புவித்தேன்.

நான் முடித்ததும், சிறு சிந்தனையோடு, ''உனக்கு எப்பவுமே ரேஸ் மேல ஒரு சந்தேகம் தான்'' என்றார் அவர். ''அந்த ராத்திரி நீ திடுதிப்புனு காணாமப் போன தினம் வரைக்கும் நான் அவரைக்கடுகளவு கூட சந்தேகிச்சது கிடையாது. அவரை நான் பார்த்த தினத்திலிருந்து ரொம்பவும் சந்தோஷப்பட்டிருக்கேன். உனக்கு சரியான மாப்பிள்ளையா அவர் வருவார்னு ரொம்ப கனா கண்டிருக்கேன்டீ. ஓ, ஆனே டியர், தப்பா நினைக்காதே. கவனமா கேட்டுட்டு பதில் மட்டும் சொல்லு, ப்ளீஸ். இந்த உன்னோட இளைய காதலன் மட்டும் செய்வதும் சொல்வதும் நிஜமேனு சொல்ல என்ன சாட்சி இருக்கு, சொல்லு...?''

என் கட்டுப்பாட்டை இழந்து, ''நான் .. நான் இருக்கேனே'' என பதில் தந்தேன்.

''நீ குருடி, டீ! காதல் குருடி! உன்னை இப்படிக் கட்டிப் போடு மளவுக்கு அவனண்டை நீ என்னத்தைப் பார்த்தே, ம்? கண்ணகல வைக்கும் அவனுடைய புடைக்கும் இளமை, மற்றும்,

சுண்டியிழுக்கும் படி அவன் செய்யும் காதல் அணுகுமுறை. இந்த ரெண்டைத் தவிர, ஒருத்தியைக் கட்டிப் போட்டு அலைக்கழிக்கும்படி எனக்கு அப்படி அவன் கிட்டே ஒரு மண்ணும் தெரியலே.''

இதனால் பொங்கிக் கொண்டு வந்த கடுங்கோபத்தை என்னால் அணை போட்டு நிறுத்த முடியவில்லை. ஆனாலும், அமைதியாய் அதே சமயம் ஊசிக் குத்தலாய் கொட்டினேன். ''வசதியா கலியாணம் ஆகி எல்லாம் முடிஞ்சாச்சு... அதனால மளமளனு குண்டா ஆகிக் கொழிச்சாச்சு... இதனால, ஸூஸேனி, உங்களுக்குக் காதல் கிளுகிளுப்பு அப்படினு ஒன்று இருப்பதே மரத்துப் போயிருக்கு.''

''விட்டேன்னா, தெரியுமா! யாரைடீ குண்டுன்னே! நான் ஒண்ணும் குண்டுல்லே, தெரிஞ்சுக்கோ! உனக்கு என்ன ஆச்சோனு நினைச்சு நினைச்சு நான் உருகிப் போனதே என்னை இப்பப் பாதியா ஆக்கியிருக்கணும்.''

''இப்பத்தான் நீங்க கொழுகொழுனு இன்னும் கொழுத்த மாதிரி ஒரு சுற்றுப் பூசித் தெரியறீங்க'' என்றேன் நான் கறாராய். ''ஒரு குட்டிப் பாறாங்கல் அளவுக்கு நீங்கக் கூடுதலா வெயிட் போட்டிருக்கணும்.''

''இன்னொண்ணு என்ன சொன்னே? வசதியாக் கலியாணம், ஆங்? அப்படியும் கிடையாது'' வருத்தமும் விசனமும் கலந்த குரலில் தொடர்ந்துக் கொண்டிருந்தார் ஸூஸேனி: ''க்ளாரன்ஸ் கிட்டேயிருந்து தொடர்ச்சியா மிரட்டல் கடிதங்கள்! உடனடியா வீடு திரும்பும்படி. கடைசியில அவருக்கு மறு கடுதாசி போடுவதை நிறுத்தினேன். விளைவு - அவர் கிட்டேயிருந்து பதினைஞ்சு நாளா ஒரு வார்த்தை கிடையாது.''

ஸூஸேனியின் திருமணத் தகராறை முக்கியப்படுத்தி அப்போது கையிலெடுத்துக் கொள்ள நான் விரும்பவில்லை. கணவனை நேரில் பார்த்து விளக்கி விட்டால் ரெண்டும் சேர்ந்து விடும்! ஆகவே உரையாடலின் போக்கினை வைரங்கள் பக்கமாய் திசை மாற்றினேன்.

தொய்ந்துப் போன முகத்தோடு என்னைக் கவனித்தார் ஸூஸேனி. ''உனக்குக் கொஞ்சம் விளக்க வேண்டியிருக்கு, ஆனே. எப்போ நான் சுலோனல் ரேஸ் மேல சந்தேகப்பட ஆரம்பிச்சேனோ, அப்போதிலிருந்து இந்த வைரங்கள் பற்றி நினைச்சு நினைச்சே நான் குலைஞ்சுப் போயிருக்கேன், தெரியுமா! உன்னை ஓட்டல் பக்கத்துலேயே எங்கேயோ கடத்தித் தூக்கிக்கிட்டுப் போய் அடைச்சு வெச்சிருப்பாரோ எனும் எண்ணத்தாலே, அவரை விடாது கண்காணிப்பதற்காக நான்

ஃபால்ஸ்'லேயே தங்கிட முடிவு செஞ்சேன். ஆனா, வைரங்களைக் கையில் வெச்சுக்கிட்டு என்னப் பண்ணுவது'னே விளங்கலே. அதுவும் அதுங்களை என் கையிருப்புல வெச்சிருப்பதுல... ஊஃப் திணறிட்டேன்.!''

ஏதோ சுற்றியிருக்கும் சுவர்கள் காது கொடுத்துக் கேட்டுக் கொண்டிருப்பது போன்ற இருப்புக் கொள்ளாமையோடு ஒரு முறை அறையை சுற்றிப் பார்த்துக் கொண்டார் அவர். பிறகு தீவிர உணர்ச்சிப் பெருக்கோடு என் காதுகளில் முணுமுணுத்தார்.

இதற்கு, ''தனித்துவம் மிக்க சூப்பர் ஐடியா'' என்றேன் நான். ''அந்த சமயத்துல அதைத் தான் பண்ணியிருக்க முடியும். இப்போது வேணும்னா அது முட்டாள் தனமா தெரியலாம். அந்தப் பெட்டி களையெல்லாம் சர் ஆஸ்டஸ் என்ன பண்ணினார்?''

''பெருசையெல்லாம் கேப் டவுனுக்கு அனுப்பி வெச்சார். ஃபால்ஸிலிருந்து நான் கிளம்பறதுக்கு முன்னாடி பகெட் மூலமா இதைத் தெரிஞ்சுக்கிட்டேன். அனுப்பப்பட்டதுக்கான ரசீது அவர்கிட்டே இருந்தது. ஆங்.. பகெட் இன்னிக்கு கேப்டவுனிலிருந்து கிளம்பறார். ஜோஹென்னஸ்பெர்க் போய் அங்கே சர் ஆஸ்டஸ் கூட சேர்ந்துக்க.''

''ஓ, அப்படியா'' என்றேன் நான் சிந்தனையாய். ''சின்னதுங்க? அதெல்லாம் எங்கேயிருக்கு?''

''அதெல்லாம் சர் ஆஸ்டஸ் அவர்கிட்டேயே வெச்சிருப்பதா நினைக்கிறேன்''

விஷயத்தை என் மூளைக்குள் கொஞ்சம் அசை போட்டேன்.

''இப்போதைக்கு நீ வேற ஒண்ணும் பண்ணப் போவதில்லை, இல்லே, ஆனே?''

''ரொம்ப கிடையாது'' என்றேன், உண்மையாய்.

ரயில் அட்டவணையை வாங்கி அதில் பகெட் வரும் ரயில் எத்தனை மணிக்கு கிம்பர்லியைக் கடக்கும் என்ற தகவலை நான் பெறலாம். இப்படிச் செய்ததில், ரயில், மறுநாள் மாலை 5.40க்கு கிம்பர்லி வந்து பிறகு மாலை 6 மணிக்கு மீண்டும் புறப்பட்டு செல்லும் எனும் தகவல் கிடைத்து. எத்தனை சீக்கிரம் முடியுமோ அத்தனை சீக்கிரம் பகெட்டை நேராய் பார்த்துப் பேசி விட வேண்டும் என்ற எண்ணத்திலிருந்த எனக்கு இது மிகச் சிறந்த வாய்ப்பாய் அமைந்தது. Rand எனும் நாடு தழுவிய பிரச்சினை வேறு இறுகிக் கொண்டே போனது. இப்போது

விட்டு விட்டால் அவரை சந்திப்பதென்பது இயலாத ஒன்றாய் கூட போய்விடலாம்.

மந்தமாய் போன அன்றைய தினம் விறுவிறுப்பாய் அமைந்த ஒரே ஒரு சமாச்சாரம், ஜோஹென்னஸ்பெர்க்கிலிருந்து அனுப்பப்பட்டிருந்த ஒரு தந்தி. குற்றத்திட்டங்கள் ஏதும் அதில் கிடையாது என்பது போல போனது அந்தத் தந்தி.

**''பத்திரமாய் வந்து சேர்ந்தாகி விட்டது. எல்லாம் நன்றாய் போய்க் கொண்டிருக்கின்றன. எரிக் இங்கிருக்கிறார். ஆஸ்டஸூம். ஆனால் பகெட் இல்லை. இப்போதைக்கு நீ எங்கேயிருக்கிறாயோ அப்படியே அங்கேயே இரு. 'ஆண்டீ.'**

எரிக் என்பது ரேஸூக்கு நாங்களிருவரும் வைத்திருந்த புனைப் பெயர். நான் அதிகம் வெறுக்கும் பெயராய் இப்பெயர் இருந்த தாலேயே இதனை நான் தேர்ந்தெடுத்து வைத்தேன். இதில் பகெட்டைச் சந்திக்கும் வரை மேற்கொண்டு எதுவும் பண்ண முடியாத நிலைமை இருந்தது. தூர தேசத்திலிருக்கும் க்ளாரான்ஸூக்குக் கோபத்தைத் தணிக்கும் வகையில் ஒரு நீளமான கடுதாசியை எழுதுவதில் தன்னை இழந்து இறங்கியிருந்தார் ஸூஸேனி. கணவன் மீது கட்டுக்கடங்கா திடீர் உணர்ச்சிபூர்வ அலையில் சிக்கிப் போயிருந்தார் அவர். அவருடைய வழியில் - அது எனக்கும் ஹார்ரியுக்குமான பாதையை விட முழுவதிலும் மாறுபட்டதாக இருந்தாலும் - க்ளாரன்ஸ் மீது நீங்கா காதல் கொண்டிருக்கிறார் ஸூஸேனி.

எச்சிலை இழுத்துக் கூட்டி விழுங்கிக் கொண்டு, ''இப்ப அவர் இங்கே இருந்துடக் கூடாதானு ஏங்கறேன் ஆனே'' என்றார் அவர். ''விளையாடிட்டேன். அவரைப் பார்த்து அத்தனை நாளாகுது'' கற்பனையாய்க் குறிப்பிட்ட அவர் கேட்டார் ''பகெட் பயலைப் பார்க்க, நாளைக்கு நானும் உன் கூட வரட்டுமா?''

''நான் மட்டும் தனியா போவது தான் நல்லதுனு நினைக்கிறேன். ரெண்டு பொண்ணுங்களுக்கு நடுவுல பேச அவர் அத்தனைக் கூச்சப்படுவார்.''

ஆக, கையில் ஒரு புத்தகத்துடனும் பக்கத்தில் கூடை நிறைய பழங்களோடும் அங்கே ஸூஸேனி படுக்கையில் படுத்துக்கிடக்க, நான் மட்டும், ரயிலடி, அங்கு பகெட்டுடன் சந்திப்பு, அப்போதுபேச

வேண்டியவை போன்ற விடாப்பிடியான குழப்பங்களோடு தயாராகிக் கொண்டிருந்தேன்.

போர்ட்டர் தந்தக் குறிப்பின்படி, அன்று ரயில் எந்தப் பாடுமில்லாது சரியாய் வந்தக் கொண்டிருப்பதாகவும் தாமதமின்றி சரியான நேரத்தில் வந்து விடுமென்றும் அறிந்தேன். இருந்தாலும், வெளியே நடக்கும் அமளி துமளிகளின் காரணமாக ஜோஹென்ஸ்பெர்க்' குக்குள் ரயில் நுழையுமா என்பதே சந்தேகம் என்ற நிலைப்பாட்டிலிருந்தான் அவன். இருந்தாலும் பச்சை சமிக்ஞை தரப்பட விறுவிறுப்பானான் அவன். இதைப் பார்க்க எனக்கும் குதூகலமானது.

வெறும் பத்து நிமிடங்கள் தாமதத்தை மட்டும் விழுங்கிக் கொண்டு நுழைந்தது, ரயில். ப்ளாட்பாரத்திலிருந்த அனைவரும் முட்டி மோதி விரைந்து இங்குமங்குமாய் ஓடினர். பகெட்டைப் பார்த்து விடுவதில் எனக்கு சிரமமே ஏற்படவில்லை. நானே அவரை அணுகி ஆர்வமாய் பேச ஆரம்பித்தேன். என்னைப்பார்த்தும் அவருள் உடனடியாக உருவாகும் தீவிரத்துணுக்குறலைக் காட்டினார். இந்த முறை இன்னும் கொஞ்சம் கூடுதல் அழுத்ததோடு!

''ஓ. டியர், ஆனே, நீங்க காணாம போயிட்டதாயில்லே கேள்விப்பட்டேன்?''

''மறுபடியும் காணும்படி வந்துட்டேன்'' என்றேன் நான், மிக்க மரியாதையாய். ''அப்புறம், எப்படி இருக்கீங்க. பகெட்?''

''ரொம்ப நல்லா. தேங்க், யூ. சர் ஆஸ்டஸுடன் சேர்ந்து மறுபடியும் என் தொழிலைத் தொடர ஆர்வமாயிருக்கேன்.''

இப்போது, உடனடியாய், ''மிஸ்டர் பகெட்'' என்றழைத்தேன் நான். ''உங்ககிட்டே நான் கேட்க வேண்டிய ஒரு சில விஷயங்கள் இருக்கு. இதுக்காக நீங்க வெறுப்பாகக்கூடாது. கோபப்படக்கூடாது. இந்தக் கேள்விகளில் நிறைய விஷயங்க மாட்டிக்கிட்டுத் தொங்குவதால, இவை, தவிர்க்க முடியாதவையா ஆகுது. கடந்த 8 ஜனவரி அன்று, நீங்க மார்லோவில என்ன செஞ்சுக்கட்டிருந்தீங்க? எனக்குத் தெரிஞ்சாகணும்.''

வெறித்தனமாய் துணுக்குற்றார் அவர். ''நிஜமா, மிஸ் பெட்டிங்ஃபெல்ட் - சொல்லப்போனா - நான் அங்கே....''

''நீங்க அங்கே இருந்தீங்க, இது நிஜம் தானே?''

''நான் ... நான்... நான்... என் தனிப்பட்ட சில காரணங்களுக்காக, அதுக்குக் பக்கத்துல தானிருந்தேன். யெஸ்.''

''அவை என்ன காரணங்கள்னு நீங்க என்கிட்டே சொல்லிடக் கூடாதா?''

''சர் ஆஸ்டஸ் இதையெல்லாம் உங்ககிட்டே முன்கூட்டியே சொல்லலே?''

''சர் ஆஸ்டஸ்? அவருக்கு இதெல்லாம் தெரியுமா?''

''அவருக்கு இதெல்லாம் தெரியும் என்பதுல நான் ஸ்திரமா இருக்கேன். என்னை அவர் அடையாளம் காணலேனு தான் நினைச்சேன். இருந்தாலும் அவ்வப்போது அவர் தவற விட்ட சிற்சில குறிப்புகள் மற்றும் அவர் சுட்டிக்காட்டிப் பேசிய சில வார்த்தைகள் இவையெல்லாம் எல்லா விஷயங்களும் அவருக்குத் தெரிஞ் சிருக்கு'னே காட்டுது. அவர் என்னைக் கவனிச்சிருக்கணும். எப்படியோ போகட்டும். உண்மையா அது என்ன என்பதை அவர்கிட்டே விண்டு வெச்சுட்டு, என் ராஜினாமாவைக் கொடுத்துட்டு வெளியேறலாம்'கிற முடிவுல இருக்கேன். அடக்க முடியாத ஹாஸ்ய உணர்வுகள் எனும் போர்வையில் ஆக்கப்பட்ட ஒரு விஷமமான மனுஷன் அவர். மிஸ்பெட்டிங்ஃபெல்ட் என்னைப் பற்றி சிரிக்கச் சிரிக்கக் கிண்டலடிச்சுக்கிட்டே இருப்பதுல அவருக்கு அப்படி ஓர் அலாதி இன்பம். இருந்தாலும், அவருக்கு முழு சமாச்சாரமும் முழுக்க முழுக்கத் தெரிஞ்சே தானிருந்திருக்கு என்பதே என் கருத்து. சொல்லப் போனா.. ஆரம்பத்திலிருந்தே கூட அவருக்குத் தெரிஞ்சிருக்கணும்.''

உடனடியாகவோ அல்லது கொஞ்ச நேரம்கழித்தாவது, இந்தப் பகெட் இப்போது என்ன பேசிக் கொண்டிருக்கிறார் என்பதை நான் புரிந்துக் கொண்டு விட வேண்டும் என வேண்டாத தெய்வங்களை யெல்லாம் வேண்டிக் கொண்டேன். விடாது சரளமாய் அவர் தொடர்ந்துக் கொண்டிருந்தார்: ''என் நிலைமையில் இருந்து பார்த்தா, நான் செஞ்சது எத்தனை சரினு அவருக்கே புரியும். நான் பண்ணினது தப்பு தான்னு எனக்கே கூட தெரியும். என்ன பண்றது - அந்த சமயம் அப்படி! யாருக்கும் கெடுதல் தராதது அது என்கிற ஒரே காரணத்தாலே தான் அதை நான் மறைச்சே வெச்சேன். என்னை வெச்சு காமடி பண்ணி என்னையே வேதனைப்படுத்திப் பார்த்ததுக்கு பதிலா அவரே நேரடியா என்னைக் கேட்டுத் தொலைச்சிருக்கலாம். 'ஏண்டா அப்படித் தானா.. அது உண்மை தானா'னு முகத்துக்கு நேராவே அவர் கேட்டிருக்கலாம்.''

ஒரு விஸில் ஊதப்பட்டது. மக்கள் மறுபடியும் உள் வாங்கும் கடலலையின் வேகத்தோடு ட்ரெயினுக்குத் திரும்பினர்.

''த பாருங்க பகெட்'' என உடைந்தேன் நான் : ''நீங்க சர் ஆஸ்டஸ் பற்றி சொன்ன அத்தனையையும் நானும் பரிபூரணமா ஏத்துக்கறேன். ஆனா நீங்க எதுக்காக மார்லோவுக்குப் போனீங்க?''

''தப்புத்தான் - *தப்புத்தான்!* ஆனா, நானிருந்த அந்தச் சூழ்நிலை யில, இயற்கையா ஒருத்தன் செய்திருக்கக் கூடியது தான் அது - யெஸ். இப்பவும், அந்தக் சூழல்ல அது தான் இயற்கையா ஒருத்தன் பண்ணி யிருக்கக்கூடியது'னு தான், இதோ, இப்பவும் நான் நினைக்கிறேன்.''

''என்ன சூழ்நிலை அது?'' - உதவ யாருமில்லாதவளாய் கதறினேன்.

இங்கு நானொருத்தி நின்றுக் கொண்டு அவரைக் கேள்விக் கேட்டுக் கொண்டிருக்கிறேன் என்பதை, முதல் முறையாய் பகெட் அடையாளம் கண்டு கொண்டு விட்டதாய் பட்டது! சர் ஆஸ்டஸின் விசித்திர குணாதிசயங்களை மீட்டிப் பார்ப்பதிலிருந்து அவரது மனம் விலகி, என் மீது குவிந்தது.

அவருக்கே உரித்தான இறுக்கத்தை விட்டு விடாது. ''மன்னிக் கணும், மிஸ் பெட்டிங்ஃபெல்ட்'' என்றார். ''இந்த சமாச்சாரத்துல உங்களுக்கு என்ன தொடர்பு இருக்குனு எனக்கு விளங்கலே.''

ட்ரெயின் நுழைவில் நின்றுக் கொண்டு, முன் வளைந்து வந்து, என்னுடன் மேற்கொண்டு பேசவும் தயாராயிருந்தார். இவரை, உடனே, கேட்ட கேள்விக்கு பதில் தருமாறு பேச வைக்க வேறு வழியே கிடையாதா என கைகளைப் பிசைந்துக் கொண்டு நின்றேன் நான். இப்படி விவஸ்தையற்ற ஒரு ஜடத்தோடு வேறு என்ன நான் பண்ண முடியும்?

''அந்த விஷயம் இப்படி நீங்கக் கூசிக் குறுகும் அளவுக்கு என்கிட்டே சொல்லக்கூடாத ஒரு பயங்கரமான விஷயமா இருந்தா....'' என வெறுப்பும் இயலாமையும் சேர்த்து நான் பேச ஆரம்பிக்கக் கூட இல்லை.

''கூசிக் குறுகுவதா? எதுக்கு?'' என்றும், ''பயங்கரமா? இதிலென்ன அப்படி யாரும் செஞ்சிடாத பயங்கரம் இருக்கு?'' என்னும் இறுகிப் போய் களையிழந்தார் பகெட். ஒரு வழியாய் அவரைப் பதில் பேச வைக்கக் கடைசியில் ஒரு வழி கண்டு விட்டேன் நான்.

''அப்ப - சொல்லுங்க?''

மூன்றுசின்னச்சின்ன வாக்கியங்களில் அதை என்னிடம் சொன்னார் பகெட். ஓஹ்... இறுதியாய் எனக்கு பகெட்டின் ரகசியம் தெரிந்து விட்டது! அது, நான் எதிர்பார்த்து வந்த சமாச்சாரத்தோடு துளியும் ஒட்டுதல் அற்றது.

நான் மெதுவாக திரும்பி ஓட்டல் வரை நடந்து வந்தேன். அங்கு எனக்கு வந்திருந்த தந்தியொன்று என்னிடம் ஒப்படைக்கப்பட்டது. அதைக் கிழித்துப் பிரித்தேன் நான். ஜோஹென்னஸ்பெர்க்'குக்கு அருகில் உள்ள ஒரு ரயிரடிக்கு உடனடியாய் கிளம்பிப் போகுமாறும், அதற்கான வழி மற்றும் தேவையான கட்டளைகளும், அங்கு என்னை ஒரு கார் வந்து சந்திக்கும் என்றும் அதிலிருந்தன. அதில் கையொப்பம் இருந்தது. 'ஆண்டி' என்றல்ல. ஹார்ரி என்று.

மிக ஆழ்ந்து, ஈடுபட்டு, பிரித்தாராய்ந்து, தீவிரமாய் சிந்திப்பதற்காக, அங்கிருந்த ஒரு நாற்காலியில் நான் உட்கார்ந்துக் கொண்டேன்.

# அத்தியாயம் - 31

(சர் ஆஸ்டஸ் பெட்லர் எம்.பி. டைரியிலிருந்து எடுத்தவை)

*ஜோஹென்னஸ்பெர்க், மார்ச் 7*

*பகெட் வந்து சேர்ந்திருந்தான். இருளடைந்து, பின்னே! உடனடியாய் நாங்களிருவரும் ப்ரெட்டோரியா பகுதிக்குக் கிளம்பிப் போயாக வேண்டும் என ஆலோசித்தான். கனிவாகவும் அதே சமயம் உறுதியுடனும் இருவரும் இங்கிருந்து எங்கும் கிளம்புவதற்கில்லை என்றும், இங்கேயே தான் இருக்கப் போகிறோம் என்றும் நான் சொன்னதைக் கேட்டதும், உடனே, கையில் அவனுடைய துப்பாக்கி மட்டும் இப்போது இருந்துத் தொலைக்கக் கூடாதா என்று வேறொரு பெரும் விஷயம் பேசப்போவதாக ஆரம்பித்தான். உலகப் போரின் போது இவனை நம்பிப் பாதுகாப்புக்காக ஒப்படைக்கப்பட்டிருந்த ஏதோவொரு பெரிய பாலம் பற்றியும் அதை இவன் எப்படிப் பாதுகாத்து ஒப்படைத்தான் என்பதையும் விரிவுரையாக்கினான்.*

*இப்படி வளர்ந்த அவனது ஒருதலைப் பேச்சினை, மூட்டை கட்டி வைக்கப்பட்டுள்ள டைப் இயந்திரத்தை அவிழ்க்கச் சொல்லிக் கட்டளையிடுவதன் மூலம் முறித்தேன். அது, இவனை, சற்று நேரத்துக்குக் கட்டிப் போட்டு வைக்கும் என கணித்தேன். ஏனென் றால், பலவிதமான பிரயாணங்களினால் தட்டச்சு இயந்திரங்கள் நிச்சயம் ஏதாவது குளறுபடிக்குள்ளாகியிருக்கும் என்றும் டைப் இயந்திரங் களால் தொடர்ச்சியான பிரயாணத்தைத் தாங்கயிலாதே! - அதை சரி செய்யச் சொல்லி இவனைக் கட்டிப் போட்டு விடலாம் என்பதும் திட்டம். ஆனால் எப்போதும் சரியாகவே இருந்துத் தொலைக்கும் பகெட்டின் விசேஷ சக்தியினை நான் மறந்துத் தொலைத்திருக்கிறேன்.*

*''கொண்டு வந்த எல்லா மூட்டை மூடிச்சுகளையும் அவிழ்த்தாச்சு, சர் ஆஸ்டஸ். எதற்கும் பாதிப்பு இல்லை.''*

*''எல்லா மூட்டை மூடிச்சுகளுமா? அப்படினா?''*

*''கொண்டு வந்த ரெண்டு சின்னப் பெட்டிகள் உட்பட.''*

''நீ தேவையில்லாம தலையிட வேணாம்னு நினைக்கிறேன், பகெட்.அந்த ரெண்டு சின்னப் பெட்டிகளுக்கும் உனக்கும் எந்தவித சம்பந்தமும் கிடையாது. அவை மிஸஸ் ப்ளேருடையவை.''

பகெட் சிதைந்துப் போனான். தவறுகள், அவனுக்குப் பிடிக்காத ஒன்று.

''போ... போய் உடனே அந்த ரெண்டையும் பழையபடி கட்டிடு''- தொடர்ந்தேன் நான்: ''அதுக்கபுறம் நீ வெளியே போய்க்கலாம். எங்கேயெல்லாம் போக விருப்பமோ போ. நாளை - ஜோஹென்னஸ் பெர்க்கே ஒரு புகை மண்டலமா எரிஞ்சுக்கிட்டிருக்கும். ஆக - இது தான் உனக்கான கடைசி வாய்ப்பு.''

எப்படியிருந்தாலும், எனது இந்த வார்த்தைகள், குறைந்தபட்சம் காலைப் பொழுதிலாவது பகெட்டை என்னிடமிருந்து பிரித்து வைத்து விடுதலை பெற்றுத்தரும் என நினைத்தேன் நான்.

''நீங்க சாவகாசமா இருக்கும் போது நான் உங்ககிட்டே ஒருசில விஷயங்களைப் பற்றிக் கேட்கணும், சர் ஆஸ்டஸ்.''

''இப்போதைக்கு எனக்கு நேரம் ஒதுக்க முடியாது'' என்று விட்டேன் அவசரமாய். ''இங்கே, எனக்கு, ஒரு நொடி கூட ஓய்வொழிச்சல் கிடையாது.''

பகெட் திரும்பிக் கிளம்பினான்.

''ஆங்... ஆங்...'' என்று அவன் முதுகு பார்த்து அழைத்த நான், ''மிஸஸ் ப்ளேருடைய பெட்டிகள்ல என்னென்ன இருக்கு?'' என்று கேட்டேன்.

''சில மேலங்கிகள். ஆங்... அப்புறம், சிறகுகளால் அலங்கரிக்கப் பட்ட தொப்பிகள்னு நினைக்கிறேன்.''

''இருக்கும், இருக்கும்'' என ஏற்றுக் கொண்டேன் நான். ''ட்ரெயின்ல வாங்கினாங்க. அவை - வழக்கமா அமையாத ஒரு வகை தொப்பிகள். தொப்பினே தெரியாது, பார்த்தா! அதுல ஒண்ணைத் தலையில வெச்சுக்கிட்டு வந்து நிக்கப் போறாங்க பாரு, கோமாளி போல! அப்புறம்? வேறென்னென்ன?''

''ஒரு ரோல் ஃபிலிம். சின்னச்சின்னக் கூடைங்க - நிறைய.''

''அவை இருக்கணும்'' நிச்சயப்படுத்தினேன் நான். ''எதை வாங்கினாலும் அதை ஒரு டஸனுக்குக் குறையாம வாங்காத வகை - மிஸஸ் ப்ளேர்.''

''க்ளவ்ஸ், இத்யாதிகள்.... அவ்ளோ தான்னு நினைக்கிறேன்,சர் ஆஸ்டஸ்.''

''நீ ஒரு புத்திசாலியா இருந்திருந்தா பொட்டியைத் திறந்தவுடனேயே இதுல எதுவுமே எனக்கு சம்பந்தமில்லாதவைனு உனக்குப் பட்டிருக்கணும், பகெட்.''

''சிலதுங்க, ஒரு வேளை, மிஸ் பெட்டி-க்ரூவுடையதா இருக்க லாமோனு நினைச்சேன், சர் ஆஸ்டஸ்.''

''ஆஹ்.. இப்போ ஞாபகத்துக்கு வருது. இப்படி ஒரு கழிசடையைக் கொண்டு வந்து தலையில் 'செகரட்டரி'னு கட்டனும்னு உனக்கு எப்படித் தோணிச்சு..?''

இதற்கு மனமொடிந்துப் போனவனாய் ஆனான் பகெட். பேச்சை மாற்ற நான் முனைய, என்னை முந்திக் கொண்டு அவனே அதை செய்துவிட்டான். கில்மார்டன் மாளிகையின் முடிவற்ற ஒரு நீண்ட கதையைச் சொல்லி என் கழுத்தை மெல்லமாய் அறுத்தெறிய ஆரம்பித்தான். ஒரு ஃபிலிம் ரோல் மற்றும் பந்தயம் குறித்த கதை அது. யாரோ ஒரு சிப்பந்தியால் கேபின் ஒன்றின் திறந்த ஜன்னல் வழியாக உள்ளே தூக்கிப் போடப்பட்ட ஃபிலிம் ரோலாம் அது. அவனுக்கு நிறைய சமாச்சாரங்கள் தெரிந்திருக்க வேண்டும் என்பது பகெட்டுடைய கணிப்பு. வாலில்லாத புரியாத கதைகள் எனக்குப் பிடிக்காது. அதை இவனிடமும் சொன்னேன். அது தான் தப்பாய் ஆகியது. முழுக் கதையையும் விளக்குகிறேன் பேர்வழி என 'அ' விலிருந்து ஆரம்பித்துவிட்டான். இதில் மிக மோசமாக கதை சொல்லும் திறன் வேறு. கதையின் தலை எது வால் எது நான் அறிய படாதபாடு பட வேண்டியதாயிற்று.

மதிய உணவு நேரம் வரை அவனை நான் பார்க்கவில்லை. பிறகு கிளர்ந்தெழும் பரபரப்போடு ஓடோடி வந்தான் அவன். காரணம் ரேபர்னைப் பார்த்திருக்கிறான்.

''என்ன?'' -அலறினேன், செய்வதறியாது.

தெருவை யாரோ ஒருத்தன் கடந்திருக்கிறான். அதை இவன் பார்த்திருக்கிறான். அது, ரேபர்ன் போலவே இருந்தவன் மட்டுமல்ல, ரேபர்னே என்பது இவனது நிலைப்பாடு. விடாது அவனைப் பகெட் பின்தொடர்ந்திருக்கிறான்.

''அப்போ, அவனைத் தடுத்து நிறுத்திப் பேசினது யார்னு நினைக்கிறீங்க? மிஸ் பெட்டி-க்ரூ!''

''என்ன?''

''ஆமாம், சர் ஆஸ்டஸ். இதோட முடியலே. அவனைப் பற்றி உடனடியா நான் விசாரணையை முடுக்கி விட்டேன்.''

''கொஞ்சம் நிறுத்து. ரேபர்னுக்கு என்ன ஆச்சு?''

''அவனும் அவளும், மூலையிலிருக்கும் அந்தக் கலைப் பொருட்கள் விற்பனைக் கடைக்குள்ளே போயிட்டாங்க.''

மூச்சடைந்த ஆச்சரிய விக்கலை நான் வெளியிட்டேன். என்னா யிற்று என்பது போல பார்த்தான் பகெட். ''ஒன்னுமில்லே'' என்றேன். ''தொடர்''.

''கால்கடுக்க காலம் பூரா நான் அந்தக் கடையின் வாசலிலேயே காத்திருந்தேன். ஆனா ரெண்டு பேரும் திரும்பவேயில்லே. கடைசியா - நானே உள்ளே நுழைஞ்சேன். கடைக்குள்ளே ஒரு வாடிக்கையாளனும் இல்லே. ஆக, வெளியேற வேற வழியிருக்கனும்.''

நான் கண்ணகல அவனை முழித்தபடியிருந்தேன்.

''ஓட்டலுக்குத் திரும்பிய நான், இப்ப உங்ககிட்டே சொன்ன மாதிரி, மிஸ் பெட்டி-க்ரூ பற்றிய விசாரணையை மேலும் தீவிரமாக்கினேன்.'' இப்போது குரலைத் தணித்துக் கொண்ட பகெட், ரகசியம் பேசும் போது எப்போதும் செய்துத் தொலைப்பது மாதிரியே என் காதுகளுக்கு வெகு அருகில் வந்துக் கொத்துக் கொத்தாய் மூச்சுக்கள் விட்டான். ''சர் ஆஸ்டஸ்... நேத்து ராத்திரி யாரோ ஓர் ஆம்பிளை அவ ரூம்லேந்து வெளியே வருவது கவனிக்கப்பட்டிருக்கு.''

என் புருவங்கள் வியந்து எழுந்தன. ''மட்டு மரியாதை நல்லா தெரிஞ்ச ஒரு பெண்ணாக அல்லவா அவளை நான் என் மனசுகல வெச்சிருந்தேன்'' - முணுமுணுத்தேன் நான்.

நிறுத்தாமல் ஓடிக் கொண்டிருந்தான் பகெட். ''விடலே நான், நேரா அவ அறைக்குப் போனேன். தேடினேன். துளாவினேன். என்ன கண்டுபிடிச் சேன்னு நினைக்கிறீங்க?''

''முடியலேடா உன்னோட'' களைத்துப் போய் மறுப்பாய் தலையசைத்தேன் நான்.

''இது.''

பகெட், அவனது கையில், ஒரு ஷேவிங் சோப்புக் குழலையும், மழிக்க உதவும் ஒரு ப்ளேடையும் சுமந்துக் கொண்டிருந்தான். ''இதுல ஒரு பெண்ணுக்கு என்ன வேலையிருக்கு?''

பெரிய தட்டுப் பெண்களுக்கான பத்திரிகைகளில் வரும் விளம்பரங்களைப் பகெட் பார்ப்பதேயில்லை போலும். ஆனால் நான் பார்ப்பதுண்டு. இது பற்றியெல்லாம் இவனுடன் வாதிடத் தெம்பற்ற நான் பகெட்டைக் குறுக்கு விசாரணை செய்யத் தயாராயில்லா விட்டாலும், மிஸ் பெட்டி-க்ரூ அறையில் ஒரு ஷேவிங் ப்ளேட் இருந்ததை சாட்சியாய் வைத்துக் கொண்டு அவருடைய பாலினத்தையே சந்தேகப்பட நான் தயாராயில்லை. இவனுடைய இந்தத் தியரிக்கு சாதகமாக அங்கிருந்து ஒரு சிகரெட் பாக்கெட்டைக் கொண்டு வந்து காட்டியிருந்தாலும் நான் ஒன்றும் பெரிதாக ஆச்சரியப்பட்டிருக்கப் போவதில்லை.

''உங்களுக்கு இன்னும் முழு திருப்தி உண்டாகலே, சர் ஆஸ்டஸ். இதுக்கு நீங்க என்ன தான் சொல்லப் போறீங்க?''

வெற்றிகரமாக இவன் தூக்கிக் காட்டிக் கொண்டிருந்த அப்பொருளை வாங்கி நான் பரீட்சித்தேன். ''இதுல முடியிருக்கு'' என்றேன் நான் சுவாரஸ்யமற்று.

''இது முடி தான். இதிலிருந்து தான் ''டோப்பா'' முடிகளே தயாரிக்கறாங்கனு நினைக்கிறேன்.''

''இருக்கலாம்.''

''பெட்டி-க்ரூ எனும் பெண், மாறுவேடத்தில் வந்திருக்கும் ஓர் ஆண் அப்படினு இப்பவாவது ஒத்துக்கறீங்களா?''

''ஆமாம், பகெட். இப்ப எனக்கு அப்படித் தான் தோணுது. முறம் போன்ற அவளது காலை வெச்சே நான் கண்டுபிடிச்சிருக்கணும்.''

''இது அப்படியே இருக்கட்டும். இப்போ, சர் ஆஸ்டஸ்... நான் உங்ககிட்டே என்னுடைய தனிப்பட்ட சில சமாச்சாரங்களைப் பற்றிப் பேசணும். அவ்வப்போது நீங்க பேசிய சில குறிப்புகள் மற்றும் நான் ஃப்ளாரன்ஸ்ல இருந்ததா சொன்னதைப் பற்றி நீங்க தொடர்ச்சியா செய்து வரும் கிண்டல்கள்... இவற்றிலிருந்து, என்னைப் பற்றி நீங்க கண்டுபிடிச்சிட்டீங்களோனு தோணுது.''

ஒரு வழியாய், ஃப்ளாரன்ஸ் பிரதேசத்தில் பகெட் என்ன செய்தான் என்பது பற்றிய ரகசியங்கள் உடையப் போகின்றன.

''மனசை அரிக்க விடாம, விஷயங்களைச் சொல்லு, பகெட்'' என்றேன் நான் கனிவாய். ''எத்தனை புரியம்படியா சொல்ல முடியுமோ, அப்படி!''

''தேங்க்,யூ, சர் ஆஸ்டஸ்.''

''இது, அவளோட கணவன் பற்றிய பிரச்சினையா? வெறுப்பேற்றும் ஜீவன்கள், இந்தக் கணவன்கள். விட்டுத் தள்ளு. அவ என்ன சொன்னா?''

''எவ? நீங்க பேசுவது ஒண்ணும் புரியலே, சர் ஆஸ்டஸ், யாரோட கணவன்?''

''அந்தப் பொண்ணோட கணவன்?''

''எந்தப் பொண்ணு?''

''கோமாளித்தனம் பண்ணாதே, பகெட். நீ ஃப்ளாரன்ஸ்ல சந்திச்ச பொண்ணு.''

''ஓஓஓ! முக்கியமான ரகசியங்கள் அடங்கிய விஷயங்களைக் கையாளும் போது நான் கோமாளி மாதிரி நடந்துக்கிறது உண்டு; ஒத்துக்கறேன். ஆனா, இப்ப, இந்த நிமிஷத்துல நான் விளையாடலே... நேரா விஷயத்துக்கு வரேன். நீங்க, என்னை, ஒரு துளி கூட அடையாளம்

*கண்டுக்கவேயில்லைனு தான் நான் இத்தனை நாளும் நிலைனச்சுக் கிட்டிருந்தேன்.''*

*''உன்னை எங்கே நான் அடையாளம் கண்டுக்கலே?''*

*''மார்லோவில், சர் ஆஸ்டஸ்.''*

*''மார்லோ? ஆ, ஆ! என்ன கண்றாவி காரியத்தை நீ மார்லோவில் செஞ்சுக்கிட்டிருந்தே?''*

*''உங்களுக்கு இந்த விஷயம் விளாவாரியா தெரியும்னு.....''*

*''நீ சொல்ற விதத்திலேந்து, இன்னும் குழம்பித் தான் போறேனே ஒழிய ஒண்ணும் புரிஞ்ச மாதிரி தெரியலே... நீ சொல்ல வந்த விஷயத்தின் துவக்கத்துக்குப் போ. ப்ளீஸ். பொடி வெச்சுப் பேசாம நேரடியா ஆரம்பி. நீ ஃப்ளாரன்ஸுக்குப் போனே... ம், அப்புறம்...?''*

*''ஆனா நான் ஃப்ளாரன்ஸுக்குப் போகலே... இது தான் முக்கியம்.''*

*''பாவி! அப்படினா எங்கே போனே நீ?''*

*''என் வீட்டுக்கு - மார்லோவுக்கு...''*

*''அது என் வீடு, மேன்!''*

*''அதுக்கு அருகாமையில் தான் என் வீடும்!என் மனைவியைப் பார்க்கப் போயிருந்தேன். அவ உடல் நலம் குன்றியிருந்தா. எப்ப வேணும்னாலும் டெலிவரி ஆகலாம்னு- - -''*

*''உன் மனைவியா? ஆனா உனக்குக் கலியாணம் ஆகியிருக்குங்கிற விஷயமே எனக்குத் தெரியாதே!''*

*''அது தான் - அதே தான் - அதையே தான் நான் இப்ப உங்களுக்கு சொல்ல வந்திருக்கேன், சர் ஆஸ்டஸ். இந்த விஷயத்துல நான் உங்களை ஏமாத்திட்டேன், சர்.''*

*''உனக்குக் கல்யாணம் ஆகி எத்தனை நாள் ஆகுது?''*

*''எட்டு வருஷங்களுக்கும் மேலா! உங்களுக்கு செகரட்டரியா ஆவதற்கு ஆறு மாசத்துக்கு முன்னாடி தான் எனக்குக் கலியாணம் ஆகியிருந்தது. கிடைக்கும் வேலையை இழக்க நான் விரும்பலே. எம்.பி. கூடவேயிருக்கும் காரியதரிசிக்குக் கலியாணம் ஆகியிருக்கக்கூடாது. அதனால விஷயத்தை அமுக்கினேன்.''*

*''என் மூச்சே நின்னுடும் போல இருக்கு'' என குறிப்பிட்டேன் நான். ''இத்தனை வருஷங்களும் அவ எங்கேயிருந்தா?''*

*''மார்லோ நதிக்கரையில் எங்களுக்குனு ஒரு சின்ன பங்களா இருக்கு. அஞ்சு வருஷத்துக்கு முன்னாடி வாங்கினேன். மில் வீட்டிலிருந்து கூப்பிடும் தூரம்.''*

*''என்ன திமிருடா உனக்கு'' என்றேன் நான். ''குழந்தைகள்?''*

*''நாலு, சர் ஆஸ்டஸ்.''*

*திக்பிரமை பிடித்தவன் பேல பகெட்டை நான் பார்த்தேன். பகெட் போன்ற அசமஞ்ச வகை மனிதனுக்குள் எவ்வித ரகசியங்களும் இருக்கவே இருக்காது என்று தான் எண்ணியிருந்தேன். அவன் காட்டிய பெரும் மரியாதை தான் என் கண்களை மறைத்து ஏமாற்றியிருக்கும் ஒரே கொடிய விஷம். இப்படி ஒரு ரகசியத்தை தான் இவன் இத்தனை நாட்கள் பூட்டி வைத்திருக்கின்றானா – ஒரு மனைவி மற்றும் நான்கு பிள்ளைகள்!*

*அபூர்வ மனிதனாய் இவனை நான் நீண்ட நேரம் முறைத்துப் பார்த்துக் கொண்டிருந்து விட்டு, கடைசியில் கேட்டேன்: ''இந்த விஷயத்தை வேற யார் கிட்டேயாவது சொல்லியிருக்கியா?''*

*''மிஸ் பெட்டிங் ஃபெல்டுக்கு மட்டும். கிம்பர்லி ரயிலடிக்கு அவங்க வந்திருந்தாங்க.''*

*அபூர்வ மனிதனாய் இவனை நான் மறுபடியும் நீண்ட நேரம் முறைக்கலானேன். அவன் தலையைத் தாழ்த்திக் கொண்டான்.*

*''இந்த உண்மையைக் கேட்டதுல, என் மேல உங்களுக்குக் கட்டுக்கடங்கா வெறுப்பெல்லாம் உண்டாகலே இல்லே, சர் ஆஸ்டஸ்?''*

*எழுந்துக் கொண்ட நான், அழுத்தமாய் உலுக்கப்பட்டவனாய் வெளியேறினேன். தெரு மூலையிலிருந்த அந்தக் கலைப்பொருட்கள் விற்பனைக் கடையைக் கடக்கும் போது, தடுக்க முடியாத அதிவேக உந்துதல் விளைய, வழியை மாற்றிக் கொண்டு அப்படியே அதனுள்ளே நுழைந்தேன். கடைக்காரன் தன்னிச்சையாய் உள்ளங்கைகளை உராய்ந்துக் கொண்டு என்னை நெருங்கி வந்தான்.*

*''சிறந்த கலைப்பொருட்கள் வந்திருக்கு - காட்டட்டுமா? ஆபரணம் பதித்த மேலங்கிகள்; கைவினைப் பொருட்கள்.''*

*''சாதாரண பொருட்களிலிருந்து விலகியிருக்கும் அசாதாரண சமாச்சாரங்கள் வேணும்'' என்றேன் நான். ''ஒரு ஸ்பெஷல் நிகழ்ச்சிக்காக, அன்பளிப்பா தர... அப்படி ஏதாவது இருந்தா காட்ட முடியுமா?''*

*''அப்படினா, பின்னாலிருக்கிற அறைக்கு வர முடியுமா? அங்கே தான் நிறைய நிறைய ஸ்பெஷல் அயிட்டங்கள் வெச்சிருக்கோம்.''*

*இதில் தான் நான் தவறிழைத்தேன். நான் தான் மகா புத்திசாலி என நினைத்துக் கொண்டு, ஆடிக்கொண்டும் பறந்துக் கொண்டுமிருந்த துணிமணிகளுக்கிடையே கடந்து பின்பக்கம் போய்க் கொண்டிருந்தேன்.*

# அத்தியாயம் - 32

## (ஆனே'யின் பதிவு தொடர்கின்றது)

*ஸூஸேனியைச் சமாதானப்படுத்துவதில் பெரும் சிக்கலை எதிர்கொண்டேன். அவர் விவாதித்தார். கெஞ்சிப் பார்த்தார். அழுதும் கூட பார்த்தார். இருவருமாய் சேர்ந்து அந்தத் திட்டத்தை நிறைவேற்ற! ஆனால் கடைசியில் ஜெயித்தது நான் தான். அந்தக் கடுதாசிக்குப் பதிலாய், நான் காட்டிய வழியில் திட்டத்தைச் செயலாக்க ஒப்புக் கொண்ட அவர், ரயிலடி வரை என்னுடன் வந்து, கண்ணீர் சிந்தி எனக்குப் ப்ரியா விடை அளித்தார்.*

*மறு நாள் விடிகாலைப் பொழுதிலேயே நான் வந்து சேர வேண்டிய இடத்தில் இறங்கியிருந்தேன். குட்டையான உயரமும் மற்றும் கருத்தக் குறுந்தாடியும் வைத்திருந்த ஒரு டச்சுக்காரனால் நான் வரவேற்கப் பட்டேன். அவனை நான் அதற்கு முன் எங்கும் சந்தித்தது கிடையாது. ஒரு கார் காத்திருக்க அதில் என்னை ஏற்றி ஓட்டிச் சென்றான். தொலைதூரத்தில் எங்கோ கும் கும்' மென்ற ஓசைகள் விட்டு விட்டு அதிகமாய் கேட்ட வண்ணமிருந்தன. அவனிடம் அது பற்றிக் கேட்டதற்கு துப்பாக்கியின் குண்டு வெடிக்கும் ஓசை என்றான். ஆக, ஜோஹென்னஸ்பெர்க்'கில் சண்டை ஆரம்பமாகிவிட்டது.*

*நாங்கள் போக வேண்டிய பகுதி, நகரத்தின் ஒதுக்குப்புறப் பகுதியில் இருப்பதாய் டச்சுக்காரனைக் கேட்டு தெரிந்துக் கொண்டேன். அப்பகுதியை அடைய, திரும்பியும் வளைந்தும் கழன்றும் விதவித மாய் பயணித்தோம். அந்த ஒவ்வொரு நிமிடமும் குண்டோசைகள் அருகில் வெடித்தன. அது ஒரு பரபரப்பான நேரம். பிரயாணத்தின் முடிவில் உளுத்து உதிர்ந்துக் கிடுகிடுத்துப் போயிருந்த ஒரு பாழடைந்த கட்டிடத்தின் முன்னால் போய் நின்றோம். சின்னப் பையனால் அதன் முன் கதவு திறந்து விடப்பட்டது. டிரைவர் உள்ளே நுழையும் போது சைகை செய்தான். என்ன செய்வதென்று பிடிபடாமல் வாயடைத்து, அந்த வரவேற்பறையின் அசுத்த சூழலின் நடுவில் நின்றேன் நான். என்னைக் கடந்து அந்தப் பக்கமாய் போன டச்சுக்காரன், அங்கிருந்த ஓர் அறையின் கதவினைத் தள்ளித் திறந்தான்.*

''ஹார்ரி ரேபர்னைச் சந்திக்க வந்திருக்கும் இளம்பெண்'' என அறிவித்து விட்டுக்கலகலவென சிரித்தான் அவன்.

இந்த அறிவிப்பினை அடுத்து நான் உள்ளே நுழைந்தேன். அங்கொன்றும் இங்கொன்றுமாக நாற்காலிகள் சிதறிக்கிடந்த அவ்வறையில் மலிவு சிகரெட்டின் புகையிலை நெடி கொண்ட புகை சூழ்ந்துக் கிடந்தது. அங்கிருந்த ஒரு மேஜையினருகே அமர்ந்திருந்த ஒரு நபர் அதில் எதையோ எழுதிக் கொண்டிருந்தார். நிமிர்ந்து பார்த்த அவர், புருவங்களை உயர்த்தினார்.

''ஓ, டியர்'' என்றார் அவர். ''ஓ, இது, மிஸ் பெட்டிங்ஃபெல்ட்!'' என்றார்.

''ரெட்டையில ஒருத்தரைப் பார்க்கிறேன்னு நினைக்கிறேன்'' என மன்னிப்புக் கோரும் தொனியில் சொன்னேன். ''இது மிஸ்டர் எட்வர்டா அல்லது மிஸ் பெட்டி-க்ரூவா? ரெண்டு பேர் போலவும் ஓர் அசாதாரண ஒற்றுமை தெரியுது, உங்ககிட்டே.''

''அந்த ரெண்டு பாத்திரங்களும் தற்காலிகமா ஒதுக்கி வைக்கப்பட்டிருக்கு. என் பாவாடையை நான் இப்போதைக்குக் கழற்றி வெச்சுட்டேன். உடுத்தியிருந்த உடைகளையும் தான். ஓஹ் .. ஏன். உட்காரக்கூடாதா?''

காட்டப்பட்ட இருக்கையில் பதவிசாக நான் உட்கார்ந்துக் கொண்டேன். ''ஏதோ தவறான முகவரிக்கு வந்துட்டதா தோணுது'' என்று அப்போது குறிப்பிட்டேன்.

''உங்க பக்கத்திலிருந்து பார்த்தா... அப்படித்தான் தோணுது மிஸ் பெட்டிங்ஃபெல்ட். ஒரு தடவை அனுபவிச்சும், ஜாக்கிரதையா இருக்காம, மறுபடியுமா வெச்சப் பொறிக்குள்ளே வந்து மாட்டுவீங்க...?!''

''அவ்ளோ யோசிக்குமளவுக்கு எனக்கு சாதுர்யம் பத்தலே'' பரமசாதுவாய் பேசினேன்.

என்னிடம் தென்பட்ட ஏதோ ஒரு நடத்தை அவரைப் புதிராக்கியது. ''நடந்திருக்கும் சமாச்சாரத்தினால துணுக்குற்றத்தை மாதிரியோ... குழம்பின மாதிரியோ... ஏன், பயந்த மாதிரியோ தெரியலியே-உன்னைப் பார்த்தா!''

''என்னோட வீரதீர பரம்பரைப் பற்றிக் கொஞ்சம் பேச அவகாசம் கிடைக்குமா?''

''ம்... நிச்சயமா.''

''என்னோட பாட்டி சொல்வாங்க: 'நிஜமான ஒரு பொம்பிளை யார் தெரியுமா? நடக்கும் எதுக்கும் ஆச்சரியப்பட்டோ அதிர்ந்தோ போகாம இருப்பவ தான்' '' -இப்படிச் சொல்லி விட்டு பிறகு முணுமுணுத்தேன். ''நான் ரொம்ப மதிக்கும் அவங்களுடைய இந்த வாழ்நாள் போதனையைக் கைவிட்டுடாம வாழ விரும்பறேன்.''

இதற்கு எட்வர்ட் பெட்டி-க்ரூ'வுக்குள் விளைந்த கருத்தினை பட்டவர்த்தனமாக அவரது முகத்தில் என்னால் படிக்க முடிந்ததால் நிறுத்தாமல் மேற்கொண்டு பின்வருமாறு நான் பேச வேண்டிய தாயிற்று: ''ஓஹ் மேக்-அப் பண்ணின பிறகு யாராலும் அடிச்சுக்கவே முடியாத அளவுக்கு அற்புதமா இருந்தீங்க, நீங்க! அத்தனை தத்ரூபம்!'' - தாராளமாய் புகழ்ந்தேன் நான். ''இந்த சமாச்சாரம் முழுக்கவும் நீங்க தான் பெட்டி-க்ரூவா இருந்திருக்கீங்க. ஆனா அதை நான் அடையாளம் கண்டே பிடிக்கலே. ஒரே ஒரு தடவை கூட ம்ம். கேப் டவுன்ல ட்ரெயினுக்குள்ளே நான் வந்த போது என்னைப் பார்த்த அதிர்ச்சியில பென்சில் ஊக்' கை உடைச்சீங்களே.. அப்ப கூட என்னால புரிஞ்சுக்க முடியலே, கவனிச்சீங்களா?''

இதை நான் சொன்ன நிமிஷத்தில் கையிலிருந்த ஒரு பென்சிலால் மேஜையில் தாளமிட்டார் அவர்.

''எல்லாம் திட்டமிட்டபடி பங்கம் விளைவிக்காம முடிஞ்சிருக்கு. ஆனா, இப்ப நாம நம்முடைய பிஸினஸுக்குள்ளே நுழையணும். ஆங் மிஸ் பெட்டிங்ஃபெல்ட்... நீங்க, இங்கே இருக்கணும்னு எதுக்காக நாங்க உங்களைக் கேட்டுக்கிட்டோம்னு உங்களுக்குத் தெரிஞ் சிருக்கும்னு நினைக்கிறேன்.''

''மன்னிக்கணும்'' என்ற நான், ''பார்ப்பவங்கிட்டேயெல்லாம் நான் பிஸினஸ் பேசிற வழக்கம் கிடையாது'' என்றேன். ''முதலாளியிடம் மட்டும் தான்.''

இது போன்ற ஏதோ ஒரு வாக்கியத்தைத் தான் பணம் கடன் தரும் ஏதோ ஒரு விளம்பரத்தில் நான் படித்திருக்கிறேன். அது என்னை அத்தனைக் கவர்ந்தது. பிரயோகித்த இவ்வாக்கியம், எட்வர்ட் பெட்டி-க்ரூ'வுக்குள் பிரளய உடைப்பை உண்டுபண்ணியது. தானறியாது வாயைத் திறந்துவிட்டு, பிறகு உடனே மூடிக் கொண்டார் அவர். நான் குத்தீட்டியான பார்வையை வீசியபடியிருந்தேன்.

''என் தாத்தா ஜார்ஜ் இல்லே ஜார்ஜ்... அவர் இருக்காரே...'' - இதை, பிறகு உதித்த ஒரு சிந்தனையாய் சேர்த்துக் கொண்டு சொன்னேன்!

''வெறும் பட்டன் விற்றுப் பிழைச்சவர். ஆனா எத்தனை சீர்மிகுந்தவர் தெரியுமா....?''

சின்ன நீதிக் கதையொன்றை, ஜார்ஜை நாயகனாய் வைத்து விட்டேன்.

இந்த அளவுக்கு எட்வர்ட் பெட்டி-க்ரூவை வேறு எவரேனும் கிண்டலடித்து சாய்த்திருப்பார்களா என்பது சந்தேகமே. அவருக்கு நான் செய்த எதுவும் கொஞ்சமும் பிடிக்கவில்லை.

''நீ பேசும் விதத்தை மாத்திக்கறது நல்லதுனு நினைக்கிறேன், ஆனே...''

இதற்கு நான் மறுபதில் ஏதும் அளிக்கவில்லை. ஆனால் கொட்டாவி விட்டேன். ஒரு சின்ன வெறுப்பேற்றும் கொட்டாவி. இங்கு ரொம்ப போராடிக்கிறது என்பதை உணர்த்தும் பாணியில்!

''என்ன திமிருடீ, உனக்கு?'' - கட்டுப்படுத்த முடியாமல் கொதித் தெழுந்தார் அவர்.

இதற்கு நான் இடைமறித்தேன். ''என் கிட்டே, சும்மா கத்தி ஒரு பிரயோஜனமுமில்லே, மிஸ்டர். ரெண்டு பேரும் மாற்றி மாற்றிப் பேசிக்கிட்டு இங்கே நேரத்தைத் தான் விரயமாக்கிக்கிட்டு இருக்கோம். கூஜாக்கள் கூட சமாச்சாரத்தைப் பேச எனக்கு என்றைக்குமே ஒப்புதல் கிடையாது. ஓ. கே! இப்படி நேரத்தை வீணாக்குவதையும் நான் உங்களை வெறுப்பேற்றுவதையும் தவிர்க்கணும்னா உடனடியா என்னைக் கூட்டிட்டுப் போங்க, *சர் ஆஸ்டஸ் பெட்லர் கிட்டே!*''

''ஆ....

உடலியக்கம் செயலற்றுப் போன ஒருவரனாய்த் தோன்றினார் அவர்.

''ஆமாம்'' என்றேன் நான், அழுத்தமான முடிவாய். ''*சர் ஆஸ்டஸ் பெட்லர்.*''

''வந்து - வந்து... ஒ - ரு ... நிமிஷம்.''

பயந்து மூலையைத் தேடி ஓடும் ஒரு முயலாய் அறையை விட்டு பயந்தோடினார் அவர். கிடைத்த அவகாசத்தை சாதகமாக்கிக் கொண்டு கையிலிருந்த பையைத் திறந்து பவுடர் பஞ்சினை எடுத்து மூக்கு கன்னம் நெற்றி என்று எல்லா பாகங்களையும் ஒரு முறை ஒற்றிக் கொண்டேன். எனக்கு அழகு சேர்க்கும் தொப்பியையும் எடுத்து மாட்டிக் கொண்டு ஒரு குட்டி தேவைதையாக உரு மாற முயன்றேன். பிறகு என்னை நானே தயாராக்கிக் கொண்டு, என்னுடைய பகைவன் திரும்பி வருவததற்காக காத்திருக்கத் துவங்கினேன்.

தந்திரம் தொனிக்கும் நுட்பமான அமைதியுடன் திரும்பியிருந்த அவர், ''என்னுடன் வர முடியுமா, மிஸ் பெட்டிங்ஃபெல்ட்?'' என்றார்.

முன்னால் அவர் போக, படிகளேறினேன். மேற்தளத்தில் இருந்த ஓர் அறையின் கதவினைத் தட்டினார். கரகரப்பான குரலில், ''ம்...வா'' என்ற ஒரு குரல் பதிலாய் வந்தது. கதவை இப்போது திறந்து விட்ட அவர், நான் உள்ளே நுழைவதற்காக ஒதுங்கி வழி விட்டு நின்றார்.

சர் ஆஸ்டஸ் பெட்லர், என்னை வரவேற்க, அன்பாயும் சிரித்த முகத்துடனும் துள்ளி முன் வந்தார். ''வா, வா, மிஸ் ஆனே'' என் கையைப் பிடித்து கதகதப்பாய் குலுக்கினார். ''உன்னைப் பார்ப்பதில் எனக்கு அத்தனை மகிழ்ச்சி, தெரியுமா! வா, உட்கார் பிரயாணக் களைப்பு இல்லையே? அப்ப சரி.''

இன்னமும் முகமலர்ச்சி துளியும் குன்றாது, என்னை நேராய் பார்க்கும்படி அமையுமாறு உட்கார்ந்துக் கொண்டார் அவர். நான் தோற்றுப் போய் விட்டதாக நினைக்குமாறு அமைந்தது இது. அவரது நடத்தை முழுக்க முழுக்க இயற்கையாக, சந்தேகத்துக்கப்பாற் பட்டிருந்தது.

''என்னிடமே நேரடியா கொண்டு போகப்படணும்னு நீ பிடிச்ச அடம், ரொம்ப சரி'' என்று பேசலானார். ''மிங்க்ஸ் அவன் ஒரு முட்டாள். ஆமாம். சிறப்பான நடிகன் தான் - இருந்தாலும், முட்டாள். கீழே பார்த்தியே அவன் பேர், மிங்க்ஸ்.''

''ஓ, அப்படியா.''

''சரி, இப்போ....'' உற்சாகமாய் சொன்னார் சர் ஆஸ்டஸ். ''விஷயத்துக்குள்ளே நுழைவோம். சொல்லு எத்தனை நாளா உனக்குத் தெரியும் - நான்தான் 'கலோனல்' அப்படினு?''

''நீங்க கெனாஸ் பகுதிக்குப் போயிருந்ததா சொன்ன அதே சமயத்துல உங்களை பகெட் மார்லோ பகுதியில் பார்த்ததா சொன்னரே - அப்போதிலிருந்து.''

வருத்தம் தோய்ந்து தலையசைத்தார், சர் ஆஸ்டஸ்.

''ஆமாம், அவன் கிட்டே, அந்த முட்டாள் கிட்டே சொன்னேன். அவனோட முழு கவனமும் நான் அவனை அடையாளம் கண்டிருப் பேனோ என்பதுல நான் இருந்ததே ஒழிய, நான் அங்கே என்ன பண்ணிக்கிட்டிருந்தேன் என்று துளி ஆச்சரியம் கூட அவனுக்குள்ளே வரலே. அது என்னுடைய ஒரு சிறு துரதிர்ஷ்டம், யெஸ். அதை நான் ஸ்படிக சுத்தமா திட்டமிட்டிருந்தேன். தெரியுமா - அவனை நேரா ஃப்ளாரன்ஸுக்கு துரத்தினது... நான் ஓரிரு நாட்கள், ஊரிலிருந்தே கிளம்பிப்போவதா ஓட்டல்ல எல்லார்கிட்டேயும் சொன்னது! பிறகு மார்லோவில் கொலை கண்டறியப்பட்ட அதே கணத்தில் நான்

கெனாஸுக்குத் திரும்பியிருந்தேன். ஒருத்தனுக்கும் நான் ரிவேரா... அதான் கெனாஸ்.. பகுதியை விட்டு வெளியேறி திரும்பியிருக்கிறேன் என்பது கிஞ்சித்தும் சந்தேகம் வராதபடி முடிச்சேன்.''

இன்னும் கூட, அவர், கொஞ்சமும் பாதிக்கப்படாமல் வெகு இயற்கையாக பேசிக் கொண்டிருந்தார். இதனால், என் கையை நானே அழுந்தக் கிள்ளிப் பார்த்து நம்ப வேண்டியதாயிற்று என் முன்னே நகமும் சதையுமாய் உட்கார்ந்திருப்பது உலகமகா கிரிமினல் 'கலோனல்' என்று ! நடந்த சம்பவங்களை இப்போது எனக்குள் கோவையாக்கிப் பார்ப்பதில் இறங்கினேன்.

''அப்படினா, கில்மார்டன் மாளிகையில், என்னைக் கடலுக்குள் தள்ள முயற்சித்த அது, நீங்க தானா?'' என்றேன் நான் மெதுவாய். ''அப்போ அந்த அர்த்த ராத்திரிப் பொழுதுல பகெட் பின் தொடர்ந்து வந்த அந்த ஆசாமி - நீங்க தானா?''

அவர் விட்டேற்றித்தனமாய் தோள்களைக் குலுக்கிக் காட்டினார். ''அதுக்கு மன்னிப்புக் கேட்டுக்கிறேன் குழந்தே, மனசார மன்னிப்பு கேட்டுக்கிறேன். உன்னை நான் எப்பவும் விரும்பியிருக்கேன். ஒதுக்கினதே கிடையாது. இருந்தாலும் என்ன பண்றது. நீ அடக்க முடியாத அளவுக்கு ஓர் இடையூரா இருந்தே. ஒண்ணுக்கும் உதவா ஒரு பொண்ணால என் அத்தனை திட்டங்களும் சிடுக்குப் புடிச்சுப் போவதை என்னால அனுமதிக்க முடியாது.''

''ஃபால்ஸ்ல நீங்க போட்ட திட்டம் தான், அத்தனையிலும் மாபுத்திசாலித்தனமானது'' என்றேன் நான். ''நான் வெளியேறிய போது நீங்க ஓட்டல்ல தான் இருந்தீங்கனு தொண்டையைப் பிடிச்சுக்கிட்டு சத்தியம் செய்வேன்- என்னை எந்த சாட்சிக் கூண்டுல ஏற்றினாலும்! இனி, எதிர்காலத்துல, நம்புவதை விட கண்ணால் பார்ப்பது தான் ஊர்ஜிதம்னு நினைக்கிறேன்.''

''ஆமாம். மிங்க்ஸ், மிஸ் பெட்டி-க்ரூவா என்கிட்டே இருந்த போது அவனால எனக்கு மாபெரும் அனுகூலம் இருந்தது. என் குரலை அப்பட்டமா அச்சு அசலா அவன் பேசுவான்.''

''இன்னொரு விஷயம் பற்றித் தெரிஞ்சுக்க விரும்பறேன்.''

''யெஸ்?''

''அவளைத் தான் காரியதரிசியா சேர்க்கணும்னு முடிவெடுக்கும்படி பகெட்டை எப்படி நீங்க தூண்டினீங்க?''

''ஓ, அது ரொம்ப சிம்பிள். பகெட்டை, 'அவள்', கமிஷனர் ஆபிஸிலோ அல்லது சுரங்க அதிகாரி அலுவலகத்திலோ அல்லது

இப்படி ஏதாவதொரு அரசாங்க அலுவலகத்திலோ எதேச்சையா பார்த்திருப்பா! இந்த மாதிரி இடங்கள் எங்கேயாவது தேடிப் பிடிக்க ஒருத்தியைக் கொண்டு வா'னு சொல்லியிருந்தேன். கொண்டு வந்துட்டான்.''

''நீங்க ரொம்ப வெளிப்படையா பேசறீங்க'' அவரைப் படித்தபடியே கேட்டேன்.

''அப்படி நான் இருக்கக்கூடாது என்பதற்கு ஏதாவது காரணம் இருக்கா, என்ன?''

இக்கேள்வியின் தொனி எனக்குப் பிடிக்கவில்லை. எனவே இதை அப்படியே விட்டுவிட்டு தொடரலானேன். ''நடக்கும் புரட்சி அடையப் போகும் வெற்றி மீது உங்களுக்கு அசைக்க முடியாத நம்பிக்கை இருக்கு போல...?! உங்களுடைய வட்டத்தையே கலைச்சிட்டீங்கனு கேள்விப்பட்டேன்.''

''எப்பவுமே புத்திசாலித்தனமாய் இருக்கும் நீ தரும், படு முட்டாள் தனமான கணிப்பு! கிடையாது, ஆனே. எனக்கு இந்தப் புரட்சியின் மீது துளி நம்பிக்கை கிடையாது. ஆமாம், இது தான் உண்மை. ரெண்டு நாள் பொறு... படு தோல்வியடைஞ்சு அவமானப்பட்டு இருந்த இடம் தெரியாம போகப்போகுது பார்....''

சிறு இடைவெளி தந்துவிட்டுத் தொடர்ந்தார்: ''பெண் புத்தி பின் புத்தி - சும்மாவா சொல்லி வெச்சிருக்காங்க! உனக்கு பிஸினஸ் பத்தின அறிதலே இல்லை, ஆனே. நான் கையிலெடுத்துக்கிட்ட வேலை - சில அபாயகரமான வெடி மருந்துகளையும் வெடிப் பொருட்களையும் பட்டுவாடா செய்வது - இதுக்கு எனக்கு அளிக்கப்பட்டு வந்த தொகை, மிகப் பெரிது. மேலும், தேர்ந்தெடுக்கப்பட்ட ஒரு சிலர் மீது தப்பிக்க இயலாத அளவுக்கு குற்றம் சூழும்படி தந்திர வலை பின்னுவது - அவர் செய்யாத குற்றத்துக்காக! எனக்கு ஒப்படைக்கப்பட்ட இது மாதிரி வேலைகளை கனக்கச்சிதமா துளி சேதாரமின்றி முடிச்சுக் கொடுப்பேன். இதுக்காக பேசும் தொகை முழுதும் முன் பணமா கை சேர வேணும் என்பதிலும் கறாரா இருப்பேன். இந்த சமாச்சாரத்தை எடுத்துக்கிட்டா - இது தான் என்னுடைய கடைசி பிஸினஸ் அதனால, இதுல நான் ஸ்பெஷல் கவனம் செலுத்தி முடிச்சேன். 'நான் ஒரு மரியாதைக்குரிய ஆங்கிலேய ஆசாமி - அருங்காட்சியகம்னு நினைச்சு அதுக்குள்ளே நுழைஞ்சு பார்த்திருக்கார்... இது தான் அவரோட போதாத காலம்... அவர் எதை பார்க்கக்கூடாதோ அதை அவர் அங்கே பார்த்திருக்கார்... அவ்ளோ தான், பாவப்பட்ட அவரைக் கடத்திட்

டானுங்க...' இப்படி போகும் கதை. நாளைக்கோ அல்லது நாளை மறுநாளோ ஏதாவது ஓர் ஒதுக்குப்புறமான பகுதியில் மிகவும் பரிதாபத்துக்குரிய நிலையில் நான் கண்டெடுக்கப்படுவேன்.''

''ஆஹ்!'' என்றேன் நான் சன்னமாய், ''அப்ப என் கதி?''

''அது தான் தெரியலே'' என்றார் அவர் மிருதுவாய். ''உன் கதி? நான் உன்னை இங்கே கடத்தி வந்திருக்கேன். இல்லைனு எந்தக் காலத்திலும் சொல்ல விரும்பலே. ஆனா உன்னை நான் படுசுத்தமா தூக்கிட்டு வந்திருக்கேன் - இப்படி நீ இங்கே வந்திருப்பது வெளி உலகத்துக்கே தெரியாத மாதிரி! இப்ப முன் நிற்கும் ஒரு கேள்வி உன்னை வெச்சுக்கிட்டு நான் என்ன பண்ணுவது? சுலபமான ஒரே வழி - தீர்த்துக் கட்டி விடுவது இல்லேனா, இன்னொரு ருசிகரமான வழியை சொல்லுவேன் - நீ என்னை மணந்துக் கொள்வது! பெண்டாட்டிகள் கணவனைக் காட்டிக் கொடுப்பது கிடையாது, தெரியுமா?! மேலும், ஓர் இளம்பெண், மிதக்கும் அவளது இள விழிகளோடு எப்போதும் என் கையைப் பிடிச்சுக்கிட்டே இருப்பது, எனக்கு மிகப் பிடிக்கும்! ஏய் ஏய், அப்படி முறைக்காதே! எனக்கு பயமா இருக்கு! ஏன், என் திட்டம் உனக்குப் பிடிக்கலியா?''

''ம்ம்.''

சர் ஆஸ்டஸ் பெருமூச்செறிந்தார். ''பரிதாபம் - துரதிர்ஷ்டம்! நான் அப்படி ஒண்ணும் கொடூர வில்லன் கிடையாது, தெரியுமா! அப்புறம் என்ன மறுப்பு? ஓ, வாடிக்கையான ப்ராப்ளமா? வேற ஒருத்தன் உன் மனகல... ஆங்?''

''நான் இன்னொருத்தனைக் காதலிக்கிறேன்.''

''நினைச்சேன், நினைச்சேன். முதல்ல, அது அந்த நெடுநெடு கண்றாவி ரேஸோனு நினைச்சேன். ஆனா, அவனில்லே அது. அந்த இளங்காளை - உன்னை ராவோடு ராவா ஃபால்ஸிலிருந்து தூக்கிட்டுப் போனவன். பெண்களுக்கு சுவையே தெரிவதில்லை. இந்த ரெண்டு எருமைகளுக்கும் என்னைப் போன்ற சாதுர்ய மூளை கிடையாது. நான் - *வேற!* யாராலும் கணிக்கவே முடியாத ஒரு மாபுத்திசாலி.''

இக்கருத்தில் சர் ஆஸ்டஸ் சரியென்றே எனக்கும்பட்டது. இவர் எப்படிப்பட்டவராயிருக்கக் கூடும் என்றும், எப்படிப்பட்டவர் என்றும், எனக்கு ஸ்படிக சுத்தமாக முன்னமேயே தெரிந்திருந்தாலும், அதை எனக்கு நானே உணரும்படியான ஒரு நிலை உருவாகாமலே இருந்திருக்கின்றது. ஒரு சந்தர்ப்பத்துக்கும் மேலான தருணங்களில் சர் ஆஸ்டஸ் என்னைக் கொல்லப் பார்த்திருக்கிறார். இன்னொரு

பெண்மணியை நிஜத்தில் கொன்றே போட்டிருக்கிறார். நானறியாத எண்ணிலடங்கா பற்பல குற்றங்களின் கர்த்தாவாக இருந்திருக்கிறார். ஆயினும், ''இப்படிப்பட்டவர் தான் இவர்...'' எனும் முடிவான மனோநிலைக்கு என்னை என்னாலேயே வசதியாக கொண்டு வர முடியாமலே உள்ளது. நேசமும் சகவாசமும் கொண்டு ஆச்சரியப்பட வைக்கும்படியாய் பழகும் ஒரு சக பிரயாணி என்பதைத் தவிர இவரை வேறெப்படியும் என்னால் கணிக்க இயலவில்லை. சர் ஆஸ்டஸுக்கு என்னுடைய உயிர் ஓர் அத்தியாவசியத் தேவையாயிருந்திருந்தால் துளியும் யோசிக்காமல் ஈவிரக்கமற்று என்னைக் கொன்றுத் தள்ளியிருப்பார் என்பது எனக்கே கூட தெரிந்திருந்தாலும் இப்போதும் கூட இவரின் மீது எனக்குக் கடுகத்தனையும் பயம் எழவில்லை.

''*சரி, சரி*'' என்று ஏதோ ஓர் அறிவிப்பைச் செய்யப் போகிறவர் போல புன்னகையோடு குறிப்பிட்ட இந்த அசாதாரண மனிதன், தனது இருக்கையில் சாவகாசமாக அப்படியே சாய்ந்துக் கொண்டு, ''திருமதி ஆஸ்டஸாக இருப்பது உன் கவனத்தை ஈர்க்கவில்லை என்பது பரிதாபகரமானது. ஏனைய மாற்று வழிகள், கொடூரமானவை'' என்றார்.

சகிக்க முடியாத ஓர் உணர்வு என் முதுகுத் தண்டுவடத்தின் மேலும் கீழும் பாய்வதை நான் உணர்ந்தேன். மாபெரும் அபாயத்தினை நான் பின் தொடர்ந்து இங்கு வந்திருக்கிறேன் என்பது எனக்கும் தெரியும். ஆனால், அது, திட்டமிட்டபடி கனிந்துவிட்டால் அள்ளித் தரும் கனி - மகத்தானது. கணித்தபடியே போட்ட திட்டம் கைக்கிட்டுமா, அல்லது வேறு மாதிரி ஆகி விடுமா?

'' *'நீ'*, என்றாலே நான் விழுந்துவிடுகிறேன். இதுதான் என் அடக்க முடியாத பலஹீனம்'' - தொடரலானார் சர் ஆஸ்டஸ். ''மிகக் கடுமையான இறுதி முடிவுகளை முடுக்கி விட நான் விரும்பலே. ஒரு வேளை, முழு கதையையும் நீ ஆரம்பத்திலிருந்தே உள்ளது உள்ளபடி என்கிட்டே சொன்னே'னா ரெண்டு பேருமா சேர்ந்து என்ன பண்ணுவதென்று முடிவெடுக்கலாம். இதுல விளையாட்டு கூடாது. ஏமாற்றும் பொய்மை ஆகாது... எனக்குத் தேவை - உண்மை.''

சர் ஆஸ்டஸின் இந்த எதிர்பார்ப்பில் நான் எவ்விதமான பித்தலாட்டத்தையும் செய்யப் போவது கிடையாது. இவருடைய கூர்மையின் மீது எனக்கு அலாதி மதிப்பு உண்டு. இது உண்மைக்கான நேரம். முழு உண்மைக்கான தருணம். உண்மை. உண்மையைத் தவிர வேறொன்றுக்கு இடம் கிடையாது. அனைத்துச் சம்பவங்களையும்

நான் சொன்னேன். எதையும் விலக்காமல் ஹார்ரியால் நான் கடைசியாக காப்பாற்றப்பட்டது வரை,நான் சொல்லி முடிந்ததும், கேட்ட அனைத்தையும் அங்கீகரிக்கும் விதமாய் தலையசைத்துக் காட்டினார் சர் ஆஸ்டஸ்.

''புத்திசாலிப் பெண்ணு. துணிஞ்சு இறங்கியிருக்கே. உன் கதையை வேற யார் கேட்டாலும் உடனடியா நம்ப மாட்டாங்க. குறிப்பா நீ சொன்னவற்றின் ஆரம்பப் பகுதி...! ஆனா நான் நம்பறேன். அது போல இடியாய் இறங்கித் துணியக் கூடிய பெண் தான் நீ. ஒரு கணப்பொழுதுல முடிவெடுத்து... எந்தத் திசையில் போவது என்ற இலக்கு புலப்படாத தருணத்துல...! உனக்கு ஆச்சரியப்படுமளவுக்கு அதிர்ஷ்டமிருக்கு, ஆனே. இருந்தாலும், முடிவென்னவோ, தொழிலை உயிராக பாவித்து நடத்திய அனுபவம் மிக்கத் தலைவனுக்கு எதிரா போராட முடியாம, பொழுதுபோக்கா எடுத்துக்கிட்ட நீ ஒடுங்கி தோற்றுவிட - இதன் முடிவு: தலைவன் திட்டமிட்டபடியே தவறாது அமைஞ்சுடுது! நான் - இந்தத் தொழிலை உயிரா பாவிச்சு நடத்தியவன், ஆங்! நான் விடலையா இருந்த போதே இந்தத் தொழிலைத் துவங்கிட்டேன். மாட்டிக்காம இருக்கும் அத்தனை வழிகளையும் கடைபிடிச்சா, ஒரு ராத்திரியில மாபெரும் பணக்காரனாக ஆக ஒரே வழி இது தான்னு எனக்குப்பட்டது. ஒரு சமாரச்சாரத்தை அதன் ஆணி வேர் வரை சிந்திச்சு அதை முடிக்க சாதுர்யம் மிகுந்த மாபுத்திசாலித்தனமான திட்டமிடுதல், எனக்கு இயற்கையிலேயே வாய்த்த ஒரு வரமா இருந்தது. ஆனா அத்திட்டங் களை நானே முன் நின்று நடத்தும் தவறை மட்டும் ஒருபோதும் நான் செய்ததில்லை. இதுக்காக தயாரான ஒரு நிபுணனை நியமிப்பது - இது தான் என்னுடைய தலையாய அணுகுமுறை. ஒரே ஒரு தடவை இந்த அணுகுமுறையிலிருந்து நான் விலகினேன் - ஆபத்து வந்து என்னை சூழ்ந்தது. ஆனா, அந்த வேலையை எனக்காக செய்து முடிக்க என்னால வேற ஏந்த நபரையும் நம்ப முடியாத இக்கட்டான சூழ்நிலை அப்போ இருந்தது. நதீனாவுக்கு நிறைய தெரிஞ்சிருந்தது. நான் ரொம்ப சுவாரஸ்யமானவன். இளகிய கருணை மனம் உண்டு. கோபப்பட்டு சிதைக்காதவன் - நான் மிரட்டப்படாத வரை! ஆனா நதீனா செஞ்சா. நான் என்னுடைய தொழிலின் உச்சத்தில் வெற்றிக் கனியைப் பறிக்கும் தருணத்தில் போய் - அவ என் கழுத்தை நெறிச்சா.. மிரட்டினா. அவ ஒரு வழியா செத்துத் தொலைஞ்சு வைரங்கள் என் கைகளுக்கு இடம் மாறிட்டா, ஆஹ், எனக்கு ஆபத்தே இருக்காது. இந்த சமயத்துல தான், சமாச்சாரத்தையே பண்ணக்கூடாத வழியில் பண்ணி சொதப்பிட்டேன்

எனும் முடிவுக்கு நான் வந்தேன். முட்டாள் பகெட் - அவன் மனைவி, பிள்ளைகள்! எனக்குள்ளிருக்கும் நகைச்சுவையுணர்வுக்கு, அவனுடைய தொங்கிப் போயிருந்த முகமும், விஷம் வைத்துக் கொல்ல வந்தவனைப் போன்ற அவனது பயந்த 'பாவமும்', செமத்தியான தீனியாயின. செகரட்டரியாக நியமித்தேன். பிறகு வருஷக் கணக்கா எனக்குள்ளேயே இருக்கும் உள்ளுணர்வு எழுந்து என்னை எச்சரிச்சிருக்கு - பகெட்டிடமிருந்து உடனடியாக விடுபட்டுடுனு! ஆனா, அந்த நாய்ப்பய, அசராத உழைப்பாளியாகவும் மனச்சாட்சிக்கு விரோதம் பண்ணாத நிஜ ஊழியனாகவும் இருந்ததால், ப்ச், மனசார ஒரு காரணத்தைச் சொல்லி அவனை வேலையிலிருந்து நிறுத்த முடியாம ஆச்சு. நான் பண்ணின தப்பு அது.

''ஓஓஓ... பேச ஆரம்பிச்ச விஷயத்தை விட்டுட்டு எதையோ பேசறோம். இப்ப கேள்வி : உன்னை என்ன பண்ணுவது? நீ சொன்ன கதை பாராட்டும்படியான ஓர் அற்புத பொழிப்புரை. இருந்தாலும் பெண்ணே, ஒரு விஷயம் என் கைகளுக்குள் சிக்காம இன்னும் தப்பிச்சு வெளியிலேயே இருக்கு. அந்த வைரங்கள் இப்போ எங்கேயிருக்கு?''

அவரைக் கூர்ந்து கவனித்தபடி சொன்னேன்: ''ஹார்ரி ரேபர்ன் வெச்சிருக்கார்.''

இதற்கு, அவருடைய முகபாவம் மாற்றங்கொள்ள வில்லை. பரிகாசம் நிறைந்த கிண்டலான நகைச்சுவை இன்னும் அவர் முகத்தில் தங்கியேயிருந்தது, ''ஹூம்'' என்றார். ''எனக்கு அந்த வைரங்கள் வேண்டும்.''

''அவற்றை மறுபடியும் கையகப்படுத்த எந்தவொரு வாய்ப்பும் எனக்குத் தென்படலே'' - மறுபதில் தந்தேன்.

''உனக்குத் தெரியலியா? அப்ப, நான் சொல்றேன். உனக்கு கெடு பிடி தர நான் விரும்பலே. இருந்தாலும் இங்கே, இதே பாழடைஞ்ச இடத்துல, ஒரு சின்னப் பொண்ணு உடல் சிதறி செத்துக் கிடந்தால் அதைப் பார்த்து ஒருத்தரும் ஆச்சரியப்பட்டு துடிக்கப் போறதில்லே என்பதையும் சொல்லிக்க விரும்பறேன். கீழே ஒருத்தன் இருக்கான். இதுக்குன்னே. கவனி. நீ சூட்டிகையான பொண்ணு. என் திட்டம் இது தான்: பேசாம உட்கார்ந்து, கிளம்பி ஓடி வந்து உன்னோட இங்கே சேர்ந்துக்குமாறு அறிவுறுத்தி, ரேபர்னுக்கு நீ ஒரு கடிதம் எழுதுறே....''

''அப்படி எதையும் நான் செய்யப் போவதில்லே.''

'உன்னை விட வயசானவங்க பேசும் போது குறுக்கே பேசாதே. அது தப்பு. உன்னோட ஒரு பேரம் பேசப் போறேன். வைரங்கள் - உன்

*உயிருக்கு மாற்றாக! இதுல எவ்விதமான திருட்டுத் தனத்தையும் பண்ணிடாதே. உன் உயிர் - என் முழுக் கட்டுப்பாட்டுல.''*

*''அப்ப ஹார்ரி?''*

*''ரெண்டு இளங்காதலர்களைப் பிரிச்சுப் பார்க்குமளவுக்கு நான் ஒரு கொடூரன் கிடையாது. நீயும் அவனும் இனி எக்காரணத்தைக் கொண்டும் என் வாழ்க்கைப் பாதையில் குறுக்கிட மாட்டீங்க எனும் புரிதலின் பேரில் - அவனும் விடுவிக்கப்படுவான்.''*

*''உங்க பேரத்துல எவ்வித பொய்க் கலப்புமின்றி, சொன்னது சொன்னபடி நீங்க நடந்துக்குவீங்கன்னு நான் நம்ப எனக்கு என்ன ஆதாரமிருக்கு?''*

*''எதுவும் கிடையாது, மை டியர். நீ என்னை நம்பணும். நல்லதே நடக்கும்னு எதிர்பார்க்கணும். அவ்வளவே. பெரிய ஹீரோயின் மாதிரி நினைச்சுக்கிட்டு இந்த திட்டத்தை அப்படியே நீ நிர்மூலமாக்க நினைச்சேனா... ஆஹ்ஹா, அது வேற கதையிலபோய் முடியும்''*

*இந்த நிலைமைக்குக் கொண்டு வந்து 'கலோனலை' நிறுத்தத் தான் விளையாடிய இத்தனை விளையாட்டும். இந்தப் பந்தயத்துக்குள் உடனே விழுந்து விட்டதாய் காட்டிக் கொள்ளாமல் ஜாக்கிரதை யாகவே இயங்கினேன். கொஞ்சங்கொஞ்சமாகக் கெஞ்சி தாஜா பண்ணி பிறகு திட்டத்துக்கு இணங்குவதாய்க் காட்டிக் கொண்டேன். சர் ஆஸ்டஸின் உச்சரிப்பில் நான் எழுதினேன்.*

டியர் ஹார்ரி,

நீ குற்றமற்ற ஒரு வெகுளி எனும் கூற்றினை சந்தேகங்களுக்கு அப்பாற்பட்டு சமுதாயத்தின் முன் எடுத்து வைக்க, ஓர் அற்புதமான வாய்ப்பு கிடைத்துள்ளதாய் நான் நினைக்கிறேன். நான் இனி சொல்லவுள்ள கட்டளைகளை மிக நுணுக்கமாக கடைபிடிக்கவும். தெருவின் கோடியிலுள்ள கலைப்பொருட்கள் கடைக்கு செல்லவும். 'அசாதாரண வகையில் பண்ணப்பட்டுள்ள கலைப்பொருட்கள் இருந்தால் பார்க்க விரும்புகிறேன்' என சொல்லவும்; 'ஒரு ஸ்பெஷல் காரணத்துக்காக' என்றும் குறிப்பிடவும். இதற்கு, அங்குள்ள மனிதன், உன்னிடம், 'பின் அறைக்கு வர முடியுமா' என்பான். அவனுடனே போ. அங்கு இன்னோர் ஆசாமி உன்னை என்னிடம் கொண்டு வந்து விடுவான். அந்த ஆசாமி எப்படி சொல்லுகிறானோ அதை அப்படியே செய்துவிடு. மறந்துவிடாது நிச்சயமாக வைரங்களை நீ உன்னுடன் கொண்டு வந்து விடவும். இது பற்றி வெளியே மூச்சு விடக்கூடாது.

இங்கு சர் ஆஸ்டஸ் நிறுத்தினார். ''கடிதத்துல இடம்பெற வேண்டிய காதல் டச்-அப்புகளை, நான் உன் கற்பனைக்கே விட்டுடறேன்'' என்றார். ''ஆனா அதுல ஏதாவது குளறுபடிய பண்ணிடக்கூடாது, நீ - ஓ.கே?''

''உன்னை நொடிக்கு நொடி சுவாசிக்கும் ஆனே ''இது போதும்'' என்றேன் நான்.

சொன்னதை வார்த்தைகளாக்கினேன். கை நீட்டிக் கடிதத்தைப் பெற்றுக் கொண்டு எதையும் விடாது ஒரு முறை படித்தார் அவர். ''இது சரியா தோணுது. இப்ப முகவரி.''

நான் சொன்னேன். தனது மறு கையை நீட்டி மேஜையிலிருந்த அழைப்பு மணியை அடைந்தார். பதிலாக, எட்வர்ட் என்கிற பெட்டி-க்ரூ என்கிற மிங்க்ஸ் வந்தான்.

''வழக்கமான முறையில - இந்தக் கடிதம் உடனடியா அனுப்பப் படணும்.''

''நிச்சயமா, கலோனல்.''

உறையின் மீது எழுதப்பட்டிருந்த பெயரினைப் படித்தார் அவர். அவரை, ஆழமாய் கவனித்துக் கொண்டிருந்த சர் ஆஸ்டஸ் கேட்டார்: ''உன் நண்பனோ?''

''என் நண்பனா?'' - துணுக்குற்றுப் போனார் அவர்.

''ஜோனஸ்பெர்க்குல, நேற்று, நீ இவனோட, நீண்ட நெடிய உரையாடல் நிகழ்ந்தியிருக்கே''.

''நேற்று தான். ஒருத்தன் வந்தான். உங்களுடைய மற்றும் சுலோனல் ரேஸுடைய நடவடிக்கைகள் - சென்று வரும் இடங்கள் - இவை பற்றி யெல்லாம் கேட்டான். அவனுக்கு நான், வழி தவறிப் போகும்படியான தகவல்களைத் தந்துக் கொண்டிருந்தேன்.''

''பிரமாதம் நண்பா பிரமாதம்'' என்றார் சர் ஆஸ்டஸ், உற்சாகமாய். ''எல்லாம், என் தப்பு.''

எட்வர்ட் பெட்டி-க்ரூ, அறையை விட்டு வெளியேறும் போது அவருடைய முகத்தைக் கூர்ந்து கவனிக்கும் வாய்ப்பு எனக்குக் கிட்டியது. உயிர் குடிக்கும் அச்சுறுத்தலை எதிர்கொண்டவராய், முகத்தின் அடி ஆழம் வரை அவர் வெளிறிப் போயிருந்தார். அவர் வெளியேறிய அதே நொடியில், இங்கு, தனது முஷ்டிக்கு அருகில் மேஜையில் அமைந்திருந்த ஒரு சின்ன 'குழாய் மைக்' கினைக் கையிலெடுத்துக் கொண்ட சர் ஆஸ்டஸ், ''காவலாளியா?'' என்று அதில் கேட்டார். வந்த சாதகமான பதிலைத் தொடர்ந்து, பேசினார்:

''மிங்க்ஸைக் கண்காணி என் கட்டளைகள் இல்லாமல் வீட்டை விட்டு வெளியேற அவனுக்கு அனுமதி கிடையாது.''

குழாய் - மைக்'கினை அதனிடத்தில் மீண்டும் பொருத்தி விட்டு, முகத்தைக் கோபமாய் சுளித்துக் கொண்டு மேஜையில் சிறு தாளமிட ஆரம்பித்தார்.

ஓரிரு நிமிட அமைதிக்குப் பிறகு, ''உங்களை நான் ஒரு சில கேள்விகள் கேட்க அனுமதி கிடைக்குமா, சர் ஆஸ்டஸ்?'' என்று கேட்டேன்.

''நிச்சயமா! அப்பாடி. துளி பயமற்ற எத்தனை துணிச்சல் இருக்கிறது உனக்கு, ஆனே! முடிவெடுக்கவே முடியாம ஏனைய பெண்கள் கையைப் பிசைந்துக்கிட்டு தத்தளிக்கும் ஆபத்தான சமாச்சாரங்கள்ல, நீ, படு சுலபமா இறங்கி முடிவுகள் எடுக்கிறே, தெரியுமா!''

''ஹார்ரியை உடனடியா போலீஸ் கைகள்ல ஒப்படைக்காம, எதுக்காக அவனை நீங்க உங்களோட காரியதரிசியா எடுத்துக் கிட்டீங்க?''

''எனக்கு, சபிக்கப்பட்ட அந்த வைரங்கள் அவசியம். நதீனா... என் நிம்மதியைக் கெடுக்க வந்த அழகு பிசாசு... ஹார்ரியை எனக்கு எதிரா ஏவி விட்டு ஆட ஆரம்பிச்சா. அவ கேட்கும் விலையை நான் தர மறுத்தா, அவ்வைரங்களை, உடனடியா அவனிடம் விற்கப் போவதாக பயமுறுத்தினா. இங்கே தான் இன்னொரு தவறை நான் செய்தேன்- அந்த சம்பவம் நிகழ்ந்த நாளில் அவ கிட்டே தான் வைரங்கள் இருக்குனு நான் தப்புக் கணக்குப் போட்டிருக்கேன். ஆனா, இந்த விஷயத்துல் ஒப்புயர்வற்ற புத்திசாலியா அவ நடந்திருக்கா. கார்ட்டன், அவ புருஷன், இவனும் மண்டையைப் போட்ட நிலையில், அவ்வைரங்கள் வேறெங்கே தான் பதுக்கி வைக்கப்பட்டிருக்கும்'னு எனக்கு ஒரு துளி க்ளூ கூட இல்லை. அப்போ தான், கில்மார்டன் மாளிகையில் பிரயாணிச்ச யாரோ அவளுக்கு அனுப்பியிருந்த ஒரு தந்தியின் நகல் பிரதியை நான் கிடைக்கப் பெற்றேன். கார்ட்டனோ அல்லது பேரபர்னோ யாரென்று என்னால நிச்சயப்படுத்தி சொல்ல முடியலே. அதன் பிரதியைத் தான் நீ பொறுக்கியெடுத்திருக்கே. 'பதினேழு நூற்றி-இருபத்தியிரண்டு' - இது தான் அதிலிருந்தது. இதை, ரேபர்னைச் சந்திப்பதற்காக செய்துக் கொள்ளப்பட்டுள்ள முன்னேற்பாடுனு நினைச்சேன் நான். கில்மார்ட்ன்ல வந்தே ஆகணும்னு அவன் துடிதுடிச்சு பிரயாணிச்சதைக் கவனிச்ச போது, என்

*கணிப்பு சரினே நான் முடிவானேன். அதனால அவனை நான் அனுமதிச்சேன். அவன் மேல திசை மாறாம என் கண்களைப் பதிச்சு, ஆழமா கண்காணிச்சு, மேற்கொண்டு ஏதாவது பிடிபடுதானு கவனிக்க ஆரம்பிச்சேன். இப்போ, மிங்க்ஸ், அவன் வழியில் தனியா இயங்க ஆரம்பிச்சு, என் வழியில் குறுக்கிடுவதை உணர்ந்தேன். அதை வளர விடாம உடனடியா தடுத்து நிறுத்தினேன். என் வழிக்கு வந்துட்டான் அவன். கேபின் 17 கிடைக்காம போனதுல நான் வெறுப்பானேன்-மேலும் உன்னை சரி கட்ட முடியாதது எனக்கு மனக் கிலேசத்தைத் தந்தது. வெளிப்படையா தெரியற மாதிரி, நீ, ஒண்ணும் தெரியாத வெகுளிப் பெண் தானா, இல்லை, அப்படி கிடையாதா? எனக்கு விளங்கலே.''*

*''ஆனா, அந்தத் தந்தித் தகவல், 'எழுபத்தியொன்று'க்குப் பதிலா, 'பதினேழு'னு ஏன் சொல்லணும்?''*

*''இதே கேள்வியை நானும் சிந்திச்சிருக்கேன். அந்தத் தந்தி அலுவலருக்கு, தன்னுடைய குறிப்பினை, இந்தக் கார்ட்டன் கொடுத்திருக்கணும். அந்தத் தந்திக்காரன் அடிச்சதைப் பிறகு இவர் பார்க்காம விட்டேற்றித்தனமா விட்டிருக்கணும். அந்த ஆபரேட்டரும், நாம எல்லாரும் பண்ணின அதே தப்பைப் பண்ணியிருக்கணும். 1.71.22 என்பதற்கு பதிலா, 17.1.22'னு புரிஞ்சுக்கிட்டிருக்கணும்' இதுல எனக்குப் புரியாத சமாச்சாரம்: கேபின் 17க்குள்ளே சரியா எப்படி மிங்க்ஸ் நுழைஞ்சான்? ஜஸ்ட், அவனுடைய உள்ளுணர்வு உந்துதலால இருக்கணும்.''*

*''தலைமை ஜெனரல் ஸ்மட்ஸுக்கு அனுப்பப்பட்ட உறை? அதைப் பிரிச்சு காலி பண்ணினது யார்?''*

*''தப்பிக்க விட்ட ஒரு கொலைகாரனே காரியதரிசியா வந்திருக்கும் போது, அந்தக் கடுதாசிக்கு பதிலா வெற்றுக் காகிதத்தைத் தருவதுல எனக்குள்ளே தயக்கமே விளையலே. இந்தக் கிழ ஆஸ்டஸை யார் சந்தேகப்படப் போறாங்க?''*

*''கலோனல் ரேஸ்?''*

*''சரியா சொன்னே. அவன் ஒரு பாழாப் போறவன். அவருக்கு ரகசிய துறையில பணியாற்றிய அனுபவமுண்டுனு பகெட் சொன்ன போது என் முதுகுத் தண்டுல ஐஸ் கட்டிகள் ஊறின. போர்க் காலத்துல, நதீனாவைச் சுற்றி அவர் மூக்கை நுழைச்சு உழைத்துள்ள சேதி நானறிந்தது தான். ஒரு வேளை அவர் எனக்குப் பின்னாடி தான் வந்திருக்காரோ'னு எனக்குள்ளே அப்படி ஒரு குரூர பயம் இருந்தது.*

தங்களுடைய தோள்களில் மாபெரும் வெற்றியை சுமந்திருக்கும் அமைதியான ஆனால் உறுதியான ஒருசில ஆட்கள்ல முதலாமவர்-அவர்.''

ஒரு விசில் அடித்தது. சர் ஆஸ்டஸ், 'குழாய் -மைக்' கினைக் கையிலெடுத்துக் கொண்டார். சில நிமிடங்கள் கவனித்துக் கொண்டிருந்துவிட்டு பதிலளித்தார்: ''ரொம்ப நல்லது. நான் அவனைப் பார்க்கணும்.''

சொல்லிவிட்டு, ''பிஸினஸ்!'' என்றார் என்னைப் பார்த்து. ''மிஸ் ஆனே, நீங்க தங்க வேண்டிய அறையை காட்டறேன். வாங்க.''

ஒரு சின்ன சிதிலமடைந்திருந்த அறையை எனக்குக் காட்டினார் அவர். விடலைப் பையனொருவன் என் பெட்டியைக் கொண்டு வந்து தந்தான். எனக்கு என்ன வேண்டுமானாலும் நான் தவறாமல் கேட்டு பெற்றுக் கொள்ளலாம் என கனிவாய் அறிவுறுத்திவிட்டு நகர்ந்தார் சர் ஆஸ்டஸ். வெந்நீர் நிரம்பிய ஒரு குடம் அருகிலிருந்தது. என் சாமான்களைப் பிரிப்பதற்காக நான் விலகிச் சென்றேன். அப்போது, என் கைப்பையில், மிக கனமானதாகவும் எனக்குக் பழக்கப் படாததாகவும் இருந்த ஒரு பொருள் என் கையில் தட்டுப்பட்டு என்னை அதீத ஆச்சரியத்தில் தூக்கிப் போட்டது. அதனை மூடியிருந்த துணியை விலக்கி உள்ளே கூர்ந்து பார்த்தேன்.

என் ஆச்சரியத்தை உச்சத்துக்கே கொண்டு போகும் வகையில், சின்ன, வழுவழுப்பான கைப்பிடி கொண்ட, ஒரு துப்பாக்கியை அங்கு பார்த்தேன். கிம்பர்லியிலிருந்து நான் கிளம்பிய போது இது இதில் கிடையாது. எச்சரிக்கையாய் அதனைப் பரிசோதித்தேன். குண்டு போடப்பட்டிருந்தது.

வசதியாய் அதனைக் கையாள முடிந்தது. இது போன்ற ஒரு வீட்டில் அகப்பட்டு விடும் ஒருத்தர் வைத்திருக்க வேண்டிய பயனுள்ள பொருள் தான் இது. ஆனால் இது போன்ற வெடிப்பொருட்களைச் சுமந்து செல்ல் நாகரீக உடைகள் பத்தாது. இறுதியில், இதனை, என்னுடைய காலுறைக்குள் ஜாக்கிரதையாக நுழைத்துவிட்டேன். அசாதாரண துருத்தலாய் தெரிந்தது. மேலும் எக்கணத்திலும் சுண்டப்பட்டு என் காலையே கூட இது பதம் பார்த்து விடும் சாத்தியக்கூறும் தென்பட்டது. ஆனாலும் பரவாயில்லை. வேறு வழி கிடையாது, இதனை மறைக்க!

# அத்தியாயம் - 33

மாலைப் பொழுது தொடும் வரை, சர் ஆஸ்டஸைச் சந்திக்க எனக்கு அவகாசம் தரப்படவில்லை. பதினொரு மணியையொட்டி வயிறு முட்ட லஞ்ச்-சும் சுடச்சுட டீயும் என் அறைக்கே வந்தன. அவ்விருந்தை, அடுத்த மோதலுக்குப் போதுமானதாய் உணர்ந்தேன்.

சர் ஆஸ்டஸ் தனித்திருந்தார். அறையில் மேலும் கீழுமாய் நடந்துக் கொண்டிருந்தார். அவர் கண்களில் தெறித்தப் புது ஒளியும், அவரிடம் தெரிந்த இருப்புக் கொள்ளாமையும், என் கண்களிலிருந்து தப்ப வில்லை. எது குறித்தோ அவர் பரவசமடைந்திருந்தார். என்னிடமான அணுகுமுறையில் அவரிடம் குறிப்பிடத்தக்க மாற்றும் விளைந் திருந்தது.

''உன்னிடம் சொல்ல சேதி வெச்சிருக்கேன்'' என்றார். ''உன்னுடைய இளம் நண்பன், வந்துக்கிட்டிருக்கான். இங்கேயே கூட சில நிமிடங்கள்ல வந்துடுவான். இந்தக் கணத்துல நான் உனக்கு ஒண்ணு சொல்ல விரும்பறேன். நீ இன்னிக்குக் காலையில என்னை ஏமாற்றப் பார்த்திருக்கே. விஷயங்களை நீ என்னிடம் சொல்லும் போது, நீ உண்மையை மட்டுமே சார்ந்திருப்பது தான் நல்லதுனு உன்னை நான் எச்சரிக்கை கூட செஞ்சேன். கொஞ்ச தூரம் வரைக்கும் நீ இதைக் கடைப்பிடிச்சே, அப்புறம் நீ தடம் புரண்டுட்டே. ஹார்ரி ரேபர்ன் இருப்புல தான் வைரங்கள் இருக்குனு என்னை நம்ப வெக்க நீ முயற்சிகள் செஞ்சிருக்கே. அந்த சமயத்துல, அது, என் திட்டத்துக்கு சாதகமா இருந்தது. அதாவது, ஹார்ரியை உன் மூலமாக கடத்தி இங்கே கொண்டு வரும் என் திட்டத்துக்கு! அதனால நான் ஏத்துக்கிட்டேன். ஆனா, ஆனே, அந்த அத்தனை வைரங்களுமே என் கட்டுப்பாட்டுல தான் இருக்கு, தெரியுமா! நான் எப்போ ஃபால்ஸை விட்டுக் கிளம்பினேனோ, அப்போதிலிருந்து! இந்த சேதியே எனக்கு நேற்று தான் தெரிய வந்தது. ஆஹ்...!''

''ஓ, உங்களுக்குத் தெரிஞ்சு போச்சா?'' நான் மூச்சடைத்துப் போனேன்.

''இதைப் போட்டு என்கிட்டே உடைச்சதே பகெட் தான் அப்படினா - அது உனக்குப் பேராச்சரியமா இருக்கும். யெஸ். எவ்விதமான காரிய காரணமுமில்லாத ஒரு முடிவற்ற கதையைச் சொல்லி என் கழுத்தைஅறுப்பதுல குறியாயிருந்தான் பகெட் - ஏதோ பந்தயமாம்... ஃபிலிம் ரோலாம்... இப்படி! அதைக் கேட்டுக்கிட்டு இருக்கும் போதே சங்கதிகளைச் சேர்த்துப்போட்டு பார்க்க எனக்கு அதிக அவகாசம் ஆகலே - கலோனல் ரேஸ் மீதான மிஸஸ் ப்ளோரின் அவநம்பிக்கை, அவங்களுக்குள் விளைந்த படபடப்புகள், அவங்களுடையே பெட்டிகளை நான் பாதுகாக்க வேண்டும் என்று அவங்க மன்றாடிக் கேட்டுக் கொண்ட வேண்டுதல்கள்.அதீத ஆர்வத்தின் காரணமாக அப்பெட்டிகளை ஏற்கெனவே இந்த அற்புதப் பகெட் பய திறந்திருந்தான். ஓட்டலை விட்டுக் கிளம்பறதுக்கு முன்னாடி, அந்த அத்தனை ரோல்களையும் என் பாக்கெட்டுக்கு நான் மாத்திக்கிட்டேன். அதெல்லாம், அதோ, அந்த மூலையில கிடக்கு. அதுங்களை எடுத்துப் பார்க்க எனக்கு இன்னும் அவகாசம் அமையலே என்பது உண்மை தான். இருந்தாலும், அதுல ஒண்ணு மட்டும் மற்ற எல்லாத்தையும் விட முழுக்க வித்தியாசமான கனத்துல இருந்தது; ஒரு விதமா ஓசையெழுப்பிச்சு; உள்ளே ஏதோ சிக்கிக்கிட்ட மாதிரி திறப்பதுல சிக்கல் தந்தது; இதனால, எல்லாம் துல்லியமா விளங்கிடுது, இல்லே? இப்போ, கவனி. உங்க ரெண்டு பேரையும் வசமா இழுத்துக்கிட்டு வந்து என் பொறிக்குள்ளே தள்ளியிருக்கேன். திருமதி ஆஸ்டடஸ் பெட்லராக ஆகிவிடும் சந்தர்ப்பத்தை நீ பயன்படுத்திக் கொள்ளாதது ஒரு பரிதாபம்.''

நான் இதற்கு பதில் தரவில்லை. அவரைப் பார்த்தபடியே நின்றுக் கொண்டிருந்தேன்.

படிகளேறி வரும் ஓசைகள் நெருங்கின. கதவு அதிரடியாய் திறக்கப்பட்டது. இரண்டு ஆட்கள் சூழ்ந்து வர ஹாரி உள்ளே தள்ளப்பட்டான். மாபெரும் வெற்றிப் பார்வையை என்னை நோக்கி வீசினார் சர் ஆஸ்டடஸ். ''திட்டமிட்டபடி'' என்றார் சன்னமாய். ''உங்களைப் போன்ற அனுபவமில்லாதவங்க... பாவம், நீங்களே உங்களுக்குப் பின்னாடி குழி பறிச்சு விழுந்துடறீங்க, பார்த்தீங்களா?''

''இதுக்கெல்லாம் என்ன அர்த்தம்?'' உறுமலாய்க் கத்தினான் ஹாரி.

''நீயாவே பாவம் என் எல்லைக்குள்ளே வந்துட்டேனு ஈயைப் பார்த்துக் கொக்கரிச்சதாம் சிலந்தி - இது தான் அர்த்தம்'' - நகைத்தபடி

குறிப்பிட்டார் சர் ஆஸ்டஸ். ''என்னருமை ரேபர்ன்... நீ ஓர் அசாதாரண துரதிர்ஷ்டசாலி.''

''இங்கே வருவதுல ஆபத்து இல்லேனு சொல்லியிருந்தே, ஆனே.''

''அவ மேல கோபப்படாதே, கண்ணா. அந்தக் கடிதம் நான் எப்படி சொன்னேனோ அதே முறையில எழுதப்பட்டது. அதுல ஓர் அட்சரம் கூட அவ போட்டது கிடையாது. இப்படி ஆகும்னு தெரிஞ்சிருந்தா அவ அப்பவே எழுத மறுத்திருப்பா - ஆனா நான் மூச்சு காட்டலே. நீ அவ சொன்னபடி கேட்டிருக்கே... நேரா கலைப்பொருட்கள் கடைக்குப் போயிருக்கே... பின்னறையிலிருந்து ரகசிய வழியில் நீ கூட்டிட்டு வரப்பட்டிருக்கே... இப்போ, வசதியா, உன்னோட விரோதிகளின் கைகளில் நீ! ''

ஹார்ரி சட்டென திரும்பி என்னைப் பார்த்தான். அவனது அந்த நோட்டத்தை முழுவதுமாக புரிந்துக் கொண்ட நான் சர் ஆஸ்டஸின் பக்கமாய் நழுவினேன்.

''ஆமாமாம்'' என்று தொடர்ந்துக் கொண்டிருந்தார் எம்.பி. ''நிச்சயமா நீ ஓர் அசாதாரண துரதிர்ஷ்டசாலியே தான். மூன்றாவது முறை மாட்டியிருக்கே. ஆஹ்ஹா...''

''நீங்க சொல்றதும் சரி தான்'' என்றான் ஹார்ரி. ''இது மூன்றாவது பலப்பரீட்சை. ரெண்டு முறை என்னை நீங்க சின்னாபின்னமாக் கிட்டீங்க. ஆனா மூன்றாவது முறை அதிர்ஷ்டக் காற்று என் பக்கம் வீசக் கூடாதுனு ஏதாவது இருக்கா, என்ன? அவரை சுற்றி வளை, ஆனே.''

இதற்கு நான் தயாராய் இருந்தேன். மின்னலை விட துரித கதியில் என் காலுறையிலிருந்த துப்பாக்கியை உருவியிருந்த நான், அவரது தலைக்குக் குறி வைத்து அததனை நான் பிடித்திருந்தேன். ஹார்ரியைப் பிடித்திருந்த இரு ஆடவர்களும் முன்னுக்கு நகர்ந்தார்கள். ஆனால், அவனுடைய குரல் அவர்களைத் தடுத்து நிறுத்தியது.

''இன்னும் ஓர் அடி - அவர் உயிர் பறந்துடும்! மீறி ஒரே ஓர் அடி எடுத்து வெச்சாலும், ஆனே சுட்டுடு. தயங்கிடாதே.''

''எனக்கு பயமாயிருக்கு'' என்றேன் நான். ''சுட்டுப் பழக்கமில்லே, சுடாமலும் பழக்கமில்லே! அதனால எப்ப சுடுமோனு தெரியலே!''

இதைக் கேட்டதால் கையில் விழுந்த ஜெல்லி போல பயத்தில் அப்படி தத்தளித்துக் கொண்டிருந்தார் சர் ஆஸ்டஸ். ''அப்படியே நின்னுத் தொலைங்கடா'' என கத்தினார். இருவரும் மரியாதையாய் கட்டுப்பட்டு நின்றனர். அவர் நெற்றிப் பொட்டில் நான் பதிந்திருந்த துப்பாக்கியின் அழுத்தத்தை மட்டும் அதிகரித்தேன்.

''இவனுங்களை இந்த அறையை விட்டு வெளியே போகச் சொல்லுங்க'' - சொன்னது, ஹார்ரி.

இதையே கட்டளையாய்ப் பிறப்பித்தார் சர் ஆஸ்டஸ். இருவரும் வெளியேற, அவர்களுக்குப் பின்னால் கதவை சாற்றிய ஹார்ரி அதன் தாழ்ப்பாளை இழுத்து அடித்தான்.

''இப்போ நாம பேசலாம்'' என்று இறுக்கமாய் சொல்லியபடி முன் வந்த ஹார்ரி, அறையின் குறுக்காய் வந்து என் கையிலிருந்த துப்பாக்கியை வாங்கிக் கொண்டான்.

நெற்றி முழுக்க வழிந்திருந்த வியர்வையை நீண்ட பெருமூச்சோடு வழித்து விட்டுக் கொண்டார் சர் ஆஸ்டஸ். ''அதிர்ச்சியில என் நிலைமை இழந்து நிற்கிறேன், நான்'' என்றார் அவர். ''ஊஃப்.. என் இருதயத்துக்கு பலம் கம்மி போல! அப்பாடி... துப்பாக்கியைப் பயன் படுத்தத் தெரிந்த உன் கையில அது மாறி விட்டதுக்கு சந்தோஷம். ஆனே கையில் அது இருக்கிற வரைக்கும், ஓஹ்... தவிச்சுட்டேன்! நல்லது, என் இளையவனே! நீ சொன்னது மாதிரியே, இப்ப நாம பேசலாம். இப்ப நீ என்னை ஜெயிச்சிருக்கே. ஒத்துக்கிறேன். அந்த ரிவால்வர் டெவில் எங்கேயிருந்து வந்ததோ, எனக்குத் தெரியலே. இந்தப் பொண்ணு இங்கே வந்ததும் முதல் வேலையா அவளோட லக்கேஜ் முழுக்க நான் துளாவினேன். பரிசோதிச்சேன். இப்போ நீ வந்ததும் வராததுமா அதை எப்படி அவ கைக்கு மாற்றினே? மாயமா, மந்திரமா?''

''என்கிட்டேயே அது இருந்தது' என்றேன் நான். ''என்னோட காலுறையில. முதல்ல - என்னுடைய கைப்பையில.''

''பெண்கள் பற்றி இன்னும் நான் முழுசா அறிஞ்சு வைக்கலே. இன்னும் ஆழமா நான் அதுங்களைப் படிச்சிருக்கணும்!'' என்றார் சர் ஆஸ்டஸ், வருத்தமாய்! ''இங்கே பகெட் இருந்திருந்தா ஒரு வேளை முன்கூட்டியே கண்டுபிடிச்சிருப்பானோ?''

டேபிள் மீது கூர்மையாய் தாளமிட்டான் ஹார்ரி. ''முட்டாள் மாதிரி பேசிப் பசப்பாதீங்க. தலை நரைச்சு வழுக்கை விழுந்து வயசான கோலத்துல நீங்க இல்லேனா எப்பவோ உங்களை ஜன்னலுக்கு வெளியே தூக்கி எறிஞ்சிருப்பேன். எல்லாம்,வயசுக்குத் தரும் மரியாதை தான்'' என்றவன், திடீரென்று நினைவு வந்தவனாய், ''உனக்கெல்லாம் என்ன மரியாதை வேண்டிக்கிடக்கு?'' என்றான் வன்மமாய். ''கிழ நாயே, பொறுக்கி ராஸ்கல், உன்னை...''

*சொல்லிக் கொண்டு முட்டியை மடக்கிக் கொண்டு ஹார்ரி ஓரிரு அடிகள் வர, சர் ஆஸ்டஸ் சமயோஜிதமாய் டேபிளுக்குப் பின்னால் நகர்ந்துக் கொண்டார். ''சிறுசுங்க எப்பவுமே வெறித்தனமானதுங் கப்பா!'' என்றும் குறிப்பிட்டார். ''மூளையைப் பயன்படுத்துவதே கிடையாது. உடல் பலத்துல தான் நம்பிக்கை. மூளையைப் பயன் படுத்தி யோசி. இப்போ வேணும்னா நீ ஜெயிச்சவனா இருக்கலாம். ஆனா இந்நிலைமை முழுக்கவும் தொடராது. இந்த வீடு முழுக்க இருப்பவர்கள், என்னோட ஆட்கள். நீ ஒருத்தன் மட்டும் தான் வெளியாள் - பரிதாபம். உன்னோட கண நேர வெற்றி, ஒரு விபத்து.''*

*''அப்படியா?''*

*ஹார்ரியின் குரலில் வட்டமிட்ட ஏதோ ஒரு களிப்பு, சர் ஆஸ்டஸ் தற்சமயம் சொன்னதையே கேலியாக்கி, அவருடைய கவனத்தை ஈர்த்தது. ''முதல்ல உட்காருங்க, சர் ஆஸ்டஸ். நான் இப்ப சொல்லப் போவதை கவனியுங்க.'' இன்னும் துப்பாக்கியின் குறியை அகற்றாமல் தொடர்ந்தான்! ''இந்தத் தடவை அத்தனையும் உங்களுக்கு எதிரா இருக்கு. ஆரம்பமா - முதல்ல அந்த ஓசையைக் கேளுங்க.''*

*அது, கீழறையிலிருந்து மெலிதாய் இங்கு வரை வந்த, கதவு குத்தப்படும் ஓசை. அந்த ஓசையில் - கத்தல்கள் இருந்தன... கோஷ மிருந்தது... பிறகு சுடப்படும் ஓசையும்! சர் ஆஸ்டஸ் வெளிறிப் போனார்.*

*''என்னது அது?''*

*''ரேஸ் - மற்றும் அவரது ஆட்கள். சர் ஆஸ்டஸ்... எங்க ரெண்டு பேருக்கும் இடையே நடைபெறும் கடிதப் பரிமாற்றங்கள் பொய்க்கலப்பற்ற உண்மையானது தான் என்பதன் அத்தாட்சிக்கு, ஆனே என்னிடம் ஓர் ஏற்பாடு பண்ணியிருந்தா உங்களுக்கு இந்த விஷயம் தெரிஞ்சிருக்கு நியாயமில்லே, இல்லே?! தந்திகள் 'ஆண்டீ' என்ற பெயரால் அனுப்பப்படணும். அப்பத்தான் அது உண்மை! நீங்க அனுப்பின தந்தி ஒரு போலி என்பது ஆனேவுக்கு நல்லாவே தெரியும். அவளோட சொந்த மனோதைரியத்தின் உதவியால் தான் உங்களுடைய இக்கொடூர வட்டத்துக்குள் அவ நேரா வந்து நுழைஞ்சிருக்கா உங்களை, உங்கப் பொறியிலயே வெச்சு மடக்கிப் பிடிக்க! கிம்பர்லியை விட்டுக் கிளம்பறதுக்கு முன்னாடி எனக்கும் ரேஸுக்கும் தந்தி மூலம் தகவல் அனுப்பிட்டுத் தான் கிளம்பினா. அப்போதிலிருந்து எங்க கூட தொடர்பு வெச்சுக்கிட்டிருக்கும் இன்னொருவர் - மிஸஸ் ப்ளேர். நீங்க சொல்லச் சொல்ல எழுதப்பட்ட கடிதம் என் கைக்கு*

வந்தது - அதைத் தான், அதையே தான், ஜஸ்ட் நான் எதிர்பார்த்துக் காத்திருந்தது. அந்தக் கலைப்பொருட்கள் கடையிலிருந்து வெளியேறுவதற்கு ரகசிய வழி ஏதாவது இருந்தாக வேண்டும் என்பது பற்றி நான் ஏற்கெனவே மிஸ்டர் ரேஸுடன் சேர்ந்து பேசியிருந்தேன். அவர், அப்படி ஒரு வெளியேறும் வழி எங்கே இருக்கு என்பதைக் கண்டுபிடிச்சுட்டார்.''

அலறல்.... பிய்த்தெறியப்படும் கலவர ஓசை... அறையையே உலுக்கி விட்ட வெடியோசை... எல்லாம் வந்தன. பிரகாசமான ஒளி விண்ணில் விளைந்தது. வீட்டுக்கு எதிரேயிருந்த பகுதி நெருப்புக்குள்ளாகியிருந்தது. சர் ஆஸ்டஸ் எழுந்துக் கொண்டார். ''இந்தப் பகுதியை நாசப்படுத்த வந்துட்டானுங்க. நான் உடனடியா இங்கிருந்து கிளம்பியாகனும், ஆனே'' - சொன்ன சர் ஆஸ்டஸ், மேலும் கீழுமாய் வேகவேகமாய் நடந்தார். அவரை ரிவால்வர் குறியால் தொடர்ந்தபடியிருந்தான் ஹார்ரி.

''ஸோ.... சர் ஆஸ்டஸ்... இனி தப்பிக்க உங்களுக்கு எந்த வழியும் கிடையாது. உங்களுடைய ரகசிய இருப்பிடங்கள் மற்றும் ரகசியங்கள் போன்ற அனைத்தைப் பற்றியும், நீங்களே, உங்க வாயாலே, எங்க முன்னாடி விண்டு விண்டு வெச்சிட்டீங்க, ஆஹ்ஹா! ரேஸின் ஆட்கள் ரகசிய பாதையைக் காவல் காத்துக்கிட்டிருக்காங்க. நான் மட்டும் தனியா இங்கே வருவதற்காக நீங்க மேற்கொண்ட அத்தனை முன் ஜாக்கிரதை நடவடிக்கைகளையும் மீறி, என் பின்னாலேயே அவங்களும் இங்கே வெற்றிகரமா வந்தாச்சு.''

சர் ஆஸ்டஸ் இப்போது சட்டென்று திரும்பினார். ''அதி புத்திசாலித்தனம். படு சாமர்த்தியம். பாராட்டப்பட வேண்டிய நகர்த்தல்கள். இருந்த போதிலும் நான் ஒரு வார்த்தை இப்போ சொல்ல வேண்டியிருக்கு. நான் ஒரு வழியில தோற்றிருக்கேன்னா, நீங்க இன்னொரு வழியில தோற்றிருக்கீங்க. உங்களால் நதீனா கொலை வழக்கினை எனக்கு எதிரா கொண்டு வர முடியவே முடியாது. எனக்கு எதிரா உங்கக்கிட்டே இருக்கும் ஒரே ஒரு சாட்சி கொலை நிகழ்ந்த அந்த தினத்துல நான் மார்லோவில் இருந்தேன் என்பது மட்டும் தான். எனக்கு அந்தப் பொண்ணைத் தெரியும் எனும் செய்தி கூட ஒரு நாதிக்குத் தெரியாது. ஆனா, உனக்கு அவளைத் தெரியும் - அவளைக் கொன்று போட உன்னிடம் தீர்க்கமான இலக்கு இருக்கு. உன்னைப் பற்றிய கடந்த கால ரெக்கார்டுகளே போதும்! நீ ஒரு திருடன், ஞாபகமிருக்கட்டும், ஒரு திருடன். உனக்கு ஒரு விஷயம் இன்னும்

தெரியலே, பாவம். வைரங்கள் என்னிடம் இருக்கு. அவை, இதோ, இப்போ, இங்கே, வெளியே போகுது...'''

கணக்கிட முடியாத துரித வேகத்தில் விலகி நகர்ந்து, குதித்தோடி ஜன்னலோரம் போய், கையை உயரத் தூக்கி, எறிந்தார். கலீர் என ஜன்னல் கண்ணாடி உடையும் ஓசை - தொடர்ந்து, அந்த வைரக்குப்பி காற்றில் பறந்து எதிரே கொழுந்து விட்டு குப்குப்பென்று எரிந்துக் கொண்டிருந்த நெருப்புக் கூட்டத்துக்குள் விழுந்துக் கரைந்தது.

''அதோ போகிறது, கிம்பர்லி விவகாரத்தில் உன்னைக் குற்றமற்றவன் என நிரூபிக்க உனக்கிருந்த ஒரேயொரு சாட்சி! இருந்தாலும், நான் முழுசா இங்கிருந்து தப்பிச்சாக வேண்டும். அது குறித்து இப்போ நாம பேசலாம். வா, உனக்கு முன்னால ஒரு பேரத்தை வைக்கப் போறேன். நீ என்னைத் தப்பிப்பற்ற மூலையில திணிச்சு மடக்கிப் பிடிச்சுட்டே. அவருக்கு என்னவெல்லாம் தேவையோ அவையெல்லாம் ரேஸுக்கு இந்த வீட்டுல கிடைச்சுடும். இந்த நிலைமையில,யாரும் குறுக்கே விழுந்து தடுக்கா விட்டால், நான் தப்பிச்சுப் போக, ஒரே ஒரு வாய்ப்பு தென்படுது. அப்படித் தப்பிக்காம நான் இங்கேயே தங்கிட்டா - என் கதி அவ்ளோ தான், ஃபிரண்ட். ஆனா, அதே கதி தான் உனக்கும் மறந்துடாதே. ரேஸின் கைகளில் நான் சிக்கும் அதே நேரத்துல, அதுக்குக் காரணமான உன்னை என் ஆட்கள் சின்னாபின்னாமாக்காம விட மாட்டாங்க ஜாக்கிரதை. இப்போ - ரெண்டு பேருக்கும் தப்பிக்க நான் ஓர் உபாயம் சொல்கிறேன். கேளு. கவனி. இதுல எந்த பித்தலாட்டமும் கிடையாது. இங்கிருந்து நான் தப்பிக்க உடனடியா நீ எனக்கு வழி செஞ்சுக்கொடு. நான் கிளம்பிட றேன். போகும் போது, நான்தான் நதீனாவைக் கொன்றேன் எனும் வாக்கு மூலத்தை எழுத்து பூர்வமா எழுதி கையெழுத்திட்டு நான் தரேன்.''

''ஒத்துக்கோ ஹார்ரி'' அலறினேன் நான். ''ஒத்துக்கோ, ஒத்துக்கோ, ஒத்துக்கோ''

இறுகிய முகத்தோடு என் பக்கம் திரும்பினான் அவன். ''முடியாது, ஆனோ. .. ஓராயிரம் தரம் சொல்வேன்.''

''எனக்கு எல்லாம் புரியுது - புரியாம ஒண்ணுமில்லை. இந்த முடிவு - அனைத்துக்கும் தீர்வாகுது.''

''ஆனா மறுபடியும் எப்படி நான் ரேஸை முகத்துக்கு முகம் பார்ப்பேன்? என் விதியை நான் சந்திக்கத் தயார். ஆனா இந்தக் கிழ நரியைத் தப்பிக்க விட்டா, அது போன்ற துரோகம் வேற இருக்காது. அது தப்பு ஆனே. நான் பண்ண மாட்டேன்.''

சப்புக் கொட்டினார் ஆஸ்டஸ். அவரது முழு தோல்வியையும் எவ்வித உணர்ச்சிக் கொந்தளிப்புகளும் இன்றி இவ்விதமாய் ஏற்றுக் கொண்டார் அவர். ''நீதி தர்மம் போன்ற அனைத்தும் எப்பவும் உதவ வராது.''

முறிந்துவிழும் மரக்கதவின் ஓசை வந்தது. வளரும் இடியோசை யாய் மாடிப்படிகளில் காலடியோசைகள் கூடின. நாங்களிருந்த அறைக் கதவின் தாழ்ப்பாளை விலக்கித் திறந்தான் ஹார்ரி. முதலில் நுழைந்தவர் கலோனல் ரேஸ். எங்களைப் பார்த்ததும் அவருடைய கண்களில் ஒளி உண்டானது. ''உனக்கு ஒண்ணும் ஆகலியே, ஆனே?'' என்றார் அவர். ''உனக்கேதாவது ஆகியிருக்குமோனு .....'' சொல்லிய படி திரும்பி சர் ஆஸ்டஸைப் பார்த்தார் அவர். ''உங்களைக் குறி வெச்சு நான் ரொம்ப நாளா பின் தொடர்ந்துக்கிட்டேயிருந்தேன், சர் ஆஸ்டஸ். கடைசியில பிடிச்சுட்டேன்.''

''இங்கேயிருக்கும் எல்லாருக்கும் பைத்தியம் பிடிச்சிடுச்சோனு நினைக்கிறேன்'' - அறிவித்தார் சர் ஆஸ்டஸ்! ''என் நெஞ்சுக்குக் குறி வெச்சு துப்பாக்கி நீட்டி இந்த ரெண்டு சின்னப் பசங்களும் என்னை மிரட்டித் தள்ளறாங்க! கேட்கவே காது கூசும் விஷயங்களைச் சொல்லி என்னைக் குற்றஞ்சுமத்தறாங்க! இங்கே என்ன நடக்குதுனே எனக்குப் புரியலே?''

''புரியலே? இதுக்கெல்லாம் அர்த்தம் - நான், 'கலோனல்' என்பது யார்னு கண்டுபிடிச்சுட்டேன் என்பதாகும். கடந்த ஜனவரி 8 அன்று, நீங்க கெனாஸ் போகலே, மார்லோவில தான் இருந்தீங்க என்பதே இதன் அர்த்தம். உங்களுடைய திருகுவலியான நதீனா உங்களுக்கு எதிரா கொடி உயர்த்திய போது, நீங்க அவளைப் போட்டுத் தள்ளிட்டீங்கனு அர்த்தம். இந்த அத்தனை உண்மைகளையும் இப்போ நாங்க பொதுவாக்கிட்டோம் என்பது இறுதியான அர்த்தம்.''

''அப்படியா? அப்படினா, இத்தனை விறுவிறுப்பான அனைத்துத் தகவல்களையும் நீங்க யாரிடமிருந்து எடுத்தீங்க? இப்போது கூட போலீஸாரால் தீவிரமாகத் தேடப்பட்டு வரும் ஆள் மூலமாகவா?''

''எங்ககிட்டே இன்னபிற சாட்சியங்களும் இருக்கு, மிஸ்டர் பெட்லர். மில் ஹவுஸ்ல உங்களை நதீனா வந்து சந்திக்கப் போகும் விஷயம் மற்றொரு நபருக்கும் தெரிஞ்சிருக்கு.''

இத்தனை நேரம் கம்பு கழற்றிக் கொண்டிருந்த சர் ஆஸ்டஸ் இதற்கு ஆச்சரியமானார். தன் குறிப்புக்கு பதில் தரலாம் என்பது போல கை வீசி சைகை தந்தார் ரேஸ். உடனே மிங்க்ஸ் என்கிற ரெவ. எட்வர்ட்

என்கிற மிஸ் பெட்டி-க்ரூ முன் வந்தார். வெளிறிப் போய் நடுநடுங்கிக் கொண்டிருந்தாலும், குழப்பாமல் கஷ்டமாய் பேசினார்.

''இங்கிலாந்துக்குக் கிளம்பின தினத்தின் முன்னிரவன்று நான் நதீனாவை பாரீஸில் சந்தித்தேன். ரஷ்யாவைச் சேர்ந்த கவுண்ட் என்பவனாய் அங்கு நான் போயிருந்தேன். அவளுடைய முழு நோக்கத்தையும் என்னிடம் சொன்னாள். எச்சரித்தேன். எப்படிப்பட்ட ஒரு மனிதனை எதிர்கொள்ள வேண்டியிருக்கும் என்று நான் கடுமையாய் எச்சரித்தேன். ஆனால் அவள் என் அறிவுரையை ஏற்பதாயில்லை. அங்கு டேபிளில் ஒரு தந்திச் சேதியிருந்தது. அதை நான் படித்தேன். பிறகு அந்த வைரங்களைத் தேடி நானே ஏன் முயற்சிக்கக் கூடாது என இறங்கினேன். ஜோஹென்னஸ்பெர்க்கில் என்னை ஹார்ரி சந்தித்தார். அவர் பக்கத்து நியாயத்தோடு என்னைச் சேர்ந்துக் கொள்ளுமாறு கெஞ்சினார்.''

இப்போது சர் ஆஸ்டஸ் மிங்க்ஸைக் கூர்ந்து பார்த்தார். வேறெதுவும் அவர் பேசவில்லை. ஆனால், நாடி நரம்புகள் திருகி தவித்துப் போனார் மிங்க்ஸ்.

அமைதி உண்டானது. அப்போது, ''எனக்கும் உங்ககிட்டே சொல்ல ஒரு விஷயமிருக்கு. சர், ஆஸ்டஸ்'' என்றேன் நான். ''நீங்க இப்போ ஜன்னல் வழியா தூக்கி வெளியே எறிஞ்ச குப்பியில, வைரங்கள் கிடையாது. அதிலிருந்தவை வெறும், கண்ணாடித் துகள்கள். வைரங்கள் -மிகவும் பாதுகாப்பான இடத்துல இருக்கு. அவை அந்த நெட்டையான ஒட்டைச் சிவிங்கியின் வயித்துல இருக்கு. அதன் வயிறை ஸூஸேனி காலி செஞ்சார். அசைந்து அசைந்து ஓசையெழுப்பாம இருக்க, ஒரு பஞ்சுப் பொதிக்குள்ளே வைரங்களைப் பதுக்கினார். அப்படியே அந்த மூட்டையை இதன் வயித்துல வெச்சு மறைச்சுத் தைத்தார்.''

என்னைச் சிறிது நேரம் கவனித்துக் கொண்டேயிருந்தார் சர் ஆஸ்டஸ், பிறகு அவர் சொன்ன வார்த்தைகள் சிறப்பானவை:

*''அந்த மினுமினுப்பான ஒட்டைச் சிவிங்கியைப் பார்த்தாலே அதனாலா தான் எனக்கு வெறுப்பாகவே இருந்திருக்கு. எல்லாம் என் உள்ளுணர்வு தான்.''*

# அத்தியாயம் - 34

அன்றைய இரவே எங்களால் ஜோஹென்னஸ்பெர்க் திரும்ப முடியாமல் ஆயிற்று. புரட்சிக்காரர்கள், நகரின் பல பகுதிகளைப் புதிதாய் கையகப்படுத்தி விட்டதால், வெடியும் கலகமும் உச்சத்திலிருந்தன. அனைத்துப் பகுதிகளும் எல்லாவிதப் போக்குவரத்துக்களிலிருந்தும் துண்டிக்கப்பட்டிருந்தன.

நாங்கள் தங்க வைக்கப்பட்டிருந்த முகாம், ஜோஹென்னஸ் பெர்க்'கிலிருந்து கிட்டத்தட்ட 20 மைல்கள் தள்ளியிருந்தது. நான் தளர்ந்து மயங்கும் நிலையிலிருந்தேன். இரு தினங்களாக தான் அனுபவித்தக் கிளர்ச்சியும் ஆவேசமும் என்னை அடிப்பட்ட எலியாய் ஆக்கிப் போட்டிருந்தன.

நாங்கள் பட்டு வந்து அனைத்து அவதிகளும் ஒரு சேர முடிந்துவிட்டன என்ற நிதர்சனத்தை, சந்தோஷமாக திருப்பித் திருப்பி சொல்லிக் கொண்டிருந்தேன். என்னாலேயே நம்ப முடியாமல், நானும் ஹார்ரியும் இனி எந்த சக்தியாலும் பிரிக்க முடியாதபடி ஒன்று சேர்ந்திருந்தோம். இருந்தாலும், இருவருக்கும் இடையே ஒரு தடுப்புச் சுவர் உருவாகியிருப்பதை என் உள்ளுணர்வால் உணர முடிந்தது. அவன் பக்கத்தில் நிலைகொண்டிருந்த ஒரு விளக்கயியலா கட்டுப்பாடு என்னிடம் மனமொப்பிப் பழகயியலாதபடி அவனுள் நிச்சய மாகியிருந்த ஒரு தடுமாற்றம் - அது என்னவென்று நான் கண்டுபிடிக்க இயலா வண்ணம் அவனை ஆக்கரமித்திருந்த ஒரு தயக்கம் - என்னது அது?

சர் ஆஸ்டஸ், இறுக்கமான காவலோடு, எங்களிடமிருந்து அகற்றப்பட்டிருந்தார். கிளம்பும் போது மிக குதூகலமாக எங்களை நோக்கிக் கையசைத்தார் அவர்.

நாங்கள் தங்கியிருந்த கூடாரத்திலிருந்து மறு நாள் விடிகாலை யிலேயே வெளியே வந்து நின்றுக் கொண்டிருந்த நான், எதிரே விரிந்துக் கிடந்த பொட்டல் பயக்காட்டினூடே ஜோஹென்னஸ்பெர்க் நோக்கிப்

பார்த்துக் கொண்டிருந்தேன். கீழ்வானத்துக் காலை சூர்யோதய வெளிச்சம் நெடுகிலும், வெடி வெளிச்சங்கள், பட்டாசாய் வெடித்துச் சிதறியபடியிருந்தன. அமுங்கிய ஓசையாய் நெடு தூரத்திலிருந்து வந்துக் கொண்டிருந்த குண்டோசைகள், சண்டை நீடித்துக் கொண்டிருப்பதை அறிவித்தன. புரட்சி இன்னமும் முடிந்தபாடாயில்லை.

முகாமைப் பாதுகாக்கும் பெண்மணி வெளியே வந்து என்னைக் காலைச் சிற்றுண்டிக்காக அழைத்தாள். கனிவு நிறைந்து தாய்மை பொங்க தோன்றிய அவளிடம் நான் ஏற்கெனவே என்னை இழந்திருந்தேன். கதிரவன் உதிக்கும் முன்னரே வெளியேறி எங்கோ போயிருந்த ஹார்ரி இன்னும் திரும்பவில்லை. இதை அந்தப் பெண்மணி தான் சொன்னாள். அவன் பற்றி என்னுள்ளிருந்த இருப்புக் கொள்ளாமை மறுபடியும் என்னைக் கடந்து போனது. எங்களிரு வருக்கும் இடையே இது என்ன நிழல்? இது பற்றியே என் உள்ளுணர்வு ஏன் கதறிக் கொண்டிருக்கின்றது?

சிற்றுண்டி முடிந்தது. கையில் ஒரு புத்தகத்துடன் நான் உட்கார்ந்திருந்தேன் - அதைப் படிக்காமல். அருகில் கலோனல் ரேஸ் வந்து நின்று அவர் பயணித்து வந்த குதிரையிலிருந்து இறங்கும் வரை, இவை எதையும் கவனிக்காமல் என் சிந்தனைகளிலேயே என்னை நான் இழந்து உட்கார்ந்திருந்தேன். ''குட் மார்னிங், ஆனே'' என்று அவர் சொன்னதும் தான் அவரது இருப்பையே நான் உணர்ந்தெழுந்தேன்.

''ஓ...'' என்றேன் நான். கவனிக்காமல் இருந்துவிட்டதை உணர்த்தி ''நீங்களா?''

''ஆமாம். உட்காரலாமா?''

எனக்கருகில் வருமாறு ஒரு நாற்காலியை இழுத்துப் போட்டுக் கொண்டார். அன்று Metapoos நோக்கி நிகழ்ந்த பிராயணத்திற்கு பிறகு நாங்களிருவரும் தனித்து இணைவது இப்போது தான். வழக்கம்போல, கலோனல் ரேஸ் என் மேல் செலுத்தும் ஆச்சரியமும் பயமுமான கலவையை, இப்போதும் நான் உணர தவறவில்லை.

''என்ன விஷயம்?'' - கேட்டேன் நான்.

''ஸ்மட்ஸ், நாளைக்கு ஜோஹென்னஸ்பெர்க்' கிலிருப்பார்.''

இதைக் கேட்ட நான், ''ஜெனரல் ஸ்மட்ஸ்''என முணுமுணுத்துக் கொண்டேன். தூஊஊஊரத்தில் எங்கோ கேட்ட பெரும் வெடியோசையில் உதறியபடி சொன்னேன். ''புரட்சி, சண்டை, கலவரம்... இப்படி வெறிப்பிடித்து அலைபவர்களை மட்டும் தான்

கொல்லணும் என்பது, போரின் தலையாய் சட்டமா இருக்க வேண்டும். உலகத்தின் இனிமைகளில் திளைத்து வாழ வேண்டும் என்று நினைக்கும் அப்பாவிகளையெல்லாம் கண் மூடித்தனமா போட்டுத் தள்ளவே கூடாது.''

ஒப்புதலாய் தலையசைத்த கலோனல் ரேஸ், ''புரியுது, ஆனே. ஆனா, இது தான் போரின் அசிங்கமான முகம். போகட்டும். உனக்கு இது தவிர இன்னொரு சேதியும் வெச்சிருக்கேன்'' என்றார்.

'' என்னது அது?''

''என்னுடைய திறமையற்ற நிர்வாகத்தைப் பட்டவர்த்தனமாக ஒப்புக் கொள்வது! பெட்லர், எப்படியோ தப்பித்து ஓடி விட்டார்.''

''என்ன?''

''ஆமாம், ஆனே. எப்படித்தான் கண்ணுல மிளகாய்ப்பொடி தூவினார்னு எங்க ஒருத்தருக்கும் புரியலே. சர்வ ஜாக்கிரதையா அவரை ராத்திரி அடைச்சு வெச்சிருந்தோம். மிலிட்டரி தன் வசம் கைப்பற்றியிருந்த பகுதியில், ஓர் அடுக்குமாடிக் கட்டிடத்தின் மேல் மாடியில் தப்பிக்கவே முடியாத வண்ணம் அவரை சிறை வெச்சிருந்தோம். இன்னிக்குக் காலையில அந்த அறை காலியாகியிருக்கு.. பறவை பறந்துடுச்சு.''

இவ்விஷயத்தில் நான் ரகசியமாய் சந்தோஷமடைந்தேன். இன்று வரை, இந்நொடி வரை, சர் ஆஸ்டஸ் பெட்லர் மீது எனக்கிருந்த அளவிட முடியாத ப்ரீதியிலிருந்து என்னால் விடுபடவே முடிய வில்லை. ஒரு குற்றவாளியின் மீது, தேசத்துரோகியின் மீது இத்தனை நல்லபிப்ராயம் கூடாது என்பது எனக்கே தெரிந்தாலும், அவர் மீதான அன்பினை என்னால் துளியும் குறைந்துக் கொள்ள முடியவில்லை என்பதே நிஜம். நான் அவரை பிரமிக்கிறேன். அவர் ஒரு மாபெரும் வில்லன் தான். இல்லையென்று சொல்லவில்லை. ஆனால் அவர் ஒரு மனோஹரமானவர். அவரைப் போல நகைச்சுவையுணர்வு மிகுந்து என்னைக் கைது செய்த வேறொருவரை நான் கண்டதே கிடையாது.

இப்படி உருவான உணர்வுகளனைத்தையும் மறைத்துக் கொண்டேன். வெளிக்காட்டி விட்டால் இதையெல்லாம் புரிந்துக் கொள்ள முடியாமல் கலோனல் ரேஸ் வேறு ஏதாவது அர்த்தப்படுத்திக் கொள்ளலாம். சட்டத்தின் முன்னால் கொண்டு போய் சர் ஆஸ்டஸை நிறுத்த வேண்டும் என்றிருந்தவர் அவர். இது தெரிந்திருந்த சர் ஆஸ்டஸ், அவருக்கிருக்கும் அபரிமிதமான 'முன்னனுபவத்தின்' வாயிலாக தப்பி

விட்டதில் ஆச்சரியமே கிடையாது. ஜோஹென்னஸ்பெர்க்கினைச் சுற்றிலும் எம்.பி'யின் உளவாளிகளும் ஒற்றர்களும் இருந்திருக்க வேண்டும். அவரை எப்படியாவது பிடித்து விடலாம் என்று கலோனல் ரேஸ் கூட்டத்திற்கு ஓர் எண்ணமிருந்தாலும் அது நிச்சயமாய் இனி சாத்தியமில்லை என்பது எனக்குத் தெரியும்.

பிறகு, சட்டென ஹாரி எங்கே என்று கேட்டார் கலோனல் ரேஸ். சூரியோதயத்திற்கு முன்னாலேயே அவன் எழுந்து எங்கோ போய் விட்டான் என்று சொன்ன நான், காலையிலிருந்தே அவனைப் பார்க்கவுமில்லை என்பதையும் குறிப்பிட்டேன்.

''சட்ட ரீதியான சில முறைகள் பாக்கியிருக்கின்றன. இருந்தாலும், அவனைச் சுற்றியிருந்த உயிர்க் குடிக்கும் சிக்கலிலிருந்து அவன் முழுக்க தப்பிச்சுட்டான் என்பது உனக்குப் புரிஞ்சிருக்கும்னு நினைக்கிறேன். சர் ஆஸ்டஸின் குற்றம் சந்தேகத்துக்கு அப்பாற்பட்டு நிரூபண மாயிடுச்சு. உங்க ரெண்டு பேரையும் இனி வேற யாரும் பிரிச்சு வைக்க முடியாது.''

கடைசி வாக்கியத்தை என்னை நேரடியாய் பார்க்காமல், தணிந்த, சன்னமாய் நடுங்கும் குரலில் சொன்னார் அவர்.

''எனக்கும் அதுபுரியுது'' - நன்றி தொனிக்கும் குரலில் சொன்னேன் நான்.

''அதனால, ஏன் உடனடியா அவன், அவனோட நிஜப் பெயரை மறுபடியும் நிலைப்படுத்திக்கக் கூடாது?''

''அதுக்குத் தேவையில்லை.''

''தேவையிருக்கு - அவனோட நிஜப்பெயர் என்னனு உனக்குத் தெரியுமில்லே?''

இக்கேள்வி என்னை ஆச்சரியப்படுத்தியது. ''எனக்குத் தெரியாமலா? ஹாரி லூகாஸ்.''

இதற்கு அவர் பதிலேதும் தரவில்லை. அவரது அமைதியில் நிலைகொண்டிருந்த வித்தியாசமான நிலைப்பாடு என்னை அறைந்தது.

''ஞாபகமிருக்கா ஆனே? நாம ரெண்டு பேரும் Matapoos-லிருந்து திரும்பிக் கொண்டிருந்தோம். அப்போ, என்ன பண்ணணும்னு எனக்கு நல்லாவே தெரியும்னு நான் சொன்னேன்.''

''ம்... மறக்கலே.''

''அதை நான் முடிச்சுட்டேன்னு இப்போ சொல்லலாம். நீ காதலிக்கும் ஆண் மகன் சந்தேகங்களுக்கு அப்பாற்பட்டவன்னு நிரூபணமாயிடுச்சு.''

''இதைத் தான் அன்னிக்கு நீங்க மனசுல வெச்சுக்கிட்டு சொன்னீங்களா?''

''பின்னே?''

அடித்தளமில்லாத பயத்தால் இவரை நான் அப்போது சந்தேகப்பட்டதை எண்ணி என் தலையை தொங்கப் போட்டுக் கொண்டேன். சிந்தனை மிகுந்த குரலில் அவர் தொடர்ந்துப் பேசலானார்:

''நான் விடலைப் பருவத்துல இருந்த போது ஒரு பொண்ணு மேல உயிராயிருந்தேன். தீவிரக் காதல். ஆனா அவ என்னை ஏமாத்திட்டா. அதுக்குப் பிறகு என் தொழிலையே நான் என்னோட உலகமா ஆக்கிக்கிட்டேன். என் தொழில்தான் என் வாழ்க்கை இருப்பதற்கான ஆதார அர்த்தமா ஆச்சு. அப்புறம் தான் உன்னை நான் சந்தித்தேன் ஆனே - அதுவரை நான் எது என் வாழ்க்கைனு நினைச்சிருந்தேனோ அந்த அத்தனையையும் அர்த்தமில்லாதவைகளா ஆயின உனக்கு முன்னால. ஆனா இளமை போஷிப்பது இளமையைத் தானே... மறுபடியும் தொழிலே என்னை இழுத்துக் கொண்டது.''

நான் அமைதியாயிருந்தேன். ஒருத்தியால் இருவரை ஒரே சமயத்தில் காதல் கொள்ள முடியாது. அப்படிப்பட்ட நினைவு வேண்டுமானால் சாத்தியமாயிருக்கலாம். இந்த மனிதனிடமிருந்து வெளியாகும் காந்தக் கதிர் வீச்சு அலாதியானது. திடுமென நிமிர்ந்து நான் அவரைப் பார்த்தேன். பேசினேன்.

''நீங்க ரொம்ப தூரம் கடந்து போயிடுவீங்கனு நினைக்கிறேன்'' - கனவாய் சொன்னேன். ''உங்களுக்கு முன்னால மிகப் பெரிய பொறுப்பு காத்திருக்குனு நினைக்கிறேன் - தொழில்ரீதியா. அப்போ, உலகில் மாபெரும் வித்தகர்களில் ஒருத்தாரா நீங்க இருப்பீங்க.''

அருள்வாக்கு சொல்லும் தொனியில் நான் பேசியதை உணர்ந்தேன்.

''அப்பவும் - நான் தனிமையிலேயே தானிருப்பேன்.''

''மாபெரும் உலக சாதனையாளர்கள் எல்லாருமே அப்படித்தான் ஆயிடறாங்க.''

''அப்படியா சொல்றே?''

''நிச்சயமா.''

என் கையை எடுத்துக் கொண்ட அவர் தணிந்த குரலில் சொன்னார்: ''கிளம்பறேன்''.

அப்போது, ஹார்ரி, வீட்டின் இடப்பக்கத்து வளைவில் வந்து நின்றான். கலோனல் ரேஸ் எழுந்துக் கொண்டார்.

''குட் மார்னிங், லூகாஸ்'' என்றார் அவர்.

இதைக் கேட்டதும், ஏதோ காரணத்துக்காக, மயிர்க்கால்களின் அடி வரை உலுக்கப்பட்டான் அவன்.

''ஆமாம்'' என்ற அவர், ''இனி நீங்க உன்னோட நிஜப் பெயராலத் தான் அறியப்படணும்'' என முடித்தார்.

ஹார்ரியின் உலுக்கல் இன்னும் தீவிரமாக, பயக்கலவரத்தோடு அவரையே முறைத்துக் கொண்டிருந்தான் அவன். சில நிமிடங் களுக்குப் பிறகு ''அப்போ, உங்களுக்குத் தெரியுமா, ஸார்?'' என கேட்டான்.

''நான் பார்க்கும் முகங்களை, நான் மறுப்பதே கிடையாது. ரகசியத் துறையில் நானடைந்துள்ள வெற்றிக்கான முக்கிய காரணமிது. உன்னை நான் நீ சிறுவனாயிருக்கும் போது பார்த்திருக்கிறேன்.''

ஒருவர் மாற்றி மற்றவரைப் பார்த்துக் கொண்டு, ''இதெல்லாம் என்ன?'' என்று கேட்டேன் நான். விளங்கா புதிரை எதிர்கொண்டதைப் போலிருந்தேன். சொத்துப் பிரிப்பதில் உருவாகும் முரண்பாட்டில் சிக்கிக் கொண்டவர்கள் போலிருந்தனர் இருவரும். வென்றது, ரேஸ். தலையைத் தொங்கப் போட்டுக் கொண்டு வியர்த்து விறுவிறுத்துப் போனது, ஹார்ரி லூகாஸ்.

''நீங்க ஜெயிச்சுட்டீங்க. ஸார். உங்க ஊகம் சரி தான். என் நிஜப்பெயரை நீங்களே அவ கிட்டே சொல்லிடுங்க.''

''ஆனே, இது ஹார்ரி லூகாஸ் கிடையாது. ஹார்ரி லூகாஸ் போரில் கொல்லப்பட்டு விட்டான். இது - *ஜான் ஹெரால்டு எட்ஸ்லே.''*

❦

# அத்தியாயம் - 35

இவ்வார்த்தைகளை இறுதி வார்த்தைகளாய் அமைத்துக் கொண்டு, எங்களை விட்டுத் திரும்பி நடக்க ஆரம்பித்து மறைந்தார் கலோனல் ரேஸ். விலகிக் போய்க் கொண்டிருந்த அவரது முதுகினை முறைத்தபடியே நின்றுக் கொண்டிருந்தேன் நான். ஒலிந்த ஹார்ரியின் குரல் தான் பூமிக்கு என்னை மறுபடியும் மீட்டுக் கொண்டு வந்தது.

''ஆனே, என்னை மன்னிச்சுடுங்க. மன்னிச்சேன்னு சொல்லுங்க.''

என் ஒரு கையை வெடுக்கென்று இழுத்து அவன் உள்ளங் கைகளுக்குள் புகுத்திக் கொள்ள, அதை நான் இயந்திரந்தனமாய் அவிழ்த்தெடுத்தேன். ''மரியாதையெல்லாம் போதும். ஒருமை யிலேயே என்னைக் கூப்பிடு'' என கடுகடுப்பாய்ச் சொன்ன நான் கேட்டேன்: ''என்னை எதுக்காக நீ இப்படி ஏமாத்தினே?''

''உனக்குப் புரிய வைக்க முடியும்னு எனக்குத் தோணலே. அந்தக் கண்றாவிக் குப்பையை நினைச்சு நான் அத்தனை பயந்தேன் அளப்பற்கரிய பணம், அளவிட முடியா சொத்து, இதெல்லாம்! நீ என்னைப் பற்றி மட்டுமே நினைச்சு... எனக்கே எனக்குனு மட்டுமே வாழணும்னு விரும்பினேன், ஆனே. நீ முதல்ல என்னைப் பார்க்கும் போது எப்படி இருந்தேனோ, அப்படியே ஒரு காசு இல்லாம, நகை ஆடம்பரம் பகட்டு இதுக்கெல்லாம் சொந்தக்காரனா இல்லாம... என்னை ஒரு சராசரியான ஆளா நீ பாவிச்சு ஏத்துக்கணும்னு நினைச்சேன்.''

''ஆக, நீ என்னை நம்பலே, இல்லே?''

''அப்படித்தான் சொல்லணும்னு நீ நினைச்சா அதுல எனக்கு ஆட்சேபணையில்ல. ஆனா அது தான் முழு உண்மையும் கிடையாது. யெஸ்... உனக்குப் புரிய வைக்க முடியும்னு எனக்குத் தோணலே... அதனால நான் உன்னை நம்பலேனு வேணும்னா சொல்லலாம். அவ்ளோ தான். நீ இத்தனை நாளா என்னை எப்படி ஆர்வமாவும் ஆழமாவும் கவனிச்சுக்கிட்டியோ, அது, என்னை விட்டுப் போக நான் விரும்பலே. நான் பணக்காரன் எனும் பட்சத்துல - அது நிச்சயம் நழுவிடும்.''

''அப்படியா'' என்றேன் நான் மெதுவாய். இவன் என்னிடம் சொல்லியிருந்த கதையை நான் இப்போது என் மூளையில் ஓட்டிப் பார்த்தேன். நான் கவனிக்காமல் விட்டிருந்த சில முரண்பாடுகளை இப்போது முதல் முறையாய் என்னால் கவனிக்க முடிந்தது. பணம் மீதான தன்னம்பிக்கை... நதீனா வசமிருந்த வைரங்களை-எவ்வித சிந்திப்பும் இன்றி உடனடியாய் வாங்கிவிட காணப்பட்ட பணபலம்... ஒரு விமர்சகனாய் வெளியே நின்றுக் கொண்டு சம்பந்தப்பட்ட இரு இளைஞர்களைப் பற்றியும் பேச விழைந்த அவசரம்! ''என் நண்பன்'' என்ற போதெல்லாம் இவன் உணர்ந்தியிருப்பது எட்ஸ்லேவை அல்ல. ஆனால் குறிப்பிட்டிருப்பது லூகாஸை. நதீனாவை வேர் வரை விரும்பியிருப்பது லூகாஸ். அந்த சாந்தமான இளைஞன்; இவனல்ல.

''இந்தக் கூத்தெல்லாம் எதனால?'' - கேட்டேன் நான்.

''நாங்க ரெண்டு பேருமே முடிவாயிருந்தோம் - கொல்லப்பட. ஒரு நாள் நாங்க எங்களோட அடையாள அட்டைகளை மாற்றிக்கிட்டோம். இது நடந்த மறுநாள் லூகாஸ் கொல்லப்பட்டான் தூள் தூளாக சிதறும்படி.''

நடுநடுங்கிப் போனேன் நான். ''விடு விடு'' என்று காதுகளைப் பொத்திக் கொண்டேன். ''ஆனா இவையத்தனையையும், நீ ஏன் இன்னிக்கு எனக்கு சொல்லியிருக்கக்கூடாது? இன்னிக்குக் காலையில? இத்தனை அனுபவத்துக்குப் பிறகும் உன் மேல் எனக்கிருக்கும் அன்பை நீ சந்தேகப்படுதல் ஆகாது, இல்லையா?''

''ஆனே, இப்போ கிடைத்திருக்கும் அற்புத வாழ்க்கையைப் பாழாக்க எனக்குத் துணிச்சல் கிடையாது: உன்னை நான் தீவுக்குத் தூக்கிக்கிட்டுப் போயிடறதா இருந்தேன். பணத்தால ஆகப் போவது என்ன? அதனால், சந்தோஷத்தை வாங்க முடியாது. நாம தீவுல சந்தோஷமாயிருந்தோம் - பணமில்லாம. கவனிச்சுக்கோ ஆனே... அது மாதிரியான ஆடம்பர வாழ்க்கையை நான் கிலி பிடிச்சு வெறுக்கிறேன். ஆமாம். என் வாழ்க்கையை அடி வரை ஒரு முறை அழுக வெச்சதே அது தான்.''

'' நீ உண்மையில் யார் என்பது சர் ஆஸ்டஸுக்குத் தெரியுமா?''

''ஓ, யெஸ்.''

''கார்ட்டனுக்கு?''

''தெரியாது. எங்க, ரெண்டு பேரையும் நதீனாவோட வெச்சு ஒரு நாள் ராத்திரி அவர் பார்த்தார். ஆனா நாங்க ரெண்டு பேர் யார் யார்னு

குறிப்பிட்டு அவருக்குத் தெரியாது. நான் லூகாஸ் என்று நான் சொன்னதை அவர் அப்படியே ஏற்றுக் கிட்டார். மேலும் அவர் அனுப்பின தந்தியாலே நதீனா ஏமாற்றப்பட்டாள். அவளுக்கு லூகாஸ் பற்றி என்றுமே பயம் கிடையாது. அவன் சாந்தமானவன் ஆழமானவன். ஆனால் எனக்கு எப்பவுமே முன் கோபமும் குரோதமும் துடிதுடிப்பும் உண்டு. 'நான் கொல்லப்படாம மறுபடியும் உயிரோட வந்துட்டேன்'னா, அவ்ளோ தான் எனும் பயம் அவளுக்கு எப்போதுமே அடி மனசுல இருந்தது.''

''ஹார்ரி... ஒரு வேளை கலோனல் ரேஸ் என்னிடம் உண்மையைச் சொல்லலேனா, நீ என்னப் பண்றதாயிருந்தே?''

''எதுவும் சொல்லியிருக்க மாட்டேன். லூகாஸாவே இருந்திருப்பேன்.''

''உன் தகப்பானாருடைய மில்லியன், மில்லியன்கள்?'

''ரேஸ் தான் இருக்காரே. நான் எந்தக் காலத்திலும் உருப்படியா உபயோகிக்க முடியாத அளவுக்கு, அந்த சொத்தை அவர் நிச்சயமா நல்லபடியா உபயோகிக்கக் காட்டுவார். ஆனே, எதைப் போட்டு நீ இன்னும் குழப்பிக்கிட்டிருக்கே? நீ ரொம்ப வெறுப்பா தெரியறே.''

''இந்த ரகசியத்தைப் போட்டு உடைக்கும்படி உன்னை அந்தக் கலோனல் ரேஸ் தூண்டியிருக்காம இருந்திருக்கலாமே'னு நினைக்கிறேன்'' என்று மெதுவாய், சிந்தனையாய் சொன்னேன். ''குழம்புது''.

''குழப்பம் கிடையாது. உன்னை நேசித்த ஆன்மா மாறலே. ஆள் மாறலே. பேர் தான் மாறியிருக்கு. ஆக, அவர் செய்தது சரி தான். பொய்மையே இல்லாம நான் உன்கிட்டே வரேன். இல்லையா?''

இப்படிச் சொல்லிவிட்டு நிறுத்திக் கொண்டான் அவன். பிறகு திடீரென்று பேசுபவனாய் சொன்னான்: ''எனக்கு ரேஸ் மேல பொறாமையுண்டு, தெரியுமா ஆனே. அவரும் உன்னை விரும்பறார். அவர் அளவுக்கு என்னால என்றுமே உயர முடியாத - அவரும் உன்னை விரும்பறார்.''

நான் இவன் பக்கமாய் சிரித்தபடி திரும்பினேன். ''ஹார்ரி முட்டாளே. எனக்குத் தேவை நீ. நான் பொருட்படுத்துவது உன்னை மட்டும் தான்.''

எத்தனை சீக்கிரம் முடியுமோ அத்தனை சீக்கிரமாய் நாங்களிரு வரும் கேப் டவுனுக்குப் புறப்பட்டோம். அங்கே ஸூஸேனி

எனக்காகக் காத்திருக்க இருவருமாய் சேர்ந்து ஒட்டைச் சிவிங்கியின் வயிற்றினைத் திறந்தோம். புரட்சி வெடிப்பெல்லாம் முடிந்த பிறகு கலோனல் ரேஸ் கேப் டவுன் வரை வந்தார். அவரது ஆலோசனையின் பேரில் 'மூஸின் பெர்க்' கிலிருந்த சர் லாரன்ஸ் எட்ஸேலேவுக்குச் சொந்தமான பெரிய வீடானது மீண்டும் திறக்கப்பட்டது.

நாங்களெல்லோரும் அதில் குடியேறினோம்.

அங்கு மேற்கொண்டு, தீர்க்கப்பட வேண்டிய திட்டங்களைப் போட்டோம். நான் ஸூஸேஸியுடன் சேர்ந்து இங்கிலாந்து திரும்புவது... அவருடைய லண்டன் வீட்டிலிருந்தபடியே மணமுடித்துக் கொள்வது... மணப்பெண்ணுக்கான ஆடை அணிகலன்கள் பாரீஸில் வாங்கப்பட வேண்டும். இதையெல்லாம் அட்டவணைப் போட்டு திட்டமிடுவதில் அதீதமாக மகிழ்ந்தார் ஸூஸேனி. நானும் தான். இருந்தாலும் கூட, எதிர்காலம், விளக்கயியலா பொய்மையாய் தோன்றியது. சில சமயங்களில், ஏனென்று காரணம் கூறத் தெரியாமல், மூச்சு விடுவதில் கூட சிரமம் ஏற்படுமளவுக்கு உள் இறுக்கத்தை உணர்ந்தேன்.

அது, நாங்கள் கிளம்ப வேண்டிய நாளுக்கு முந்தைய இரவு. என்னால் தூங்க முடியவில்லை. என்னாலேயே என்னைப் பொறுத்துக் கொள்ள முடியாத இருப்புக் கொள்ளாமையிலிருந்தேன் நான். இது ஏன் என பிடிபடவில்லை. ஆப்பிரிக்காவை முழுவதுமாய் விட்டு விட்டுப் பிரிவதை நான் வெறுத்தேன். எங்கேயோ போய் விட்டு ஒரு வேளை நான் ஆப்பிரிக்கா திரும்பி வரும் காலமும் ஒன்று நேர்ந்தால், அப்போது, இது, இதே போலவே இருக்குமா? எப்போதுமே மாறாமலேவா இது இருக்கும்?

அப்போது உரிமை மிகுந்து கதவு தட்டப்படும் ஓசை கேட்டு நான் விக்கித்தேன். துள்ளியெழுந்தேன். அங்கு ஹார்ரி இருந்தான்.

''நல்ல உடையா மாற்றிக்கோ, ஆனே.அப்புறம் வெளியே வா. நான் உன் கூட பேச வேண்டியிருக்கு.''

கிடைத்ததை வாரி உடுத்திக் கொண்டு, சில்லென்றும், ஆடாது அசையாதும், வெல்வெட் போர்த்திய உணர்தலை ஏற்படுத்திய பனிக்காற்றுக்குள் நுழைந்தேன் நான். வீட்டுக்குள்ளிருப்போரின் நெருக்கத்திலிருந்து சற்று விலக்கி என்னைக் கொண்டு போய் நிறுத்தினான் ஹார்ரி. அவனது முகம் வெளிறிப் போயிருந்தாலும் ஏதோ ஒரு முடிவிலிருந்தது. அவன் கண்களில், கனல்.

''ஆனே, நினைவிருக்கா? பெண்கள், அவர்கள் மனதார விரும்பும் ஒரு நபருக்காக, அவர்களுக்கு எது ரொம்பப் பிடிக்காதோ அதை செய்யக்கூட மிகவும் பிரியப்படுவாங்கனு நீ சொன்னே.''

''ஆமாம்'' - இதற்கு பதிலாய் அங்கிருந்து என்ன வரப் போகிறதோ என்ற ஆச்சரியத்துடன் சொன்னேன்!

அவனுடைய இரும்புக் கரப்பிடிக்குள் என்னைக் கொண்டு சென்றான். ''ஆனே, கிளம்பு-என்னுடன் கிளம்பிடு - இப்பவே. இந்த இரவிலேயே. திரும்பி ருடேஸியாவுக்கு. அங்கிருந்து, திரும்பி தீவுக்கு. - முட்டாள்தனமான இந்த வாழ்க்கையை என்னால இனி சகிச்சுக்க முடியாது. உன்னை அடைய, காரணமேயில்லாம இனி என்னால காத்திருக்கவும் முடியாது.''

ஒரு நிமிடம் போல என்னிலை இழந்தே விட்டேன் நான். ''எனக்காக தைத்துள்ள அந்த ஃபிரெஞ்சுப் பாவாடை..?'' கிண்டலடிப்பது வெளியே தெரிந்து விடாது கேலி பேசினேன். இன்று வரை - நான் எப்போது நிஜமாய் பேசிக் கொண்டிருக்கிறேன், எப்போது சும்மா கேலி செய்கிறேன் என்பதை இவனால் பிரித்தறிய முடிவதில்லை.

''மண்ணாங்கட்டிப் பாவாடை! அந்த ஆடம்பரங்களை எதிர்பார்த்தா, உன்னை நான் காதலித்தது? திரும்பி உள்ளே போக உன்னை நான் அனுமதிக்கப் போவதில்லே, ஓ.கே? நீ -என்னவள். நீ இப்பவே என்னோட கிளம்பறே. உடுத்திய உடையோட. இந்த இரவிலேயே. இப்போதே... மற்ற எல்லோரையும் தூக்கிக் குப்பையில போடு.''

இழுத்து, என்னை அவனுள் ஆக்கிக் கொண்டான். மூச்சு விட முடியாத அளவுக்கு எனக்கு அவன் முத்தம் தந்தான்.

''நீ இல்லாம இனி என்னால வாழவே முடியாது, ஆனே. ஒத்துக்கறேன். நீ இல்லாம என்னால முடியாது. எல்லா வகையான பண சமாச்சாரங்களையும் நான் வெறுக்கிறேன். அதையெல்லாம் ரேஸேக் கொண்டாட்டும். வா, கிளம்பலாம்.''

''என் டூத் பிரஷ்?'' - மீண்டும் கிண்டலடிப்பது வெளியே தெரிந்து விடாதபடி''

''வழியிலே வாங்க முடியாதா? கோபத்தைக் கிளறாதே. பொல்லாதவனாயிடுவேன் - வா.''

நீள நீள அடிகள் வைத்துப் போனான் அவன். ஃபால்ஸ் பகுதியில் நான் பார்த்த பெண்மணியைப் போலவே நானும்அவனைப் பின்

தொடர்ந்து ஓட்டமும் நடையுமாய் போய்க் கொண்டிருந்தேன். என்ன... ஒரு தோசைக்கல் என் தலையில் இல்லை, அவ்வளவு தான் வித்தியாசம்! அவனுடன் கூட சேர்ந்து நான் இணையாய் நடக்கவே முடியாத அளவுக்கு வேகமாகவும் அகலமாகவும், ஓடுவது போல் போய்க் கொண்டிருந்தான் அவன்.

மூச்சிரைத்ததால், ஒலியற்ற குரலில், ''ஹார்ரி....'' என அழைத்தேன் நான். ''ஒரு சந்தேகம்'' என்றேன். நின்றான். ''ருடேஸியா வரைக்கும் நடந்தேவா போகப் போறோம்?!''

சட்டென்று திரும்பினான். என் ஹாஸ்யத்துக்கு வெடியாய் வெடித்துச் சிரித்த அவன், என்னைக் கைத்தாங்கலாய் அவனுக்குள் வளைத்து இறுக்கித் தூக்கிக் கொண்டு நடந்தான். அவன் பிடியில் தொங்கினேன். ''நான் பைத்தியக்காரன் தான். அது எனக்கே தெரியும். ஆனா, ஓஹ், உன் கால்கள் வலிக்கவும் கூடாது. அந்த அளவுக்கு ஐ லவ் யூ'' என்றான். ''இப்படி எல்லாத்தையும் உதறிட்டு வரியே தேங்க்ஸ் டியர்.''

''நீ வேற'' என்றேன் நான். ''நான் தியாகமெல்லாம் ஒண்ணும் பண்ணிடலே. தெரியுமா உனக்கு நானும் இப்படி ஓடிடத் தான் ஏங்கியிருந்தேன்.''

## அத்தியாயம் - 36

இதெல்லாம் நடந்து இரு வருடங்கள் முடிந்திருந்தன. இன்னும் நாங்கள் தீவில் தான் வாழ்ந்து வருகின்றோம். எனக்கு முன்னாலிருந்த மர மேஜையில் ஸுஸேனி எனக்கு எழுதியிருந்த கடிதம்.

*மரக்காடுகள் அடர்ந்த தீவில் முடங்கிக் கிடக்கும் என்னருமை மாக்களே... சண்டை சச்சரவு என்றே காதலுக்கு வியாக்கியானம் எழுதியுள்ள இளசுகளே... வணக்கம்!*

*நடந்ததை நினைத்து தான் ஆச்சரியப்படவில்லை. துளி கூட ஆச்சரியப்படவில்லை. பாரீஸ் என்றும் அங்கு இருக்கும் நவநாகரீக பாவாடைகள் இத்யாதிகள் என்றும் நாம் பல முறை பேசிய போதெல்லாம், அவற்றில், துளியும் 'நிஜத்தன்மை' இல்லாது, தாமரை இலை நீர் போன்ற போக்கே இருந்தது. ஆகவே, திருமண நாளன்றே, அந்த இரவே, நீ உன்னுடைய நாடோடிப் பெண் உடையோடு நீல இரவுக்குள் ஓடி ஒளிந்து விட்டதில் ஆச்சரியமில்லை தான்.*

*ஆனால் நீங்களிருவரும் மூளையேயற்ற பதர்கள். அள்ளிக் கொண்டு வந்த கை கொள்ளா சொத்துக்கள் அனைத்தையும் இப்படியா உதறித் தள்ளுவது? அத்தனையையும் தானே எடுத்துக் கொள்வது சரியல்ல என்றும் அது பற்றி விவாதிக்க வேண்டும் என்றும் ஓடோடி வந்தார் கலோனல் ரேஸ்; அவரிடம், விவாதிப்பதைக் காலத்தின் கைகளில் விட்டும்படி விளக்கி, மன்றாடி அதற்கு ஒப்புக் கொள்ள வைத்துவிட்டேன். ஹார்ரியின் பங்கினைப் பாழாகாமல் அவர் நிர்ணயிக்கப் போகிறார். எப்போது வேண்டுமானாலும் அந்தப் பங்கு உங்களுக்குத் தேவைப்படலாம். தேனிலவுகள் நிரந்தரம் கிடையாதே! காதல் மிக ருசிகரமாக கொஞ்ச நாட்கள் நீடிக்கும் - கொஞ்ச நாட்கள் என்ன... சற்று நீளமான நாட்கள் கூட நீடிக்கலாம். ஆனால் சத்தியமாய்ச் சொல்கிறேன். எதிர்பாராது மேலே விழும் காட்டுப் பூனையாய் நீ என்னைத் தேடி ஓடோடி வரத்தான் போகிறாய், பார்...! எதற்கு? பங்களா போன்ற வீட்டை விட்டு விட்டதை எண்ணி வரும் ஏக்கம்... ஆடம்பரப் பாவாடை தரும் தாக்கம்... விதவித நகை நட்டுகள், ஆடை அணிகலன்கள் மீது உருவாகும் அவா... இதனால் எல்லாம் தான்...! வருவாய், நீ வருவாய்!*

*எனினும், தலைமறைவாகியிருக்கும் நீங்களிருவரும், துளி விடாது கொண்டாடுங்கள். உங்களுடைய தேனிலவை, குழந்தைகளே! வேலை வெட்டியின்றி வசதியாக சதை மலையாக மாறிக் கொண்டிருக்கும் என்னையும் நேரம் கிடைக்கும் போது எண்ணிக் கொள்ளுங்கள்!*

*உங்களுடைய அன்பான தோழி,*

*ஸூஸேனி ப்ளேர்.*

*பி.கு.: இக்கடிதத்துடன் விதவிதமாய் உதவவல்ல அடுக்களை சாமான்களை உங்கள் கலியாணத்துக்கு என்னுடைய அன்பளிப்பாக அனுப்பி வைக்கிறேன், என்னை நினைவுப்படுத்திக் கொண்டேயிருக்க.*

நான் எப்போதாவது எடுத்துப் படிக்கும் இன்னொரு கடிதமும் உண்டு. இதுவும், மேற்சொன்னது போலவே, நல்ல கனமான அன்பளிப்போடு வந்த, சுவையான கடிதம். பொலிவியா பகுதியில் எங்கிருந்தோ எழுதப்பட்டதைப் போல தோன்றும் கடிதமது.

*என்னருமை ஆனே பெட்டிங்ஃபெல்ட்.*

*உனக்குக் கடிதம் எழுதுவதை என்னால் கட்டுப்படுத்த முடியாதம்மா! இது, எனக்குள் அபரிமித இன்பத்தை ஊற்றுவிக்கிறது என்பதற்காக அல்ல. என்னிடமிருந்து கடிதமொன்று வந்தால், அது, உனக்குள் உண்டாக்கவல்ல சந்தோஷத்துக்காவும் தான்! நம் தோழர் திரு ரேஸ், அவர் மனதுக்குள் நினைத்துக் கொண்டிருப்பது போல, நிஜத்தில் அப்படியொன்றும் சாதுர்யம் மிக்கவர் கிடையாது!*

*என்னுடைய எழுத்துலக படைப்பு சார்ந்த விஷயங்களைக் கவனித்துக் கொள்ளும் ஜவாப்தாரியாக உன்னை விட்டு விடலாமா என்று எண்ணிக் கொண்டிருக்கிறேன். அதற்காக, நான் பலரைப் பற்றி பல குறிப்புகள் எடுத்து வைத்திருந்த என் டைரியை உன்னிடம் சமர்ப்பிக்கிறேன். இந்த ரேஸ் மற்றும் அவர் சார்ந்த கூட்டத்துக்கு ஈடுபாடு ஏற்படுத்த அதில் எதுவும் இருக்கப் போவதில்லை. ஆனால், உன்னை ஆச்சரியித்து அதிசயிக்க வைக்கும் பல விஷயங்கள் அதில் நிச்சயம் இருக்கும். எப்படியெல்லாம் உபயோகப் படுத்தத் தோன்றுகின்றதோ அப்படியெல்லாம் நீ இதை பயன்படுத்திக் கொள்ளலாம். 'நான் சந்தித்த குற்றவாளிகள்' எனும் தலைப்பில் இதை வைத்துக் கொண்டு த டெய்லி பட்ஜெட்டுக்கு ஒரு கட்டுரை எழுதுமாறு வேண்டிக் கொள்கிறேன்! அதன் கதாநாயகன் நானாய் தானிருக்க வேண்டும்.*

*இக்கடிதம் உன் கையில் கிடைக்கும்போது, நீ, ஆனே பெட்டிங்ஃ பெர்லட்' டாக இல்லாமல், திருமதி எட்ஸ்லேயாக அவரது மாட மாளிகையின்*

நாயகியாக வலம் வந்துக் கொண்டிருப்பாய் என்று அறிவேன். உன் மேல் எவ்விதமான கோபமும் காழ்ப்பும் எனக்குக் கிடையாது என இந்தத் தருணத்தில் சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். என்னுடைய இந்தத் தள்ளாத வயதில், என் வாழ்க்கையையே நான் புதிதாக, கையில் தம்புடி இல்லாமல் துவங்க வேண்டும் என்பது கடுமையான ஒன்று தான்- இல்லையெனவில்லை! இருந்தாலும் இப்படி ஏதாவது ஒன்று நேர்ந்தால் தப்பிப் பிழைக்க என ரகசியமாய் நான் சேர்த்து வைத்திருந்த சொத்து, இப்போது விமரிசையாக உதவிக் கொண்டிருக்கின்றது. உங்களது க்ளைமாக்ஸ் முயற்சிக்கு உதவியாயிருந்து உங்களுக்கு சாதகமாய் முடித்துக் கொடுத்த அந்தக் கோமாளி பயல் மிங்க்ஸினைச் சந்திக்க நேர்ந்தால், மறக்காது, நான் இன்னும் அவனை மறவாமல் நினைவில் வைத்துக் கொண்டிருக்கிறேன் என்பதை மட்டும் சொல்லி விடு. அது போதும் அவனை உலுக்கிப் போட! மறந்து விடாதே, என்ன! நிம்மதியற்றே சாவான், பயல்.

இந்த முழு சமாச்சாரத்திலும், சரியான ஒரு கிருத்துவனாக இயங்கி, நான், அனைவரையும் மன்னித்து விட்டேன். பகெட்டைக் கூட! அன்றொரு நாள், அவனும், திருமதி பகெட்டும், இந்த பூமிக்குள் அவர்களுடைய ஆறாவது குழந்தையைப் பிரசவித்துத் தள்ளி விட்டார்கள் என கேள்விப்பட்டேன். வெகு விரைவில் இங்கிலாந்து முழுவதும் வெறும் பகெட் பரம்பரையாக ஆகி விடப் போகிறது; பார்த்துக் கொண்டேயிரு! அக்குழந்தைக்குத் தபால் மூலம் ஒரு வெள்ளி ஸ்பூனை அன்பளிப்பாக அனுப்பி வைத்தேன். ஒரு வாழ்த்து அட்டையும். அந்த ஸ்பூனையும் வாழ்த்து அட்டையையும் கையில் தூக்கிக் கொண்டு முகத்தில் துளி சிரிப்பில்லாமல் அவன் ஸ்காட்லாண்டு போலீஸுக்கு விரைவதை என்னால் கற்பனை பண்ணிப் பார்த்துக் கொள்ள முடிகின்றது.

உனது தவழும் திரவ விழிகளுக்கு வாழ்த்துக்கள், என்னை மணந்துக் கொள்ளாமல் போனது எத்தனை பெரிய தவறு என்று நிச்சயம் நீ ஒரு நாள் வருந்துவாயாக!

உன், என்றும்,

ஆஸ்டஸ் பெட்லர்.

ஹார்ரி கடுங்கோபத்திலிருந்தான். இது ஒன்று நான், நானும் அவனும், கண்ணுக்குக் கண் பார்த்து பேசாத சமாச்சாரம். அவனைப் பொறுத்தவரை, சர் ஆஸ்டஸ் என்னைக் கொல்லத் துணிந்தவர்.

அவனது உயிர் நண்பனின் மரணத்துக்குக் காரணமானவர். என்னைக் கொன்றுப் போட சர் ஆஸ்டஸ் முயற்சித்துள்ளார் என்பது இன்று வரை என்னைப் புதிராய் ஆக்கிப் போடும் ஒரு விஷயம், என் மேல் எப்போதும் கனிவும் ஆசையும் ஆதரவும் கொண்டிருந்தவர் அவர்.

எனில் எதற்காக அவர் இரண்டு முறை என் உயிரைப் பிடுங்கிவிட முயற்சித்திருக்க வேண்டும்? ''ஏனென்றால் அப்படிப்பட்ட பொறுக்கி அவன்'' என்கிறான் ஹார்ரி... இந்த ஒரே வாக்கியத்தில் அவர் பற்றிய எல்லாம் அடங்கி விடுவதாய் அவனுக்கு எண்ணம். ஸூஸேனி, ஆழமாய் பிரித்தாராய்ந்ததைப் போல சொன்னார். இக்கேள்வியை நான் அவரிடம் விவாதித்து போது, ''பய உணர்வு தான் காரணம்'' என்றார். உளவியல் சார்ந்த ஆய்வுக்குள்ளேயே இறங்கி விட்டார் அவர். சர் ஆஸ்டஸின் முழு வாழ்க்கையுமே, பாதுகாப்பும் அதே சமயம் அபரிமித வசதிகளும் கொண்டதாய், சுயநலம் எனும் உணர்வு தீர்க்கயியலாத அளவுக்கு அவருள் ஊடுருவிக் கிடந்தது. நதீனாவைப் பாதையிலிருந்து நீக்கியதும் அவருடைய 'பய உணர்வு' நீங்கிப் போனது. ஆனால் அவளுக்கு பதிலாய் பிறகு நான் வந்த சேர்ந்தேன். ஆமாம். ஸூஸேனி தான் சரியென எனக்குப் படுகின்றது.

பிழைத்துப் போகட்டும், சர் ஆஸ்டஸ் பெட்லர்!

ஒரு நாள் மளிகை சாமான்கள் கட்டி வந்திருந்த ஒரு பொட்டலத்தை நான் பிரித்துக் கொண்டிருந்த போது, ஒரு பொட்டலம், த டெய்லி பட்ஜெட் பேப்பரால் கட்டப்பட்டிருந்ததைக் கவனித்தேன். அதில் இருந்த வாசகம் என்னை ஈர்த்தது. ''ப்ரௌன் சூட்டில் வந்தவன்!'' எத்தனை நாட்கள் கடந்து விட்டன, இதைக் கேட்டு! த டெய்லி பட்ஜெட்டுடனான தொடர்பினை நான் என்றோ துண்டித்துக் கொண்டாயிற்று. எனது காதல் திருமணம், த டெய்லி பட்ஜெட்டில் தொடர்ந்து நான் பங்களித்திருக்க வேண்டிய வீரதீர சாகசங்கள் அனைத்துக்கும் முற்றுப்புள்ளி வைத்துவிட்டது.

கால்களை அந்தரத்தில் உதைத்துக் கொண்டு என் குட்டி மகன் கீழே படுத்திருக்கிறான். உங்களுக்கு வேண்டுமானால், ப்ரௌன் சூட்டில் வந்தவனைத் தூக்கிக் கொள்ளலாம். ஸ்ட்ராங் காபியின் ப்ரௌன் நிறத்தினாலான மிகச் சிறிய சூட்டினைத் தான் அவன் அணிந்துக் கொண்டிருக்கிறான்! ஆப்பிரிக்காவின் மிகப் பிடித்தமான நிறமிது. காபி ப்ரௌன். இப்போதெல்லாம் கீழே விட்டவுடனேயே குப்புறத் திரும்பிக் கொண்டு தன் சின்ன விரல்களால் பூமிக்குள் எதையோ

தோண்ட ஆரம்பித்து விடுகிறான். தாத்தா வழியைப் பின்பற்றுகிறான் போலத் தோன்றுகிறது. ஒரு நாள், காய்ந்தக் களிமண் சிலையாய் வந்து நிற்கத் தான் போகிறான்.

இவன் பிறந்த போது ஸூஸேனி எனக்கொரு தந்தி போட்டிருந்தார்.

''வாழ்த்துக்கள் மேலும், தனித்தீவு பூமியில் வந்து விழுந்திருக்கும் புது மனிதப் பூவுக்கு முத்தங்கள். ஆமாம், ஆனே... அவனுடைய மண்டை...டோலிசோ செஃபாலிக்-கா அல்லது ப்ராசி-செஃபாலிக்கா...?''

ஸூஸேனியின் இந்தக் குறிப்பை நான் தாங்கிக் கொள்ளப் போவதில்லை. தலையைப் பிய்ந்துக் கொண்டு அவர் அர்த்தம் தேட ஓடும்படி, சிக்கனமாக, ஒரே ஒரு வார்த்தையில் பதிலனுப்பினேன் நான்.

''ப்ளேட்டி-செஃபாலிக்''.

(முடிந்தது)

லண்டனுக்கு துணிவாய் வீரதீர சாகசங்கள் தேடி வரும் ஆனேவுக்கு அப்படியோர் உச்சகட்ட அனுபவம் விமரிசையாய் காத்திருக்கிறது. ரயிலடிக்கு ரயிலேறப் போனவள், ப்ளாட்பாரத்தின் நுனியில் நின்றிருந்த ஆசாமி தவறிப் போய் மின்சாரத் தண்டவாளத்துக்குள் விழுந்து பொறி பறக்க மரணித்து விடுவதைப் பார்க்கிறாள்.

இது எதேச்சையாய் நிகழ்ந்த விபத்து கிடையாது என்பது அவளுக்குப் பூரணமாய் தெரியும். தவறி விழும்போது அவன் கண்கள் எதையோ பார்த்து விட்டதால் அடைந்த திகிலைக் கண்ட ஒரே ஆசாமியான ஆனேவுக்கு இது தெரியும்.

*அந்த 'எதுவோ' - அது எது? அல்லது யார்?*

ஒரு பாவமும் அறியாத அந்த ஆசாமி பரிதாபமாய் இறக்க, அப்போது யாருமற்றிருந்த ரயிலடியில் அவன் கண்டது தான் எதை?

மிகப் பிரம்மாண்டமான, திகைப்புகளும் திருப்பங்களும் ஏராளமாய் நிறைந்த, திருப்தியளித்து மீண்டும் மீண்டும் படிக்கத் தூண்டும் கதையிது.

